

॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

श्रीमत्कृष्णसूरये नमः ॥

பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திமாலா

ஸ்தோத்ரவ்யாக்யாந விபாகம்

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

மூன்று ஸ்தோத்ர வ்யாக்யாநங்கள்:-

# ஸ்தோத்ர ரத்ந வ்யாக்யாநம்

# சதுச்ச்லோகீ வ்யாக்யாநம்

# ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யாநம்

[ ப்ரமாணத்திரட்டுடன் கூடியது ]

பதிப்பாசிரியர்:-

K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், அட்வகேட்.

கிடைக்குமிடம்:-

ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், அட்வகேட்,

3. புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

விலை ரூ. 3-00.  தபாற்கூலி 0-45.



ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.



॥ श्रीः ॥

श्रीमते रामानुजाय नमः ॥

श्रीमत्कृष्णसूरये नमः ॥

பெரியவாச்சான் பிள்ளை ஸ்ரீஸூக்திமாலா

ஸ்தோத்ரவ்யாக்யாந விபாகம்

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

மூன்று ஸ்தோத்ர வ்யாக்யாநங்கள்:-

# ஸ்தோத்ர ரத்ந வ்யாக்யாநம்

# சதுச்ச்லோகீ வ்யாக்யாநம்

# ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யாநம்

[ப்ரமாணத்திரட்டுடன் கூடியது.]

பதிப்பாசிரியர்:

K. ஸ்ரீநிவாஸ அய்யங்கார், அட்வகேட்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

***

விலை ரூ. 3—0—0

தபால் கூலி (புக்-போஸ்ட் மூலம்) அணா 0—4—0

# முகவுரை.

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்க்ருஷ்ணஸூரயே நம:

"अभयप्रदनामानमस्मद्गुरुमहं भजे। यत्कटाक्षादयं जन्तुरपुनर्जन्मतां गतः॥"

"அபயப்ரதநாமாநமஸ்மத்குருமஹம் பஜே।
யத்கடாக்ஷாதயம் ஜந்துரபுநர்ஜந்மதாம் கத:॥"

என்று வாதிகேஸரி அழகியமணவாள ஜீயரால், தத்வ நிரூபணத்தில் கீர்த்திக்கப் பெற்றவரும், அபயப்ரதராஜர் என்ற திருநாமத்தை உடையவரும், வ்யாக்யாந சக்ரவர்த்தி என்று புகழ்பெற்றவருமான பெரியவாச்சான் பிள்ளைக்கு நான்கு ஸிம்ஹாஸனங்கள் உள. இருபத்துநாலு ப்ரபந்தங்களடங்கிய நாலாயிரதிவ்யப்ரபந்தத்திற்கு இவரருளிச்செய்த வ்யாக்யானங்களே முதலானதும், முக்கியமானதுமான ஸிம்ஹாஸனமாகும். அவைகளில்லாவிடில் ஸ்ரீவைஷ்ணவவுலகமே ஞானசூன்யமாய், இருளடைந்து பாழாகியிருக்கும். ஸ்ரீராமாயணத்தில் முக்கியஶ்லோகங்களுக்கு வ்யாக்யானமான தனிச்லோகவ்யாக்யானமே இவருடைய இரண்டாவது ஸிம்ஹாஸனமாகும். ரஹஸ்யத்ரயவ்யாக்யானமான பரந்த ரஹஸ்யாதி ரஹஸ்யக்ரந்தங்களே இவருடைய மூன்றாவது ஸிம்ஹாஸனமாகும். ருக்வேத கிலமான ஜிதந்தே ஸ்தோத்ரத்திற்கும், பரமாசார்யரான ஆளவந்தார் அருளிச்செய்த ஸ்தோத்ரரத்ந சது:ஶ்லோகிகளுக்கும்,பாஷ்யகாரரான ஸ்ரீராமாநுஜர் அருளிச்செய்த கத்யங்களுக்கும் இவரருளிச்செய்த வ்யாக்யானங்களாகிய ஸ்தோத்ரகத்யவ்யாக்யானங்களே இவருடைய நாலாவது ஸிம்ஹாஸனமாகும். இவைகளில் இவரருளிச்செய்த அஷ்ட ரஹஸ்யங்களை, இவர் அவதரித்த ஸர்வஜித் வருஷத்தில் அச்சிட ஆரம்பித்து ஸர்வதாரி வருஷத்தில் வெளியிட்டோம். ஸ்தோத்ரவ்யாக்யானங்கள் இப்போது வெளியிடப்படுகின்றன. "ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி" என்கிறபடி, பரந்தரஹஸ்யாதிக்ரந்தகர்த்தா விஷயமான விவாதங்கள் குறுக்கிட்டதாலும், அடியேனுக்குக் கண்ணில் நோய் ஏற்பட்டதினாலும் சிறிது காலதாமதம் ஏற்பட்டது.

1878-வது வருஷத்தில் தமிழில் பிரசுரம் செய்யப்பட்ட ஸ்தோத்ரரத்நவ்யாக்யாந ஸ்ரீகோசத்தை அநுஸரித்து ஸ்தோத்ரரத்நவ்யாக்யாநம் நம்மால் அச்சிடப்பட்டது. வேதாந்த தீபிகைப் பதிப்பும் இந்த ஸ்ரீகோசத்தை அநுஸரித்தே காணப்படுகிறது. நாம் அச்சிட்டபின், க்ரந்தமுத்ராபக ஸபையாரால் தெலுங்குலிபியில் அச்சிடப்பட்ட ஸ்ரீகோசம், ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உ. வே. கோவிந்தாசார்யஸ்வாமியிடமிருந்து கிடைத்தது. அதில், பலவிடங்களில் பாடபேதங்களும் அதிகபாடங்களும் காணப்பட்டன. அவைகளைத் தனியாக அச்சிட்டு இத்துடன் சேர்த்திருக்கிறோம்.

ஓரியண்டல் மாநுஸ்க்ரிப்ட் லைப்ரரி (Oriental Manuscript Library)யிலுள்ள ஒரு ஓலைஸ்ரீகோஶத்தில் பெரியவாச்சான் பிள்ளையின் ஸ்தோத்ரரத்ந வ்யாக்யாநத்துடன், இப்போது அச்சிடப்பட்டிருக்கும் சதுச்ச்லோகீவ்யாக்யானமும் காணப்படுகிறது. அதன் முடிவில் "ஆச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்" என்று காணப்படுவதிலிருந்து இது பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்ததே என்று நிர்ணயிக்கத் தட்டில்லை. இந்த க்ரந்தம் இதுவரை அச்சிடப்பட்டதில்லை.

ஜிதந்தே ஸ்தோத்ரவ்யாக்யாநம், க்ரந்த முத்ராபகஸபையாரால் தெலுங்கு லிபியிலும், வேதாந்ததீபிகையில் தமிழிலும் அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த க்ரந்தத்திலுள்ள ஸூக்திகளை ஸ்ரீவசனபூஷணவ்யாக்யானத்தில் மணமாள மாமுனிகள் உதாஹரித்திருக்கிறார். அங்கு "ஆச்சான் பிள்ளை அருளிச்செய்தார்" என்று எடுத்திருப்பதிலிருந்து, இந்த க்ரந்தத்தை அருளியவர் பெரியவாச்சான் பிள்ளையல்லரென்று சிலர் ஸமீபகாலத்தில் சொன்னார்கள்; பின்பழகிய பெருமாள் ஜீயர் தொகுத்தருளிய வார்த்தாமாலையிலும், பரகாலார்யதாஸரருளிய பரகால நல்லான் ரஹஸ்யத்திலும், திருவாய்மொழிப்பிள்ளை அருளிய பெரியாழ்வார் திருமொழி வ்யாக்யானத்திலும், ரஹஸ்யவிவேகத்திலும், அஷ்டஶ்லோகீவ்யாக்யானத்திலும், பிள்ளைலோகஞ்சீயரருளிய உபதேசரத்நமாலைவ்யாக்யானம் முதலிய பல ப்ரபந்தங்களிலும், மற்றும் பல பல பெரியோர்களருளிச்செய்த பல பல திவ்யக்ரந்தங்களிலும் பெரியவாச்சான் பிள்ளையையே ஆச்சான் பிள்ளையென்று நூற்றுக்கணக்கானவிடங்களில் குறித்திருப்பதால் இந்த வாதத்திற்குச் சிறிதும் இடமில்லை. இவ்விஷயத்தை ஷோடசாத்யாயியில் விரிவாக விவரித்திருக்கிறோம்.

பல பெரியோர்கள் ப்ரமாணத்திரட்டுடன் கிரந்தங்களை வெளியிட்டால் மிகுந்த உபயோகமாயிருக்குமென்று நியமித்ததின் பேரில், இந்த க்ரந்தங்களிலுள்ள ப்ரமாணங்களுக்கு ஆகரமும், தமிழில் அர்த்தமும் கொண்ட ப்ரமாணத் திரட்டுகளையும் வெளியிட்டிருக்கிறோம். அறிவிற்சிறந்த பெரியோர்களால் செய்யத்தக்க இக்காரியத்தை அடியேன் மேற்கொண்டது ஸாஹஸமேயாகும். ஸாரக்ராஹிகளான பெரியோர்கள் குற்றங்குறைகளைக் கணிசியாமல் குணங்கொள்ள வேணுமாய் பிரார்த்திக்கிறேன். அடுத்தபடியாக அருளிச்செயல் வியாக்யானங்கள், ப்ரமாணத்திரட்டுடன் விரைவில் வெளியாகும்.

இங்ஙனம்,
தொண்டரடிப்பொடி,
கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்.

விரோதி-ஹூ
ஆவணியில் ரோஹிணி.

## பெரியவாச்சான் பிள்ளையின் வாழித்திருநாமம்.

தண்மை சிங்கம் ரோகிணி நாள் தழைக்க வந்தோன் வாழியே
தாரணியில் சங்கநல்லூர் தானுடையோன் வாழியே
புன்மை தவிர் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே
பூதூர் எதிராசர்தாள் புகழுமவன் வாழியே
மன்புகழ் சேர் சடகோபர் வளமுரைப்போன் வாழியே
மறை நாலின் பொருள்தன்னைப் பகுத்துரைத்தான் வாழியே
அன்புடன் உலகாரியர்தம் அடியிணையோன் வாழியே
அபயப்ரதராஜர் தாள் அனவரதம் வாழியே.

---

## இவர் திருநக்ஷத்ர தனியன்.

ஸகலத்ராவிடாம்நாயஸாரவ்யாக்யாநகாரிணம் ।
ச்ராவணே ரோஹிணீஜாதம் க்ருஷ்ணஸம்ஜ்ஞமஹம் பஜே ॥

---

## தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கும் ஸ்தோத்ரரத்னவ்யாக்யான ஸ்ரீகோசத்தில் காணப்படும் அதிக பாடங்களும், பாடபேதங்களும்.

1. (பக்கம் 6, வரி 17) ....என்றே கிடக்கும்". "ராமமேவாநுபஶ்யந்த:" என்னுமாப்போலே.

2. (பக்கம் 10, வரி 30) பக்தி: ப்ரபத்திஶ்ச பகவத்ப்ராப்தே:.

3. (பக்கம் 11, வரி 35) பால்யத்தில் ஸுககரனாய், பக்வதஶையில் ரக்ஷகனாய்

4. (பக்கம் 12, வரி 19) கீழ் உபகாரகரை ஆஶ்ரயித்த இத்தால் செய்தது முமுக்ஷுவுக்கு உபகாரகரே ஶேஷித்வப்ரதிபத்திக்கு விஷயபூதரும் ஸ்துத்யரும் என்னுமிடம் சொல்லிற்றாயிற்று. ஒருவருக்கு ஶேஷிகள்........

5. (பக்கம் 12, வரி 22) ....என்றுமாம். தமக்கு ஸ்தோத்ராரம்பஹேதுவான ஜ்ஞானபக்த்யாதிகள் பிதாமஹோபாத்ததனம் என்கைக்காக.

6. (பக்கம் 13, வரி 35) இத்தால் இவருடைய உத்யோகத்தைக் கண்ட ப்ரீதி திருக்கண்களிலே தோற்றுகிறது என்னுதல்; இவர் உத்யோகத்தைக் கண்டு ப்ரீதனாய் குளிர நோக்கினபடியைச் சொல்லுகிறது என்னுதல். யந்மூர்த்நி........

7. (பக்கம் 14, வரி 26) ....சொல்லுகிறபடியாலே. "யம் ந தேவா ந முநயோ ந சாஹம் ந ச ஶங்கர: ஜாநந்தி", "ந க்ராஹ்ய: கேநசித் க்வசித்", "சதுர்முகாயு:" இத்யாதி.

8. (பக்கம் 24, வரி 8) ....என்கிறார். "ஏக: ப்ராஸீஸரத் பாதமேக: ப்ராசிக்ஷ ளந்முதா । அபரோऽப்யதரந்மூர்த்நா கோதிகஸ் தேஷு கண்யதாம்" என்னக்கடவதிறே.

9. (பக்கம் 25, வரி 26) ப்ரக்யாததைவபரமார்த்தவித்துக்கள் என்கிறது,— "ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:" என்கிற பராஶரபகவான், "யத்வை கிஞ்ச மநுரவதத் தத் பேஷஜம்" என்கிற மனு, வேதாசார்யனான வேதவ்யாஸன், வாஜஸநேயப்ரவர்த்தனான யாஜ்ஞவல்க்யன், "நமஶ் ஶௌநகாய" என்று வைதிகாக்ரேஸரர் சொல்லும் ஸ்ரீஶௌநகன், ஏவம்பூதனான ஆபஸ்தம்பன், அயோநிஜனாய் ஸ்ரீராமாயணப்ரவர்த்தகனான வால்மீகி; "ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ:" இதி வஸிஷ்டபுலஸ்த்யவரப்ரதாந லப்த தேவதாபரமார்த்தஜ்ஞ: பராஶர:; "ருக்மாபம் ஸ்வப்நதீகம்யம்" இதி மநு:; "க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத் விஶுத்தி: பரமா மதா" இதி யாஜ்ஞவல்க்ய:; "தாமர்ச்சயேத் தாம் ப்ரணமேத்" இதி ஶௌநக:; "பூ: ப்ராணிநஸ் ஸர்வ ஏவ குஹாஶயஸ்ய" இத்யாபஸ் தம்ப:; "பவாந்நாராயணோ தேவ:" இதி வால்மீகி: என்கிற இவர்களே. (ஏவம் விஶிஷ்டம் த்வாம் ஆஸுரப்ரக்ருதய:) க்ரூரகர்மாக்களான பேர்கள் ஸர்வாதிகரான தேவரீரை. (போத்துமேவ ந ப்ரபவந்தி) அறிகைக்குத்தானே ஸமர்த்தர்களன்று. "ஆஸுரீம் யோநிமாபந்நா:" இத்யாதி.

10. (பக்கம் 26, வரி 20) ....என்னுதல்; உன்னையொழிய வேறு பரத்வபுத்தியில்லாத வர்கள் என்னுதல்; உன்னையொழிய உபாயாந்தரமறியாதவர்கள் என்னுதல்; "க்ரியதாமிதி மாம் வத" என்று உன் நினைவொழிய வேறு விஷயம் அறியாதவர்கள் என்னுதல்.

11. (பக்கம் 27, வரி 9) (புருஷ:) கார்யகாரணோபயாவஸ்தப்ரக்ருத்யாஶ்ரய க்ஷேத்ரஜ்ஞர்; "க்ஷேத்ரஜ்ஞ ஆத்மா புருஷ:" என்னக்கடவதிறே.

12. (பக்கம் 30, வரி 11) "ந ஸ்மரத்யபகாராணாம் ஶதமப்யாத்மவத்தயா । கதஞ்சிதுப காரேண க்ருதேநைகேந துஷ்யதி ॥ உச்யமாநோऽபி பருஷம் நோத்தரம் ப்ரதிபத்யதே ॥".

13. (பக்கம் 31, வரி 22) ....இத்யாதய:. (உத்யமத:) உத்யோகாத். (நாதிஶேரதே) அதிக்ரமணஸமர்த்தா ந பவந்தி.

14. (பக்கம் 35, வரி 14) ....ஶரணவரணார்ஹனிறே. நிருபாதிகஶரண்யராகையாலே ருசியே வேண்டுவது. தேவரைப் பெறுகைக்கு ஒரு கைம்முதல் வேண்டாவிறே. (த்வத்பாதமூலம்) “மாமேகம் ஶரணம் வ்ரஜ” என்ற தேவரீர் திருவடிகளே மூலம்.

15. (பக்கம் 40, வரி 17) அவ:— (த்வதங்க்ரிம்) ‘ந தர்மநிஷ்டோஸ்மி’யிலே தேவர் திருவடிகளை லபிக்கைக்கு அனுகூலங்கள் ஒன்றுமில்லையென்றார்; அவ்வளவேயன்று; ப்ரதிகூலங்களால் பூர்ணனென்றார்; இப்படிப்பட்ட எனக்கும் பேற்றில் வந்தால் தேவர் க்ருபையே பர்யாப்தமென்றார்; இப்படி ந்யஸ்தபரனான என் பக்கலிலே விரோதி மேலிடுகை தேவர்க்குத் தேஜோஹானியென்றார். அத்தைப் பாராதே தேவர் கைவிட்டவன்றும் புறம்பு போக்கில்லையென்றார். இனிமேல் “த்வத்பாதமூலம்....

16. (பக்கம் 40, வரி 24) (உத்திஶ்ய) இத்தையே பரமப்ராப்யமாக நினைத்து; இத்தால் ப்ரயோஜநாந்தரவ்யாவ்ருத்தி சொல்லுகிறது.

17. (பக்கம் 41, வரி 5) (அஞ்ஜலி:) வித்தவ்யயாயாஸாதிஸஹகாரிஸாபேக்ஷமான....

18. (பக்கம் 42, வரி 7) (உதீர்ண....) கிளர்ந்து எரிகிற காட்டுத்தீயை. ஸம்ஸாரத்தைக் காட்டுத்தீயாகச் சொல்லுகிறது,— தாஹ்யமான காட்டில் அக்னியை அவிக்கவொண்ணாதாப்போலே அவித்யாதிகளுக்கு இலக்காமித்தனையொழியப் பரிஹரிக்கவொண்ணாது என்கைக்காக.

19. (பக்கம் 44, வரி 16) ....கடவதிறே. “என் சென்னி” [பெரியாழ். திரு (5-2-8)] இத்யாதி.

20. (பக்கம் 44, வரி 19) (மதீயமூர்த்தாநம்) என்னுடையதான ஶிரஸ்ஸிலே எப்போது அலங்கரிக்கப்புகுகிறாய்? “என் தலை மேலவே” என்று அபகர்ஷம் சொல்லிற்று. நரகஹேதுவான....

21. (பக்கம் 45, வரி 32) வ்யா:— (ஜ்யாகிணகர்கஶை:) “தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவா மங்கை” என்கிறபடியே ஸ்ரீஶார்ங்கத்தில் நாணித்தழும்பாலே அலங்க்ருதமான திருத்தோள்கள். நாணித்தழும்பு....

22. (பக்கம் 54, வரி 35) ....நினைப்பிடுவது. (ததாநுஜாநந்தம்) ‘ஐயராலே யாதொன்று விண்ணப்பம் செய்யப்பட்டதோ அது அப்படியே’ என்று பாசுரப்பரப்பற நியமித்தருளுவது.

23. (பக்கம் 57, வரி 8) ஸ்வரூபத்தையும், குணத்தையும் பரிச்சேதிக்கிலும் வடிவில் போக்யதை பரிச்சேதிக்கவொண்ணாது என்கை. “இச்சாக்ருஹீதாபிமதோருதேஹ:”. (திவ்ய)....

24. (பக்கம் 61, வரி 15) (பகவந்) ‘இந்த துக்கத்தைப் பரிஹரிக்கைக்கு இத்தலையில் ஜ்ஞாநஶக்த்யாத்யபாவமும், தேவராலல்லது பரிஹாரமில்லை என்கிற இதுவும் தேவரீர் அறியீரோ?’ என்கை.

25. (பக்கம் 61, வரி 28) ....தேவர். “அவருயிரைச் சோர்ந்தே போகல் கொடாச் சுடரை” என்னக்கடவதிறே.

26. (பக்கம் 69, வரி 17) “ந ஹி மே ஜீவிதேநார்த்த:”; இது பிராட்டியினுடைய ஏறாளுமிறையோன்.

27. (பக்கம் 69, வரி 23) "மதுமதந விஜ்ஞாபிதமிதம்" என்று பாடமாகவுமாம். அறிவிக்குமித்தனையொழிய நியமிக்கவொண்ணுது என்கை.

28. (பக்கம் 70, வரி 11) ....பலிக்கை. (அநாதே:) "முன்செய்த முழுவினை" என்னக்கடவதிறே.

29. (பக்கம் 71, வரி 16) ஸ்ம்ருத்வா ஸ்ம்ருத்வா. கீழ்ச்சொன்ன குணங்களையுடைய தேவருடைய திருக்கல்யாணகுணஸமூஹத்தை எப்போதும் சிந்தை செய்து செய்து.

30. (ஶ்லோகம் 65 பாடாந்தரம்) (த்வச்சரணாரவிந்த) இவ்வாத்மாவுக்கு வகுத்த தேவர் திருவடித்தாமரைகளிலே. (ப்ரேமப்ரகர்ஷாவதிம்) பக்த்யுத்கர்ஷத்துக்கு அவதியாயுள்ளவரை. பரபக்தியுக்தராயிருக்கை. அநபாயினியான ப்ரீதி ஸம்ஸாரிகளுக்கு ஶப்தாதிகளிலே; இவர்க்கு இவ்விஷயத்திலேயிறே. (ஆத்மவந்தம்) பகவச்சேஷதைகரஸராயுள்ளவரை. மேல் ப்ரேமப்ரகர்ஷத்துக்கு அடியான ஆத்மயாதாத்ம்யஜ்ஞானமுடையவரென்கை. (பிதாமஹம்) "வித்யயா ஜந்மநா ச". (நாதமுநிம்) ஸ்ரீரங்கநாதரென்ற திருநாமத்தை உடையவராய், பகவத்ஜ்ஞாநநிதியாயுள்ளவரை. (விலோக்ய ப்ரஸீத) அவரைப் பார்த்து என் அபராதங்களைப் பொறுத்தருளவேணும். (மத்வ்ருத்தமசிந்தயித்வா) அஸத்கர்மத்தை விஸ்மரித்தவோபாதி ஸத்கர்மத்தையும் சிந்தியாதே, அவரைப் பார்த்து ப்ரஸந்நராகவேணுமென்கை. "மத்வ்ருத்தம்" என்று ஸத்கர்மத்தை நினைக்கிறது. வ்ருத்தவானென்றால் ஸத்கர்மயுக்தனையிறே சொல்லுகிறது. ஸ்வகதமானவற்றை அநாதரித்து பெரிய முதலியாரோட்டை ஸம்பந்தத்தையே பார்த்து ரக்ஷித்தருளவேணும்.

ஸ்தோத்ரம் தன்னில் செய்ததாகிறது:— முதலிட்டு அஞ்சு ஶ்லோகத்தாலே பகவத்விஷயத்தில் இழிகைக்கு யோக்யனாக்கின ஆசார்யனை உபகாரஸ்ம்ருதியாலே சரணம் புக்கு, அநந்தரம் நாலு ஶ்லோகத்தாலே பகவத்விஷயத்திலே இழிந்து, தத்ப்ரபாவத்தாலே ஸ்தோத்ராக்ஷேப ஸமாதானத்தைப் பண்ணி 'நாவேக்ஷஸே' தொடங்கி, 'த்வதாஶ்ரிதாநாம்' அறுதியாக ஶரண்யப்ரபாவத்தைச் சொல்லி, 'நமோ நம:'விலே அந்த ப்ரபாவத்துக்குத் தோற்றுத் திருவடிகளிலே விழுந்து, 'ந தர்மநிஷ்டோऽஸ்மி' என்று தொடங்கி 'தவாம்ருதஸ்யந்தினி'யளவும் வெறுமையை முன்னிட்டு ஶரணம் புக்கு, ஶரணாகதனுக்கு ஸம்பாவிதமான ஸ்வபாவங்களைச் சொல்லி, 'த்வதங்க்ரி' தொடங்கி இரண்டு ஶ்லோகத்தாலே 'மநோவாக்காயங்கள் எல்லாவற்றாலும் ஶரணம் புகவேண்டா; காயிகமாதல் மானஸமாதல் அமையும் அபிமதஸித்திக்கு' என்று சொல்லி, 'விலாஸ' தொடங்கி 'பவந்தம்' முடிவாக ப்ராப்யத்தை ப்ரார்த்தித்து, தாம் ப்ரார்த்தித்தபோதே ப்ராப்யம் ஸித்தியாமையாலே 'ஸூரிபோக்யமான விஷயத்தை நித்யஸம்ஸாரியான நான் ஆசைப்படக்கடவேனோ?' என்று தம்மை 'திகஶுசிம்' என்று நிந்தித்து, பின்பு தம்முடைய ருசியாலே, 'அயோக்யதாஹேதுவான பாபத்தையும் தேவருடைய க்ருபையாலே போக்கியருளவேணும்' என்று தாம் பண்ணின ப்ரபத்தியை ஸ்மரிப்பித்து, 'அபராதஸஹஸ்ர'விலே அபேக்ஷித்து, 'அவிவேக' என்று தொடங்கி மூன்று ஶ்லோகத்தாலே 'தேவர் க்ருபைக்கும் ஆகாதாருண்டோ?' என்று சொல்லி, மேல் இரண்டு ஶ்லோகத்தாலே ஸ்வஸ்வரூபயாதாத்ம்யத்தையும், 'அவபோதித'விலே பரபக்தியையும் அபேக்ஷித்து, மேல் இரண்டு ஶ்லோகத்தாலே அப்புருஷார்த்தத்தில் சரமாவதியான ததீயஶேஷத்வத்தை ப்ரார்த்தித்து, மேல் ஒரு ஶ்லோகத்தாலே 'ஶேஷத்வவிரோதிகளைப் போக்கித் தந்தருளவேணும்' என்று அபேக்ஷித்து,

மேல் மூன்று ஶ்லோகத்தாலே ‘ இப்படி இச்சிக்கிற நான் அஶுபாஸ்பதன்; இச்சைதானும் போட்கனுறைலும் தேவர் க்ருபாதிகுணங்களாலே அஶுபத்தைப் போக்கி, நிருபாதிக ஸம்பந்தத்தாலே இச்சையையும் பிறப்பிக்கை தேவர்க்கே பரம் ’ என்று, மேல் இரண்டு ஶ்லோகத்தாலே ‘ விலக்ஷண ஸந்தானத்தில் ஜன்மமும், பாபப்ராசுர்யத்தாலே அகிஞ்சித்காரம் ’ என்று, மேல் இரண்டு ஶ்லோகத்தாலே, ‘ நான் பண்ணின ப்ரபத்தியை நினைத்து, இப்பாபத்தை தேவருடைய க்ஷமைக்கு விஷயமாக்கவேணும்’ என்று அபேக்ஷித்து, ‘நான் பண்ணின ப்ரபத்தியை அநாதரிக்கிலும்; ப்ரபன்னவிஷயமாகப் பண்ணின ப்ரதிஜ்ஞையை அநாதரிக்கிலும், பெரிய முதலியார் பக்கல் தேவர்க்கு உண்டான ராகத்தை விடவொண்ணாதிறே; தத்ஸம்பந்தத்தைப் பார்த்து, என்னுடைய நன்மை தீமைகளைப் பாராதே ரக்ஷித்தருளவேணும்’ என்று முடிக்கிறார்.

---

## தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கும் ஜிதந்தேஸ்தோத்ரவ்யாக்யாந ஸ்ரீகோசத்தில்,13-வது ச்லோகவ்யாக்யாநத்தின் கடைசியில் காணப்படும் அதிகபாடம்.

(காமயே) ஸங்கத்தளவன்று என்கை. “ தவ பரிஜநபாவம் காமயே ” என்று அருளிச்செய்ததுக்கும் முதலிறே இது. கேவலபதத்தாலே இத்தலைக்கு ரஸித்திருக்கும்படியன்றிக்கே ஸ்ரக்சந்தநாதிகளைப்போலே அத்தலைக்கே போக்யமாயிருக்குமென்கை. “ தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே எனக்கே கண்ணனை யான் கொள் சிறப்பே ” என்னக்கடவதிறே. பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்குமவனுக்கு அனுகூலவ்ருத்தியில் வந்தால் ஸ்வபாவநியதியில்லை. “ தத்யதா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் ” என்று ரக்ஷ்யரக்ஷகத்வநியதி கண்டிலோமிறே. “ப்ராதா பர்த்தா ச பந்துஶ்ச பிதா ச மம ராகவ:” என்று இளையபெருமாளும் ஒரு முறையிலே வ்யவஸ்திதராய் நின்றிலரிறே. தேரிலே ஏறினபோது சத்ரசாமரதாரிகளாய் நின்றாப்போலே, காட்டிலே போகிறபோதும் கநித்ரபிடகாதரரானாரிறே. தலைநீர்ப்பாட்டிலே பரிமாறுகிற பிராட்டியும் “ தேவத்வே தேவதே ஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ ” என்று அபிமதனுக்கு அனுரூபமான ரூபமே தனக்கும் ரூபமாகப் பரிக்ரஹித்தாளிறே. “ யதா யதா ஹி கௌஸல்யா ” என்கிறபடியே கௌஸலையாரும் ஒரு முறையிலே நின்றிலளிறே சக்ரவர்த்தியைக் குறித்து. (ஸர்வஜந்மஸு) நித்யனான ஆத்மாவுக்கு ஜந்மமாவது,— ஶரீர ஸம்யோகமிறே. ஶேஷத்வரஸம் அவிச்சிந்நமாய்ச் செல்லுமாகில், ஜந்மபரம்பரைகளை அனுமதி பண்ணினாலும், விரோதமில்லையென்கை. “ஸம்ஸாரேऽஸ்மிந் பயாவஹே மாம் பாஹி” என்கிற இதுவும் தாஸ்யரஸத்துக்கு விரோதி என்றிறே. இத்தால் ஜந்மஸப்பந்தமறுகை ஸ்வயம்புருஷார்த்தமன்றென்கை. அதவா,(ஸர்வஜந்மஸு)“அஜாயமானோ பஹுதா விஜாயதே” என்றும், “ பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி ” என்றும் ஜகத்ரக்ஷணார்த்தமாக அவதரிக்கும் அவதாரங்கள்தோறும் தொடர்ந்து அடிமை செய்யவேணும் என்றுமென்றுமாம்.

---



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# ஸ்தோத்ரரத்ன வ்யாக்யானம்.

**श्रीमत्कृष्णसमाह्वाय नमो यामुनसूनवे । यत्कटाक्षैकलक्ष्याणां सुलभश्श्रीधरस्सदा ॥**

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபஶ்ஸ்ரீதரஸ்ஸதா ॥

## அவதாரிகை.

ஸர்வேஶ்வரன், ஆழ்வாருக்குத் தன்னுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை "மயர்வற மதிநலமருளினன்" என்கிறபடியே நிர்ஹேதுகக்ருபையாலே காட்டிக்கொடுக்க, கொடுத்த ஜ்ஞானம் பக்திரூபாபன்னஜ்ஞானமாகையாலே, பரபக்தியுக்தராய்க்கொண்டு, பகவத்குணாநுபவத்தைப்பண்ணி, அதினுடைய விபாகதஶையான பரஜ்ஞானம் பிறந்து, அதடியாகப் பரமபக்தி பிறந்து, அத்தாலே, 1. "**परं ज्योतिरुपसंपद्य**" (பரம் ஜ்யோதிருபஸம்பத்ய) என்றும், 2. "**परमं साम्यमुपैति**" (பரமம் ஸாம்யமுபைதி) என்றும், "தம்மையேயொக்க அருள் செய்வர்" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வஸ்வரூபத்தைப் பெற்று, பார்யைக்கு அங்கபூஷணம் போலே "வழுவிலா அடிமை செய்யவேண்டும்" என்றும் "அவாவற்று வீடுபெற்ற" என்றும், சொல்லுகிறபடியே ப்ராப்திபலமான கைங்கர்யத்தைப்பெற்ற ஆழ்வாருடைய த்ரவிடோபனிஷத்ரஹஸ்யத்தைப் பெரிய முதலியார், ஆழ்வாருடைய ப்ரஸாதத்தாலே லபித்து, பின்பு ஆசார்யோபதேஶக்ரமத்தாலே, ஆளவந்தார் அந்த த்ரவிடோபனிஷத் ரஹஸ்யார்த்தங்களை லபித்து, அத்தைத் தாம் அநுஸந்தித்து, அவ்வநுஸந்தானத்தால் பிறந்த ப்ரீதி உள்ளடங்காமையாலே, பரீவாஹாபேக்ஷை பிறக்கையாலும், ஸம்ஸாரிகள் துர்க்கதியைக்கண்டு இவர்கள் இத்தை இழக்கவொண்ணாது என்னும் க்ருபையாலும், ஸகலோபனிஷத்ரஹஸ்யமாய், துர்ஜ்ஞேயமான அர்த்தத்தை ஸர்வரும் அறியும்படியாக, இவர் ஸ்தோத்ரமாக வெளியிடுகிறார். பகவத் வ்யதிரிக்த விஷயங்களில் ஸ்தோத்ரமாவது, 3. "**स्तोत्रं नाम किमामनन्ति**" (ஸ்தோத்ரம் நாம கிமாமநந்தி), 4. "**अन्यत्रातद्गुणोक्तिः**" (அந்யத்ராதத்குணோக்தி:) என்று, இல்லாதவற்றை ஏறிட்டுச் சொல்லுதல், உள்ளத்தையடையச்சொல்லுதலாயிருக்க, 5. "**यतो वाचो निवर्तन्ते**" (யதோ வாசோ நிவர்த்தந்தே) 6. "**अविज्ञातं विजानतां**" (அவிஜ்ஞாதம் விஜாநதாம்) 7. "**भूतार्थे कतमा स्तुतिः**" (பூதார்த்தே கதமா ஸ்துதி:) 8. "**न समर्थास्सुराः स्तोतुं**" (ந ஸமர்த்தாஸ்ஸுராஸ் ஸ்தோதும்) என்று பரிச்சேதித்துப் பேச நிலமல்லாத பகவத்விஷயம் ஸ்துதிவிஷயமானபடி என்? என்னில்: அங்ஙனேயிருந்ததேயாகிலும், 9. "**स्तव्यः स्तवप्रियः**" (ஸ்தவ்யஸ் ஸ்தவப்ரிய:) என்று ஸ்துதிப்ரியனாகையாலும், "ஏத்த ஏழுலகும் கொண்ட" என்றும், "ஏத்தவேத்த எங்கெய்தும்?" என்றும், ஸ்தோத்ரவ்யவஹாரம் உண்டாய்ப்போருகையாலும், இதொழிய வாசகஶப்தம் இல்லாமையாலும், இவ்விஷயத்திலும் ஸ்தோத்ரமென்னலாம்.

**स्वादयन्निह सर्वेषां त्रय्यन्तार्थं सुदुर्ग्रहम् । स्तोत्रयामास योगीन्द्रस्तं वन्दे यामुनाह्वयम् ॥**
**नमो नमो यामुनाय यामुनाय नमो नमः । नमो नमो यामुनाय यामुनाय नमो नमः ॥**

---

அதவா 10. "**धर्मार्थकाममोक्षाख्याः पुरुषार्था - उदाहृताः इति चतुष्टयम्**" (தர்மார்த்தகாம மோக்ஷாக்யா: புருஷார்த்தா உதாஹ்ருதா: இதி சதுஷ்டயம்) என்றும், "மன்னும் அறம் பொருளின்பம் வீடு" என்றும் சொல்லுகிறபடியே புருஷார்த்தம் நாலாய், அவற்றில் தர்மம், ஸாதனதயாபுருஷார்த்தமானாலும், க்லேஶஸாத்யமாகையாலும், அர்த்தம் ஸ்வயம் புருஷார்த்தமானாலும், அஸ்திரமாய், க்லேஶஸாத்யமாகையாலும், புருஷார்த்தாந்தரங்களுக்கு ஸாதனமாகையாலும், காமம் ஸ்வயம் புருஷார்த்தமானாலும், அல்பாஸ்த்திரத்வாநர்த்தாவஹத்வ பீபத்ஸாத்யநந்ததோஷதுஷ்டமாகையாலும், மோக்ஷஶாஸ்த்ரத்திலே மோக்ஷவிரோதித்வேந நிந்திதமாயிருக்கையாலும், ஆளவந்தார், அவற்றை விட்டு, மோக்ஷத்திலும் ஆத்மப்ராப்தி து:க்கேந சிரகாலஸாத்யமாகையாலும், பகவதனுபவத்தைப் பற்ற அல்பமாயிருக்கையாலும், அதையும் விட்டு, பகவத்ப்ராப்திக்கு உக்ததோஷங்களின்றியிருக்கும் அளவன்றிக்கே; 11, "**निरस्तातिशयाह्लादसुखभावैकलक्षणा**" (நிரஸ்தாதிஶயாஹ்லாத ஸுகபாவைகலக்ஷணா) என்கிறபடியே, நிரதிஶயஸுகரூபமாய், 12. "**एष ह्येवानन्दयाति**" (ஏஷ ஹ்யேவாநந்தயாதி) 2"**परमं साम्यमुपैति**" (பரமம் ஸாம்யமுபைதி) தம்மையே ஒக்க அருள்செய்வர்" என்கிறபடியே ஆஶ்ரிதரைத் தன்னைப்போலே ஆனந்திப்பிக்கக் கடவனாய், 13. "**तस्याहं सुलभः**" (தஸ்யாஹம் ஸுலப:) என்று அயத்நஸாத்யமாய், ப்ராப்தபுருஷார்த்தமுமாய் இருக்கையாலே இதுவே புருஷார்த்தமென்று அத்யவஸித்து*; அந்த பகவத்ப்ராப்தியாகிறதும், 14."**प्रधानक्षेत्रज्ञपतिर्गुणेशः**" (ப்ரதாந க்ஷேத்ரஜ்ஞபதிர் குணேஶ:), 15."**ज्ञाज्ञौद्वावजावीशनीशौ**" (ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ), 16. "**तमीश्वराणांपरमं महेश्वरम्**" (தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்), 17. "**दासोऽहं वासुदेवस्य**" (தாஸோஹம் வாஸுதேவஸ்ய) 18. "**दासभूतास्वतस्सर्वे**" (தாஸபூதாஸ் ஸ்வதஸ்ஸர்வே), 19 "**दासोऽहं कोसलेन्द्रस्य**" (தாஸோஹம் கோஸலேந்த்ரஸ்ய), 20. "**यस्यात्मा शरीरं**" (யஸ்யாத்மா ஶரீரம்), 21 "**यस्याक्षरं शरीरं**" (யஸ்யாக்ஷரம் ஶரீரம்), 22 "**अन्तःप्रविष्टश्शास्ता जनानां सर्वात्मा**" (அந்த:ப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா) 23 "**पूः प्राणिनः सर्व एव गुहाशयस्य**" (பூ: ப்ராணிநஸ் ஸர்வ ஏவ குஹாஶயஸ்ய), 24 "**तानि सर्वाणि तद्वपुः**" (தாநி ஸர்வாணி தத்வபு:) என்று ஜீவபரர்களுக்கு அநந்யார்ஹஶேஷஶேஷிபாவேந ஸம்பந்தத்தைச் சொல்லி 25"**येन येन धाता गच्छति**" (யேநயேந தாதா கச்சதி), 26. "**सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता**" (ஸோஶ்நுதே ஸர்வாந்காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா), 27. "**कामये वैष्णवत्वं तु सर्वजन्मसु केवलम्**" (காமயே வைஷ்ணவத்வம் து ஸர்வஜந்மஸு கேவலம்) 28. "**अहं सर्वं करिष्यामि**" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) "ஒழிவில் காலமெல்லாம்" இத்யாதிகளிலே ஸ்வரூபானுரூபமான போகத்தைச் சொல்லுகையாலும், பதிவ்ரதைக்குப் பதிஶுஶ்ரூஷணம் போலே ஶேஷவஸ்துவுக்குக் கைங்கர்யம் என்று அத்யவஸித்து*; இனி, 11. "**भेषजं भगवत्प्राप्तिः**" (பேஷஜம் பகவத்ப்ராப்தி:) என்று அவனே ப்ராப்யம் என்னுமதும் கைங்கர்யப்ரதிஸம்பந்தியாகையாலே; 1. "**स्वेन रूपेणाभिनिष्पद्यते**"

---

* இக்குறியிட்ட இடங்களை, இந்த மஹாவாக்யத்தின் கடைசியிலிருக்கும் " இப்படி ப்ராப்யப்ராபகங்களை...என்றுமாம்" என்னும் வாக்யத்துடன் கூட்டவும்.

ஸ்வாதயந்நிஹ ஸர்வேஷாம் த்ரய்யந்தார்த்தம் ஸுதுர்க்ரஹம் ।
ஸ்தோத்ரயாமாஸ யோகீந்த்ர: தம் வந்தே யாமுநாஹ்வயம் ॥

நமோ நமோ யாமுநாய யாமுநாய நமோ நம: । நமோ நமோ யாமுநாய யாமுநாய நமோ நம: ॥

---

(ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே) என்று ஸ்வஸ்வரூபத்தை ப்ராப்யமென்கிறதும், கைங்கர்யத்துக்கு ஆஸ்ரயமாகையாலே; 29. "**सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदं**" (ஸோத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்) என்று தேஸவிஸேஷத்தை ப்ராப்யம் என்கிறதும் கைங்கர்ய வர்த்தகமாகையாலே' 30. "**निस्तरन्ति मनीषिणः**" (நிஸ்தரந்தி மநீஷிண:) என்று ஸம்ஸார நிவ்ருத்தியைப் புருஷார்த்தம் என்கிறதும் கைங்கர்ய விரோதியாகையாலே; இவை கைங்கர்யோபயோகியல்லாதவன்று, 31. "**न हि मे जीवितेनार्थः**" (ந ஹி மே ஜீவிதேநார்த்த:) "மணிமாமை குறைவிலம்" "உடம்பினால் குறைவிலம்" "உயிரினால் குறைவிலம்" என்கையாலே அபுருஷார்த்தம்; ததீயஸேஷத்வத்தைப் புருஷார்த்தமென்கிறதும், பதிவ்ரதைக்குப் பதியினுடைய ஆத்மாம்ஸத்திலும், குணாம்ஸத்திலும், ஸௌந்தர்யவிஸிஷ்டமான தேஹாம்ஸமே ப்ராப்யமாய், அத்தாலே பாதிவ்ரத்யஹாநியில்லாதாப்போலே; இப்படி ஸகலஸாஸ்த்ர தாத்பர்யமான புருஷார்த்தத்தை நிஸ்சயித்து*; இதுக்கு உபாயம் பக்திப்ரபத்திகள் என்று இரண்டாய், அதில் பக்தியாவது:— 32. "**ब्रह्मविदाप्नोति परं**" (ப்ரஹ்மவிதாப்நோதி பரம்), 33. "**श्रोतव्यो मन्तव्यो निदिध्यासितव्यः**" (ஸ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:), 34. "**नायमात्मा प्रवचनेन लभ्यः**" (நாயமாத்மா ப்ரவசநேந லப்ய:), 35. "**तस्मिन् दृष्टे परावरे**" (தஸ்மிந் த்ருஷ்டே பராவரே), 36. "**भक्त्या त्वनन्यया शक्यः**" (பக்த்யா த்வநந்யயா ஸக்ய:) 37. "**मद्भक्तिं लभते परां**" (மத்பக்திம் லபதே பராம்) என்று வேதாந்த்யாஜோபாஸநஸப்தவாச்யமாய், பக்திரூபாபன்னமாய், தர்ஸநஸமானாகாரமான ஜ்ஞானவிஸேஷம் பக்தியாகிறது; அக்னிவித்யாங்கிகையாய், கர்மஜ்ஞானஸஹக்ருதையுமாகையாலே அதிக்ருதாதிகாரமாய், விளம்ப்ய பலப்ரதமுமாய், ப்ரமாதஸம்பாவனையும் உண்டாகையாலே, அவற்றை விட்டு, இந்த தோஷம் ஒன்றும் இன்றிக்கே 38. "**मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये**" (முமுக்ஷுர்வை ஸரணமஹம் ப்ரபத்யே), 39. "**न्यासमाहुर्मनीषिणो ब्रह्माणं**" (ந்யாஸமாஹுர் மநீஷிணோ ப்ரஹ்மாணம்), 40. "**न्यास इति ब्रह्मा**" (ந்யாஸ இதி ப்ரஹ்மா), 41. "**तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः**" (தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) 42. "**तस्मादपि वध्यं प्रपन्नं न प्रतिप्रयच्छन्ति**" (தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்சந்தி), 43. "**स भ्रातुश्चरणौ गाढं निपीड्य रघुनन्दनः**" (ஸ ப்ராதுஸ் சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந:) 44. "**सकृदेव प्रपन्नाय**" (ஸக்ருதேவ ப்ரபந்நாய), 45. "**सोऽहं त्वां शरणमपारमप्रमेयं**" (ஸோऽஹம் த்வாம் ஸரணமபாரமப்ரமேயம்), 46. "**सर्वात्मना यश्शरणं शरण्यं नारायणं लोकगुरुं प्रपन्नः**" (ஸர்வாத்மநா யஸ்ஸரணம் ஸரண்யம் நாராயணம் லோககுரும் ப்ரபந்ந:), 47. "**मामेव ये प्रपद्यन्ते**" (மாமேவ யே ப்ரபத்யந்தே), 48. "**तमेव शरणं गच्छ**" (தமேவ ஸரணம் கச்ச), 49. "**सर्वधर्मान् परित्यज्य**" (ஸர்வதர்மாந் பரித்யஜ்ய), 50. "**तावदार्तिस्तथा वाञ्छा**" (தாவதார்திஸ் ததா வாஞ்சா), என்று இத்யாதிஸ்ருதிஸ்ம்ருதி ஸித்தமாய், ஸுகரமாய், அத்யவஸாயாத்மகஜ்ஞானவிஸேஷமான ப்ரபத்தியையே உபாயமாக நிஸ்சயித்து*; இப்படி ப்ராப்யப்ராபகங்களை நிஷ்கர்ஷித்து, இவற்றை ஸ்தோத்ரரூபத்தாலே ஸர்வேஸ்வரனை நோக்கி ப்ரார்த்திக்கிறார் என்றுமாம்.

ஆளவந்தார் அருளிச்செய்த

# ஸ்தோத்ர ரத்நம்.

**नमोऽचिन्त्याद्भुताक्लिष्टज्ञानवैराग्यराशये। नाथाय मुनयेऽगाधभगवद्भक्तिसिन्धवे॥ १॥**

1. நமோऽசிந்த்யாத்புதாக்லிஷ்ட ஜ்ஞாந வைராக்யராஶயே।
நாதாய முநயேऽகாதபகவத் பக்திஸிந்தவே॥

---

பகவத்ஸ்தோத்ரம் பண்ணப்புக்கவர் ஆசார்யஸ்துதியிலே பார்ப்பானென்? என்னில்; 51. "**कर्णे स्पृष्टे कटीं चालयति**" (கர்ணே ஸ்ப்ருஷ்டே கடீம் சாலயதி) என்னுமாப்போலே அஸங்கதம் என்னில்: பகவத்விஷயத்தைத் தமக்கு ஸ்துதிவிஷயமாக்கிக்கொடுத்த உபகார ஸ்ம்ருதியாலும், ஸ்தோத்ரம் பண்ணுகைக்கு அடியான ஜ்ஞானவைஶத்யார்த்தமாகவும், அவிக்னபரிஸமாப்த்யர்த்தமாகவும் பண்ணுகிறாராகையாலே ஸங்கதம்.

அதில் மாநஸமாக அமையாதோ? என்னில்: இப்ரபந்தத்தை அதிகரிப்பார்க்கு உபகாரமாகையாலே, வாசிகமாக்கினதும் யுக்தம். உபகாரஸ்ம்ருதியாலே வந்த ஆசார்யானு வர்த்தனம் ப்ரமாணப்ரஸித்தம்: 52. "**आचार्यदेवो भव**" (ஆசார்யதேவோ பவ), 53. "**नमो ऋषिभ्यो मन्त्रकृद्भ्यः**" (நமோ ருஷிப்யோ மந்த்ரக்ருத்ப்ய:), 54. "**स हि विद्यातस्तं जनयति। तच्छ्रेष्ठं जन्म॥**" (ஸ ஹி வித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம), 55. "**मन्त्रे तद्देवतायाञ्च तथा मन्त्रप्रदे गुरौ**" (மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ). கிஞ்ச, ஒரு ரத்னத்தை ஒருவன் கொடுத்தால், அதினுடைய மஹார்க்கத்தை அறியக்கொடுத்தவனை ஆதரிக்க ப்ரமாணம் வேண்டுமோ? ஆகையால் இது உபபன்னம். ஜ்ஞானவைஶத்யார்த்தமாக ஆசார் யாநுவர்த்தநம் ஶிஷ்டாசாரப்ராப்தம்: 56. "**अभिवन्द्य गुरूनादौ शिष्यधीपद्मिनीरवीन्**" (அபிவந்த்ய குரூநாதௌ ஶிஷ்யதீபத்மிநீரவீந்) இதி மீமாம்ஸகா:. 57. "**यथा खनन् खनित्रेण**" (யதா கநந் கநித்ரேண) இதி மநு:. 58. "**यस्य प्रसादाद्वक्ष्यामि नारायणकथामिमां**" (யஸ்ய ப்ரஸாதாத் வக்ஷ்யாமி நாராயணகதாமிமாம்) இதி வைஶம்பாயந:. 59. "**लौकिकं वैदिकं वापि**" (லௌகிகம் வைதிகம் வாபி) இதி மநு:. அங்ஙனேயாகில், ஸ்வாசார்யனை விட்டு அவர் குருக்களைப் பற்றுவானென்? என்னில்: ஆசார்யஸ்துதியிலும் ஆசார்யப்ரியமிறே உத்தேஶ்யம்; ஸ்வாஶ்ரயணத்திற்காட்டில், பெரிய முதலியாரை ஆஶ்ரயிக்குமிடத்தில் ப்ரீதி மிக்கிருக்கையாலே, அதைப் பேசுகிறார். பெரிய முதலியார், ஆழ்வாருக்கு பகவத்ப்ராவண்யமடியாகப் பிறந்த ஜ்ஞானத்தை ஆழ்வார் ப்ரஸாதத்தாலே பெற்று, தம்மளவிலே பர்யவஸிக்கையன்றிக்கே, பின்புள்ளார்க்கும் உபகாரமாம்படி, இத்தர்ஶநஸ்தாபகரானபடியாலும், மணக்கால் நம்பி, 'பெரிய முதலியாருடைய அர்த்தம் இது; உம்முடைய பேற்றுக்கெல்லாம் அவருடைய திருவடிகளிலே ஸம்பந்தமே' என்கையாலும், அவரை ஆஶ்ரயிக்கிறார். இதை நினைத்திறே பட்டர் 60. "**प्रथममपि गुरुं नाथमीडे**" (ப்ரதமமபி குரும் நாதமீடே) என்றதும். வேதகாரணமான ப்ரணவம், வேதாத்யந்தங்களிலே ஆனாப்போலே, இங்கும் ஆத்யந்தங்களிலே ஆசார்ய ஸ்துதியாய், நடுவிலே பகவத்ஸ்தோத்ரமாக இருக்கிறது. முதலிட்டு மூன்று ஶ்லோகத்தாலே பெரிய முதலியாரை நமஸ்கரிக்கிறார்.

அவதாரிகை முற்றிற்று.

## பதவுரை.

1. அசிந்த்ய—(இப்படிப்பட்டதென்று) நினைக்கமுடியாததும், அத்புத—ஆச்சர்யமானதும், அக்லிஷ்ட—(பகவானுடைய அருளாலே) எளிதாகக்கிடைத்ததுமான, ஜ்ஞாந—ஞானத்தினுடையவும், வைராக்ய—வைராக்யத்தினுடையவும், ராமயே—குவியல்போன்றவராகவும், முநயே—பகவானை மனனம் செய்பவராகவும், அகாத பகவத் பக்தி ஸிந்தவே—ஆழ்ந்த பகவத்பக்திக்குக் கடலாகவுமிருக்கிற, நாதாய—நாதமுனிகளுக்கு, நம:—நமஸ்காரம் செய்கிறேன்.

முதல் ஶ்லோகம் அவதாரிகை:— முதல் ஶ்லோகத்தில், ஒருவனைக் கவிபாடப்புக்கால், அவன் ஐஶ்வர்யத்தைச் சொல்லிக் கவிபாடுமாப்போலே, வைஷ்ணவனுக்கு ஐஶ்வர்யமான ஜ்ஞான வைராக்யங்களுடைய ப்ரகர்ஷத்தைச் சொல்லி நமஸ்கரிக்கிறார். "தனமாய தானே கைகூடும்" என்று வைஷ்ணவனுக்கு தனம் பக்த்யாதிகள் என்று சொல்லிற்றிறே.

முதல் ஶ்லோகம் வ்யாக்யானம்:— (நம:) (61) "**अहमपि न मम। भगवत एवाहमस्मि॥**" (அஹமபி ந மம; பகவத ஏவாஹமஸ்மி) என்கிறபடியே, 'எனக்கு உரியேனல்லேன்; பெரிய முதலியாருக்கு ஶேஷம்' என்கிறார். (62) "**नमो विष्णवे**" (நமோ விஷ்ணவே) என்கிறாப்போலே, 'நமோ நாதாய' என்கிறார் உபகாரஸ்ம்ருதியாலே. "நமோ விஷ்ணவே" என்றும், (63) "**नम इत्येव वादिनः**" (நம இத்யேவ வாதிந:) என்றும், (53) "**नम ऋषिभ्यो मन्त्रकृद्भ्यः**" (நம ரிஷிப்யோ மந்த்ரக்ருத்ப்ய:), (64) "**तेषामपि नमो नमः**" (தேஷாமபி நமோ நம:) என்றும் சொல்லக்கடவதிறே. ஈஶ்வர முனிகள் ஸ்ரீரங்கநாதன் என்று திருநாமம் சாற்றுகையாலே, நாதனென்று திருநாமமாகிறது. எப்படிப்பட்டவர் என்னும் அபேக்ஷையில் சொல்லுகிறது: (அசிந்த்ய) இவருடைய ஜ்ஞானாதிகள் இன்னாருடைய ஜ்ஞானாதிகள் போலே இருக்குமென்று நினைக்கவொண்ணாது என்னுதல்; இவ்வளவு என்று ஜ்ஞானாதிகராலும் பரிச்சேதிக்கவொண்ணாது என்கை. (அத்புத) கீழ் இயத்தாராஹித்யத்தைச் சொல்லுகையாலே, க்ருஹீதாம்ஶம் அனுஸந்தித்தார்க்கு ஆஶ்சர்யாவஹமாயிருக்குமென்கை. * "என்றக்கால்" இத்யாதியில் க்ருஹீதாம்ஶம் இனிதாயிருக்கும் என்றதிறே. (அக்லிஷ்ட) வ்யாஸாதிகளைப் போலே ஸ்வயத்ன ஸாத்யதபஸ்ஸாலே வந்ததன்றிக்கே, (65) "**ददामि बुद्धियोगं तं**" (ததாமி புத்தியோகம் தம்) என்றும், "மயர்வற மதிநலம் அருளினன்" என்றும் சொல்லுகிறபடியே, பகவத்ப்ரஸாதலப்தமாகையாலே வருத்தமற்றிருக்கை. (ஜ்ஞாந) ஜ்ஞானமாவது: சிதசிதீஶ்வர தத்வங்களை விஷயமாக உடைத்தாயிருக்கை. அதாவது: ஆத்மா ஈஶ்வரனுக்கு அநந்யார்ஹ ஶேஷமென்றும், அசித்ஸ்வரூபம் த்யாஜ்யமென்றும், ஈஶ்வரன் உபயோர் நியந்தாவென்றும் அறிகை. ஜ்ஞானமென்றால் இவ்விஶேஷத்தைக் காட்டுகிறது; (66) "**तत् ज्ञानमज्ञानमतोऽन्य-दुक्त**" (தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம்), (67) "**विद्यान्या शिल्पनैपुणं**" (வித்யாந்யா ஶில்பநைபுணம்) என்று வ்யதிரிக்தவிஷயஜ்ஞானம் அநர்த்தாவஹம் என்றும், அதிக்ஷுத்ரமென்றும் சொல்லிற்றிறே. (வைராக்ய) இவ்விலக்ஷணஜ்ஞானத்தாலே பகவத்வ்யதிரிக்தங்களில் நிஸ்ப்ருஹராயிருக்கை. "வேண்டேன் மனை வாழ்க்கையை". (ராஶயே) ராஶியென்று ஸமூஹம். (ஜ்ஞாநராஶயே—வைராக்ய ராஶயே) ஜ்ஞானவைராக்யங்கள் ஒன்றாயிருக்க 'ராஶயே' என்பானென்? என்னில்: பகவத்ஸ்வரூபாதிகள் ஜ்ஞானவிஷயங்க

---

* "தென்குருகூர் நம்பி என்றக்கால் அண்ணிக்கும் அமுதூறும் என்நாவுக்கே" என்னும் கண்ணிநுண் சிறுத்தாம்பு பாசுரத்தை நினைக்கிறார்.

**तस्मै नमो मधुजिदङ्घ्रिसरोजतत्त्वज्ञानानुरागमहिमातिशयान्तसीम्ने ।**
**नाथाय नाथमुनयेऽत्र परत्र चापि नित्यं यदीयचरणौ शरणं मदीयम् ॥ २ ॥**

2. தஸ்மை நமோ மதுஜிதங்க்ரிஸரோஜதத்த்வஜ்ஞாநாநுராகமஹிமாதிஶயாந்தஸீம்நே।
நாதாய நாதமுநயேऽத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ ஶரணம் மதீயம் ॥

---

ளாகையாலே பல. (68) "**पितरं मातरं**" (பிதரம் மாதரம்) என்று த்யாஜ்யவிஷயங்களும் பலவாகையாலே சொல்லலாம். லோகத்தில் விலக்ஷணருடைய ஜ்ஞானவைராக்யங்களெல்லாம் இவருடைய ஜ்ஞானவைராக்யங்களிலே அந்தர்ப்பூதமாம்படியிருக்கையாலே சொல்லுகிறதென்றுமாம். (69) "**यत्किञ्चित्साधु कुर्वन्ति यस्तद्वेद यत्स वेद स मयैतदुक्त इति**" (யத் கிஞ்சித் ஸாது குர்வந்தி யஸ்தத்வேத யத்ஸ வேத ஸ மயைததுக்த இதி), (70) "**यत्किञ्चित्साध्वनुष्ठितं कर्म, यच्च सर्वचेतनगतं विज्ञानम्, तदुभयं यदीयज्ञानकर्मान्तर्गतम्, स रैक्व इति**" (யத் கிஞ்சித் ஸாத்வநுஷ்ட்டிதம் கர்ம, யச்ச ஸர்வசேதநகதம் விஜ்ஞாநம் ததுபயம் யதீயஜ்ஞாநகர்மாந்தர்க்கதம், ஸ ரைக்வ இதி). "லோகத்தில் அநுஷ்டிதமான கர்மங்களும், ஜ்ஞானங்களும், யாவனொருத்தனுடைய கர்மஜ்ஞானங்களிலே அந்தர்க்கதமாயிருக்கும், அவனன்றோ கிடீர் ரைக்வன்" என்று பார்த்துச் சொல்லுமாப்போலே. (முநயே) (71) "**न विवेदात्मनो गात्रं**" (ந விவேதாத்மநோ காத்ரம்) (72) "**पश्यन्नपि न दृष्टवान्**" (பஶ்யந்நபி ந த்ருஷ்டவாந்) என்கிறபடியே, த்யேய வஸ்துவை ஸர்வதா ஸாக்ஷாத்கரித்து, "ஏது செய்தால் மறக்கேன் மனனே" "என்னெஞ்சம் அவன்" என்றே கிடக்கும். இவர் க்ருஷ்ணனை அநுஸந்தித்திருக்க ராஜாவாலும் ஸமாதிபங்கம் பண்ணப்போயிற்றில்லை. (அகாத பகவத் பக்தி ஸிந்தவே) பக்தியாவது ஜ்ஞானவிஶேஷமாயிருக்க, பக்தியைப் பிரித்துச் சொல்லிற்று, அதினுடைய ப்ராசுர்யம் சொல்லுகைக்காகவும், ப்ராதான்யம் சொல்லுகை தோற்றுகைக்காகவும். பக்தியாகிறது:— (73) "**स्नेहपूर्वमनुध्यानं भक्तिः**". (ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்தி:) என்றும், (74) "**स्वामिनि दास्यस्नेहमयी स्थितिः**" ஸ்வாமிநி தாஸ்யஸ்நேஹமயீ ஸ்திதி:) என்றும் சொல்லுகிறபடியே அநுபுபூஷை*. 'பகவச்சப்த'த்தாலே பரமபதத்தில் இருப்பைச் சொல்லுகிறது. (75) "**वासुदेवोऽसि पूर्णः**" (வாஸுதேவோऽஸி பூர்ண:) என்று ஷாட்குண்யபூர்ணனயிறே இருப்பது. (அகாத) அக்ஷோப்ய§. அர்த்தாந்தரம்: பரிச்சேதிக்க ஒண்ணாதிருக்கை. ஒருவரால் நிலைகொள்ளவொண்ணாதிருக்கை. (ஸிந்தவே) "காதல் கடலின் மிகப்பெரிது" என்றும், "ஆசையென்னும் கடல்" என்றும், ஈஶ்வரனுக்கும் நிலைகொள்ளவொண்ணாதே, தாம் அதில் புக்கு அமிழ்ந்தபடியாயிருக்கை. அசிந்த்யாத்புதாக்லிஷ்டஜ்ஞாநவைராக்ய ராஶயே, முநயே, அகாதபகவத்பக்திஸிந்தவே, நாதாய நம: 1.

2. பதவுரை:— அத்ர—இவ்வுலகத்திலும், பரத்ர ச அபி—மேலுலகத்திலும், நித்யம்—எப்போதும், யதீயசரணௌ—எந்த ஸ்ரீமந்நாதமுனிகளுடைய திருவடிகள், மதீயம் ஶரணம்—எனக்குப் புகலிடமோ, மதுஜித்—மதுவை நிரஸித்த எம்பெருமானுடைய, அங்க்ரி ஸரோஜ—திருவடித்தாமரைகளைப்பற்றின, தத்வஜ்ஞாந அநுராக—உண்மை அறிவினுடையவும்,

---

* அநுபுபூஷை—அநுபவிப்பதில் விருப்பம். § அக்ஷோப்ய—கலக்கவொண்ணாத.

அன்பினுடையவும், மஹிமாதிஶய அத்தஸீம்நே—பெருமேன்மையின் முடிவே எல்லையாயிருப்பவரும், நாதாய—(எனக்கு) நாதராயிருப்பவரும், தஸ்மை நாதமுநயே—அந்த நாதமுனிகளுக்கு, நம:—நமஸ்காரம்.

அவ:—(தஸ்மை நம இதி) முதல் ஶ்லோகத்தாலே பரத்வவிஷயமான ஜ்ஞாநாதிகளுடைய ப்ரகர்ஷம் சொல்லிற்று. இந்த ஶ்லோகத்தாலே, அவதாரவிஷயமான ஜ்ஞாநாதிகளாகையாலே, அதினுடைய ப்ரக்ருஷ்டதரத்வம் சொல்லுகிறது. அன்றிக்கே, கீழ்ச்சொன்ன ஜ்ஞாநாதிகள் தம்மளவில் பர்யவஸியாதே,என்னளவும் வர வெள்ளங்கோத்தது என்னவுமாம்.

வ்யா:—(தஸ்மை நம:) (76) "**नमस्तस्मै नमस्तस्मै**" (நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை) என்றும், (77) "**नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः**" (நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ரக்ருத்வ:) என்றும் சொல்லுகிறபடியே, 'இன்னம் அவர்க்கு அடியேன்' என்கிறார். (மதுஜித்) அனிருத்தராய் வந்து அவதரித்து முதல் களையான மதுவை நிரஸித்தாற்போலே, பகவத்ப்ராப்திப்ரதிபந்தகங்களைப் போக்குமவன் என்கை. (அங்க்ரி) அந்த ஸ்வபாவத்திலே (78) "**गुणैर्दास्यमुपागतः**" (குணைர் தாஸ்யமுபாகத:) என்று பெரிய முதலியார் தோற்றிருக்கும்படியையும், அவருடைய அநந்யார்ஹஶேஷத்வமும் சொல்லுகிறது. (ஸரோஜ) ஸம்பந்தமில்லாவிடினும் விடவொண்ணாத போக்யதையைச் சொல்லுகிறது. விகாஸம், செவ்வி, குளிர்ச்சி, பரிமளம் முதலானவற்றுக்குத் தாமரையை ஒருபடிக்குப்போலியாகச் சொல்லலாயிருக்கை. (தத்த்வஜ்ஞாந) தத்வஜ்ஞாநமாவது:— அவதாரவிஷயஜ்ஞாநமும், ஆஶ்ரிதபாரதந்த்ர்யவிஷயஜ்ஞாநமும். (79) "**जन्म कर्म च मे दिव्यं एवं यो वेत्ति तत्त्वतः। त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन॥**" (ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத:। த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந ॥) என்று தானே அருளிச்செய்தானிறே; (80) "**तस्य धीराः परिजानन्ति योनिं**" (தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்); (81) "**अहत्वा रावणं सङ्ख्ये**" (அஹத்வா ராவணம் ஸங்க்யே), (82) "**यद्विना भरतं त्वाञ्च शत्रुघ्नञ्चापि मानद। भवेन्मम सुखं किञ्चित् भस्मसात् कुरुतां शिखी॥**" (யத் விநா பரதம் த்வாஞ்ச ஶத்ருக்நஞ்சாபி மாநத। பவேந்மம ஸுகம் கிஞ்சித் பஸ்மஸாத் குருதாம் ஶிகீ ॥) என்று அருளிச்செய்தானிறே சக்ரவர்த்தித் திருமகன். (83) "**अप्यहं जीवितं जह्यां**" (அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்), (84) **आत्मानं नातिवर्तेथाः**" (ஆத்மாநம் நாதிவர்த்தேதா:) இத்யாதி. (அநுராக) அநுராகமாவது:— இவற்றை எல்லாவற்றையும் அநுபவித்தாலல்லது நிற்கவொண்ணாத ப்ரேமம். (மஹிமாதிஶயாந்த ஸீம்நே) ஜ்ஞாநாநுராகங்களுடைய மஹத்வத்தின் முடிவே எல்லையாயிருக்குமவர்க்கு. மஹிமா – மஹத்வம். மநுஷ்யாநந்தமே தொடங்கி, (85) "**ते ये शतं**" (தே யே ஶதம்) என்கிற க்ரமத்தாலே ஈஶ்வரானந்தத்திற்கு எல்லையாயிருக்கும் இருப்புப்போலே, இவருக்கும் தத்வவிஷயப்ரேமத்துக்கு எல்லையாயிருக்குமிருப்பு. (நாதாய) அஸ்மந்நாதாய. (நாத முநயே) 'இத்தர்ஶனத்துக்கு நாதனே' என்று "மதுசூதனையன்றி மற்றிலேன்" என்றிருக்கும் மஹாத்மாக்களாலே கொண்டாடப்படுவாராயிற்று. தத்வஹிதங்களைத் திருவுள்ளத்திலே கூடுபூரிக்குமவர். 'தஸ்மை நம:' என்று அந்வயம். உபகாரஸ்ம்ருதியாலே அவரை ஆதரித்தாராகில், ஐஹிகாமுஷ்மிகங்களுக்கு வேண்டாவோ என்று பகவதபிப்ராயமாக, அருளிச்செய்கிறார்: (அத்ர பரத்ர சாபி) ஸம்ஸாரத்திலும், ப்ராப்யமான நித்யவிபூதியிலும். (நித்யம்) நித்யாக்னி

**भूयो नमोऽपरिमिताच्युतभक्तितत्त्वज्ञानामृताब्धिपरिवाहशुभैर्वचोभिः।**
**लोकेऽवतीर्णपरमार्थसमग्रभक्तियोगाय नाथमुनये यमिनां वराय ॥३॥**

3. பூயோ நமோऽபரிமிதாச்யுதபக்திதத்த்வஜ்ஞாநாம்ருதாப்திபரிவாஹஶுபைர் வசோபி: ।
லோகேऽவதீர்ணபரமார்த்தஸமக்ரபக்தியோகாய நாதமுநயே யமிநாம் வராய ॥

---

ஹோத்ரம்போலன்றிக்கே, அனவரதம் என்கை. (யதீய சரணௌ) என்னை இவ்வவஸ்த்தா பந்நனுக்கின திருவடிகள். (ஶரணம்) உபாயோபேயங்கள் இரண்டும். (மதீயம்) பெரிய முதலியார் திருவடிகளாகில் எனக்கு இரண்டுமாயிருக்கும் என்கை. அதாவது:— ஸம்ஸார தஶையிலே பகவானே உபாயமென்று உபதேஶித்து, உபாயாத்யவஸாயத்துக்கு அடியான ஸ்வானுக்ரஹத்தாலே பகவத்ப்ராவண்யத்தை விளைத்தும், ப்ராப்யதேஶத்திலே சென்றால், நித்யஸூரிகள் கோஷ்டியிலே ப்ரவேஶிப்பித்தும், பின்பு நித்யஸூரிகளோபாதி உத்தேஶ்யமா யிருக்கையாலும் அப்படிச் சொல்லுகிறது. அத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ மதீயம் ஶரணம், மதுஜிதங்க்ரி ஸரோஜ தத்த்வ ஜ்ஞாநாநுராகமஹிமாதிஶயாந்தஸீம்நே நாதாய தஸ்மை நாதமுநயே நம: 2.

3. பதவுரை:— அபரிமித—அளவற்ற, அச்யுத பக்தி—பகவத் பக்தியென்ன, தத்த்வ ஜ்ஞாந—உண்மை அறிவென்ன, (இவைகளாகிற) அம்ருதாப்தி—அமுதக்கடலின், பரிவாஹ—ப்ரவாஹமாயிருக்கும், ஶுபை: வசோபி:—சுபமான வார்த்தைகளாலே, லோகே—இவ்வுலகத்தில், அவதீர்ண—அவதாரம் செய்திருக்கிற, பரமார்த்த—பரமப்ரயோஜனமாயும், ஸமக்ர—பூர்ணமாயுமிருக்கும், பக்தியோகாய—பக்தியோகத்தை உடையவரும், யமிநாம் வராய—யோகிகளில் மேலானவருமான, நாதமுநயே—நாதமுனிகளுக்கு, பூய: நம:—மறுபடியும் நமஸ்காரம்.

அவ:—(பூயோ நம இதி) த்ருஷார்த்தனுக்குத் தண்ணீர் குடிக்கக் குடிக்கப் பர்யாப்தி பிறவாதாப்போலே, ‘பின்னையும் அவர்க்கு அடியேன்’ என்கிறார். ஆஶ்ரிதரை ஒருகாலும் நழுவவிடாத அச்யுதவிஷயத்திலே ஜ்ஞானபக்த்யாதிகளாகையாலே, தம்மளவில் பர்யவஸியாதே, பகவத்விஷயத்துக்கு அபூமியான ஸம்ஸாரமெங்கும் வெள்ளமிடும்படியான இவருடைய ஜ்ஞானபக்திகளுடைய ப்ரக்ருஷ்டதையைச் சொல்லுகிறது.

வ்யா:— (பூயோ நம:) புநஶ்ச நம:; (77) “**नमो नमस्ते**” (நமோ நமஸ்தே) என்கிறபடியே. (அபரிமித) கிடந்த பாயிலே வெள்ளங்கோத்தாப்போலே இருந்தவிடங்களிலே வந்து கிட்டும்படி எல்லையிறந்திருக்கை. (அச்யுத) நியந்த்ருத்வஸ்வாமித்வாதி கல்யாண குணங்களாலே குறைவற்றிருக்கை என்னுதல்; ஏகரூபமாயிருக்கும் என்னுதல்; என்றும் ஆஶ்ரிதார்த்தமாயிருக்கும் இருப்பை நழுவவிடாதவன் என்னுதல்; “ஆர்ந்தபுகழ் அச்சுதன்” “நமன் தமர்க்கருநஞ்சினை அச்சுதன்தன்னை” என்கிறபடியே, ஆஶ்ரிதரைத் தந்தாம் கையிலும், பிறர் கையிலும் காட்டிக்கொடாதவன் என்னுதல். (பக்தி தத்த்வ ஜ்ஞாநாம்ருதாப்தி பரிவாஹஶுபைர் வசோபி:) பக்தி தத்வஜ்ஞானங்களாகிற அம்ருதாப்தியினுடைய பரிவாஹரூபமான சுபமான வசஸ்ஸுக்களாலே. உபாயம் ஈஶ்வரனாகையாலே, ஜ்ஞானபக்திகள் போகரூபமாய், அபரிச்சின்னமாயிருக்கும் என்கை. பரிவாஹமாவது:—

**तत्त्वेन यश्चिदचिदीश्वरतत्स्वभावभोगापवर्गतदुपायगतीरुदारः ।
सन्दर्शयन् निरमिमीत पुराणरत्नं तस्मै नमो मुनिवराय पराशराय ॥४॥**

4. தத்த்வேந யஶ்சிதசிதீஶ்வரதத்ஸ்வபாவ போகாபவர்க்க ததுபாயகதீருதார: ।
ஸந்தர்ஶயந் நிரமிமீத புராணரத்நம் தஸ்மை நமோ முநிவராய பராஶராய ॥

---

அவ்வவ ரக்ஷணார்த்தமாக அதிகஜலநிர்க்கமனஸ்ரோதஸ்ஸு. வசஸ்ஸுக்களுக்கு சுபத்வமாவது:— (86) "**अविस्तरमसन्दिग्धं**" (அவிஸ்தரமஸந்திக்தம்) இத்யாதிகளை உடைத்தாயிருக்கை. (லோகே) பகவத்பக்திக்கு மேட்டுமடையான ஸம்ஸாரத்திலே. (87) "**सैषा भार्गवी वारुणी विद्या । परमे व्योमन् प्रतिष्ठिता ॥**" (ஸைஷா பார்க்கவீ வாருணீ வித்யா பரமே வ்யோமந் ப்ரதிஷ்ட்டிதா) என்று பரமபதத்தில் பரிமாறக்கடவ பக்தியை, "நான்முகனார் பெற்ற நாட்டுளே நற்பாலுக்குய்த்தனன்" என்கிறபடியே, ஸம்ஸாரத்திலே நடையாடும்படி பண்ணினபடி. (அவதீர்ண) ஈஶ்வராவதாரம் போலேயிறே ஸ்வயம் ப்ரயோஜனமான பக்த்யவதாரம். (பரமார்த்த) பரமப்ரயோஜனரூபமாயிருக்கை. (ஸமக்ர) "அதனில் பெரிய" * என்னும்படி குறைவற்றிருக்கை. (பக்தியோகாய) பக்தியை உடையரான. உக்தமான பக்திதத்வஜ்ஞானங்கள் இரண்டையும் சொல்லிற்று, இரண்டும் ஒரு நீரான படியாலே. (யமிநாம் வராய) "முடியானே"யில் சொல்லுகிறபடியே, அவனையல்லது அறியாத கரணங்களை உடையராயிருப்பார்குத் தலைவரானவர்க்கு; "வாயவனையல்லது வாழ்த்தாது" என்றிருக்குமவர்களுக்கு வரணீயராயிருக்குமவர் என்றுமாம். அபரிமிதாச்யுத பக்தி தத்த்வஜ்ஞாநாம்ருதாப்திபரிவாஹ ஶுப்பர் வசோபி:, லோகேऽவதீர்ண பரமார்த்த ஸமக்ரபக்தியோகாய யமிநாம் வராய நாதமுநயே பூயோ நம: 3.

4. பதவுரை:— உதார: ய:—உதாரரான எந்தப் பராஶரர், சித் அசித் ஈஶ்வர தத்ஸ்வபாவ போக அபவர்க்க ததுபாய கதீ:—சித்து, அசித்து, ஈஶ்வரன் என்னும் தத்வத்ரயம், அவற்றின் ஸ்வபாவங்கள், (இவ்வுலகத்து) போகங்கள், மோக்ஷம், போகமோக்ஷஸாதனங்கள், ஜீவன் செல்லும் கதிகள் ஆகிய இவைகளை, தத்த்வேந—உள்ளபடி, ஸந்தர்ஶயந்—நன்கு விளக்கிக்கொண்டு, புராணரத்நம்—புராணங்களுள் மேலான ஸ்ரீவிஷ்ணுபுராணத்தை, நிரமிமீத — அருளினரோ, தஸ்மை — அப்படிப்பட்ட, முநிவராய — ரிஷிஶ்ரேஷ்டரான, பராஶராய—பராஶரருக்கு, நம:—நமஸ்காரம்.

அவ:— (தத்த்வேநேதி)—பெரிய முதலியார் ஜ்ஞானத்துக்கு லோகபரிக்ரஹமாத்ரமன்றிக்கே, வேதவிதக்ரேஸரபராஶரானுமதியாலே ப்ராமாணிகத்வம் உண்டென்று இவ்வர்த்தத்தினுடைய ப்ராமாணிகத்வம் சொல்லுகிறது. கிஞ்ச, இவர்க்கும் ஸ்ரீபராஶரபகவானுக்கும் ஸ்வபாவைக்யமுண்டு. க்ருஷ்ணப்ராவண்யமும், லோகத்துக்குப் பண்ணின ஔதார்யமும் இருவர்க்குமுண்டு. அத்தாலும் அவரை நமஸ்கரிக்கிறார்.

வ்யா:— (தத்த்வேந) ஜ்ஞாதவ்யார்த்தங்களை உள்ளபடியே காட்டுகை. (ய:) (88) "**स होवाच व्यासः पाराशर्यः**" (ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:) என்கிற ப்ரமாண

* திருவாய்மொழி (10—10—10) "அதனில் பெரிய என் அவா" [தத்வத்ரயத்தைக்காட்டிலும் மேலான என் ஆசை.]

ப்ரஸித்தியை ப்ரகாஶிப்பிக்கிறது. (சித்) ஜ்ஞாதா. அத்ர பராஶர:— (89) "**आत्मा शुद्धोऽक्षरश्शान्तः निर्गुणः प्रकृतेः परः। प्रवृद्ध्यपचयौ नास्य एकस्याखिलजन्तुषु॥**" (ஆத்மா ஶுத்தோऽக்ஷரஶ்ஶாந்தோ நிர்க்குண: ப்ரக்ருதே: பர:। ப்ரவ்ருத்த்யபசயௌ நாஸ்ய ஏகஸ்யாகில-ஜந்துஷு॥) இத்யாதி. இதில் நிர்க்குணத்வமாவது:— ஸத்வாதிகுணராஹித்யம். ஏகஸ்யா-கிலஜந்துஷு:— தேவதிர்யங்மநுஷ்யாக்ய ஸர்வப்ராணிஷு. ஏகஸ்ய—ஜ்ஞாநைகாகாரதயா ஸம இத்யர்த்த:; (90) "**निर्दोषं हि समं ब्रह्म**" (நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம), (91) "**पण्डितास्समदर्शिनः**" (பண்டிதாஸ் ஸமதர்ஶிந:) இதி பகவதைவோக்தம். (அசித்) அஸம் ஜ்ஞாவத்தான அசேதனம். (92) "**विकारजननीमज्ञां**" (விகாரஜநநீமஜ்ஞாம்) இத்யுபநிஷத். தத்ராபி பராஶர:— (93) "**त्रिगुणं तज्जगद्योनिः अनादिप्रभवाप्ययम्। अक्षय्यं**" (த்ரிகுணம் தஜ்ஜகத்யோநி: அநாதிப்ரபவாப்யயம், அக்ஷய்யம்) இத்யாதி. (ஈஶ்வர) உபயோர் நியந்தாவான ஸ்வாமி. தத்ராபி பராஶர:;— (94) "**परमात्मा च सर्वेषामाधारः परमेश्वरः। विष्णुनामा स वेदेषु वेदान्तेषु च गीयते॥**" (பரமாத்மா ச ஸர்வேஷாமாதார: பரமேஶ்வர:। விஷ்ணுநாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே॥), (95) "**परः पराणां परमः परमात्मात्मसंस्थितः। रूपवर्णादिनिर्देशविशेषण-विवर्जितः॥ सर्वत्रासौ समस्तञ्च वसत्यत्रेति वै यतः। ततस्स वासुदेवेति विद्वद्भिः परिपठ्यते॥**" (பர: பராணாம் பரம: பரமாத்மாத்மஸம்ஸ்தித:। ரூபவர்ணாதிநிர்தேஶ விஶேஷணவிவர்ஜித:॥ ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத:। ததஸ் ஸ வாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்யதே॥) இத்யாதி. (தத்ஸ்வபாவ) தேஷாம் ஸ்வபாவ:; தத்ர ச ஸ:;— (96) "**प्रधानञ्च पुमांश्चैव सर्वभूतात्मभूतया। विष्णुशक्त्या महाबुद्धे वृतौ संश्रयधर्मिणौ॥**" (ப்ரதாநஞ்ச புமாம்ஶ்சைவ ஸர்வபூதாத்மபூதயா। விஷ்ணுஶக்த்யா மஹாபுத்தே வ்ருதௌ ஸம்ஶ்ரயதர்மிணௌ॥) இத்யாதி. (போக) ப்ரஹ்மாதிபிபீலிகாந்தமான பத்தசேதனவர்க்கத்துக்குக் கர்மாநுகுணமாக தாரதம்யேந அநுபாவ்யமான ஶப்தாதிகள். (அபவர்க்க) ஶப்தாதிகளுடைய அல்பாஸ்திரத்வாதி தோஷ தர்ஶனத்தாலே பீதரான சேதனருக்கு து:க்கநிவ்ருத்திரூபமான ஆத்மப்ராப்தியும், ஸுகைகதானமான பகவத்ப்ராப்தியும். தத்ராபி ஸ:;— (97) "**योगिनाममृतं स्थानं स्वात्म-सन्तोषकारिणां**" (யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்), (11) "**तदस्य त्रिविधस्यापि दुःखजातस्य**" (ததஸ்ய த்ரிவிதஸ்யாபி து:க்கஜாதஸ்ய) இத்யாரப்ய, (11) "**निरस्तातिशयाह्लादसुखभावैकलक्षणा। भेषजं भगवत्प्राप्तिः एकान्तात्यन्तिकी मता**" (நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுக-பாவைகலக்ஷணா। பேஷஜம் பகவத்ப்ராப்தி: ஏகாந்தாத்யந்திகீ மதா॥) இத்யாதி. (தது பாயகதீ:) போகமோக்ஷங்களுடைய ஸாதனபேதங்களை. நித்யநைமித்திககாம்யகர்மாநுஷ்டாநம் போகஸ்ய; ஸாங்காநுஷ்டிதகர்மஸாத்யஜ்ஞாநயோகாதி ஆத்மப்ராப்தே:; ஜ்ஞாநகர்மாநுக்ருஹீதபக்தி: பகவத்ப்ராப்தே:. (உதார:) ஸம்ஸாரிகள் பக்கல் அர்த்தித்வமாதல், ப்ரயோஜன மாதல் நினையாதே, இவர்கள் அனர்த்தபரிஹாரமே ப்ரயோஜனமாக, உபகரித்தல்லது நிற்க மாட்டாத மேகம்போலே உபகரித்தவர். (ஸந்தர்ஶ்யந்) ஸம்ஶயவிபர்யயரஹிதமாக ப்ரத்யக்ஷியா நின்றுகொண்டு. (நிரமிமீத) "அந்தாதி மேலிட்டு அறிவித்தேன் ஆழ்பொருளை" என்கிறபடியே துரவகாஹமான வேதார்த்தத்தை அல்பக்ரந்தத்தாலே பண்ணினன் என்கை. (புராணரத்நம்) புராணமாவது:— (98) "**सर्गश्च प्रतिसर्गश्च**" (ஸர்க்கஶ்ச ப்ரதிஸர்க்கஶ்ச) இத்யாரப்ய, (98) "**पुराणं पञ्चलक्षणं**" (புராணம் பஞ்சலக்ஷணம்) என்கிறபடியே பஞ்சலக்ஷணோபேதமான க்ரந்தஜாதம். "புராபி நவம் புராணம்" என்றுமாம்; அதாவது:— ஸ்வரஸத்தை என்றுமொக்க

माता पिता युवतयस्तनया विभूतिः सर्वं यदेव नियमेन मदन्वयानाम् ।
आद्यस्य नः कुलपतेर्वकुलाभिरामं श्रीमत्तदङ्घ्रियुगलं प्रणमामि मूर्ध्ना ॥ ५ ॥

5. மாதா பிதா யுவதயஸ் தநயா விபூதி: ஸர்வம் யதேவ நியமேந மதந்வயாநாம் ।
ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா ॥

---

ஒருவரால் அழிக்கவொண்ணாதிருக்கை. (ரத்நம்) அர்த்தப்ரகாஶகமாயிருக்கையும், ஸங்க்ரஹமாயிருக்கையும், ஆபத்ரக்ஷகமாயிருக்கையும், இந்தப் புராணாதிகாரிக்கு லோகபரிக்ரஹம் ஸித்திக்கையும். (முநிவராய) தனக்கு வரங்கொடுத்த வஸிஷ்ட்டபுலஸ்த்யர்களுக்கு முத்ரிதாமுத்ரிதப்ரதிமுத்ரிதராய், அத்தாலே அவர்கள் படியை உடையவன் என்னுதல்; 'முநீநாம் வரணீயாய' என்கிறபடியே, அவர்களுக்கு ஆதரணீயன் என்னுதல். (பராஶராய) பரராகிறார்:— பாஹ்யகுத்ருஷ்டிகள்; அவரை ப்ரமாணஶரங்களாலே ஹிம்ஸித்து, வைதிக மர்யாதையை ஸ்தாபித்தான் என்னுதல்; இந்த்ரிய ஜயத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்களை ஜயித்தான் என்னுதல். ய: உதார: சிதசிதீஶ்வரதத்ஸ்வபாவபோகாபவர்க்கததுபாயகதீ:, தத்த்வேந ஸந்தர்ஶயந், புராணரத்நம் நிரமிமீத, முநிவராய தஸ்மை பராஶராய நம: 4.

5. பதவுரை:— மத் அந்வயாநாம்— என்னுடைய வம்சத்தவர்களுக்கு, நியமேந— எப்போதும், மாதா— தாயும், பிதா— தந்தையும், யுவதய:— மாதரும், தநயா:— மக்களும், விபூதி:— பெருஞ்செல்வமும், ஸர்வம்— (மற்றுமுள்ள) எல்லாமும், யத் ஏவ— எந்த ஆழ்வாருடைய திருவடியிணையேயோ, ந:— நமக்கு, ஆத்யஸ்ய குலபதே:— முதல்வரும் குலபதியுமான அவருடைய, வகுள அபிராமம்— மகிழமலராலே அலங்கரிக்கப்பட்டதும், ஸ்ரீமத்— ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயை உடையதுமான, தத் அங்க்ரியுகளம்— அந்தத் திருவடியிணையை, மூர்த்நா— தலையால், ப்ரணமாமி— வணங்குகிறேன்.

அவ:— (மாதேதி) இந்த ஜ்ஞாநம், அதிக்ருதாதிகாரமாய்ப்போகாமே ஸர்வாதிகாரமாம்படி, த்ராவிடமான ப்ரஹ்மஸம்ஹிதையை, "மயர்வற மதிநலம் அருளினன்" என்கிற பக்தியாலே வாஸிதமாக்கி, "மரங்களும் இரங்கும் வகை" என்கிற தம்முடைய ஆகர்ஷகமான ஈரச்சொல்லாலே அருளிச்செய்கையாலும், பெரிய முதலியாருக்கு இந்த ஜ்ஞாநத்துக்கு உத்பாதகம் ஆழ்வார் திருவடிகளாகையாலும், இவர் திருவடிகளிலே விழுகிறார். "எத்திறம்" என்றும், "நெய்யுண் வார்த்தையுள் அன்னை கோல்கொள்ள" என்றும், "எல்லாம் கண்ணன்" என்றும், பெரிய முதலியாரையும், ஸ்ரீபராசரபகவானையும் போலே, க்ருஷ்ணகுணவித்தராயிருக்கும்படியையும் நினைத்து, ஆழ்வார் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

வ்யா:— (மாதா) உத்பத்திக்கு முன்னே வரங்கிடந்து, பெறுகைக்கு வருந்தி, பத்து மாஸம் கர்ப்பதாரணம் பண்ணி, ப்ரஸவவேதனையை அனுபவித்து, அஶுத்திகளையும் மதியாதே பால்யதஶையில் ஆதரித்து, பக்வனானாலும் இவன் பருஷபாஷணம் பண்ணப் பொறுத்து, அகல இசையாதே, அவன் ப்ரியத்தையே வேண்டும் மாதாவைப்போலே உபகாரகனாயிருக்கை. (பிதா) அவள் பாத்ரமாத்ரமென்னும்படி, உத்பாதகனாய், என்றுமொக்க ஹிதபரனான பிதாவும். (யுவதய:) இருவரையும் மறந்து விரும்பும் யுவதிகளைப்போலே நெஞ்சுக்கு இனியராயிருக்கை. (தநயா:) அவனுடைய யௌவனத்தை அழியமாறிப்பெற்றவனாய், பக்வதஶையில் ரக்ஷகனாய்,

ஆமுஷ்மிகத்தில் * நிரயநிஸ்தாரகனை புத்ரனைப்போலேயிருக்கை. (விபூதி:) விபவமில்லாத போது இவையெல்லாம் அஸத்ஸமமாயிருக்கையாலே, இவற்றை நன்றாக்கும் ஐஶ்வர்யம்போலே உத்தேஶ்யமாயிருக்குமவர். (ஸர்வம்) அனுக்தமான ஸர்வபோகங்களுமாய் இருக்கை. (யதேவ) அவதாரணத்தாலே § "சேலேய் கண்ணியர்" என்றிருக்கும் ஆழ்வார் நினைவின்றி இருக்கை. (நியமேந) என்றுமொக்க அவருக்கு ப்ரியமென்று போமதொழிய ப்ராமாதிகமாகவும் புறம்பு போவதன்றிக்கே இருக்கை. (மதந்வயாநாம்) (99) "**विद्यया जन्मना वा**" (வித்யயா ஜந்மநா வா) என்று உபயஸந்தானஜாதருக்கும். (ஆத்யஸ்ய) வைதிகஸந்தானத்துக்கு ப்ரதமாசார்யரா யிருக்கை. (ந: குலபதே:) ஸ்த்ரீக்கு பர்த்ருகுலம் போலே, கோத்ரரிஷிகளும் அவரே என்கை. (வகுளாபிராமம்) திருமகிழ்மாலையாலே அலங்க்ருதமாயுள்ளத்தை. மகிழலங்காரமான திருவடிகள். இத்தாலே திருவடிகளில் பரிமளத்தாலே வந்த போக்யதையைச் சொல்லுகிறது. 'நல்லடி மேலணி நாறு துழாயை' வ்யாவர்த்திக்கிறது. (ஸ்ரீமத்) ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயோடே நித்யஸம்யுக்தமாயிருக்கை. (100) "**अन्तरिक्षगतः श्रीमान्**" (அந்தரிக்ஷகதஶ் ஸ்ரீமாந்), (101) "**स तु नागवरः श्रीमान्**" (ஸ து நாகவரஶ் ஸ்ரீமாந்), (102) "**लक्ष्मणो लक्ष्मिसम्पन्नः**" (லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:) என்று பகவத்ப்ரத்யாஸத்தியை ஐஶ்வர்யமாகச் சொல்லக்கடவதிறே. என்னுடைய ஸம்பந்தத்துக்கு அடியான ஐஶ்வர்யத்தை உடையர் என்றுமாம். (ததங்க்ரியுகளம்) 'அது' என்னுமித்தனையொழிய, பேசி முடிக்கவொண்ணாது என்கை. (யுகளம்) சேர்த்தியால் வந்த அழகை உடைத்தாயிருக்கை. (ப்ரணமாமி மூர்த்நா) ஆழ்வாருடைய திருவடிகளை நினைத்தவாறே, 'நம:' என்று நிற்கமாட்டாதே அவர் திருவடிகளிலே தலைசேர்க்கிறார் ஒருவருக்கு ஶேஷிகள் இருவராய்ப்படி இருக்கை எங்ஙனே? என்னில்: க்ரதுஶேஷித்வம் யாகத்துக்கும், புரோடாஶத்துக்கும் உண்டானாற்போலே, ஈஶ்வரன் ப்ரதானஶேஷியாய், ததீயர் த்வாரஶேஷிகளாமிடத்தில் விரோதமில்லை. அதவா, நிருபாதிகஶேஷி அவன், தத்ஸம்பந்தமடியாக வந்ததாகையாலே பாகவதஶேஷத்வம் ஸோபாதிகம் என்றுமாம். முதல் மூன்று ஶ்லோகத்தாலே, பெரிய முதலியாருடைய ஜ்ஞானபக்த்யாதிக்யம் சொன்னார்; நாலாம் ஶ்லோகத்தாலே, இவ்வர்த்தம் † த்ரைவித்யவ்ருத்தானுமதம் என்கிறார்; அஞ்சாம் ஶ்லோகத் தாலே, இவருக்கு இந்த ஜ்ஞானம் ஆழ்வாராலே வந்தது என்கிறார். மதந்வயாநாம் யதேவ நியமேந மாதா பிதா யுவதயஸ்தநயா விபூதிஸ்ஸர்வம், ஆத்யஸ்ய, ந: குலபதே:, வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் மூர்த்நா ப்ரணமாமி. 5.

6. பதவுரை:— யத்—எந்த எம்பெருமானுடைய திருவடியானது, மே மூர்த்நி—என் தலையிலும், ஶ்ருதிஶிரஸ்ஸு ச—வேதாந்தங்களிலும், பாதி—ப்ரகாஶிக்கிறதோ, யஸ்மிந்—எந்தத் திருவடியிலே, அஸ்மந் மநோரதபத: ஸகல:—நமது அன்புப்பெருக்கம் எல்லாம், ஸமேதி—அழகாகச் சேருகின்றதோ, ந: குலதநம்—நம்முடைய குலச்செல்வமும், குலதைவதம்—(நம்) குலத்துக்கு (ஆஶ்ரயிக்கத்தகுந்த) தேவதையாகவுமிருக்கும், அரவிந்தவிலோசநஸ்ய தத் பாதாரவிந்தம்—புண்டரீகாக்ஷனுடைய அந்தத் திருவடித்தாமரையை, ஸ்தோஷ்யாமி—துதிக்கப்போகிறேன்.

---

* நிரயநிஸ்தாரகன்—நரகத்திலிருந்து தாண்டுவிப்பவன். § திருவாய்மொழி—5—1—8.

† த்ரைவித்யவ்ருத்தானுமதம்—வைதிகரும் பெரியோருமான பராசரரால் அனுமதிக்கப்பட்டது.

यन्मूर्ध्नि मे श्रुतिशिरस्सु च भाति यस्मिन्नस्मन्मनोरथपथस्सकलस्समेति ।
स्तोष्यामि नः कुलधनं कुलदैवतं तत्पादारविन्दमरविन्दविलोचनस्य ॥ ६ ॥

6. யந்மூர்த்நி மே ஶ்ருதிஶிரஸ்ஸு ச பாதி யஸ்மிந் அஸ்மந்மநோரதபதஸ்ஸகலஸ்ஸமேதி ।
ஸ்தோஷ்யாமி ந: குலதநம் குலதைவதம் தத் பாதாரவிந்தமரவிந்தவிலோசநஸ்ய ॥

---

அவ:— (யந் மூர்த்நி இதி) "அறியாதன அறிவித்த அத்தா! நீ செய்தன" என்று, உபகாரத்தில் ப்ரதமனை இருக்குமிறே. "வைகுந்தனைப் புகழ" என்கிறபடியே, தன்னுடைய ஸ்துதி ஈஶ்வரனுக்கு அபிமதமாகையாலும், இதுதான் ஆசார்யர்களுக்கு ப்ரியமாகையாலும், ஸ்தோத்ரத்தில் மேல் சொல்லப்புகுகிற உபாயோபேயங்களை ஸங்க்ரஹித்துக்கொண்டு, உபக்ரமித்தபடியே பகவத்ஸ்தோத்ரத்திலே இழிகிறார்.

வ்யா:— (மே மூர்த்நி இத்யாதி) தம்முடைய நிஹீநதாதிஶயத்தையும், ஸௌந்தர்யாதிகளிலே தோற்று, அத்தாலே வந்த ஶேஷத்வத்தையும், அந்தகாரத்தில் தீபம்போலே, தம்முடைய திருமுடியிலே வந்தபின்பு திருவடிகள் மிகவும் விளங்கினபடியையும் சொல்லுகிறது. இத்தால் அவனுடைய உபாயபாவத்துக்கு ஏகாந்தமான ஸௌலப்யாதிகளையும், இத்தலையில் விஷயீகாரம் தன் பேறாக நினைத்திருக்குமென்றும் சொல்லுகிறது. "தலைக்கணியாய்" என்று சேஷபூதர் ப்ரார்த்திக்குமத்தைப் பெற்றேன் என்கிறார். சேஷியாகையாலே ஸர்வவிஷயங்களிலும் அவன் இருக்கும்படி இது; க்ருதஜ்ஞராகையாலே பேசுகிறார். (ஶ்ருதிஶிரஸ்ஸு ச பாதி) ஶ்ருதிஶிரஸ்ஸுக்களிலும் விளங்காநின்றது. இத்தால் ப்ராப்யத்வமும், ஸர்வாதிகாரத்வமும், ஸர்வமங்களாகாரத்வமும், அதிதுர்லபத்வமும் சொல்லுகிறது. சகாரத்தாலே, வேதாந்தங்களிலும் தம் தலையிலும் ஒக்கத் திருவடிகளைத் தரமிடாதே வைத்தபடியாலே, தம் பக்கல் அவனுக்குண்டான ஆதராதிஶயம் சொல்லுகிறார். சஶப்தம் ஜனனமரணத்திலேயாய், தம்முடைய தலையிலே அந்வயித்த ஸௌலப்யமே திருவடிகளுக்கு ஸ்வரூபம் என்றதாகவுமாம். "திருப்பாற்கடலே என் தலையே" என்னுமாப்போலே. (யஸ்மிந் அஸ்மந்மநோரதபதஸ் ஸகலஸ் ஸமேதி) (103) "**पिता त्वं माता त्वं**" (பிதா த்வம் மாதா த்வம்) இத்யாதிகளான என்னுடைய ஐஹிகாமுஷ்மிகஸகலமனோரதங்களும் அழகியதாக யாதொன்றிலே சேருகிறது. (ஸ்தோஷ்யாமி) இப்படி ப்ராப்யமுமாய், விலக்ஷணமுமாய், உபகாரகமுமான திருவடிகளிலே வாசிகமான அடிமை செய்கிறேன். (ந: குலதநம்) தனமாவது, ஆபத்ரக்ஷகமுமாய், நித்யபோக்யமுமாயிருக்குமது. 'குலதநம்' என்கையாலே, அயத்நஸித்தமுமாய், ஸ்வத: ப்ராப்தமுமாயிருக்கை. (குலதைவதம்) இத்தனத்தைத் தருமதாய் ஆஶ்ரயணீயமாயிருக்குமது. இத்தால், ஸ்தோத்ரப்ரதிபாத்யமான ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லுகிறது. (தத் பாதாரவிந்தம்) உக்தஸ்வபாவமான திருவடித்தாமரைகளை. (அரவிந்த விலோசநஸ்ய) (104) "**जितन्ते पुण्डरीकाक्ष**" (ஜிதந்தே புண்டரீகாக்ஷ) என்று ருசிஜனகமுமாய், "தன்பால் பணிந்த என்பால் எம்பிரான தடங்கண்கள்" என்று வத்ஸலமுமாய், "தாமரைக்கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை" என்று ஸௌரிபோக்யமுமான திருக்கண்களை உடையவனுடைய. யந்மூர்த்நி மே ஶ்ருதிஶிரஸ்ஸு ச பாதி, யஸ்மிந் அஸ்மந்மநோரதபதஸ்ஸகலஸ் ஸமேதி, ந: குலதநம் குலதைவதம், அரவிந்தவிலோசநஸ்ய தத்பாதாரவிந்தம் ஸ்தோஷ்யாமி. 6.

**तत्त्वेन यस्य महिमार्णवशीकराणुश्शक्यो न मातुमपि शर्वपितामहाद्यैः ।**
**कर्तुं तदीयमहिमस्तुतिमुद्यताय मह्यं नमोऽस्तु कवये निरपत्रपाय ॥ ७ ॥**

7. தத்த்வேந யஸ்ய மஹிமார்ணவ ஶீகராணுஶ் ஶக்யோ ந மாதுமபி ஶர்வபிதாமஹாத்யை: ।
கர்த்தும் ததீயமஹிமஸ்துதிமுத்யதாய மஹ்யம் நமோऽஸ்து கவயே நிரபத்ரபாய ॥

---

7. பதவுரை:— யஸ்ய—எந்த எம்பிரானுடைய, மஹிம அர்ணவ ஶீகர அணு:— மஹிமைக்கடலில் ஒருதிவலையில் அணுவளவுங்கூட, ஶர்வ பிதாமஹாத்யை: அபி—சிவன், பிரமன் முதலியவர்களாலும், தத்த்வேந—உள்ளபடி, மாதும்—அளவிட, ந ஶக்ய:— முடியாததோ, ததீய மஹிம ஸ்துதிம்—அப்பெருமானுடைய பெருமையைப்பற்றிய ஸ்தோத்ரத்தை, கர்த்தும்—செய்வதற்கு, உத்யதாய—ஆரம்பித்திருப்பவனும், நிரபத்ரபாய—வெட்கமில்லாதவனும், கவயே—கவியென்ற பெயர்கொண்டவனுமான, மஹ்யம்—எனக்கே, நம: அஸ்து—நமஸ்காரம் செய்துகொள்ளவேண்டும்.

அவ:— (தத்த்வேநேதி) 'விதிஶிவஸநகாதிகள் கரைபற்றிலே நின்று அழுந்துகிற விஷயத்தைப் பரிச்சேதித்துப் புகழ இழிந்தேன்' என்று தம்மை க்ஷேபித்து, யுத்தத்திலே உத்யுக்தனான அர்ஜுனன் (105) "**विसृज्य सशरं चापं**" (விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம்) என்று நிவ்ருத்தனைப்போலே, ஸ்தோத்ரத்தில் நின்றும் நிவ்ருத்தராகிறார்.

வ்யா:— (தத்த்வேந) ஈஶ்வரனுடைய ஸ்வரூபரூபாதிகள் இருந்தபடியே. (யஸ்ய) (106) "**यथा रत्नानि जलधेः**" (யதா ரத்நாநி ஜலதே:) இத்யாதிகளிலே அநந்தகுணகனை ப்ரஸித்தனானவனுடைய. (மஹிமார்ணவ ஶீகராணு:) குணார்ணவத்தினுடைய ஶீகராணுவானது; திவலையில் ஸ்பர்ஶவேத்யமானது; அத்யல்பமானது. (மாதும் ந ஶக்ய:) மனஸ்ஸால் பரிச்சேதிக்கவும் ஶக்யமன்று. ஆராலே? என்னும் அபேக்ஷையிலே சொல்லுகிறது: (ஶர்வபிதாமஹாத்யைரபி) (107) "**ईश्वरात् ज्ञानमन्विच्छेत्**" (ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சேத்) என்று ஜ்ஞாநாதிகனாகவும், 'ஸர்வஸம்ஹர்த்தா' என்றும் சொல்லுகிற ருத்ரனாலும், அவனை ஓதுவித்தவனுமாய், ஜகத்ஸ்ரஷ்டாவான ப்ரஹ்மாவாலும்; ஆதிஶப்தத்தாலே ப்ரஹ்மபாவனையையான ஸநகாதிகளையும், ஸர்வருக்கும் ஹிதானுஶாஸனம் பண்ணுகிற வேதத்தையும் நினைக்கிறது; மேலே "ஸதா ஸ்துவந்த: வேதா:" என்றும் "விதிஶிவஸநகாத்யை:" என்றும் சொல்லுகிறபடியாலே. (ததீயமஹிமஸ்துதிம் கர்த்துமுத்யதாய) அவனுடைய பெருமையை உள்ளளவும் சொல்லிவிடுகையன்றிக்கே, இல்லாததையும் சொல்ல உத்யுக்தனாகை. (மஹ்யம் நமோऽஸ்து) இப்படி ஸாஹஸிகனாகையாலே ஸ்துத்யவிஷயத்தை விட்டு, எனக்கு நமஸ்காரம். (கவயே) ஸர்வவர்ணனமுகராய. (நிரபத்ரபாய) நிர்லஜ்ஜனாயிருக்கிறவனுக்கு. 'நாம் புகழ்கை இவனுக்கு நிறக்கேடாம்' என்று லஜ்ஜியாதொழிகை. யஸ்ய மஹிமார்ணவஶீகராணு: ஶர்வபிதாமஹாத்யைரபி தத்த்வேந மாதும் ந ஶக்ய:, ததீயமஹிமஸ்துதிம் கர்த்தும் உத்யதாய நிரபத்ரபாய கவயே மஹ்யம் நமோऽஸ்து. 7.

8. பதவுரை:— யத்வா—அல்லது, அஶக்த: (அஹம்)—ஶக்தியற்ற யான், ஶ்ரம அவதி—களைப்பு உண்டாகும் வரையிலாவது, யதாமதி வா அபி—புத்திக்குத் தெரிந்தவரையி

**यद्वा श्रमावधि यथामति वाप्यशक्तः स्तौम्येवमेव खलु तेऽपि सदा स्तुवन्तः ।**
**वेदाश्चतुर्मुखमुखाश्च महार्णवान्तः को मज्जतोरणुकुलाचलयोर्विशेषः ॥ ८ ॥**

8. யத்வா ஶ்ரமாவதி யதாமதி வாப்யஶக்த: ஸ்தௌம்யேவமேவ கலு தேபி ஸதா ஸ்துவந்த: ।
வேதாஶ்சதுர்முகமுகாஶ்ச மஹார்ணவாந்த: கோ மஜ்ஜதோரணுகுலாசலயோர்விஶேஷ: ॥

---

ஸர்வது, ஸ்தௌமி—ஸ்தோத்ரம் செய்கிறேன்; ஸதா—எப்போதும், ஸ்துவந்த:—துதிக்கும், தே வேதா: அபி—அந்த வேதங்களும், சதுர்முகமுகாஶ்ச—நான்முகன் முதலியவர்களும், ஏவம் ஏவ கலு—இப்படியேயல்லவோ (துதிப்பது;) மஹா அர்ணவ அந்த:—பெரிய கடலின் உள்ளே, மஜ்ஜதோ:—முழுகிப்போகிற, அணு குலாசலயோ:—(சிறிய) அணுவுக்கும், (பெரிய) குலபர்வதத்திற்கும், க: விஶேஷ:—என்ன வித்தியாசம்?

அவ:— (யத்வேதி) (108) "**इषुक्षयान्निवर्तन्ते**" (இஷுக்ஷயாந்நிவர்த்தந்தே), "காணுமளவுஞ்செல்லும் கீர்த்தியாய்" என்று அளவுடையாரும் தந்தாம் ஜ்ஞாந ஶக்த்யாதிகளளவும் புகழ்ந்தார்களத்தனை; உமக்கும் அவ்வளவு புகழ்கைக்கு விரோதமில்லை; (109) "**सा जिह्वा या हरिं स्तौति**" (ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி); வாய் ஸ்துதிக்கவன்றோ கண்டது; (9) "**स्तव्यः स्तवप्रियः**" (ஸ்தவ்யஸ் ஸ்தவப்ரிய:) என்கிறபடியே ஸ்தோத்ரம் நமக்கு ப்ரியமன்றோ? என்று யுத்தாந்நிவ்ருத்தனான அர்ஜுனனை (110) "**करिष्ये वचनन्तव**" (கரிஷ்யே வசநம் தவ) என்னப்பண்ணினாற்போலே, ஈஶ்வரன் தானே மூட்ட, ஸமாஹிதராகிறார்.

வ்யா:— (யத்வா) பூர்வபக்ஷநிவ்ருத்தி:; முன்பு 'அல்லோம்' என்றவிடம் அர்த்தமன்று என்கிறார். (ஶ்ரமாவதி யதாமதி வா) இளைப்பெல்லையாகவாதல், ஜ்ஞாநமெல்லையாகவாதல் என்னுதல்; ஜ்ஞாநஶக்த்யாதிகளளவே ஸ்தோத்ரம் பண்ணலாவது என்கை. (அஶக்தோபி ஸ்தௌமி) ஸர்வப்ரகாரத்தாலும் அஶக்தனேயாகிலும் ஸ்துதிக்கிறேன். (ஸதா ஸ்துவந்த: வேதாஶ் சதுர்முகமுகாஶ்ச ஏவமேவ கலு தேऽபி) த்யாஜ்யோபாதேயங்களைப் பிரிக்கைக்கும், த்யாஜ்யத்தை விட்டு உபாதேயத்திலே அவகாஹிக்கைக்கும் அடியான ஜ்ஞாநஶக்த்யாதிகளால் அதிகரானவர்களும். (ஸதா ஸ்துவந்த: வேதா:) ஸர்வகாலஸம்யோகத்தை உடைத்தான வேதங்களும். (சதுர்முகமுகாஶ்ச) த்விபரார்த்த காலாவதிகரான ப்ரஹ்மருத்ரர்களும், அதிகாராவஸானத்தளவும் ஸ்துதிக்கிற ஸநகாதிகளும். (ஏவமேவ கலு) ஜ்ஞாநஶக்த்யாதிகளளவேயிறே. (5) "**यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह**" (யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ), (111) "**यन्नायं भगवान् ब्रह्मा जानाति पुरुषोत्तमम्**" (யந்நாயம் பகவாந் ப்ரஹ்மா ஜாநாதி புருஷோத்தமம்), "மாமலரான் வார்சடையான் வல்லரேயல்லரே வாழ்த்து", "பேசுவார் எவ்வளவு பேசுவர் அவ்வளவே", "வல்லதோர் வண்ணம்", (112) "**न ग्राह्यः केनचित् क्वचित्**" (ந க்ராஹ்ய: கேநசித் க்வசித்). இங்ஙனேயாகிலும்; உமக்கும் அவர்க்கும் வாசியுண்டே என்னில்: வேதங்களுக்கும், சதுர்முகாதிகளுக்கும் வாசியுண்டாயிருக்கச்செய்தே, அவனை உள்ளபடி பேசமாட்டாமை ஒத்தாற்போலே, எனக்கும் அவர்களுக்கும் வாசியுண்டானாலும், உள்ளபடி பேசமாட்டாமையிலே

**किं चैष शक्त्यतिशयेन न तेऽनुकम्प्यः स्तोतापि तु स्तुतिकृतेन परिश्रमेण ।**
**तत्र श्रमस्तु सुलभो मम मन्दबुद्धेरित्युद्यमोऽयमुचितो मम चाब्जनेत्र ॥ ९ ॥**

9. கிஞ்சைஷ ஶக்த்யதிஶயேந ந தேऽநுகம்ப்ய: ஸ்தோதாபி து ஸ்துதிக்ருதேந பரிஶ்ரமேண।
தத்ர ஶ்ரமஸ்து ஸுலபோ மம மந்தபுத்தேரித்யுத்யமோऽயமுசிதோ மம சாப்ஜநேத்ர ॥

வாசியில்லை. எதுபோலே? என்னில்: (மஹார்ணவாந்தர் மஜ்ஜதோரணுகுலாசலயோ: கோ விஶேஷ:) ஸர்ஷபமஹீதரங்களுக்கு * நெடுவாசிப்பட வைஷம்யமுண்டானாலும், பெருங் கடலிலே புக்கு அமிழ்ந்துமளவில் விஶேஷமில்லையிறே; அதுபோலேயிறே. 8.

9. பதவுரை:— கிஞ்ச—மேலும், ஏஷ: ஸ்தோதா—துதிக்கும் அடியேன், ஶக்தி அதிஶயேந—(எனது) சக்தியின் மிகுதியினால், தே—உனக்கு, ந அநுகம்ப்ய:—இரங்கத்தகுந்தவனல்லேன்; அபி து—ஆனால், ஸ்துதி க்ருதேந பரிஶ்ரமேண—துதிப்பதினாலேற்படும் களைப்பினாலேயே (இரங்கத்தக்கவன்); ஹே அப்ஜநேத்ர—செங்கண்மாலே!, தத்ர—இப்படியிருக்குமிடத்தில், மந்த புத்தே:—அல்பமான புத்தியை உடைய, மம து—எனக்கோவெனில், ஶ்ரம:—களைப்பு, ஸுலப:—எளிதாக உண்டாகும்; இதி—ஆகையால், மம ச—எனக்கே, அயம் உத்யம:—இந்த முயற்சி, உசித:—தகுந்தது.

அவ:— (கிஞ்சேதி) ப்ரஹ்மாதிகளிற்காட்டில் எனக்கு ஸ்தோத்ரத்தில் இழிகைக்கு அதிகஹேது உண்டு என்கிறார். பரக்கப்புகழ்கை ஈஶ்வராநுக்ரஹஹேதுவன்றிக்கே, ஸ்துதி க்ருதமான பரிஶ்ரமம் அநுக்ரஹஹேதுவாம்படி ஶீலவானாகையாலே, மந்தபுத்தியான எனக்கு அந்த ஶ்ரமம் ஸுலபமாகையாலே அவர்களிற்காட்டில் நான் ஸ்தோத்ராதிகாரி என்கிறார்.

வ்யா:— (கிஞ்ச) 'கீழ்ச்சொன்ன ஸாம்யமொழிய ஸ்தோத்ரத்திலே அவர்களிற் காட்டில் எனக்கு அதிகாரம் உண்டு என்கைக்கு ஒரு ஹேது உண்டு' என்கிறார். (ஏஷ ஸ்தோதா) பகவதாபிமுக்யத்தாலே ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தனாய், 'வாய் படைத்த ப்ரயோஜனம் இது' என்று, பகவத்ஸ்தோத்ரத்திலே அதிகரித்தவன். (ஶக்த்யதிஶயேந ந தேऽநுகம்ப்ய:) நம்மை ஸ்தோத்ரம்பண்ண ஶக்தனென்று உனக்கு அநுக்ராஹ்யனாகிறேனல்லேன். (தே) (5) "**यतो वाचो निवर्तन्ते**" (யதோ வாசோ நிவர்த்தந்தே) என்றும், (113) "**तद्विप्रासो विपन्यवः**" (தத்விப்ராஸோ விபந்யவ:) என்றும், வேதங்களும் நித்யஸூரிகளும் புகழ்ந்து எல்லைகாணமாட்டாத மஹிமையை உடைய உனக்குப் பரக்க ஸ்தோத்ரம் பண்ணுகை தேட்டமன்றே என்னுதல்; ஸம்ஸாரிகள் ஆபிமுக்யம் பண்ணுகை தேட்டமான ஶீலவானாகையாலே, இவன் பண்ணும் ஸ்தோத்ரம் மிகைபான உனக்கு என்னுதல். (அபிது) மற்றப்படி என்னுதல்; 'பின்னை எங்ஙனே?' என்று ஸாநுநயப்ரஶ்நமாதல். (ஸ்துதிக்ருதேந பரிஶ்ரமேண) உன்னை ஸ்துதிக்கையிலே அத்யாதரத்தைப்பண்ணி, அதுக்கு ஈடான ஶக்தி இல்லாமையாலே, புகழவும் மாட்டாதே, தவிரவும் மாட்டாதே படும் இளைப்பாலேயிறே நீ இரங்குவது. (தத்ர) அர்த்தம் இப்படியாய் நின்றவிடத்தில், (ஶ்ரமஸ்து ஸுலபோ மம) எனக்கு விஶேஷித்த ஶ்ரமமானது குறைவற உண்டு என்றுமாம்; (து) அவதாரணமாய், எனக்கே குறைவற்ற ஶ்ரமமுள்ளது என்றுமாம். (மந்த புத்தே:) என்று ஶ்ரமஹேதுவைச்சொல்லுகிறது.

* ஸர்ஷபம்—கடுகு; மஹீதரம்—மலை.

**नावेक्षसे यदि ततो भुवनान्यमूनि नालं प्रभो भवितुमेव कुतः प्रवृत्तिः ।**
**एवं निसर्गसुहृदि त्वयि सर्वजन्तोः स्वामिन्न चित्रमिदमाश्रितवत्सलत्वम् ॥ १० ॥**

10. நாவேக்ஷஸே யதி ததோ புவநாந்யமூநி நாலம் ப்ரபோ பவிதுமேவ குத: ப்ரவ்ருத்தி: ।
ஏவம் நிஸர்க்கஸுஹ்ருதி த்வயி ஸர்வஜந்தோ: ஸ்வாமிந்ந சித்ரமிதமாஶ்ரிதவத்ஸலத்வம் ॥

---

அல்பபுத்தியென்கை. (இதி) இப்படி என்னுதல்; ஆகையால் என்று ஹேதுவாகச் சொல்லுதல். (அயமுத்யம:) என்றுகொண்டு உண்டான இந்த உத்யமம். (உசிதோ மம ச) சஶப்தம் அவதாரணமாய் எனக்கே உசிதம் என்னுதல்; ஸமுச்சயமாய், எனக்கும் உசிதம் என்று கீழ் ஶ்லோகத்தோடே கூட்டுதல். (அப்ஜநேத்ர) (114) "**अवलोकनदानेन भूयो मां**" (அவலோகநதாநேந பூயோ மாம்) என்றும், "உன் தாமரைக்கண்களால் நோக்காய்" என்றும் சொல்லுகிற படியே, அவிக்நேந ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டும்படி அழகிய திருக்கண்களாலே நோக்கியருள வேணும் என்னுதல்; ஸ்தோத்ரத்தில் நிலைநின்றபடியைக்கண்டு "செந்தாமரைக்கண்ணொடு மறப்பற என்னுள்ளே மன்னினான்" என்கிறபடியே ப்ரீதியாலே திருக்கண்கள் குளிர்ந்தபடியைச் சொல்லுதல். 9.

10. பதவுரை:— ப்ரபோ!—எம்பிரானே!, ந அவேக்ஷஸே யதி—நீ கடாக்ஷித்திரா விடில், தத:—ப்ரளயத்தின்போது, அமூநி புவநாநி—இவ்வுலகங்கள், பவிதுமேவ ந அலம்—உண்டாகவே மாட்டாது; ப்ரவ்ருத்தி: குத:—எக்காரியமும் செய்யமாட்டாது என்பது சொல்லவும் வேண்டுமோ?, ஸ்வாமிந்!—ஸ்வாமியே!, ஏவம்—இப்படி, ஸர்வ ஜந்தோ:—எல்லாப் பிராணிகளுக்கும், நிஸர்க்க ஸுஹ்ருதி—இயற்கையான நண்பனும், த்வயி—உன்னிடத்தில், ஆஶ்ரித வத்ஸலத்வம் இதம்—ஆஶ்ரிதவாத்ஸல்யமான இந்தக் குணமானது, ந சித்ரம்—ஆச்சர்யமல்ல.

அவ:— (நாவேக்ஷஸ இதி) இப்படி ஸ்தோத்ராக்ஷேபஸமாதானத்தைப்பண்ணி, ஈஶ்வரனுடைய ஶரண்யதைக்கு உறுப்பான பகவத்பரத்வத்தை, மேல் அஞ்சு ஶ்லோகத்தாலே அருளிச்செய்கிறார். இதில், முதல் ஶ்லோகத்தாலே, ஸத்ப்ரஹ்மாதிஸாமாந்யவாசிஶப்தங்களாலே ஜகத்காரணதயா ப்ரதிபாதிக்கப்படுகிறான் நாராயணனென்று, கதிஸாமாந்யந்யாயத்தாலே காரணவாக்யவிஷயமான பரத்வத்தை அருளிச்செய்கிறார். ஸ்தோத்ரம்பண்ண உபக்ரமித்தவாறே, வாத்ஸல்யஜந்யமான விஶேஷகடாக்ஷத்தைப் பண்ணினானென்கிற இது, ப்ரளயகாலத்திலே அசித்கல்பரான சேதனரை தயமாநமநாவாய்க்கொண்டு விஶேஷகடாக்ஷத்தைப்பண்ணி உண்டாக்கி, அந்த ஜந்துக்களுடைய ப்ரவ்ருத்திநிவ்ருத்திஹேதுவாய், உபகாரகனை உனக்கு ஸ்ருஷ்டமான ஜந்துக்கள் ஆபிமுக்யம்பண்ண முகங்கொடுத்தாயென்கிற இது ஆஶ்சர்யமோ என்கிறார் என்றுமாம்.

வ்யா:— (நாவேக்ஷஸே யதி) (115) "**तदैक्षत बहु स्यां प्रजायेयेति**" (ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்று அஸத்கல்பரான சேதநரைக் கடாக்ஷித்திலையாகில். அநாதிகாலம் பண்ணிப்போந்த அபராதங்களைப்பாராதே, அவற்றினுடைய துர்க்கதியைப் பார்த்து க்ருபா பரதந்த்ரனாயிறே அப்போதே கடாக்ஷித்தது; அல்லது உன்னைக் கடாக்ஷித்திலையே என்பாரில்லையே. (தத:) "பஹு ஸ்யாம்" என்கிற ஸங்கல்பத்துக்குப் பின்பு புவனஸ்ருஷ்டிக்கு

**स्वाभाविकानवधिकातिशयेशितृत्वं नारायण ! त्वयि न मृष्यति वैदिकः कः ? ।
ब्रह्मा शिवश्शतमखः परमः स्वराडित्येतेऽपि यस्य महिमार्णवविप्रुषस्ते ॥ ११ ॥**

11. ஸ்வாபாவிகாநவதிகாதிஶயேஶித்ருத்வம் நாராயண த்வயி ந ம்ருஷ்யதி வைதிக: க:।
ப்ரஹ்மா ஶிவஶ் ஶதமக: பரம: ஸ்வராடித்யேதேऽபி யஸ்ய மஹிமார்ணவவிப்ருஷஸ்தே ॥

---

முன்பு உண்டான தூரத்தைச் சொல்லுகிறது. (அமூநி புவநாநி பவிதுமேவ நாலம்) போக மோக்ஷங்களை ஸாதித்துக்கொள்ளுகைக்கு ஏகாந்தமான சதுர்தஶபுவநங்களானவை உண்டாகவேமாட்டாது. வ்யதிரேகநிர்தேஶம் அர்த்தஸ்தைர்யத்துக்காக. (116) "**को ह्येवान्यात् कः प्राण्यात्**" (கோ ஹ்யேவாந்யாத் க: ப்ராண்யாத்), (117) "**न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम्**" (ந ததஸ்தி விநா யத் ஸ்யாந்மயா பூதம் சராசரம்) என்னக்கடவதிறே. (குத: ப்ரவ்ருத்தி:) உன் ஸங்கல்பமொழிய உண்டாகமாட்டாத இவை ப்ரவர்த்திப்பது எத்தாலே ? ஸகலோத்பத்தியும் ப்ரவ்ருத்திநிவ்ருத்தியும், உன்னுடைய கடாக்ஷபலமன்றோ என்கை. (ப்ரபோ) ஜகத்காரணத்வப்ரயுக்தமான ஐஶ்வர்யத்தை ப்ரகாஶிப்பிக்கிறது. (ஸர்வஜ்ஞதோரேவம் நிஸர்க்கஸுஹ்ருதி) நித்யவிபூதி உண்டாயிருக்க, இவற்றை இழக்கையாலே, (118) "**स एकाकी न रमेत**" (ஸ ஏகாகீ ந ரமேத) என்னும்படி தனிமைப்பட்டாய், ப்ரஹ்மருத்ராதி ஸ்தாவராந்தமான ஜந்துஜாதத்துக்குக் கரணகளேபரங்களைக்கொடுத்துக் குறைதீர்த்தாய் என்னும்படி அகாரணஸுஹ்ருத்தான உன்பக்கல். (ஸ்வாமிந்) இவற்றை உண்டாக்குகிற இது உன் பேறாகவேண்டிற்று, இவற்றோடு உண்டான குடல் துடக்கிறே. (119) "**स्वमुद्दिश्य — उपादत्ते**" (ஸ்வமுத்திஶ்ய — உபாதத்தே) என்றிறே அபியுக்தர் வார்த்தை. ஸ்வவ்யதிரிக்த-ஸகலசேதநாசேதனங்களும் உனக்கு அநந்யார்ஹஶேஷமான ஸ்வாமித்வத்தை உடையவனே ! (இதமாஶ்ரிதவத்ஸலத்வம் ந சித்ரம்) ஸகலவாங்மநஸாகோசரமான த்வத்விஷயஸ்தோத்ரத்துக்கு யோக்யனும்படி என் பக்கல் உண்டான வத்ஸலத்வம் உனக்கு ஆஶ்சர்யமோ ? (120) "**किमत्र चित्रं**" (கிமத்ர சித்ரம்) இத்யாதி. ஜகத்காரணத்வத்தாலே ஸர்வோத்க்ருஷ்டனென்றும், (121) "**कारणन्तु ध्येयः**" (காரணந்து த்யேய:) என்கையாலே ஸர்வஸமாஶ்ரயணீயனென்றும், (12) "**एष ह्येवानन्दयाति**" (ஏஷ ஹ்யேவாநந்தயாதி) என்கையாலே ப்ராப்யனென்றும், ஸ்ருஷ்ட்யாதிகளைத் தன் பேறாகப்பண்ணுகையாலே ஸர்வஸ்வாமியென்றும், தாம் ஸ்தோத்ரத்திலே மூளும்படி முகங்காட்டுகையாலே ஆஶ்ரிதவத்ஸலத்வமும் சொல்லிற்றாயிற்று. 10.

11. பதவுரை:— நாராயண !—நாராயணனே !, ப்ரஹ்மா—பிரமன், ஶிவ:—சிவன், ஶதமக:—இந்திரன், பரம: ஸ்வராட்—(இவர்களைக்காட்டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வசப்படாதவனுமான முக்தாத்மா, இதி ஏதே அபி—என்கிற எல்லாரும், யஸ்ய தே—எந்த உன்னுடைய, மஹிம அர்ணவ விப்ருஷ:—பெருமைக் கடலில் துளிகளாக இருக்கின்றனரோ, த்வயி—(அப்படிப்பட்ட) உன்னிடத்தில், ஸ்வாபாவிக—இயற்கையானதும், அநவதிக அதிஶய—எல்லையற்ற மேன்மையை உடையதுமான, ஈஶித்ருத்வம்—ஐஶ்வர்யத்தை, க: வைதிக:—எந்த வைதிகன், ந ம்ருஷ்யதி—பொறுக்கமாட்டான் ?

அவ:— (ஸ்வாபாவிகேதி) இத்தால் பரத்வலக்ஷணம் சொல்லுகிறது. கீழ் கதிஸாமாந்யந்யாயத்தாலே, நாராயணனே ஸர்வஸ்மாத்பரன் என்றது. இதில்,

விஶேஷவாசியான ஶிவஶம்ப்வாதிவாக்யங்களாலும் ப்ரதிபாதிக்கப்படுகிறான் நாராயணனே என்று ஸர்வவேதாந்தவ்யாக்யானமாய், அநந்யபரமான நாராயணாநுவாகஸித்தமான பகவத்பரத்வத்தை அருளிச்செய்கிறார்.

வ்யா:— 'ஸ்வாபாவிக' ஶப்தத்தாலே, கர்மோபாதிகமாய், அத்தாலே அநித்யமாய், து:க்கமிஶ்ரமான ப்ரஹ்மாதிகள் ஐஶ்வர்யத்தை வ்யாவர்த்திக்கிறது. 'அநவதிகாதிஶய' ஶப்தத்தாலே, நித்யரையும், முக்தரையும் வ்யாவர்த்திக்கிறது. (122) "**स स्वराट् भवति**" (ஸ ஸ்வராட் பவதி) என்றும், (123) "**सत्यकामस्सत्यसङ्कल्पः**" (ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:) என்றும் நித்யமுக்தவிஷயமான ஐஶ்வர்யங்களும் பகவதாயத்தமாய், ஸாவதிகங்களுமாயிருக்கையாலே. 'ஈஶித்ருத்வம்' என்கிற அஸாதாரணஸ்வரூபநிர்தேஶத்தாலே, 'நிர்விஶேஷசிந்மாத்ரம் வஸ்து' என்ற பௌத்தகந்திகளான வேதாந்திகளை வ்யாவர்த்திக்கிறது. (நாராயண) ஸத்ப்ரஹ்மாதிஸாமாந்யவாசிஶப்தங்களையும், விஶேஷவாசியான ஶிவஶம்ப்வாதிஶப்தங்களையும் நாராயணன் பக்கலிலே வ்யவஸ்தாபிக்கிற நாராயணாநுவாகம், சொல்லுகிற இவ்வர்த்தத்தில் ப்ரமாணம் என்று ப்ரத்யபிஜ்ஞை பண்ணப்படுகிறது. (த்வயி) ஸர்வவேதாந்தங்களிலும் ஸர்வாதிகனாக ப்ரதிபாதிக்கப்படுகிறவனாய், இவ்வாத்மாவுக்கு வகுத்தவனான உன் பக்கலிலே. (ந ம்ருஷ்யதி) உக்தமான ஐஶ்வர்யத்தைப் பொறாதே யொழிகிறவன். (வைதிக: க:) அப்ராஹ்மண இத்யர்த்த:; (124) "**यो विष्णुं सततं द्वेष्टि**" (யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி), (125) "**विष्णुभक्तिविहीनो यस्सर्वशास्त्रार्थवेद्यपि। ब्राह्मण्यं तस्य न भवेत् तस्योत्पत्तिर्निरूप्यताम्॥**" (விஷ்ணுபக்திவிஹீநோ யஸ் ஸர்வஶாஸ்த்ரார்த்தவேத்யபி। ப்ராஹ்மண்யம் தஸ்ய ந பவேத் தஸ்யோத்பத்திர் நிரூப்யதாம்॥) இத்யாதி. (126) "**हिरण्यगर्भस्समवर्तताग्रे भूतस्य जातः पतिरेक आसीत्।**" (ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்), (127) "**न किरिन्द्र त्वदुत्तरः**" (ந கிரிந்த்ர த்வதுத்தர:), (128) "**एको हि रुद्रो न द्वितीयाय तस्थुः**" (ஏகோ ஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்து:) இத்யாதிகளிலே, ப்ரஹ்மருத்ராதிகளுக்கு ஸர்வேஶ்வரத்வம் ஓதாநிற்க, ஶிவஶம்ப்வாதிஶப்தம் நாராயணனை ப்ரதிபாதிக்கிறதென்? என்று, இப்ரமாணங்களளவில் அபர்யவஸித்தவன் வைதிகனல்லன் என்று க்ஷேபித்தபடி எங்ஙனே? என்னில்: (129) "**स ब्रह्मा स शिवस्सेन्द्रः**" (ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஸ் ஸேந்த்ர:) இத்யாதிகளிலே பரிஹரித்தது என்கிறது உத்தரார்த்தம். ப்ரஹ்மருத்ரர்களோடே * ஸம்ப்ரதிபந்நக்ஷேத்ரஜ்ஞனான இந்த்ரனையும், பாரதந்த்ர்யமே ஸ்வரூபமான முக்தாத்மஸ்வரூபத்தையும், † ஸமபிவ்யாஹரிக்கையாலே அவர்களுடைய அநீஶ்வரத்வம் ஸம்ப்ரதிபந்நமென்கிறது. (ஏதேऽபி) இந்த லோகத்திலே ஈஶ்வரதயா ப்ரஸித்தரான இவர்களும், ஶேஷபூதராக ஸம்ப்ரதிபந்நரான இவர்களும். (யஸ்ய) (130) "**नारायणपरा वेदाः**" (நாராயணபரா வேதா:) என்று ஸர்வவேதாந்தப்ரஸித்தியை நினைக்கிறது. (மஹிமார்ணவ விப்ருஷஸ்தே) ஸர்வேஶ்வரமஹிமையாகிற கடலிலே ஒரு பிந்துமாத்ரம் என்று நாராயணாநுவாகந்தானே பரிஹரியாநின்றது என்கிறார். (யஸ்ய தே) என்று ஶ்ருதிப்ரஸித்தியையும், தமக்கு அவ்வர்த்தத்திலுண்டான ஸாக்ஷாத்காரத்தையும் அருளிச்செய்கிறார். 11.

---

* ஸம்ப்ரதிபந்நக்ஷேத்ரஜ்ஞன்—நன்கு அறியப்பட்ட ஜீவன். † ஸமபிவ்யாஹரிக்கை—கூடப்படிக்கை.

**कश्श्रीः श्रियः परमसत्त्वसमाश्रयः कः कः पुण्डरीकनयनः पुरुषोत्तमः कः ।**
**कस्यायुतायुतशतैककलांशकांशे विश्वं विचित्रचिदचित्प्रविभागवृत्तम् ॥ १२ ॥**

12. கஶ் ஸ்ரீ: ஶ்ரிய: பரமஸத்த்வஸமாஶ்ரய: க: க: புண்டரீகநயந: புருஷோத்தம: க: ।
கஸ்யாயுதாயுதஶதைககலாம்ஶகாம்ஶே விஶ்வம் விசித்ரசிதசித்ப்ரவிபாகவ்ருத்தம் ॥

---

12. பதவுரை:— ஶ்ரிய: ஸ்ரீ: க:?—திருவுக்கும் திருவாகியவன் யார்? பரமஸத்த்வ ஸமாஶ்ரய: க:?—சுத்தஸத்வத்தை உடையவன் ஆர்? புண்டரீக நயந: க:?—தாமரைக் கண்ணன் யார்? புருஷோத்தம: க:?—புருஷோத்தமன் யார்? கஸ்ய—எவனுடைய, அயுத அயுத ஶத ஏக கலா அம்ஶக அம்ஶே—பல்லாயிரம் கோடி பாகங்களின் ஒரு பகுதியில், விஶ்வம்—இவ்வுலகெல்லாம், விசித்ர சித் அசித் ப்ரவிபாக வ்ருத்தம்—விசித்திரமான சேதனு சேதனப்பிரிவுகளை உடையதாக இருக்கிறது?

அவ:—(க: ஸ்ரீ: ஶ்ரிய:) இதில் விப்ரதிபத்திக்ஷமங்களன்றியிலே, தனித்தனியே பூர்ணமாய், வஸ்துஸாமர்த்யாபரநாமங்களான லிங்கங்களிலே பரத்வத்தை அருளிச் செய்கிறார்.

வ்யா:—(க: ஸ்ரீ: ஶ்ரிய:?) ஈஶ்வரவ்யதிரிக்தஸகலசேதநாசேதநமும், தந்தாமுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகளுக்காகப் பற்றவேண்டும்படியான மேன்மையுடைத்தான பிராட்டியும் தன்னுடைய ஸ்வரூபஸ்தித்யாதிகளுக்காகப் பற்றவேண்டும்படியான மேன்மையை உடையார் உன்னையொழிய ஆர்? கிம் க்ஷேபே; ஆர்த்தமாக இல்லையென்றபடி. (131) "**ईश्वरीं सर्वभूतानां**" (ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்), (132) "**अस्येशाना जगतो विष्णुपत्नी**" (அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ), "திருவுக்கும் திருவாகிய செல்வன்" என்னக்கடவதிறே. (பரமஸத்த்வஸமாஶ்ரய: க:?) 'பரம'ஶப்தத்தாலே ரஜஸ்தமஸ்ஸுக்களையும், அத்தோடு ஸமபிவ்யாஹ்ருதமான ஸத்வத்தையும் வ்யாவர்த்திக்கிறது. ஶுத்தஸத்வத்துக்கு ஆஶ்ரயமான விக்ரஹாதிகளை உடையவன் ஆர்? (133) "**महान् प्रभुर्वै पुरुषः सत्त्वस्यैष प्रवर्तकः**" (மஹாந் ப்ரபுர்வை புருஷ: ஸத்த்வஸ்யைஷ ப்ரவர்த்தக:), (134) "**आदित्यवर्णं तमसः परस्तात्**" (ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்) இதி. (க: புண்டரீகநயந:?) ஸ்வாநுபவார்நந்தத்ருப்தியாலும், ஆஶ்ரிதார்த்தமான நீர்மைகளுக்கு ப்ரகாஶகமாயும், ஸர்வேஶ்வரத்வஸூசகமான திருக்கண்களை உடையவன் ஆர்? (135) "**तस्य यथा—पुण्डरीकमेवमक्षिणी**" (தஸ்ய யதா—புண்டரீகமேவமக்ஷிணீ), (136) "**महावराहः स्फुटपद्मलोचनः**" (மஹாவராஹ: ஸ்புடபத்மலோசந:) (104) "**जितन्ते पुण्डरीकाक्ष**" (ஜிதந்தே புண்டரீகாக்ஷ), "தாயாய் அளிக்கின்ற தண்டாமரைக் கண்ணு!". (புருஷோத்தம: க:?) உன்னையொழிய புருஷாணும் உத்க்ருஷ்டதமராய் இருக்கிறார் ஆர்? (137) "**यस्मात्क्षरमतीतोऽहं**" (யஸ்மாத் க்ஷரமதீதோஹம்) இத்யாரப்ய, (137) "**अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः**" (அதோ஽ஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம:) என்று ஆப்தரான தேவரீரே அருளிச்செய்திலீரோ? (கஸ்யாயுதேத்யாதி) விசித்ரசிதசித்ப்ரவிபாகவ்ருத்தம் விஶ்வம் கஸ்யாயுதாயுதஶதைககலாம்ஶகாம்ஶே? சிதசித் விபாகத்தாலும் வர்த்திக்கிற இந்த ஜகத் விசித்ரமாய்க்கொண்டு ஆருடைய ஸங்கல்பஶத ஸஹஸ்ராயுதைகதேஶத்தில் வர்த்திக்கிறது? விசித்ரமான அசித்தானது:— அத்யந்தம்

**वेदापहारगुरुपातकदैत्यपीडाद्यापद्विमोचनमहिष्ठफलप्रदानैः ।**
**कोन्यः प्रजापशुपती परिपाति कस्य पादोदकेन स शिवः स्वशिरोधृतेन ॥ १३ ॥**

13. வேதாபஹாரகுருபாதக தைத்யபீடாத்யாபத்விமோசநமஹிஷ்ட்டபலப்ரதாநை: ।
கோऽந்ய: ப்ரஜாபஶுபதீ பரிபாதி கஸ்ய பாதோதகேந ஸ ஶிவஸ் ஸ்வஶிரோத்ருதேந ॥

*பின்னமான ஆகாஶாதிகள். சேதநவைசித்ர்யமாகிறது:— கர்மத்தால் வந்த சதுர்வித ஶரீரங்களும், தத்போக்யாதிகளும். அம்ஶமென்று காலோபாதிகம்; அல்பார்த்தத்திலே.* (138) "**पादोऽस्य विश्वाभूतानि**" (பாதோஸ்ய விஶ்வாபூதாநி), (139) "**यस्यायुतायुतांशांशे**" (யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே), (140) "**मेरोरिवाणुर्यस्यैतत्**" (மேரோரிவாணுர் யஸ்யைதத்), (141) "**इदं कृत्स्न एकांशेन स्तिथो जगत्**" (இதம் க்ருத்ஸ்நம், ஏகாம்ஶேந ஸ்திதோ ஜகத்) *இத்யாதி.* 12.

18. பதவுரை:— வேத அபஹார—*வேதங்களை அபஹரித்தது*, குரு பாதக—*தகப்பன் தலையைக் கிள்ளின பாபம்*, தைத்யபீடா ஆதி—*அஸுரர்களாலுண்டான துன்பம் முதலிய*, ஆபத் விமோசந—*ஆபத்துக்களைப் போக்கியதாலும்*, மஹிஷ்ட்ட பல ப்ரதாநை:—*மேலான பலன்களை அளிப்பதாலும்*, அந்ய: க:—(*உன்னைத்தவிர*) *வேறு யார்*, ப்ரஜா பசு பதீ பரிபாதி—*ப்ரஜாபதியான பிரமனையும், பசுபதியான சிவனையும் ரக்ஷிக்கிறார்கள்?*, ஸ: ஶிவ:—*அந்த சிவன்*, ஸ்வ ஶிரோ த்ருதேந—*தன் தலையில் தரிக்கப்பட்ட*, கஸ்ய பாத உதகேந—*யாருடைய ஸ்ரீபாத தீர்த்தத்தாலே*, ஶிவ: (அபூத்)—*பரிசுத்தனானான்?*

அவ:— (*வேதாபஹாரேதி*) *இதிஹாஸபுராணப்ரக்ரியையாலே ப்ரஹ்மருத்ராதிகளுடைய க்ஷேத்ரஜ்ஞத்வத்தையும், பகவத்பரத்வத்தையும் அருளிச்செய்கிறார்.*

வ்யா:— (*வேதாபஹார*) (38) "**यो वै वेदांश्च**" (யோ வை வேதாம்ஶ்ச) *என்று ப்ரஹ்மாவுக்கு வேதசக்ஷுஸ்ஸைக்கொடுக்க, அது அஸுரர்களாலே அபஹ்ருதமாக, ப்ரஹ்மா வேதத்தை இழந்து து:க்காந்தர்நிமக்நனானவளவிலே, விரோதிகளை அழியச்செய்து மீட்டுக்கொடுத்த உபகாரத்தைச் சொல்லுகிறது.* (142) "**ततो हृतेषु वेदेषु ब्रह्माणं कश्मलोऽविशत् । ततो वचनमीशानं प्राह वेदैर्विनाकृतः ॥ ब्रह्मा — वेदा मे परमं चक्षुः वेदा मे परमं धनं । वेदा मे परमं धाम वेदा मे ब्रह्म चोत्तमम् ॥ मम वेदा हृतास्सर्वे दानवाभ्यां बलादितः । अन्धकारा इमे जाता लोका वेदैर्विवर्जिताः ॥ वेदादृते हि किं कुर्यां लोकान् वै स्रष्टुमुद्यतः । अहो बत महद्दुःखं वेदनाशनजं मम ॥ प्राप्तं दुनोति हृदयं मां तु शोकामयस्त्वयम् ॥ ......... जग्राह वेदानखिलान् रसातलगतान् हरिः । प्रादाच्च ब्रह्मणे राजन् ! ततः स्वां प्रकृतिं ययौ ॥ ततस्तयोर्वधेनाशु वेदोपहरणेन च । शोकापनयनं चक्रे ब्रह्मणः पुरुषोत्तमः ॥**" (ததோ ஹ்ருதேஷு வேதேஷு ப்ரஹ்மாணம் கஶ்மலோऽவிஶத். ததோ வசநமீஶாநம் ப்ராஹவேதைர் விநாக்ருத: ॥ ப்ரஹ்மா — வேதா மே பரமம் சக்ஷு: வேதா மே பரமம் தநம் । வேதா மே பரமம் தாம வேதா மே ப்ரஹ்ம சோத்தமம் ॥ மம வேதா ஹ்ருதாஸ் ஸர்வே தாநவாப்யாம் பலாதித: । அந்தகாரா இமே ஜாதா லோகா வேதைர் விவர்ஜிதா: ॥ வேதாத்ருதே ஹி கிம் குர்யாம் லோகாந் வை ஸ்ரஷ்டுமுத்யத: । அஹோ பத மஹத் து:க்கம் வேதநாஶநஜம் மம ॥ ப்ராப்தம் துநோதி ஹ்ருதயம் மாந்து ஶோகாமயஸ்த்வயம் ॥ ........... ஜக்ராஹ வேதாநகிலாந் ரஸாதலகதாந் ஹரி: । ப்ராதாச்ச ப்ரஹ்மணே ராஜந்! ததஸ் ஸ்வாம் ப்ரக்ருதிம்

யயௌ ॥ ததஸ்தயோர் வதேநாஶு வேதோபஹரணேந ச। ஶோகாபநயநம் சக்ரே ப்ரஹ்மண: புருஷோத்தம: ॥) இத்யாதி. (குருபாதக) ருத்ரன் லோககுருவும் பிதாவுமாயிருக்கிற ப்ரஹ்மாவை தூர்மானமே ஹேதுவாகத் தலையை அறுத்துப் பாதகியான பாதகத்தையும் போக்கி, தலையறுப்புண்ட ப்ரஹ்மாவையும் ஜீவிக்கும்படி பண்ணி ரக்ஷித்தபடி. ஸ்ரீமாத்ஸ்யே, (143) " **देवीं प्रति रुद्रः — ततः क्रोधपरीतेन संरक्तनयनेन च। वामाङ्गुष्ठनखाग्रेण छिन्नं तस्य शिरो मया॥ ब्रह्मा — यस्मादनपराधस्य शिरश्छिन्नं त्वया मम। तस्माच्छापसमाविष्टः कपाली त्वं भविष्यसि॥ रुद्रः — ब्रह्महाऽऽकुलितो भूत्वा चरन् तीर्थानि भूतले। ततोऽहं गतवान् देवि! हिमवन्तं शिलोच्चयम्॥ तत्र नारायणः श्रीमान् मया भिक्षां प्रयाचितः। ततस्तेन स्वकं पार्श्वं नखाग्रेण विदारितं। महती स्रवती धारा तस्य रक्तस्य निस्सृता॥ विष्णुप्रसादात्सुश्रोणि! कपालं तत्सहस्रधा। स्फुटितं बहुधा यातं स्वप्नलब्धं धनं यथा॥** " (தேவீம் ப்ரதி ருத்ர: — தத: க்ரோதபரீதேந ஸம்ரக்தநயநேந ச। வாமாங்குஷ்டநகாக்ரேண சிந்நம் தஸ்ய ஶிரோ மயா ॥ ப்ரஹ்மா — யஸ்மாதநபராதஸ்ய ஶிரஶ்சிந்நம் த்வயா மம। தஸ்மாச்சாபஸமாவிஷ்ட: கபாலீ த்வம் பவிஷ்யஸி ॥ ருத்ர:—ப்ரஹ்மஹாऽऽகுலிதோ பூத்வா சரந் தீர்த்தாநி பூதலே। ததோऽஹம் கதவாந் தேவி! ஹிமவந்தம் ஶிலோச்சயம் ॥ தத்ர நாராயணஶ் ஸ்ரீமாந் மயா பிக்ஷாம் ப்ரயாசித:। ததஸ்தேந ஸ்வகம் பார்ஶ்வம் நகாக்ரேண விதாரிதம் ॥ மஹதீ ஸ்ரவதீ தாரா தஸ்ய ரக்தஸ்ய நிஸ்ஸ்ருதா ॥ / விஷ்ணுப்ரஸாதாத் ஸுஶ்ரோணி! கபாலம் தத்ஸஹஸ்ரதா। ஸ்புடிதம் பஹுதா யாதம் ஸ்வப்நலப்தம் தநம் யதா ॥) இத்யாதி. (தைத்யபீடாத்யாபத்விமோசந) ஹிரண்யராவணாதிகளென்ன, த்ரிபுரத்திலே அஸுரர்களென்ன; ஆதிஶப்தத்தாலே தூர்வாஸஶ்ஶாபாதிகளை நினைக்கிறது; இவர்களாலே தேவதைகளுக்கு வரும் ஆபத்தைப்போக்கி. (மஹிஷ்ட்டபலப்ரதாநை:) க்ஷேத்ரஜ்ஞத்வேந ஸம்ப்ரதிபந்நரான அவர்களுக்கு ஸ்வஸமாராதநத்தாலே லோகமடங்க 'ஈஶ்வரன்' என்று கொண்டாடும்படியான பதங்களைக் கொடுத்தபடியாலே. (144) " **युगकोटिसहस्राणि विष्णुमाराध्य पद्मभूः। पुनस्त्रैलोक्यधातृत्वं प्राप्तवानिति शुश्रुम॥** " (யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ:। புநஸ் த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும ॥), (145) " **ब्रह्मादयस्सुरास्सर्वे विष्णुमाराध्य ते पुरा। स्वं स्वं पदमनुप्राप्ताः केशवस्य प्रसादतः॥** " (ப்ரஹ்மாதயஸ்ஸுராஸ் ஸர்வே விஷ்ணுமாராத்ய தே புரா। ஸ்வம் ஸ்வம் பதமநுப்ராப்தா: கேஶவஸ்ய ப்ரஸாதத: ॥) (146) " **एवमेषोऽसुराणां च सुराणाञ्चापि सर्वशः। भयाभयङ्करः कृष्णस्सर्वलोकेश्वरः प्रभुः॥** " (ஏவமேஷோऽஸுராணாம் ச ஸுராணாஞ்சாபி ஸர்வஶ:। பயாபயங்கர: க்ருஷ்ணஸ் ஸர்வலோகேஶ்வர: ப்ரபு: ॥). (கோந்ய இத்யாதி) ப்ரஜாபதிபஶுபதிகளைத் தந்தாமால் வந்த ஆபத்துக்களோடு, பிறரால் வந்த ஆபத்துக்களோடு வாசியற ஸாகல்யேந ரக்ஷிக்கிறான் மற்றெவன்? (கஸ்ய பாதோதகேநேத்யாதி) ஆருடைய திருவடிகளினின்றும் விழுந்த ஜலத்தை ஜடையிலே தரிக்கையாலே அந்த ருத்ரன் ஶிவனாயிற்று—ஶுத்தனாயிற்று? அவன் அஸுத்தியை விளைத்துக்கொள்ளவும், அவனை ஶுத்தனாக்கும் பரமபாவனன் உன்னையொழிய வேறு ஆர்தான்? (147) " **द्रवीभूतस्तदा धर्मो हरिभक्त्या महामुने। गृहीत्वा धर्मपानीयं पदं नाथस्य तुष्टये॥ क्षालितं परया भक्त्या पाद्यार्घ्यादिभिरर्चितम्। तदम्बु पतितं दृष्ट्वा दधार शिरसा हरः॥ पावनार्थं जटामध्ये योग्योऽस्मीत्यवधारणात्। वर्षायुतान्यथ बहून् न मुमोच तथा हरः॥** " (த்ரவீபூதஸ் ததா தர்மோ ஹரிபக்த்யா மஹாமுநே। க்ருஹீத்வா தர்மபாநீயம் பதம் நாதஸ்ய துஷ்டயே ॥ க்ஷாளிதம் பரயா பக்த்யா பாத்யார்க்யாதிபிரர்சிதம் ।

**कस्योदरे हरविरिञ्चिमुखः प्रपञ्चः को रक्षतीममजनिष्ट च कस्य नाभेः।**
**क्रान्त्वा निगीर्य पुनरुद्गिरति त्वदन्यः कः? केन वैष परवानिति शक्यशङ्कः॥ १४॥**

14. கஸ்யோதரே ஹரவிரிஞ்சிமுக: ப்ரபஞ்ச: கோ ரக்ஷதீமமஜநிஷ்ட ச கஸ்ய நாபே:।
க்ராந்த்வா நிகீர்ய புநருத்கிரதி த்வதந்ய: க: கேந வைஷ பரவாநிதி ஶக்யஶங்க:॥

---

ததம்பு பதிதம் த்ருஷ்ட்வா ததார ஶிரஸா ஹர:॥ பாவநார்த்தம் ஜடாமத்யே யோக்யோऽஸ்மீத்யவதாரணத்। வர்ஷாயுதாந்யத பஹூநி ந முமோச ததா ஹர:॥). "சதுமுகன்" * இத்யாதி. "நலந்திகழ் சடையான் முடிக்கொன்றைமலரும் நாரணன் பாதத்துழாயும் கலந்திழி புனல்". 13.

14. பதவுரை:— ஹர விரிஞ்சி முக:—சிவன், பிரமன் முதலிய, ப்ரபஞ்ச:—உலகம், கஸ்ய உதரே—யாருடைய வயிற்றில் (லயித்திருந்தது)? இமம்—இவ்வுலகை, க: ரக்ஷதி—யார் காப்பாற்றுகிறார்? கஸ்ய நாபே:—எவனுடைய நாபியிலிருந்து, அஜநிஷ்ட—(இவ்வுலகம்) உண்டாயிற்று? த்வத் அந்ய: க:—உம்மைவிட வேறு யார், (இமம்)—இவ்வுலகை, க்ராந்த்வா—(த்ரிவிக்ரமாவதாரத்தில்) அளந்தும், நிகீர்ய—(அவாந்தர ப்ரளயத்தில்) விழுங்கியும், புந: உத்கிரதி—மறுபடியும் உமிழ்கிறான்? ஏஷ:—இவ்வுலகம், கேந வா—வேறு எவனால், பரவாந் இதி—தலைவனை உடையதென்று, ஶக்ய ஶங்க:—ஸந்தேஹப்படவும் கூடியது?

அவ:— (கஸ்யோதரே) ப்ரமாணாநுகூலமான தர்க்கரூபந்யாயத்தாலே உத்தமரான பரத்வத்தை நிகமிக்கிறார்.

வ்யா:— (கஸ்யோதரே ஹரவிரிஞ்சிமுக: ப்ரபஞ்ச:) ப்ரஹ்மருத்ரமுகமான ஸகல பதார்த்தங்களும் மஹாப்ரளயத்திலே ஆருடைய பக்கலிலே லயித்திருக்கிறது? (148) "**सदेव सोम्येदमग्र आसीत्**" (ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்) என்கிறபடியே, த்விபரார்த்தகாலம் நாமரூபங்களை இழந்து, (149) "**तम — एकीभवति**" (தம — ஏகீபவதி) என்கிறபடியே, ஸர்வேஶ்வரன் பக்கலிலே கிடக்கிறபடி. (150) "**ब्रह्मादिषु प्रलीनेषु नष्टे लोके चराचरे। आभूतसंप्लवे प्राप्ते प्रलीने प्रकृतौ महान्॥ एकस्तिष्ठति विश्वात्मा स तु नारायणः प्रभुः**" (ப்ரஹ்மாதிஷு ப்ரலீநேஷு நஷ்டே லோகே சராசரே। ஆபூதஸம்ப்லவே ப்ராப்தே ப்ரலீநே ப்ரக்ருதௌ மஹாந்॥ ஏகஸ் திஷ்ட்டதி விஶ்வாத்மா ஸ து நாராயண: ப்ரபு:॥) இத்யாதி. ஸம்ஹாராதிகளிலே கர்மீபவிக்குமிடத்தில் ப்ரஹ்மாதிகளோடு பிபீலிகாதிகளோடு வாசியில்லையென்கை. (கோ ரக்ஷதி) ஹரவிரிஞ்சிமுகமான ப்ரபஞ்சத்தை ரக்ஷிக்கிறார் ஆர்? (151) "**न हि पालनसामर्थ्यं ऋते सर्वेश्वरं हरिं।**" (ந ஹி பாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்।), (152) "**न संपदां समाहारे विपदां विनिवर्तने।**" (ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே।). (அஜநிஷ்ட்ட ச கஸ்ய நாபே:) மஹாப்ரளயத்திலே அவிபக்தமாய்க் கிடக்கும் ப்ரபஞ்சம் யாருடைய குக்ஷியினின்றும் உத்பன்னமாயிற்று? மஹாபாரதே மார்க்கண்டேய ஸமாக்யாநே (153) "**सृजतस्तस्य देवस्य पद्मं सूर्यसमप्रभम्। नाभेर्विनिस्सृतं तस्य तत्रोत्पन्नः पितामहः॥**" (ஸ்ருஜதஸ் தஸ்ய தேவஸ்ய பத்மம் ஸூர்யஸமப்ரபம்। நாபேர் விநிஸ்ஸ்ருதம் தஸ்ய தத்ரோத்பந்ந: பிதாமஹ:॥); ஸௌபர்ணவைகுண்ட ஸம்வாதே (154) "**यत्तत्पद्ममभूत्पूर्वं तत्र ब्रह्मा व्यजायत। ब्रह्मणश्चापि संभूतश्शिव इत्यवधार्यताम्॥ शिवात्स्कन्दस्संबभूव एतत्सृष्टिचतुष्टयम्॥**" (யத் தத்பத்மமபூத் பூர்வம் தத்ர ப்ரஹ்மா வ்யஜாயத।

---

* பெரியாழ்வார் திருமொழி (4—7—3) "சதுமுகன் கையில் சதுப்புயன் தாளில் சங்கரன் சடையினில் தங்கி, கதிர்முகமணிகொண்டிழிபுனல் கங்கை"

**त्वां शीलरूपचरितैः परमप्रकृष्टसत्त्वेन सात्त्विकतया प्रबलैश्च शास्त्रैः ।**
**प्रख्यातदैवपरमार्थविदां मतैश्च नैवासुरप्रकृतयः प्रभवन्ति बोद्धुम् ॥ १५ ॥**

15. த்வாம் ஶீலரூபசரிதை: பரமப்ரக்ருஷ்டஸத்த்வேந ஸாத்த்விகதயா ப்ரபலைஶ்ச ஶாஸ்த்ரை: ।
ப்ரக்யாததைவபரமார்த்தவிதாம் மதைஶ்ச நைவாஸுரப்ரக்ருதய: ப்ரபவந்தி போத்தும் ॥

---

ப்ரஹ்மணஶ்சாபி ஸம்பூதஶ் ஶிவ இத்யவதார்யதாம் ॥ ஶிவாத் ஸ்கந்தஸ் ஸம்பபூவ ஏதத் ஸ்ருஷ்டிசதுஷ்டயம் ॥) இத்யாதி. (க்ராந்த்வா) ப்ரஹ்மாதிஸ்தாவராந்தமான எல்லார் தலைகளிலும் திருவடியை வைத்தவனோ? திருவடியைத் தலையிலே வைத்தவனோ, திருவடியின் கீழே துகையுண்டவனோ ஈஶ்வரன்? என்கிறார். (155) "**सङ्गैः सुराणां**" (ஸங்கைஸ் ஸுராணாம்) இத்யாதி. (நிகீர்ய புநருத்கிரதி) அவாந்தரப்ரளய விஷயம். (த்வதந்ய: க:) இப்படி ஸர்வப்ரகார ரக்ஷகர் உன்னையொழிய மற்றார்? (கேந வைஷ பரவாநிதி ஶக்யஶங்க:) இதாராலே பாதந்த்ரமென்றும் ஶக்யஶங்கமாயிருக்கிறதோ? (156) "**सन्दिग्धे खलु न्यायः प्रवर्तते**" (ஸந்திக்தே கலு ந்யாய: ப்ரவர்த்ததே). வேறே சிலரை ஸம்ஶயிக்கைக்கு ஸம்பாவனையே இல்லை என்கை. ஒருவன் ஜனகனாய், ஒருவன் ஜந்யனாய், ஒருவன் ஶேஷியாய், ஒருவன் ஶேஷனாய், ஒருவன் ஶ்ரிய: பதியாய், ஒருவன் உமாபதியாய், ஒருவன் புண்டரீகாக்ஷனாய், ஒருவன் விரூபாக்ஷனாய், ஒருவன் கருடவாஹனனாய், ஒருவன் வ்ருஷபவாஹனனாய், ஒருவன் பாதகியாய், ஒருவன் சோதகனாய், ஒருவன் புருஷோத்தமனாய், ஒருவன் புருஷனாய், ஒருவன் ஶிரஸ்ஸ்திதபாதபங்கஜனாய், ஒருவன் பாதபாம்ஸுமாத்ரமாய், ஒருவன் ஸூரித்ருஶ்யனாய், ஒருவன் வேதாளத்ருஶ்யனாய், இப்படி தம: ப்ரகாஶங்கள் போலே, ருத்ரனுக்கும் ஸர்வேஶ்வரனுக்கும் நெடுவாசியுண்டாகையாலே, ருத்ரனுக்கு அஸ்மதாதிகளோபாதி க்ஷேத்ரஜ்ஞதையாலே ஈஶ்வரத்வஶங்கையில்லை; ப்ரஹ்மாவுக்கும் ஸமாநந்யாயத்தாலே ஈஶ்வரத்வஶங்கையில்லை என்றதாயிற்று. 14.

15. பதவுரை:— த்வாம்—(ஸர்வாதிகனான) உன்னை, ஶீல ரூப சரிதை:— ஶீலகுணத்தாலும், (பழமறைபுகழ்ந்த) வடிவாலும், (அதிமானுஷமான) சேஷ்டிதங்களாலும், பரமப்ரக்ருஷ்ட ஸத்த்வேந—சுத்தஸத்வமயமான விபூதியினாலும், ஸாத்த்விகதயா ப்ரபலைஶ்ச ஶாஸ்த்ரை:—ஸாத்விகங்களென்னும் காரணத்தால் மேலான ஶாஸ்த்ரங்களாலும், ப்ரக்யாத தைவ பரமார்த்த விதாம்—பிரஸித்தமான தைவத்தினுடைய உண்மையை அறிந்தவர்களுடைய, மதைஶ்ச—மதங்களாலும், ஆஸுரப்ரக்ருதய:—அஸுரத்தன்மை பொருந்தியவர்கள், போத்துமேவ—அறிவதற்கே, ந ப்ரபவந்தி—வல்லரல்லர்.

அவ:— (த்வாம் ஶீலேதி) "நாவேக்ஷஸே"யில் வேதாந்தப்ரதமபாதோக்தகாரணத்வம் சொல்லுகிறது. "ஸ்வாபாவிக"த்தில் குணோபஸம்ஹாரபாதார்த்தம் சொல்லுகிறது. "க: ஸ்ரீஶ் ஶ்ரிய:"வில், த்ரிபாதத்தில் அர்த்தம் சொல்லுகிறது. "வேதாபஹார"த்தில் உபப்ரும்ஹணமான அர்த்தம் சொல்லுகிறது. "கஸ்யோதரே"இல், ப்ரமாணானுக்ருஹீத தர்க்கஸித்தபரத்வம் சொல்லுகிறது. இனி, இதில், இப்படி த்ருடப்ரமாணஸித்தமாயிருக்க, (157) "**आसुरीं योनिमापन्नाः**" (ஆஸுரீம் யோநிமாபந்நா:) என்கிறபடியே, ஆஸுரப்ரக்ருதிகள்

அவனை இழப்பதே! என்று அவர்கள் இழவுக்கு இன்னாதாகிறார். அதவா, "யாருமோர் நிலைமையன் என அறிவரிய எம்பெருமான்" என்று துஷ்ப்ரக்ருதிகள் கண் படாதொழியப் பெறுவதே இவ்விலக்ஷணவிஷயம்! என்றுமாம்.

வ்யா:— (த்வாம்) ஸர்வாதிகனாய், இவ்வாத்மாவுக்கு வகுத்த உன்னை. (ஶீல) (158) "**महतो मन्दैः**" (மஹதோ மந்தை:); "நாவேக்ஷஸே" என்கிற ஶ்லோகத்திலே சொல்லுகிற ஸ்வபாவம். அதாகிறது:— ஸர்வாதிகனாயிருந்து வைத்து, (115) "**बहु स्यां**" (பஹு ஸ்யாம்) என்கிறபடியே இவற்றின் இழவு பேறு தன்னதாய், அபிமானியும் தானேயாயிருக்கை. (ரூப) "க: புண்டரீகநயந:" என்கிற வடிவு. (135) "**हिरण्मयः पुरुषो दृश्यते — तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी**" (ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே—தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ), (129) "**नीलतोयदमध्यस्था**" (நீலதோயதமத்யஸ்தா), (159) "**न भूतसङ्घसंस्थानो देहोऽस्य परमात्मनः**" (ந பூதஸங்கஸம்ஸ்தாநோ தேஹோऽஸ்ய பரமாத்மந:), (159*) "**न तस्य प्राकृता मूर्तिः मांसमज्जास्थिसंभवा**" (ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்தி: மாம்ஸமஜ்ஜாஸ்தி-ஸம்பவா) இத்யாதி. (சரிதை:) "க்ராந்த்வா நிகீர்ய புநருத்கிரதி" என்றும், "வேதாபஹாரகுருபாதக" என்றும் சொல்லுகிற அதிமானுஷசேஷ்டிதங்களாலும். (பரமப்ரக்ருஷ்டஸத்த்வேந) "பரமஸத்த்வஸமாஶ்ரய: க:" என்று ஶுத்தஸத்வமயமான விபூதியோகத்தாலும். (160) "**क्षयन्तमस्य रजसः पराके**" (க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே) (134) "**तमसः परस्तात्**" (தமஸ: பரஸ்தாத்), (161) "**स्वसत्ताधारकं सत्त्वं मिश्रसत्त्वाद्विलक्षणम्**" (ஸ்வஸத்தாதாரகம் ஸத்த்வம் மிஶ்ரஸத்த்வாத்விலக்ஷணம்) இத்யாதி. (ஸாத்த்விகதயா ப்ரபலைஶ்ச ஶாஸ்த்ரை:) வேதத்தில் ஸாத்விகருக்கு ஹிதானுஶாஸனம் பண்ணும் ஜ்ஞாநபாகத்தாலும். (162) **अग्नेः शिवस्य माहात्म्यं**" (அக்நேஶ் ஶிவஸ்ய மாஹாத்ம்யம்) இத்யாரப்ய, (162) "**सात्त्विकेष्वथ कल्पेषु माहात्म्यमधिकं हरेः**" (ஸாத்த்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே:) என்று ஸ்ரீமாத்ஸ்யபுராணத்திலே ஸத்வோத்ரிக்தனான ப்ரஹ்மாவின் வாக்யமாகையாலே ப்ரபலமான ஶாஸ்த்ரங்களாலும். (ப்ரக்யாததைவபரமார்த்தவிதாம் மதைஶ்ச) ப்ரக்யாதமான தைவத்தினுடைய யதார்த்தவித்துக்களுடைய மதங்களாலும், ஸ்ருஷ்டிவாக்யம், நாராயணானுவாகம், ஸுபாலோபனிஷத், அந்தர்யாமிப்ராஹ்மணாதிகளிலே ஸர்வாதிகனாக ப்ரஸித்தனாயிருக்கை. ஏவம் விஶிஷ்டம் (த்வாம் ஆஸுரப்ரக்ருதய: போத்துமேவ ந ப்ரபவந்தி) (157) "**आसुरीं योनिमापन्नाः**" (ஆஸுரீம் யோநிமாபந்நா:) இத்யாதி. 15.

16. பதவுரை:— உல்லங்கித—கடக்கப்பட்ட, த்ரிவித ஸீம—(காலம், தேஶம், வஸ்து என்னும்) மூன்றுவிதமான அளவுகளையுடையதும், (உல்லங்கித) ஸம அதிஶாயி ஸம்பாவநம்—(கடக்கப்பட்ட) 'ஒத்தார் மிக்காரை உடையதோ?' என்னும் ஸந்தேஹத்தையுடையதுமான, தவ பரிப்ரடிம ஸ்வபாவம்—உன்னுடைய ப்ரபுத்வத்தை, மாயா பலேந—ஆஶ்சர்யமான ஶக்தியினாலே, பவதா நிகூஹ்யமாநம் அபி—உன்னால் மறைக்கப்பட்டபோதிலும், த்வத் அநந்ய பாவா:—உன்னையொழிய வேறு நினைவில்லாதவர்களான, கேசித்—சில மஹாத்மாக்கள், அநிஶம்—எல்லாக்காலமும், பஶ்யந்தி—காண்கிறார்கள்.

उल्लङ्घितत्रिविधसीमसमातिशायिसंभावनं तव परिव्रढिमस्वभावम् ।
मायाबलेन भवताऽपि निगूह्यमानं पश्यन्ति केचिदनिशं त्वदनन्यभावाः ॥ १६ ॥

16. உல்லங்கிதத்ரிவிதஸீமஸமாதிஶாயிஸம்பாவநம் தவ பரிப்ரடிமஸ்வபாவம் ।
மாயாபலேந பவதாऽபி நிகூஹ்யமாநம் பஶ்யந்தி கேசிதநிஶம் த்வதநந்யபாவா: ॥

அவ:— (உல்லங்கிதேத்யாதி) (163) "**महात्मानस्तु मां**" (மஹாத்மாநஸ்து மாம்) இத்யாதிகளில் சொல்லுகிறபடியே உன்னைப்பெறும் ஸத்ப்ரக்ருதிகள் காணப்பெறுவதே! என்றும், "யாருமோர் நிலைமையன் என அறிவெளிய எம்பெருமான்" என்று அது தன் பேறென்றும் இருக்கிறார்.

வ்யா:— (உல்லங்கிதேத்யாதி) த்ரிவிதபரிச்சேதரஹிதமாய், ஸமாதிகஸம்பாவனையும் கடந்துள்ள உன்னுடைய ப்ரபுத்வத்தை. விபுத்வாத் தேஶபரிச்சேதரஹித:; நித்யத்வாத் காலபரிச்சேதரஹித:; ஸர்வப்ரகாரித்வேந ப்ருதக்ஸ்திதியோக்யவஸ்த்வந்தராபாவாத் வஸ்து பரிச்சேதரஹித:; ஸத்ருக்வஸ்த்வந்தராபாவாத் துலயா ப்ரஸ்தாதிநா வா பரிச்சேதரஹித இதிவா; அத ஏவ ஸமாதிகதரித்ர:. (மாயாபலேந) பகவத்ஸ்வரூபத்தை மறைக்கும் ப்ரக்ருதி பலத்தாலே என்னுதல்; திவ்யவிக்ரஹத்தை இதரஸஜாதீயமாக்கும் ஆஶ்சர்யஶக்தியோகத் தாலே என்னுதல். (பவதாபி நிகூஹ்யமாநம்) (164) "**आत्मानं मानुषं मन्ये**" (ஆத்மாநம் மாநுஷம் மந்யே), (165) "**अहं वो बान्धवो जातः**" (அஹம் வோ பாந்தவோ ஜாத:) என்று 'ஆட்பார்த்துழிதரும்' உன்னாலே மறைக்கப்பட்டதேயாகிலும். (பஶ்யந்தி கேசிதநிஶம் த்வதநந்யபாவா:) ஸத்ப்ரக்ருதிகளாயிருப்பார் சில மஹாத்மாக்கள் ஸர்வகாலமும் உள்ளபடி காணுநின்றார்கள். (த்வதநந்யபாவா:) உன்னையொழிய வேறு நினைவில்லாதவர்கள் என்னுதல்; உன்னையொழிய உபாயாந்தரமறியாதவர்கள் என்னுதல்; இப்படிகளாலே ஜ்ஞாநத்துக்கு உன்னையொழிய விஷயாந்தரமில்லாதவர்கள் என்னுதல். 16.

17. பதவுரை:— யத் அண்டம்—எது ப்ரஹ்மாண்டமோ, அண்டாந்தர கோசரம் ச யத்—அண்டத்திற்குள் இருப்பது எதுவோ, தஶ உத்தராணி ஆவரணாநி ச யாநி—ஒன்றுக் கொன்று பத்துமடங்கு அதிகமாயிருக்கும் ஆவரணங்களும் எவையோ (ஆகிய இவையும்), குணா:—ஸத்வம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்களும், ப்ரதாநம்—ப்ரக்ருதியும், புருஷ:— ஜீவஸமஷ்டியும், பரம் பதம்—ஸ்ரீவைகுண்டமும், பராத் பரம்—(ப்ரஹ்மாதிகளைக்காட்டிலும்) மேலான முக்தர்களைக்காட்டிலும் மேலான நித்யஸூரிஸமூஹமும், ப்ரஹ்ம ச—திவ்யமங்கள விக்ரஹமும், தே விபூதய:—உமக்கு ஶரீரங்கள்.

அவ:— (யதண்டமிதி) கீழ் ப்ரதிபாதித்த ஸர்வேஶ்வரத்வத்துக்கு ப்ரதிஸம்பந்திதயா அபேக்ஷிதமான ஈஶிதவ்யஜாதத்தை ப்ரபஞ்சிகரிக்கிறார்.

வ்யா:— (யதண்டம்) சதுர்தஶபுவநாத்மகமான அண்டம் ஒன்றாக, (166) "**अण्डानान्तु सहस्राणां**" (அண்டாநாந்து ஸஹஸ்ராணாம்) இத்யாதிகளிற்படியே அண்டஸமூஹம் யாதொன்று. (அண்டாந்தரகோசரஞ்ச யத்) அண்டாதிப த்ரிலோகேஶ்வர திக்பால நரபதி ப்ரமுகமாய், ஸ்தாவரஜங்கமாத்மகமான அண்டாந்தர்வர்த்திஸமூஹம் யாதொன்று. (தஶோத்தராணீத்யாதி) மேன்மேலும் தஶகுணிதமான வாரிவஹ்நயநிலாகாஶங்களும்,

यदण्डमण्डान्तरगोचरं च यद्दशोत्तराण्यावरणानि यानि च।
गुणाः प्रधानं पुरुषः परं पदं परात्परं ब्रह्म च ते विभूतयः ॥ १७॥

17. யதண்டமண்டாந்தரகோசரஞ்ச யத்தஶோத்தராண்யாவரணாநி யாநி ச।
குணா: ப்ரதாநம் புருஷ: பரம் பதம் பராத்பரம் ப்ரஹ்ம ச தே விபூதய: ॥

---

பூதாதியும், மஹானும்; கார்யோந்முகமான ப்ரக்ருத்யம்ஶமான ஆவரணங்கள் யாவை சில. (குணா:) அது சேதநரை பந்திப்பது குணத்வாராவாகையாலே, பந்தகாரணமான ஸத்வாதிகள். (ப்ரதாநம்) அவிக்ருதப்ரக்ருதிப்ரதேஶம். "குணா: ப்ரதாநம்" என்று குணகுணிகளைப் பிரித்துப்பேசுகிறது, குணங்களையே ஜகத்காரணமாகச்சொன்ன ஸாங்க்ய மதம் அவைதிகமென்கைக்காக. (புருஷ:) பத்தாத்மஸமஷ்டி:; "அண்டாந்தரகோசரம்" என்று வ்யஷ்டியைச் சொல்லுகையாலே, இது ஸமஷ்டிவிஷயம். (பரம் பதம்) கார்யகாரணோபயாவஸ்த ப்ரக்ருத்யாஶ்ரயாத் க்ஷேத்ரஜ்ஞாத் ஆநந்தாத் பரமம் பதம்; (167) "हिरण्मये परे लोके" (ஹிரண்மயே பரே லோகே) இத்யாரப்ய, (167) "ज्योतिषां ज्योतिस्तद्यदात्मविदो विदुः" (ஜ்யோதிஷாம் ஜ்யோதிஸ்தத் யதாத்மவிதோ விது:), (168) "परमे व्योमन्" (பரமே வ்யோமந்), (26) "सोऽश्नुते" (ஸோऽஶ்நுதே), (138) "त्रिपादस्यामृतं दिवि" (த்ரிபாதஸ்யாம்ருதம் திவி), (169) "यत्र पूर्वे साध्याः सन्ति देवाः" (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:), (170) "अत्यर्कानलदीप्तं तत्स्थानं विष्णोर्महात्मनः। स्वयैव प्रभया राजन्! दुष्प्रेक्ष्यं देवदानवैः॥—तत्र गत्वा पुनर्नेमं लोकमायान्ति भारत॥" (அத்யர்க்காநலதீப்தம் தத் ஸ்தாநம் விஷ்ணோர் மஹாத்மந:। ஸ்வயைவ ப்ரபயா ராஜந் துஷ்ப்ரேக்ஷ்யம் தேவதாநவை:॥ .... தத்ர கத்வா புநர்நேமம் லோகமாயாந்தி பாரத ॥) இத்யாதிபி: உக்தா த்ரிபாத்விபூதி:. (பராத் பரம்) ப்ரஹ்மாதிகளில் பரர் முக்தர்; அவர்களில் பரர் நித்ய ஸித்தர். (ப்ரஹ்ம ச) ஶுத்தஸத்வமயமாய், பரஞ்ஜ்யோதிர்மயமாய், ஸௌந்தர்யஸௌகுமார்யாதிகல்யாணகுணோபேதமாய், ப்ருஹத்த்வ, ப்ரும்ஹணத்வகுண யோகத்தாலே ப்ரஹ்மஶப்தவாச்யமான திவ்யவிக்ரஹம். (171) "स परस्सर्वशक्तीनां ब्रह्मणस्समनन्तरम्। मूर्तं ब्रह्म" (ஸ பரஸ் ஸர்வஶக்தீநாம் ப்ரஹ்மணஸ் ஸமநந்தரம்। மூர்த்தம் ப்ரஹ்ம), (172) "शान्तानन्तमहाविभूति परमं यत् ब्रह्म रूपं हरेर्मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतम्।" (ஶாந்தாநந்தமஹாவிபூதி பரமம் யத் ப்ரஹ்ம ரூபம் ஹரேர்மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம்।) இத்யாதி. (தே விபூதய:) விபூதிஶரீரஶப்தங்கள் பர்யாயமாகையாலே, ஶரீரதயா ஶேஷங்கள். (173) "विभूतयो हरेरेता जगतस्सृष्टिहेतवः" (விபூதயோ ஹரேரேதா ஜகதஸ்ஸ்ருஷ்டிஹேதவ:), (24) "यानि मूर्तान्यमूर्तानि यान्यत्रान्यत्र वा क्वचित्। सन्ति वै वस्तुजातानि तानि सर्वाणि तद्वपुः॥" (யாநி மூர்த்தாந்யமூர்த்தாநி யாந்யத்ராந்யத்ர வா க்வசித்॥ ஸந்தி வை வஸ்துஜாதாநி தாநி ஸர்வாணி தத்வபு:॥), (174) "तत्सर्वं वै हरेस्तनुः" (தத்ஸர்வம் வை ஹரேஸ்தநு:) இத்யாதிபி: விபூதிஶரீரஶப்தயோ: பர்யாயத்வம் ஶாஸ்த்ரேஷு ப்ரஸித்தம். 17.

18. பதவுரை:— வஶீ—(ஆஶ்ரிதர்களுக்கு) வசப்பட்டிருப்பவனாய், வதாந்ய:—(தன்னையே தமர்க்கு நல்கும்) வள்ளலாய், குணவாந்—ஸௌஶீல்யகுணத்தை உடையவனாய், ருஜு:—(மனோவாக்காயங்களால்) ஒருபடிப்பட்டிருப்பவனாய், ஶுசி:—(நிர்ஹேதுகமாக உபகரிக்கும்) பாவசுத்தியை உடையவனாய், ம்ருது:—அடியார்களின் பிரிவைப் பொறுக்க

**वशी वदान्यो गुणवानृजुश्शुचिः मृदुर्दयालुर्मधुरः स्थिरस्समः ।**
**कृती कृतज्ञस्त्वमसि स्वभावतस्समस्तकल्याणगुणामृतोदधिः ॥ १८ ॥**

18. வ^ஶீ வதாந்யோ குணவாந் ருஜு^ஶ் ^ஶுசிர் ம்ருதுர்தயாளுர் மதுரஸ்ஸ்திரஸ் ஸம: ।
க்ருதீ க்ருதஜ்ஞஸ்த்வமஸி ஸ்வபாவதஸ் ஸமஸ்தகல்யாணகுணாம்ருதோததி: ॥

---

மாட்டாதவனாய், தயாளு:—(ஆஶ்ரிதருடைய துக்கத்தை ஸஹிக்கமாட்டாத) தயையை உடையவனாய், மதுர:—இனியனாயிருப்பவனாய், ஸ்திர:—(ஆஶ்ரிதரை ரக்ஷிக்கும் விஷயத்தில்) அசைக்கமுடியாதவனாய், ஸம:—(ஆஶ்ரயிக்குமிடத்தில் எல்லாருக்கும்) ஸமனாய், க்ருதீ—(ஆஶ்ரிதர்களுடைய காரியங்களைத் தன்னுடையவையாக நினைத்துக்) காரியம் செய்பவனாய், க்ருதஜ்ஞ:—ஆஶ்ரிதர் செய்த சிறிய ஆநுகூல்யத்தையும் பெரிதாக நினைத்திருப்பனாயிருக்கும், த்வம்—நீ, ஸ்வபாவத:—இயற்கையாகவே, ஸமஸ்த கல்யாண குண அம்ருத உததி: அஸி—எல்லாக் கல்யாணகுணங்களுக்கும் அமுதக்கடலாயிருக்கிறாய்.

அவ:— (வஶீத்யாதி) கீழ் ஶரண்யனுடைய உத்கர்ஷம் சொல்லி, இதில், உபயவிபூதி நாதனை நம்மால் கிட்டலாமோ? என்று கூசாதபடி, ஆஶ்ரிதருக்கு இழியும் துறையான கல்யாணகுணங்களிலே பன்னிரண்டு குணங்களை அருளிச்செய்கிறார். அதவா, கீழ் ஸர்வேஶ்வரத்வம் சொல்லிற்றாய், இனி சொல்ல ப்ராப்தமான ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்தை அருளிச்செய்கிறார் என்றுமாம்.

வ்யா:— (வஶீ) கீழ்ச்சொன்ன ஈஶிதவ்யதையைத் தன் வஶத்திலே நடத்தி வர்த்திக்குமென்கை. இத்தாலும் ஸ்வதந்த்ரன் பக்கலிலே குணம் கிடந்து பெருவிலையனாமென்னுமிடம் சொல்லுகிறது. (175) “**सर्वस्य वशी सर्वस्येशानः**” (ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாந:), (176) “**जगद्वशे वर्ततेदं**” (ஜகத்வஶே வர்த்ததேதம்). அதவா, தன்னுடைய திருவடிகளிலே ஆனுகூல்யமுடையார் வஶத்திலே தாழநிற்குமென்றுமாம். (177) “**इमौ स्म मुनिशार्दूल किङ्करौ समुपस्थितौ । आज्ञापय यथेष्टं वै शासनं करवाव किं ॥**” (இமௌ ஸ்ம முநிஶார்தூல! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ। ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை ஶாஸநம் கரவாவ கிம் ॥), (178) “**आज्ञापय महाबाहो ! ब्रूहि यत्ते विवक्षितं**” (ஆஜ்ஞாபய மஹாபாஹோ! ப்ரூஹி யத்தே விவக்ஷிதம்), (179) “**स्वयमेव हरिर्वव्रे विप्रपादावनेजनं**” (ஸ்வயமேவ ஹரிர்வவ்ரே விப்ரபாதாவநேஜநம்), (180) “**अनन्याधीनत्वं**” (அநந்யாதீநத்வம்) இத்யாதி. ஆஶ்ரிதபரதந்த்ரனாயிருக்கும் இருப்பு பிறர்க்காகவென்றால், நியாமகரில்லாமையாலே ஸ்வதந்த்ரகார்யமாயிருக்கும். (வதாந்ய:) இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரனாய்ச்செய்யும் கார்யம் ஏதென்னில்; தன்னையும் தன் உடைமையையும் அவர்களுக்குக் கொடுக்கும் ஔதார்யத்தைச் சொல்லுகிறது. (181) “**प्रियवाग्दानशीलश्च वदान्यः परिकीर्तितः**” (ப்ரியவாக்தாநஶீலஶ்ச வதாந்ய: பரிகீர்த்தித:), (182) “**य आत्मदा बलदाः**” (ய ஆத்மதா பலதா:), (183) “**स सर्वानर्थिनो दृष्ट्वा समेत्य प्रतिनन्द्य च**” (ஸ ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்ய ச), (184) “**उदारास्सर्व एवैते**” (உதாராஸ் ஸர்வ ஏவைதே), (185) “**न ते रूपं**” (ந தே ரூபம்). (குணவாந்) தன்னையும் தன் உடைமையையும் அவர்களுக்குக் கொடுக்குமிடத்தில், அவர்கள், தன்னையும், தங்கள் சிறுமையையும் பார்த்துப் பிற்காலியாமே, அவர்களளவாகத் தன்னை அமைக்கும் ஶீலம். (158) “**महतो मन्दैः**”

(மஹதோ மஹந்தை:). குணப்ரகரணமாகையாலே, குணவானென்கிறது குணஸாமான்யத்தைச் சொல்லுகிறதன்று; குணவிஶேஷத்தைச் சொல்லுகிறது. 'குண்யத இதி குண:' என்கிற படியே, அநுஸந்தாதாவுக்கு எப்போதுமொக்க விடவொண்ணாமையாலே ஶீலத்தை குண ஶப்தத்தாலே சொல்லுகிறது. ஸாலஶப்தம் வ்ருக்ஷஸாமாந்யவாசியாயிருக்கிறது, வ்ருக்ஷ விஶேஷத்தைக் காட்டுகிறாப்போலே. (80) "**अजायमानः**" (அஜாயமாந:), (186) "**को न्वस्मिन् सांप्रतं लोके गुणवान्**" (கோ ந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்) என்று தொடங்கி (186) "**इक्ष्वाकुवंशप्रभवो बभूव गुणवत्तरः**" (இக்ஷ்வாகுவம்ஶப்ரபவோ பபூவ குணவத்தர:), (187) "**स हि देवैरुदीर्णस्य**" (ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய) என்கிறபடியே, ஶீலகார்யம் அவதாரம் என்கை. (ருஜு:) இப்படித் தன்னை அமைத்துக்கொண்டு பொருந்தும்போது, அவர்கள் நாநாருசிகளாகையாலே, மேட்டிலே விரகாலே நீர் ஏற்றுமாப்போலே, அவர்கள் செவ்வைக் கேடே செவ்வையாம்படி செவ்வியனாகை. ஆர்ஜவமாவது:— ஆஶ்ரிதவிஷயத்தில் மநோவாக் காயங்களால் ஏகரூபனாகை. (188) "**यज्जातीयो यादृशो यत्स्वभावः...तज्जातीयः तादृशः तत्स्वभावः**" (யஜ்ஜாதீயோ யாத்ருஶோ யத்ஸ்வபாவஸ் தஜ்ஜாதீயஸ் தாத்ருஶ:....தத்ஸ்வபாவ:) (189) "**तद्वै तथास्तु कतमोऽयमहो स्वभावो यावान् यथाविधगुणो भजते भवन्तम् । तावांस्तथाविधगुणः तदधीनवृत्तिः संश्लिष्यसि त्वमिह तेन समानधर्मा**" (தத்வை ததாஸ்து கதமோऽயமஹோ ஸ்வபாவோ யாவாந் யதாவிதகுணோ பஜதே பவந்தம்। தாவாம்ஸ்ததாவிதகுணஸ் தததீநவ்ருத்திஸ் ஸம்ஶ்லிஷ்யஸி த்வமிஹ தேந ஸமாநதர்மா ॥) (ஶுசி:) இப்படி உபகரிக்குமிடத்தில் ஒரு ப்ரயோஜனத்தைக் கணிசியாதே, வெறும்புறத்தில் உபகரிக்கும் பாவஶுத்தியைச் சொல்லுகிறது. (190) "**योऽर्थे शुचिः स हि शुचिः**" (யோர்த்தே ஶுசிஸ் ஸ ஹி ஶுசி:). நித்யஸம்ஸாரியை ஸ்வஸம்பந்தமே ஹேதுவாக நித்யஸூரிகளோடு ஒரு கோவையாக்கவல்ல பாவனத்வத்தைச் சொல்லுகிற தென்றுமாம். (191) "**पावनस्सर्वलोकानां त्वमेव रघुनन्दन**" (பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந);கர் மகாண்டே,(192)"**भक्तिरष्टविधा ह्येषा यस्मिन् म्लेच्छेऽपि वर्तते । स विप्रेन्द्रो मुनिः श्रीमान् स यतिस्स च पण्डितः ॥ मया पूज्यस्सदा चासौ मद्भक्तः श्वपचोऽपि यः । तस्मै देयं ततो ग्राह्यं स च पूज्यो यथा ह्यहं ॥**" (பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேऽபி வர்த்ததே। ஸ விப்ரேந்த்ரோ முநிஶ் ஸ்ரீமாந் ஸ யதிஸ் ஸ ச பண்டித: ॥ மயா பூஜ்யஸ் ஸதா சாஸௌ மத்பக்த: ஶ்வபசோऽபி ய:। தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம் ॥). (ம்ருது:) ஸம்ஶ்லேஷத்தில் இப்படி இருக்கிறவன் இவர்கள் விஶ்லேஷத்தில் ஆற்றமாட்டான் என்கிறது. ஆத்மகுணப்ரகரணமாகையாலே மானஸதௌர்பல்யத்தைச் சொல்லுகிறது. (193) "**नैव दंशान्न मशकान्**" (நைவ தம்ஶாந் ந மஶகாந்), (194) "**न जीवेयं क्षणमपि**" (ந ஜீவேயம் க்ஷணமபி), (195) "**अवगाह्यार्णवं स्वप्स्ये**" (அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே). (தயாளு:) ஆஶ்ரிதவிஷயதுக்கத்தில் அஸஹனாயிருக்கை. தயை—பரது:க்காஸஹத்வம். (118) "**स एकाकी न रमेत**" (ஸ ஏகாகீ ந ரமேத), (196) "**व्यसनेषु मनुष्याणां**" (வ்யஸநேஷு மநுஷ்யாணாம்). இது ஸர்வஸாதாரணமானல் ஆஶ்ரிதவிஷயத்தில் க்ருபை அவாங்மனஸ கோசரமிறே. (197) "**प्रियो हि ज्ञानिनोऽत्यर्थं**" (ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தம்) இதி; (198) "**स्त्री प्रणष्टेति कारुण्यात्**" (ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாத்), (199) "**स तं निपतितं**" (ஸ தம் நிபதிதம்) இத்யாதி. (மதுர:) நிர்தயனானாலும் விடவொண்ணாத ஸாரஸ்யத்தைச் சொல்லுகிறது. நாநாவிதருசிகளான ஜந்துக்களுக்கு அவ்வவர் நிலைகளிலே இனியனா

யிருக்கை. (116) "**रसो वै सः**" (ரஸோ வை ஸ:), (116) "**एष ह्येवानन्दयाति**" (ஏஷ ஹ்யேவாநந்தயாதி), (116) "**रसँ ह्येवायं लब्ध्वानन्दी भवति**" (ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி) இத்யாதய:. (ஸ்திர:) இப்படி ஸர்வரஸிகனுயிருக்கிறவன் பக்கலிலே அல்பாநுகூல்யம் பண்ணினருக்கு, தனக்கு அந்தரங்கரானர் விரோதிகளானலும் அவர்களால் அப்ரகம்ப்யனுயிருக்கை. (200) "**न त्यजेयं कथञ्चन**" (ந த்யஜேயம் கதஞ்சந), (201) "**अभयं सर्वभूतेभ्यः**" (அபயம் ஸர்வபூதேப்ய:), "என்னடியார் அது செய்யார்". (ஸ்திர:) ஆஶ்ரிதருடைய ப்ராதிகூல்யங்களாலும் அவிக்ருதனுயிருக்குமென்றுமாம். (ஸம:) ஆஶ்ரயிக்குமிடத்தில், ஜ்ஞாநவ்ருத்தாதிகளில் குறைந்திருந்தார்களேயாகிலும், ஆஶ்ரயணீயத்வே ஸமனுகை. (202) "**समोऽहं सर्वभूतेषु**" (ஸமோऽஹம் ஸர்வபூதேஷு), "ஈடுமெடுப்புமிலீசன்", "கொள்கை கொளாமை இலாதான்". (க்ருதீ) கர்த்தும் உத்யுக்தவாந். இப்படி ஆஶ்ரயித்தால், அவருடைய கர்த்தவ்யாம்ஶமெல்லாம் தனக்கே அநுஷ்டேயம் என்று இருக்கும். "ஆதிகர்மணிக்த:". ஆஶ்ரிதர் தன்னை லபித்தால், இழந்தவர்கள் பெற்றாராயிருக்குமதன்றிக்கே தன் பேருயிருக்கை. (203) "**अभिषिच्य च**" (அபிஷிச்ய ச), (204) "**तव चार्थः प्रकल्पते**" (தவ சார்த்த: ப்ரகல்பதே). (க்ருதஜ்ஞ:) இப்படித்தான் அவர்களுக்கு எல்லா உபகாரங்களைப்பண்ணினலும், அவர்கள் அடியில் பண்ணின அல்பாநுகூல்யத்தைக் குவாலாக * நினைத்திருக்கும். அவர்கள் பண்ணும் அபகாரமும் அறியான். (205) "**अविज्ञाता सहस्रांशुः**" (அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶு:). தான் பண்ணின உபகாரமும் அறியான். (206) "**ऋणं प्रवृद्धमिव मे हृदयान्नापसर्पति**" (ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி) என்றிருக்குமவன். அவர்கள் திறத்தில் தான் செய்யப்பெருத குறையை நினைத்திருக்கும் என்றுமாம். (207) "**शिरसा याचतः**" (ஶிரஸா யாசத:). (த்வமஸி) ஆஶ்ரயத்தில் நலங்கள் குணம்பெருதபடி இருக்குமென்னுதல்; இக்குணங்களும் தன்னைப் பற்றி நிறம்பெறும்படி ஸ்ப்ருஹணீயமாயிருக்கும் என்னுதல். (ஸ்வபாவத:) இக்குணங்கள் ஆவித்யகமன்று என்னுதல்; ஆவித்யகம்:—அவித்யாகல்பிதம். ஔபாதிகம் என்னலாகாதபடி § நைஸர்க்கிகமென்னுதல் (ஸமஸ்தகல்யாணகுணும்ருதோததி:) எல்லா குணங்களும் கல்யாணமாய், நிரதிஶயபோக்யங்களுமாய், அநுபவிக்க இழிந்தார்க்குக் கரைகாணவொண்ணுமைக்கு ஒரு கடலென்னுமத்தனை என்கிருர். (108) "**मतिक्षयान्निवर्तन्ते न गोविन्दगुणक्षयात्**" (மதிக்ஷயாந்நிவர்த்தந்தே ந கோவிந்தகுணக்ஷயாத்). 18.

19. பதவுரை:— அப்ஜபுவ: உபரி உபரி அபி—ப்ரஹ்மாக்களுக்கு மேலும் மேலும், தே யே ஶதம் இதி அநுக்ரமாத்—"தே யே ஶதம்" என்று அடிக்கடி படிப்பதன் மூலம், பூருஷாந் ப்ரகல்ப்ய—ப்ரஹ்மாக்களைக் கற்பித்து, த்வத் ஏகைக குண அவதி ஈப்ஸயா—உன்னுடைய ஒவ்வொரு குணத்தினுடையவும் எல்லையைக் காண்கையிலே இச்சையாலே, ஸதா ஸ்திதா:—எப்போதும் இருக்கின்றவையான, கிர:—வேதவாக்யங்களானவை, உத்யமத:—ஆரம்பதசையைக் கடந்து, ந அதிஶேரதே—மேல் செல்லவில்லை.

அவ:— (உபர்யுபரி) இக்குணங்களுக்கு ஸங்க்யையில்லாதவோபாதி, ஓரோ குணங்களுக்கு அவதியில்லை என்கிருர்.

---

* குவாலாக—பெரிதாக. § நைஸர்க்கிகம்—இயற்கையானது.

**उपर्युपर्यब्जभुवोऽपि पूरुषान्प्रकल्प्य ते ये शतमित्यनुक्रमात् ।**
**गिरस्त्वदेकैकगुणावधीप्सया सदा स्थिता नोद्यमतोऽतिशेरते ॥ १९ ॥**

19. உபர்யுபர்யப்ஜபுவோऽபி பூருஷாந் ப்ரகல்ப்ய தே யே ஶதமித்யநுக்ரமாத் ।
கிரஸ் த்வதேகைககுணாவதீப்ஸயா ஸதா ஸ்திதா நோத்யமதோऽதிஶேரதே ॥

வ்யா:— (அப்ஜபுவ: உபர்யுபரி தே யே ஶதமித்யநுக்ரமாத் பூருஷாந் ப்ரகல்ப்ய) திருநாபீகமலத்திலே அவ்யவதாநேந பிறந்து, அவனோடே ஓதின சதுர்முகனுக்கு மேலே, அவனை மனுஷ்யர் கோடியிலே நிறுத்தி, 'தே யே ஶத'க்ரமத்தாலே மனுஷ்யகந்தர்வாதி ப்ரஹ்மாந்தமாக, அநந்தாவதிஸித்த்யர்த்தமாக ப்ரஹ்மாக்களைக் கற்பித்து. (ஏகைககுணாவதீப்ஸயா ஸதா ஸ்திதா கிர:) ஆனந்தகுணம் ஒன்றையும் எல்லை காண்கையிலே இச்சையாலே உத்யோகித்து, ஸர்வகாலமும் ஸ்திரைகளான வைதிக கிர்களானவை. 'ஏகைக' என்கையாலே, ஜ்ஞாநாநந்தாவஹமான யுவத்வாதிகளை நினைக்கிறது. 'ஸதா ஸ்திதா கிர:' என்று நித்யத்வாபௌருஷேயத்வங்களைச் சொல்லிற்றாகவுமாம். வேதாக்ஷராஶியென்னாதே, கிர்கள் என்கிறது, (208) "**वेदशब्देभ्य एवादौ**" (வேதஶப்தேப்ய ஏவாதௌ) என்கிறபடியாலே லௌகிகஶப்தங்களும் வைதிகஶப்தங்களாகையாலே சொல்லுகிறது. அவை அந்த குணங்களைக் கண்டபடியென்? என்னில்: (நோத்யமதோऽதிஶேரதே) உத்யோகதஶையான இதொழிய, மேல் கால் வாங்கிற்றினவில்லை. (209) "**सैषानन्दस्य मीमांसा भवति**" (ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி) இத்யாரப்ய, (209) "**स एको ब्रह्मण आनन्दः**" (ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:) இதி. (யுவா ஸ்யாத்) ஸ்வரூபகுணங்களுக்கும் உபலக்ஷணமாதல்; யுவத்வத்தால் வந்த தேஜஸ்ஸைச் சொல்லுதல். 'அத்யாயக' இதி ஜ்ஞாநம்; 'ஆஶிஷ்ட' இதி ஶக்தி:; 'த்ரடிஷ்ட்ட' இதி வீர்யம்; 'பலிஷ்ட்ட' இதி பலம்; 'தஸ்யேயம்' இதி ஐஶ்வர்யம். (210) "**त्रय्युद्यता तव युवत्वमुखैर्गुणौघैः**" (த்ரய்யுத்யதா தவ யுவத்வமுகைர் குணௌகை:) இத்யாதய:. 19.

20. பதவுரை (1):— த்வதாஶ்ரிதாநாம்—(பிரமன் முதலிய) உன்னுடைய அடியார்களுக்கு, ஜகத் உத்பவ ஸ்திதி ப்ரணாஶ ஸம்ஸார விமோசந ஆதய:—உலகத்தைப் படைப்பது, காப்பது, அழிப்பது, ஸம்ஸாரத்தைத் தாண்டுவிப்பது முதலியவை, லீலா: பவந்தி—விளையாட்டாக இருக்கின்றன; வைதிகா: விதய: ச—வேத விதிகளும், த்வதீய கம்பீர மநோநுஸாரிண: பவந்தி—உன்னுடைய அடியார்களுடைய கம்பீரமான திருவுள்ளத்தைப் பின்செல்லுகின்றவைகளாக இருக்கின்றன.

பதவுரை (2):— ஜகத் உத்பவ ஸ்திதி ப்ரணாஶ ஸம்ஸார விமோசந ஆதய:—உலகத்தைப் படைப்பது, காப்பது, அழிப்பது, ஸம்ஸாரத்தைத் தாண்டுவிப்பது முதலிய, லீலா:—(உன்னுடைய) விளையாட்டுகள், த்வத் ஆஶ்ரிதாநாம் பவந்தி—உன்னுடைய அடியார்களுக்காக ஆகின்றன; வைதிகா: விதய: ச—வேத விதிகளும், த்வதீய கம்பீர மநோநுஸாரிண: பவந்தி—உன்னுடையதான கம்பீரமான திருவுள்ளத்தைப் பின்செல்லுகின்றவைகளாக இருக்கின்றன.

அவ:— (த்வதாஶ்ரிதாநாமிதி) கீழ்ச்சொன்ன குணங்களுக்கு போக்தாவான ஆஶ்ரிதர் பெருமையை அருளிச்செய்கிறார். (211) "**अस्मिन्नस्य च तद्योगं शास्ति**"

**त्वदाश्रितानां जगदुद्भवस्थितिप्रणाशसंसारविमोचनादयः ।**
**भवन्ति लीला विधयश्च वैदिकास्त्वदीयगम्भीरमनोनुसारिणः ॥ २० ॥**

20. த்வதாஶ்ரிதாநாம் ஜகதுத்பவஸ்திதிப்ரணாஶஸம்ஸாரவிமோசநாதய: ।
பவந்தி லீலா விதயஶ்ச வைதிகாஸ் த்வதீயகம்பீரமநோநுஸாரிண: ॥

---

(அஸ்மிந்நஸ்ய ச தத்யோகம் ஶாஸ்தி) என்று இவனாலே வந்த பெருமையை உடையவர்கள் அளவு இதுவானால், அவன் பெருமை பரிச்சேதிக்கவொண்ணாது என்னுமிடம் கிம்புநர்ந்யாயஸித்தமன்றோ என்கிறார் என்றுமாம்.

வ்யா:— (த்வதாஶ்ரிதாநாம்) ப்ரஹ்மருத்ராதீநாம் ஸநகாதீநாம் ச. தேவரை தூர நின்று ஆஶ்ரயிக்கிற ப்ரஹ்மாதிகள், ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களை உபதேஶக்ரமத்தாலே பெற்று, ஸம்ஸாரவிமோசநத்தையும் பண்ண ஶக்தரானபின்பு, அநந்யப்ரயோஜநராய் ஆஶ்ரயிக்குமவர்கள் அவற்றைச் செய்யப் பார்த்தால் லீலையாகாநின்றது. முக்தர் தேவரோடே லீலாரஸம் அனுபவிக்கும்போது ஸங்கல்பத்தாலே ஜ்ஞாத்யாதிகளை ஸ்ருஷ்டித்திறே அனுபவிப்பது. (212) “ **सङ्कल्पादेव तत् श्रुतेः** ” (ஸங்கல்பாதேவ தச்ச்ருதே:), (213) “ **सङ्कल्पादेवास्य पितरस्समुत्तिष्ठन्ति** ” (ஸங்கல்பாதேவாஸ்ய பிதரஸ் ஸமுத்திஷ்ட்டந்தி). ஜகத்ஸ்ருஷ்ட்யாதியில் ப்ராப்தியில்லாமை போக்கி, ஶக்தியில்லாமையாலே தவிருகிறாரல்லர். ஆதிஶப்தத்தாலே அநேக ஶரீராந்த:ப்ரவேஶநியமநங்களை நினைக்கிறது. (214) “ **जगद्व्यापारवर्ज** ” (ஜகத்-வ்யாபாரவர்ஜம்), (215) “ **भोगमात्रसाम्यलिङ्गाच्च** ” (போகமாத்ரஸாம்யலிங்காச்ச). அதவா, (ஜகதுத்பவஸ்திதிப்ரணாஶஸம்ஸார விமோசநாதய: லீலா: த்வதாஶ்ரிதாநாம் பவந்தி) முமுக்ஷுவிஸ்ருக்ஷயாவிறே ஸ்ருஷ்ட்யாதிகள். நிரதிஶயபோக்யதையே ஸ்வரூபமாயிருக்க, ஸம்ஸாரவிமோசகரென்கிறது ஆஶ்ரிதார்த்தமாகவிறே. ஆதிஶப்தத்தாலே ததர்த்தமான அநேகாவதாரங்கள், திருக்குரவையிலே அநேகவிக்ரஹபரிக்ரஹாதிகள். (விதயஶ்ச வைதிகா:) (216) “ **इदं कुरु। इदं मा कार्षीः ॥** ” (இதம் குரு । இதம் மா கார்ஷீ: ॥) என்று ஸ்வதந்த்ரமான வைதிகவிதிகளும். (த்வதீயகம்பீரமநோநுஸாரிண:) அநந்யப்ரயோஜநராய் ஆஶ்ரயித்தவர்களுடைய கம்பீரமான மனஸ்ஸைப் பின்செல்லாநின்றன. மனஸ்ஸுக்கு கம்பீரத்வமாவது:— க்ஷுத்ரமான ஐஶ்வர்யாதிகளில் கால் தாழாதே, அநந்யப்ரயோஜனமாகை. (217) “ **ब्रह्मवादिनो वदन्ति** ” (ப்ரஹ்மவாதிநோ வதந்தி), (88) “ **स होवाच व्यासः पाराशर्यः** ” (ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:), (218) “ **ये तत्र ब्राह्मणास्संमर्शिनः** ” (யே தத்ர ப்ராஹ்மணாஸ் ஸம்மர்ஶிந:) இத்யாரப்ய, (218) “ **यथा ते तत्र वर्तेरन् तथा तत्र वर्तेथाः** ” (யதா தே தத்ர வர்த்தேரந் ததா தத்ர வர்த்தேதா:). “ நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும் ” என்று பகவத்விஷயத்தில் இவ்வளவு அவகாஹியாதார்க்கு, (219) “ **निदिध्यासितव्यः** ” (நிதித்யாஸிதவ்ய:), (220) “ **विज्ञाय प्रज्ञां कुर्वीत** ” (விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத), (221) “ **आत्मानं ध्यायीत** ” (ஆத்மாநம் த்யாயீத) என்று விதிக்கிறதிறே. த்வதீயமான கம்பீர மனஸ்ஸை அனுஸரியாநின்றன என்றுமாம். (222) “ **श्रुतिः स्मृतिर्ममैवाज्ञा** ” (ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா). 20.

नमो नमो वाङ्मनसातिभूमये नमो नमो वाङ्मनसैकभूमये ।
नमो नमोऽनन्तमहाविभूतये नमो नमोऽनन्तदयैकसिन्धवे ॥ २१ ॥

21. நமோ நமோ வாங்மநஸாதிபூமயே நமோ நமோ வாங்மநஸைகபூமயே ।
நமோ நமோऽநந்தமஹாவிபூதயே நமோ நமோऽநந்ததயைகஸிந்தவே ॥

21. பதவுரை:— வாங்மநஸ அதிபூமயே—(ஸ்வயத்னத்தால் அறிய நினைப்பவர்களுடைய) வாக்குக்கும், மநஸ்ஸுக்கும் எட்டாதவனான உனக்கு, நம: நம:—நமஸ்காரம் நமஸ்காரம்; வாங்மநஸ ஏக பூமயே—(நீ காட்டக் கண்டவருடைய) வாக்குக்கும், மநஸ்ஸுக்குமே நிலமாயிருக்கிற உனக்கு, நமோ நம:—நமஸ்காரம்; அநந்த மஹா விபூதயே—அளவற்ற பெரிய ஐஶ்வர்யத்தை உடைய உனக்கு, நமோ நம:—நமஸ்காரம்; அநந்த தயா ஏக ஸிந்தவே—அளவற்ற கருணைக்கு ஒரு கடலாயிருக்கும் உனக்கு, நமோ நம:—நமஸ்காரம்.

அவ:— (நமோ நம இதி) இதுக்குக் கீழ் ஈஶ்வரனுடைய ஸ்வரூபத்தால் வந்த உத்கர்ஷத்துக்கும், உபயவிபூதியோகத்தால் வந்த ஐஶ்வர்யத்துக்கும், குணோத்கர்ஷத்தால் வந்த நீர்மைக்கும் தோற்று, (104) "**जितन्ते**" (ஜிதந்தே) என்னும் ஶ்வேதத்வீபவாஸிகளைப் போலேயும், (77) "**नमः पुरस्तादथ पृष्ठतस्ते**" (நம: புரஸ்தாதத ப்ருஷ்ட்டதஸ்தே) என்ற அர்ஜுனனைப்போலேயும், "யாருமோர் நிலைமையன்" என்ற ஆழ்வாரைப்போலேயும், ஶரண்யனுடைய பெருமையை அநுஸந்திக்கிறார். இதுக்கு முன்பு ப்ராப்யஸ்வரூபம் சொல்லிற்றாய், இதில் ப்ராப்தாவின் ஸ்வரூபம் சொல்லுகிறது என்றுமாம். கீழ் ஶரண்ய ஸ்வரூபம் சொல்லிற்றாய், மேல் சொல்லப்படுகிற ஶரணாகதியை இதில் ப்ரஸ்தாபிக்கிறார் என்றுமாம்.

வ்யா:— (வாங்மநஸாதிபூமயே நமோ நம:) எத்தனையேனும் ஜ்ஞாநாதிகரும் ஸ்வயத்நத்தால் அறியப்புக்கால், அவர்களுக்கு வாங்மநஸ்ஸுக்களுக்கு அபூமியாய் இருக்கிற உனக்கு. (5) "**यतो वाचो निवर्तन्ते**" (யதோ வாசோ நிவர்த்தந்தே), (111) "**यन्नायं भगवान् ब्रह्मा जानाति पुरुषोत्तमम्**" (யந்நாயம் பகவாந் ப்ரஹ்மா ஜாநாதி புருஷோத்தமம்). 'நம:' என்று அஹங்காரமில்லாத ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. (223) "**अनात्मन्यात्मबुद्धिः**" (அநாத்மந்யாத்மபுத்தி:) (61) "**अहमपि न मम**" (அஹமபி ந மம) இத்யாரப்ய, (61) "**इत्येवमममतां योजयत्यतो नमः**" (இத்யேவமமமதாம் யோஜயத்யதோ நம:) இதி. (224) "**द्व्यक्षरस्तु भवेन्मृत्युस्त्र्यक्षरं ब्रह्मणः पदम्**" (த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண: பதம்) இத்யாதி. நமஶ்ஶப்தம் * பர்யாயமாகையாலே ஶரணாகதியை ப்ரஸ்தாபிக்கிறதாகவுமாம். § வீப்ஸையாலே, அந்த ஸ்வபாவத்துக்குத் தோற்று அருளிச்செய்கிறார். (225) "**सकृत्ते नमः। द्विस्ते नमः॥**" (ஸக்ருத்தே நம । த்விஸ்தே நம: ॥) இத்யாரப்ய, (225) "**सहस्रकृत्वस्ते नमः। अपरिमितकृत्वस्ते नमः॥**" (ஸஹஸ்ரக்ருத்வஸ்தே நம: । அபரிமிதக்ருத்வஸ்தே நம: ॥) இத்யாதி. (வாங்மநஸைகபூமயே நமோ நம:) நீ காட்டக் காண்பாருடைய வாங்மநஸ்ஸுக்களுக்கு நிலமாயிருக்கிற உனக்கு. (226) "**भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः।**" (பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ।) இத்யாதி. (அநந்தமஹாவிபூதயே) அபரிச்சேத்யோபயமஹாவிபூதிகளை

* பர்யாயம்—ஒரே அர்த்தத்தை உடைய இரண்டு சொற்கள் ஒன்றுக்கொன்று பர்யாயம் எனப்படும்.
§ வீப்ஸை—ஒரு தடவைக்குமேல் படித்தல்.

**न धर्मनिष्ठोऽस्मि न चात्मवेदी न भक्तिमांस्त्वच्चरणारविन्दे ।**
**अकिञ्चनोऽनन्यगतिश्शरण्य ! त्वत्पादमूलं शरणं प्रपद्ये ॥ २२ ॥**

22. ந தர்மநிஷ்டோऽஸ்மி ந சாத்மவேதீ ந பக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே ।
அகிஞ்சநோऽநந்யகதிஶ் ஶரண்ய ! த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே ॥

---

இருக்கிற உனக்கு. வாங்மநஸ்ஸுக்களுக்கு அபூமியாகைக்கு அடி அபரிச்சேத்யமஹா விபூதிகளுய் இருக்கை. (அநந்ததயைகஸிந்தவே) உன்னை வாங்மநஸ்ஸுக்களுக்கு ஏகபூமியாம்படி பண்ணும் அபரிச்சேத்யதயைக்கு ஒரு ஸிந்துவாயிருக்கிற உனக்கு. (227) "**यदि शक्नोषि गच्छ त्वं**" (யதி ஶக்நோஷி கச்ச த்வம்) என்று ஸர்வஶக்தியை ஓர் இடைச்சி பரிச்சேதிக்கலாம்படியிறே க்ருபையினுடைய நிரவதிகத்வம். 21.

22. பதவுரை:— ஶரண்ய—ஶரணமடையத்தகுந்த எம்பிரானே !, தர்மநிஷ்ட: ந அஸ்மி—(அடியேன்) கர்மயோகத்தில் நிலைநின்றவன் அல்லேன்; ஆத்மவேதீ ச ந அஸ்மி—ஆத்மஜ்ஞாநமும் உடையேனல்லேன்; த்வத் சரண அரவிந்தே—உன் திருவடித் தாமரைகளில், பக்திமாந் ந அஸ்மி—பக்தியை உடையவன் அல்லேன்; அகிஞ்சந:—ஒரு உபாயமுமற்றவனும், அநந்யகதி:—வேறு புகலற்றவனுமான அடியேன், த்வத் பாதமூலம்—உன் திருவடித் தாமரைகளை, ஶரணம் ப்ரபத்யே—உபாயமாக நிஶ்சயிக்கிறேன்.

அவ:— (ந தர்மநிஷ்டோऽஸ்மி) தம்முடைய அதிகாரத்தைச் சொல்லிக்கொண்டு ப்ரஸ்துதமான ப்ரபத்தியை ப்ரயோகிக்கிறார். கீழ்ச் சொன்ன உபேயாநுகூலமான உபாயத்தை அநுஷ்டிக்கிறது என்றுமாம். கீழ் "த்வாம் ஶீல", "உல்லங்கித" என்கிறவிடத்திலே துஷ்ப்ரக்ருதிகள் உன் பெருமையை அறியார்கள்; ஸத்ப்ரக்ருதிகள் அறிவார்கள் என்றார். "நமோ நம:" என்கிற ஶ்லோகத்திலே, ஸ்வரூபத்தைப் பரதந்த்ரமாக உணர்ந்தவனுக்கே இவ்விஷயம் ப்ராப்யமாவது; ஸ்வதந்த்ரனுக்கு ப்ராப்யமன்று என்கிறது. ஆஶ்ரயிக்குமிடத்தில், ஸ்வஶக்திகொண்டு ஆஶ்ரயிக்கும் விஷயமன்று; தன்னுடைய ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டுக் கொண்டு ஆஶ்ரயிக்கும் விஷயம் என்கிறார்.

வ்யா:— (ந தர்மநிஷ்டோऽஸ்மி) தார்மிகனாக என்கிறேனல்லேன்; நாஸ்திகன் என்கிறேனல்லேன்; தர்மத்தில் நிஷ்டை உடையேனல்லேன். சிலர் தார்மிகன் என்று நினைக்கைக்கும், நானும் 'எனக்கு நன்மையுண்டு' என்று ப்ரமிக்கைக்கும், தானே சில ப்ரவர்த்தியாநின்றானாகில் 'தானே செய்திடுக' என்று நீ கைவிடுகைக்கும் வேண்டுவதுண்டித்தனை. உன் திருவடிகளை ப்ராபிக்கைக்கு ஹேதுவாகவேண்டும்படியான ப்ரவ்ருத்தியில் நிஷ்டையில்லை என்கை. (ந சாத்மவேதீ) ஆத்மதர்ஶநம் பண்ணிப் போருமவர்களைப்போலே சொல்லி நிர்ப்பந்தித்திலேனல்லேன். கர்மயோகாநுஷ்டாநத்தாலே க்ஷீணபாபனானவனுக்கு ஆத்மயாதாத்ம்ய தர்ஶநமாயிருக்க, அது இல்லை என்றபோதே, தத்ஸாத்யமான ஜ்ஞாநமில்லாமை அர்த்தஸித்தமாயிருக்க, ஜ்ஞாநமில்லை என்கிறது;— (228) "**बहूनां जन्मनामन्ते ज्ञानवान्**" (பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்) என்று ஜந்மாந்தரஸம்ஸ்காரத்தாலே ஜ்ஞாநம் பிறக்கலாமிறே என்னில், அதுவுமில்லை என்கிறார். (த்வச்சரணாரவிந்தே ந பக்திமாந்) இவ்வாத்மாவுக்கு நாதனாயிருந்துள்ள உன்னுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகளில் அனவரதபக்தியை

**न निन्दितं कर्म तदस्ति लोके सहस्रशो यन्न मया व्यधायि।**
**सोऽहं विपाकावसरे मुकुन्द! क्रन्दामि संप्रत्यगतिस्तवाग्रे ॥ २३ ॥**

23. ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே ஸஹஸ்ரஶோ யந்ந மயா வ்யதாயி।
ஸோऽஹம் விபாகாவஸரே முகுந்த! க்ரந்தாமி ஸம்ப்ரத்யகதிஸ் தவாக்ரே॥

உடையேனல்லேன். கர்மஜ்ஞாநங்களை அங்கமாகவுடைத்தான பக்தி அங்கந்தானில்லை என்றபோதே இதுவுமில்லையன்றோ? என்னில்: பூர்வோக்தப்ரகாரத்திலே ஜந்மாந்தரஸம்ஸ்காரம் உதவி உண்டாகலாமிறே என்னில், அதுவுமில்லை என்கை. "குளித்து மூன்றனலை", "நோற்ற நோன்பு", "கறவைகள் பின் சென்று" என்று. (அகிஞ்சந:) என்று அனுதாபமென்ன, இவை உண்டாகைக்கு உறுப்பான ஆத்மகுணமென்ன, அதிகாரிஶக்திவாஞ்சாதிகளென்ன இவற்றை உடையேனல்லேன். (அநந்யகதி:) இப்படி நம்மைக் கிட்டுகைக்குக் கைமுதல் இல்லையாகில், புறம்பே ரக்ஷகராயிருப்பார் பக்கலிலே போனாலோ என்னில், புறம்பு ஒரு புகலில்லை என்னுதல்; "உன்னை விட்டொன்றும் ஆற்றகிற்கின்றிலேன்" என்கிறபடியே, உன்னையொழியச் செல்லாது என்னுதல். (ஶரண்ய) தன் பக்கல் முதலில்லாதார்க்கு ஶரணவரணார்ஹனிறே. (த்வத்பாதமூலம்) தேவர் திருவடிகளை. மூலமென்றது, ஸௌலப்யாதிகுணங்களையும், இதராவயவங்களையுமொழிய, திருவடித் தாமரைகளை நினைக்கிறது. (ஶரணம் ப்ரபத்யே) விரோதிநிவ்ருத்திபூர்வகமான கைங்கர்யஸித்திக்கு உபாயமாக அத்யவஸிக்கிறேன். (229) "**उपाये गृहरक्षित्रोः**" (உபாயே க்ருஹரக்ஷித்ரோ:). அஹிர்புத்ந்ய ஸம்ஹிதையிலே இதினுடைய ஸ்வரூபம் சொல்லுகிறது; (230) "**अहमस्म्यपराधानामालयः**" (அஹமஸ்ம்யபராதாநாமாலய:); ஶ்வேதாஶ்வதரே, (38) "**यो ब्रह्माणं विदधाति पूर्वं**" (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்). இந்த ஶ்லோகத்தாலே அதிகாரிஸ்வரூபமும், ஶரணாகதி ப்ரயோகமும் சொல்லிற்றாயிற்று. 22.

23. பதவுரை:— முகுந்த—முக்தியை அளிக்கும் எம்பிரானே! யத் நிந்திதம் கர்ம—யாதொரு நிந்திக்கப்பட்ட காரியம், மயா—அடியேனால், ஸஹஸ்ரஶ:—ஆயிரக்கணக்கான தடவை, ந வ்யதாயி—செய்யப்படவில்லையோ, தத்—அப்படிப்பட்ட தீச்செயல், லோகே—சாஸ்திரத்திலேயே, ந அஸ்தி—இல்லை; ஸ: அஹம்—அப்படிப்பட்ட அடியேன், விபாக அவஸரே ஸம்ப்ரதி—(அந்தக் கர்மங்கள்) பலனைக் கொடுக்கும் தசையாகிய இப்பொழுது, அகதி:—வேறு புகலற்றவனாய், தவ அக்ரே—தேவரீருக்கு முன்னால், க்ரந்தாமி—கதறுகிறேன்.

அவ:— (ந நிந்திதம்) "அனுகூலங்கள் இல்லையென்று வெறுக்கவேண்டா; உண்டான யோக்யதையையும் அழிக்கவற்றான நிஷித்தானுஷ்டானங்கள் இல்லையாகில், நன்மைகளை உண்டாக்கிப் புருஷார்த்தத்தையும் தருகிறோம்" என்று பகவதபிப்ராயமாக, ப்ரதிகூலங்களாலே பூர்ணன் என்கிறார்.

வ்யா:— (ஸஹஸ்ரஶோ யந்ந மயா வ்யதாயி, நிந்திதம் கர்ம தத் லோகே நாஸ்தி) ஆயிரம் மடங்கு என்னால் பண்ணப்படாதது யாதொரு நிந்தித கர்மம் உண்டு,— அதிபாதக மஹாபாதகாதிகள், அது ஶாஸ்த்ரத்தில் இல்லை. அனுஷ்டாதாக்கள் பக்கல் இல்லாத நிஷித்தங்களும் ஶாஸ்த்ரத்திலே காணலாமிறே. (ஸோऽஹம்) நிஷித்தங்களை அனுஷ்டித்து

**निमज्जतोऽनन्त भवार्णवान्तश्चिराय मे कूलमिवाऽसि लब्धः ।**
**त्वयापि लब्धं भगवन्निदानीमनुत्तमं पात्रमिदं दयायाः ॥ २४ ॥**

24. நிமஜ்ஜதோऽநந்தபவார்ணவாந்தஶ்சிராய மே கூலமிவாஸி லப்த: ।
த்வயாபி லப்தம் பகவந்நிதாநீமநுத்தமம் பாத்ரமிதம் தயாயா: ॥

---

ப்ராயஶ்சித்தங்களிலும் இழியாதே, தப்பச்செய்தோம் என்கிற அனுதாபமுமின்றிக்கே இருக்கிற நான். (விபாகாவஸரே) அவை பக்வமாய், அனுபவத்தையொழியப் போக்கிடமில்லாத அவஸ்தையில். (முகுந்த) முக்திபூமிப்ரத. இத்துர்தஶையை ப்ராப்தனானவனுக்கும், தேவரே உஜ்ஜீவநஹேது என்னும் இத்தையே புத்திபண்ணி. (231) "**दुराचारोऽपि सर्वाशी कृतघ्नो नास्तिकः**" (துராசாரோऽபி ஸர்வாஶீ க்ருதக்னோ நாஸ்திக:), (232) "**दोषो यद्यपि तस्य स्यात्**" (தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்), (233) "**वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत्**" (வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்), (42) "**तस्मादपि वध्यं प्रपन्नं न प्रतिप्रयच्छन्ति**" (தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்சந்தி). அஹிர்புத்ந்யஸம்ஹிதாயாம், (234) "**अनेनैव प्रपन्नस्य भगवन्तं सनातनं । तस्यानुबन्धाः पाप्मानस्सर्वे नश्यन्ति तत्क्षणात् ॥ कृतान्यनेन सर्वाणि तपांसि तपतां वर । सर्वे तीर्थास्सर्वयज्ञास्सर्वदानानि तत्क्षणात् ॥ कृतान्येतेन मोक्षश्च तस्य हस्ते न संशयः ॥**" (அநேநைவ ப்ரபந்நஸ்ய பகவந்தம் ஸநாதநம் । தஸ்யாநுபந்தா: பாப்மாநஸ் ஸர்வே நஶ்யந்தி தத்க்ஷணாத் ॥ க்ருதாந்யநேந ஸர்வாணி தபாம்ஸி தபதாம் வர । ஸர்வே தீர்த்தாஸ் ஸர்வயஜ்ஞாஸ் ஸர்வதாநாநி தத்க்ஷணாத் ॥ க்ருதாந்யேதேந மோக்ஷஶ்ச தஸ்ய ஹஸ்தே ந ஸம்ஶய: ॥). (அகதி:) தேவரீருடைய நீர்மையையன்றியே, என்னுடைய கதிஶூந்யதையே ஹேதுவாக. (ஸம்ப்ரதி க்ரந்தாமி) தேவருக்குப் பரிஹரிக்கவொண்ணாத தஶையிலே, தேவர் பக்கல் குணஹாநியை ஶம்ஸிக்கும்படி, ஸாதநாநுஷ்டானம் பண்ணிப் பலம் பெறுவாரைப் போலே கூப்பிடாநின்றேன், (தவாக்ரே) (235) "**ह्रीरेषा हि ममातुला**" (ஹ்ரீரேஷா ஹி மமாதுலா) என்கிற தேவர் திருமுன்பே. 23.

24. பதவுரை:— அநந்த—(தேசத்தாலும், காலத்தாலும், வஸ்துவினாலும்) அளவற்றவனை எம்பிரானே! பவ அர்ணவ அந்த:—ஸம்ஸாரமாகிய கடலினுள்ளே, சிராய நிமஜ்ஜத: மே—நெடுநாள் அழுந்துகிற எனக்கு, கூலம் இவ லப்த: அஸி—கரைபோல் நீ கிடைத்தாய்; பகவந் !—பகவானே !, த்வயா அபி—உன்னாலும், இதாநீம்—இப்பொழுது, தயாயா: அநுத்தமம் பாத்ரம் இதம் லப்தம்—(உன்) அருளுக்கு உயர்ந்த பாத்திரமாகிய இந்த வஸ்து (அடியேன்) அடையப்பட்டது.

அவ:— (நிமஜ்ஜத:) "உம்முடைய பூர்வவ்ருத்தி இதுவாயிருக்க, 'க்ரந்தாமி' என்று நம் குற்றம்போல் கூப்பிடுவது எத்தாலே?" என்ன, "ஸம்ஸாரார்ணவத்திலே அழுந்துகிற எனக்கு, நிர்ஹேதுகக்ருபையாலே உன் வாசியை அறிவித்தாய்; 'கூசம் செய்யாது கொண்டாய் என்னைக்கூவிக்கொள்ளாய் வந்தந்தோ' என்கிற ப்ராந்ரமாயத்தாலே உன் திருவடிகளை ப்ராபிக்கைக்கும் அந்த க்ருபையே ஹேதுவென்று, தயைகரக்ஷ்யத்வத்தாலே கூப்பிடுகிறேன்" என்கிறார். "எனக்கு தேவரை லபிக்கை பெறுப்பேறானாற்போலேயிறே, தேவருடைய க்ருபைக்கும் என்னுடைய லாபம்" என்கிறார்.

अभूतपूर्वं मम भावि किं वा सर्वं सहे मे सहजं हि दुःखं।
किं तु त्वदग्रे शरणागतानां पराभवो नाथ! न तेऽनुरूपः ॥ २५ ॥

25. அபூதபூர்வம் மம பாவி கிம் வா ஸர்வம் ஸஹே மே ஸஹஜம் ஹி துஃக்கம்।
கிந்து த்வதக்ரே ஶரணாகதாநாம் பராபவோ நாத! ந தேऽநுரூப: ॥

வ்யா:— (அநந்தபவார்ணவாந்தர் நிமஜ்ஜத:). (அநந்த) த்ரிவிதபரிச்சேதரஹித. என்னுடைய ஸம்ஸாரத்தைப் பரிச்சேதிக்கிலும், தேவருடைய ப்ரபாவத்தைப் பரிச்சேதிக்க ஒண்ணாது என்கை. பவார்ணவவிஶேஷணமாய், கரை காண ஒண்ணாத ஸம்ஸாரார்ணவத்திலே "ஆவாரார் துணையென்று அலை நீர்க்கடலுள் அழுந்தும்" என்கிறபடியே அழுந்துகிற எனக்கு என்னவுமாம். ஸநகாதிகளைப்போலே கண்பற்றிலே இருந்தேனோ? (சிராய) அநாதிகாலமெல்லாம் அழுந்துகிற எனக்கு. அழுந்துகையொழியப் பரிஹாரம் பார்க்க அறியாத எனக்கு. (கூலமிவ லப்தோऽஸி) "உன் பேரருளால் இக்கரையேறி" என்னும்படியே அழுந்துகிறவிடத்திலே கரை காட்டினாற்போல லப்தனாகாநின்றாய். (த்வயாபி லப்தம்) தேவராலும் லபிக்கப்பட்டது. எனக்கு தேவர் பெறுப்பேறுணப்போலேயிறே 'எதிர் சூழல் புக்குத்' திரிந்த தேவர்க்கும் இவ்வஸ்து. (பகவந்) ஜ்ஞாநாதிகுணபரிபூர்ணரான தேவருடைய பேறு என்னுமிடம் நானே சொல்லவேண்டுமோ? என்கை. (இதாநீம்) தேவரும் நம்மை அற்றுவிடும்படியான துர்தஶயிலே. (அநுத்தமம் பாத்ரம்) உத்தமோத்தமமான பாத்ரம். (இதம்) ரக்ஷாபேக்ஷைக்கு இனியில்லை என்னும் இவ்வஸ்து. (தயாயா:) ரக்ஷ்யவிஷயம் உண்டாகில் தான் உண்டாம் தேவர் தயைக்கு. 24.

25. பதவுரை:— நாத—நாதனே!, மம—எனக்கு, அபூதபூர்வம்—இதற்கு முன் ஏற்படாத, கிம் வா துஃக்கம் பாவி?—என்ன துக்கம் இனிமேல் உண்டாகிவிடப்போகிறது? ஸர்வம் ஸஹே—எல்லா துக்கங்களையும் பொறுத்துக்கொண்டேயிருக்கிறேன்; துஃக்கம் மே ஸஹஜம் ஹி—துன்பமென்பது என்னுடன் கூடப்பிறந்ததன்றோ; கிந்து—ஆனால், த்வதக்ரே—தேவரீருக்கு முன்னால், ஶரணாகதாநாம் பராபவ:—வந்து ஶரணமடைந்தவர்களுக்கு (ஏற்படும்) அவமானம், தே ந அநுரூப:—உனக்குத் தகுந்ததன்று.

அவ:— (அபூதபூர்வமிதி) நம் பக்கல் ந்யஸ்தபராராயிருக்கிற உமக்கு, (236) "**तत्तस्य सदृशं भवेत्**" (தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்) என்கிறபடியே கண்டிருக்கை ஸ்வரூபமாயிருக்க, இங்ஙனே நிர்பந்திக்கக்கடவீரோ? என்ன, "என்னுடைய அநர்த்தத்தைப் பரிஹரிக்கச் சொல்லுகிறேனல்லேன்; ஆஶ்ரிதருக்கு விஷயங்களால் வரும் பரிபவம், ரக்ஷகரான தேவருக்குத் தேஜோஹாநி என்று, அத்தைப் பரிஹரிக்கச் சொல்லுகிறேன்" என்கிறார்.

வ்யா:— (அபூதபூர்வம் மம பாவி கிம் வா) நரக கர்ப்பவாஸ ஜநந மரண க்லேஶாதிகளே ஆஶ்ரயியாய்ப் போந்த எனக்கு, முன்பு அநுபூதமன்றிக்கே, இனி அநுபாவ்யமாயிருப்பதொரு து:க்கமுண்டோ? கிம் க்ஷேபே; (ஸர்வம் ஸஹே) ஆதிவ்யாதிகள், பரபரிபவம், ஶீதோஷ்ணாதிகள், தத்விஶ்லேஷஜநிதது:க்கம் இவற்றை இவர் ஸஹிக்கவல்லராய்ச் சொல்லுகிறாரல்லர். ஆத்மா நித்யன்; காலம் அநாதி; இவற்றைப் பொறுத்து உட்கொதிபோலே நஶியாதே கிடந்த ஆஶ்சர்யத்தைக்கண்டு சொல்லுகிறார். (மே ஸஹஜம் ஹி

**निरासकस्यापि न तावदुत्सहे महेश! हातुं तव पादपङ्कजं**
**रुषा निरस्तोऽपि शिशुः स्तनन्धयो न जातु मातुश्चरणौ जिहासति ॥ २६ ॥**

26. நிராஸகஸ்யாபி ந தாவதுத்ஸஹே மஹேஶ ! ஹாதும் தவ பாதபங்கஜம் ।
ருஷா நிரஸ்தோऽபி ஶிஶு: ஸ்தநந்தயோ ந ஜாது மாதுஶ்சரணௌ ஜிஹாஸதி ॥

து:க்கம்) அநாதிகாலம் கர்மமே நிரூபகமாகப்போந்த எனக்கு, அதின் பலமான து:க்கமும் ஸஹஜமன்றோ. (கிந்து) பொறுக்கவொண்ணாதது ஒன்று உண்டு. (த்வதக்ரே) ஸர்வஶேஷியாய், ஸர்வத்ர ஸந்நிஹிதரான தேவர் முன்பே. (ஶரணாகதாநாம் பராபவ:) உன் பக்கல் ந்யஸ்தபரராயிருக்குமவர்களுக்கு, ஶப்தாதிவிஷயப்ராவண்யத்தால் வந்த எளிவரவு. "பாவியேனைப் பல நீ காட்டிப் படுப்பாயோ ?", "கிறி செய்தென்னைப் புறத்திட்டின்னம் கெடுப்பாயோ ?" என்று விஷயஸந்நிதியே தொடங்கி, எளிவரவாயிறே அநந்யப்ரயோஜனர் இருப்பது. பஹுவசனத்தாலே சொல்லுகிறது,— ஒருத்தனுடைய எளிவரவு ஸஜாதீயர்க்காக வந்தது என்கை. "எங்ஙனம் தேறுவர் உமர்" என்கிறபடியே, உனக்குக் கைபுகுந்தவர்களும், உன்னுடைய ரக்ஷணத்தில் அதிஶங்கை பண்ணுவார்கள் என்கை. (நாத) இது தன்னரசு நாடாகில் தேவருக்கு வருவதுண்டோ ? உடைமை நோவுபடுவது உடையவனுக்கு எளிவரவன்றோ ? (தே நாநுரூப:) (49) "**सर्वपापेभ्यो मोक्षयिष्यामि**" (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) என்ற தேவருக்கு அநுரூபமன்று. அது தனக்கு அஸஹ்யம் என்கை. 25.

26. பதவுரை:— மஹேஶ !—ஸர்வேஶ்வரனே ! நிராஸகஸ்ய அபி—(என்னை நீ) அகற்றித்தள்ளினாலும், தவ—உன்னுடைய, பாத பங்கஜம் தாவத்—திருவடித் தாமரையை, ஹாதும்—விடுவதற்கு, ந உத்ஸஹே—துணியமாட்டேன்; ஸ்தநந்தய: ஶிஶு:—முலைப்பால் குடிக்கும் குழந்தை, ருஷா—கோபத்தினால், நிரஸ்த: அபி—(தாயால்) தள்ளப்பட்டாலும், மாது:—தாயினுடைய, சரணௌ—கால்களை, ஜாது—ஒருபொழுதும், ந ஜிஹாஸதி—விட விரும்பாதன்றோ.

அவ:—(நிராஸகஸ்யாபி) "தேவருடைய ரக்ஷணாபாவத்தால் வந்த தேஜோஹாநியையும் பாராதே, என்னைக் கைவிடுமன்றும், நான் விடப் பார்க்கிறிலேன்" என்று, தம்முடைய அகதிகத்வத்தாலே தம்முடைய மஹாவிஶ்வாஸத்தை ஆவிஷ்கரிக்கிறார்.

வ்யா:—(நிராஸகஸ்யாபி) ரக்ஷகத்வம் ஸ்வரூபமாயிருக்கிற தேவர், நிராஸகராக ப்ரஸங்கமில்லை; இப்படிப்பட்ட தேவர் நிஷ்கருணராய் நிராஸகரானாலும். (தவ பாதபங்கஜம் தாவத் ஹாதும் நோத்ஸஹே) ரக்ஷகமுமாய், ப்ராப்தமுமாய், போக்யமுமான திருவடிகளை முந்துற முன்னம் விட்டு ஜீவிக்க ஶ்ரத்தை பண்ணுகிறிலேன். "கண்டார் இகழ்வனவே காதலன் தான் செய்திடினும், கொண்டானையல்லால் அறியாக் குலமகள்போல்" என்று, தேவர் ரக்ஷகரன்றியிலேயொழிந்தாலும், புறம்பு போக்கில்லை என்கை. (மஹேஶ) (16) "**तमीश्वराणां परमं महेश्वरं**" (தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்) என்றும், (237) "**ईश्वरस्सर्वभूतानां**" (ஈஶ்வரஸ் ஸர்வபூதாநாம்) என்றும் சொல்லுகிறபடியே, நிருபாதிக நிர்வாஹகனானவனே ! ஸம்ஸாரத்தில் பந்தங்களைப்போலே கர்மோபாதிகமாய், புறம்பே போய் உஜ்ஜீவிக்கிறேனோ ? (238) "**सुहृदं सर्वभूतानां**" (ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்) (239)

तवामृतस्यन्दिनि पादपङ्कजे निवेशितात्मा कथमन्यदिच्छति ? ।
स्थितेऽरविन्दे मकरन्दनिर्भरे मधुव्रतो नेक्षुरकं हि वीक्षते ॥ २७ ॥

27. தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேஶிதாத்மா கதமந்யதிச்சதி ? ।
ஸ்திதேऽரவிந்தே மகரந்தநிர்ப்பரே மதுவ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே ॥

---

" सर्वेषामेव लोकानां पिता माता च माधवः " (ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:) என்னும் நிருபாதிகமான பரிவும் ஸம்பந்தமும் புறம்பேயுண்டாய் தேவரை விட்டுப்போய் உஜ்ஜீவிக்கவோ ? (ஸ்தநந்தயஶ் ஶிஶு: ருஷா நிரஸ்தோऽபி) ஸ்தந்யமே தாரகமான சிசுவானது, ஜநநியாலே க்ரோதமடியாக விடப்பட்டாலும். ஸ்வரக்ஷணத்திலே ஶக்தியின்றிக்கே, ததேகரக்ஷ்யமான தஶையைச் சொல்லுகிறது. இவ்வாத்மவஸ்து, ஈஶ்வரைகரக்ஷ்யமாய், நித்யஸ்தநந்தயமாயிறே இருப்பது. " அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தே அழுங்குழவி "; " ஈன்ற தாய் " என்றும், " அரிசினம் " என்றும் விருத்ததர்மம்; ஏகாஶ்ரயத்தில் ஸம்பவியாது என்கை. பிதாவுக்கு ஹிதார்த்தமாக க்ரோதம் ஸம்பவித்தாலும், மாத்ருவிஷயத்தில் ஸம்பாவனை இல்லையிறே. (ஜாது) க்ருத்தையான போதோடு, ஆதரித்த போதோடு வாசியற. (மாதுஶ்சரணௌ ந ஜிஹாஸதி) கையாலே தள்ளுகையன்றிக்கே, காலாலே தள்ளிலும், அந்தக் காலைக் கட்டிக் கொள்ளுமத்தனையொழிய, புறம்பு போகப் பாராதாப்போலே. 26.

27. பதவுரை:— அம்ருதஸ்யந்திநி—அம்ருதத்தைப் பெருக்குகிற, தவ பாத பங்கஜே—உன் திருவடித் தாமரையில், நிவேஶித ஆத்மா—(உன் அருளாலே) வைக்கப்பட்ட மன்மானது, அந்யத்—மற்றொன்றை, கதம்—எப்படி, இச்சதி—விரும்பும்? மகரந்த நிர்ப்பரே—தேன் நிறைந்த, அரவிந்தே—செந்தாமரையானது, ஸ்திதே ஸதி—இருக்கும் பொழுது, மதுவ்ரத:—வண்டு, இக்ஷுரகம்—முள்ளிப்பூவை, ந வீக்ஷதே ஹி—காணவும் மாட்டாதன்றோ ?

அவ:— (தவாம்ருதஸ்யந்திநி) " என்னுடைய அநந்யகதித்வத்தாலே விடமாட்டாத அளவேயோ? தேவர் போக்யதையிலே அழுந்தின மநஸ்ஸும் வேறொன்றில் போகமாட்டாது" என்கிறார்.

வ்யா:— (தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே) ப்ராப்தமுமாய், போக்யமுமான தேவர் திருவடிகளிலே. (240) " विष्णोः पदे परमे मध्व उत्सः " (விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:), (116) " रसो वै सः " (ரஸோ வை ஸ:), " தேனே மலரும் திருப்பாதம் " என்று ஶ்ருதிஸித்தமிறே போக்யதை. (நிவேஶிதாத்மா) தேவருடைய நிர்ஹேதுகமான ப்ரஸாதத்தாலே நிவேஶிக்கப்பட்ட மநஸ்ஸானது. அபோக்யமுமாய், அப்ராப்தமுமான ஹேயவிஷயங்களிலே பழகிப்போந்த மநஸ்ஸு, ஸர்வரிபோக்யமான தேவர் திருவடிகளிலே அவகாஹிக்கும்போது, தேவர் ப்ரஸாதமே வேண்டாவோ ? (கதமந்யதிச்சதி) (241) " मय्यासक्तमनाः " (மய்யாஸக்த-மநா:) என்கிறபடியே, தேவர் திருவடிகளிலே ஸக்தமான மநஸ்ஸு, தத்வ்யதிரிக்தவிஷயங்களில் ப்ரத்தை பண்ணும்படி எங்ஙனே ? உன் வாசியையும் அறிந்துவைத்து, சைதந்யப்ரஸரத்வாரமான இது, விஷயாந்தரங்களை விரும்பும்படி எங்ஙனே ? (அரவிந்தே மகரந்தநிர்ப்பரே ஸ்திதே ஸதி) ஸுகஸ்பர்ஶமாய், மதுவாலே பூர்ணமான செந்தாமரையானது போக்தாக்களைக்

**त्वदङ्घ्रिमुद्दिश्य कदाऽपि केनचिद्यथा तथा वाऽपि सकृत्कृतोऽञ्जलिः ।**
**तदैव मुष्णात्यशुभान्यशेषतश्शुभानि पुष्णाति न जातु हीयते ॥ २८ ॥**

28. த்வதங்க்ரிமுத்திஶ்ய கதாऽபி கேநசித் யதா ததா வாऽபி ஸக்ருத்க்ருதோऽஞ்ஜலி: ।
ததைவ முஷ்ணாத்யஶுபாந்யஶேஷதஶ் ஶுபாநி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே ॥

---

குறித்து அவஸரப்ரதீக்ஷமாயிருக்க. (மதுவ்ரத:) மதுவே ஜீவனமான பதார்த்தம் என்னுதல்; மது ஸம்ருத்தமாயிருக்கிற இடத்திலே பருகக்கடவோம் என்கிற ஸங்கல்பத்தை உடைய பதார்த்தம் என்னுதல். (இக்ஷுரகம் ந வீக்ஷதே) கிட்டுகையே அரிதாய், கிட்டினாலும் நாக்கு நனைக்கப்போராதேயிருக்கிற முள்ளிப்பூவிலே சென்று பணியாதொழிகையன்றிக்கே, கடாக்ஷிப்பதும் செய்யாது. (ஹி) இது உபதேஶிக்கவேண்டுமோ தேவருக்கு? ஸப்ரதிபந்நமன்றோ? “எங்குப்போய் உய்கேன் உன் இணையடியேயடையலல்லால்” என்றிராதோ? 27.

28. பதவுரை:— த்வத் அங்க்ரிம் உத்திஶ்ய—உன் திருவடியைக் குறித்து, கதாபி—எப்போதாவது, கேநசித்—எவனாலேயாவது, யதா ததா வா அபி—எம்மாதிரியாகவாவது, ஸக்ருத்—ஒரு தடவை, க்ருத:—செய்யப்பட்ட, அஞ்ஜலி:—அஞ்ஜலியானது, ததைவ—அப்போதே, அஶுபாநி—பாபங்களை, அஶேஷத:—மிகுதியில்லாமல், முஷ்ணாதி—போக்குகின்றது; ஶுபாநி—நன்மைகளை, புஷ்ணாதி—விருத்தியடையச் செய்கிறது; ஜாது—ஒரு சமயத்திலும், ந ஹீயதே—குறைகிறதில்லை.

அவ:— (த்வதங்க்ரிம்) “த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே” என்று நீர் பண்ணின ப்ரபத்தியொன்றும் அமையுமோ விரோதிநிவ்ருத்திக்கும், அபிமதஸித்திக்கும்? என்ன, மநோவாக்காயங்கள் மூன்றாலும் பண்ணின ப்ரபத்தியெல்லாம் வேண்டுமோ? (242) “**बद्धाञ्जलिपुटं दीनं याचन्तं शरणागतम्**” (பத்தாஞ்ஜலிபுடம் தீநம் யாசந்தம் ஶரணாகதம்) என்கிற காயிகமான அஞ்ஜலியொன்றுமே அமையாதோ? என்கிறார் இதில்.

வ்யா:— (த்வதங்க்ரிம்) நிருபாதிகஶேஷியான உன்னுடைய நிரதிஶய போக்யமுமாய், ஸர்வஸுலபமுமான திருவடிகளை. இத்தால், ப்ராப்யமுமாய், ப்ராபகமுமாய், ப்ராப்தமுமாய் இருக்கிறபடியைச் சொல்லுகிறது. (கதாபி) இச்சை பிறந்தபோது காலம் என்கை; இத்தால் * வஸந்த க்ரீஷ்மாதி ஶுக்லக்ருஷ்ணபக்ஷ பூர்வாஹ்ணுபராஹ்ணாதி காலநியதியை உடைய * ஜ்யோதிஷ்டோமாதிகளில் இதுக்கு உண்டான வ்யாவ்ருத்தி. (கேநசித்) இத்தால், த்ரைவர்ணிகத்வ க்ருஹமேதித்வ § க்ருஷ்ணகேஶத்வ வேதவேதாங்க வித்யாதிகாரிநியமமுடைய கர்மங்களில் வ்யாவ்ருத்தி. ஆகையால் ஸர்வாதிகாரமென்கை. (யதா ததா) ப்ரகாரநியதி இல்லையென்கிறது. இத்தால் ஶாஸ்த்ரங்களில் ப்ரகாரவிஶேஷநியமமுண்டான கர்மங்களில் வ்யாவ்ருத்தி. (வா அபி) என்று விகல்பஸமுச்சயஸூசகமான அவ்யயங்கள் இரண்டாலும், ஒன்றிலே நியதமான கர்மங்களில் இதுக்கு உண்டான வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. (ஸக்ருத்க்ருத:) என்று, யாவஜ்ஜீவாதிகாரமான நித்யகர்மவ்யாவ்ருத்தி

---

* “வஸந்தே வஸந்தே ஜ்யோதிஷா யஜேத” என்ற வாக்யத்தை நினைக்கிறார்.

§ “ஜாதபுத்ர: க்ருஷ்ணகேசோக்நீநாததீத” என்றதை நினைக்கிறார்.

उदीर्णसंसारदवाशुशुक्षणिं क्षणेन निर्वाप्य परां च निर्वृतिम् ।
प्रयच्छति त्वच्चरणारुणाम्बुजद्वयानुरागामृतसिन्धुशीकरः ॥ २९ ॥

29. உதீர்ணஸம்ஸாரதவாஶுஶுக்ஷணிம் க்ஷணேந நிர்வாப்ய பராம் ச நிர்வ்ருதிம் ।
ப்ரயச்சதி த்வச்சரணாருணாம்புஜத்வயாநுராகாம்ருதஸிந்துஶீகர: ॥

---

சொல்லுகிறது. (அஞ்ஜலி:) * ஜாயாதிஸஹகாரிஸாபேக்ஷமான அஶ்வமேதாதிகளிற்காட்டில் இதுக்கு உண்டான ஸுகரத்வம் சொல்லுகிறது. (ததைவ) தேஶாந்தரே காலாந்தரே தேஹாந்தரே பலப்ரதமான கர்மங்களில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது. (அஶேஷத:) ஸர்வபாபங்களும் மறுவலிடாதபடி போகை. (49) "**सर्वपापेभ्यो मोक्षयिष्यामि**" (ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி). இத்தால் ஒரு பாபத்துக்கு ஒரு ப்ராயஶ்சித்தமான த்வாதஶவார்ஷிக ஸம்வத்ஸர சாந்த்ராயண க்ருச்ச்ராதிகளில் வ்யாவ்ருத்தி. (முஷ்ணாதி) "முஷ-ஸ்தேயே"; "வஞ்சித்து முற்றும் தவிர்ந்த", "சும்மெனாதே கைவிட்டோடி" என்று போன ப்ரகாரம் தெரியாதொழிகை. (ஶுபாநி, புஷ்ணாதி) விரோதியைப் போக்கிவிடுமளவன்றிக்கே, அபிமதங்களாலே பூர்ணமாக்கும். பஹுவசநத்தாலே பரபக்தி, பரஜ்ஞாநம், பரமபக்தி, தேஶவிஶேஷப்ராப்தி, பகவல்லாபம், ப்ராப்திபலமான கைங்கர்யம் இவற்றைச் சொல்லுகிறது. இத்தால் ஸ்வர்க்காதிகளான ஒரோ பலங்களிலே நியதமான கர்மங்களில் வ்யாவ்ருத்தி. (ந ஜாது ஹீயதே) இத்தனையும் கொடுத்தாலும் தான் குறையாதிருக்கை. இத்தால், பலப்ரதானத்தளவிலே க்ஷீணஶக்திகமான கர்மங்களில் வ்யாவ்ருத்தி. (243) "**अञ्जलिः परमा मुद्रा क्षिप्रं देवप्रसादिनी**" (அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ), (244) "**सुसुखं कर्तुमव्ययम्**" (ஸுஸுகம் கர்த்துமவ்யயம்). க்ரியாரூபமான அஞ்ஜலி குறையாதிருக்கையாவதென்? என்னில்: அநந்யப்ரயோஜனராய்க்கொண்டு பண்ணின அஞ்ஜலியாகையாலே, ப்ரஸந்நனான ஈஶ்வரன், எல்லாம் செய்தாலும், ஒன்றும் செய்யாதானாய் இருக்கையாலே; (206) "**ऋणं प्रवृद्धमिव मे हृदयान्नापसर्पति**" (ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி), "உன்னடியார்க்கு என் செய்வனென்றே இருத்தி நீ" என்னக் கடவதிறே. 28.

29. பதவுரை:— த்வத் சரண அருண அம்புஜ த்வய அநுராக அம்ருத ஸிந்து ஶீகர:— உன்னுடைய திருவடிகளாகிற இரு செந்தாமரைகளில் அன்பென்னும் அமுதக்கடலின் ஒரு துளியானது, உதீர்ண ஸம்ஸார தவ ஆஶுஶுக்ஷணிம்—கிளர்ந்தெரிகிற ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயை, க்ஷணேந—ஒரு கணநேரத்தில், நிர்வாப்ய—அவித்துவிட்டு, பராம்—மேலான, நிர்வ்ருதிம் ச—ஆநந்தத்தையும், ப்ரயச்சதி—கொடுக்கிறது.

அவ:— ஆயாஸாத்மகமான அஞ்ஜலிதான் வேண்டுமோ? "சிந்திப்பே அமையும்" என்கிறபடியே, மானஸமாக அனையாதோ விரோதிநிவ்ருத்திபூர்வகமான பரமபதத்தைத் தர? என்கிறார். இத்தால் (242) "**दीनं**" (தீநம்) என்கிற மாநஸப்ரபத்தியைச் சொல்லுகிறது. "ந தர்மநிஷ்டோऽஸ்மி" என்கிற இது வாசிகப்ரபத்தியாய், "த்வதங்க்ரிமுத்திஶ்ய" என்றது காயிகப்ரபத்தியாய், இதில் மாநஸமான ப்ரபத்தி என்னவுமாம். அதவா,

---

* "அயஜ்ஞோ வா ஏஷ யோऽபத்நீக:" என்ற வாக்யத்தை நினைக்கிறார்.

**विलासविक्रान्तपरावरालयं नमस्यदार्तिक्षपणे कृतक्षणम् ।**
**धनं मदीयं तव पादपङ्कजं कदा नु साक्षात्करवाणि चक्षुषा ॥ ३० ॥**

30. விலாஸவிக்ராந்தபராவராலயம் நமஸ்யதார்த்திக்ஷபணே க்ருதக்ஷணம் ।
தநம் மதீயம் தவ பாதபங்கஜம் கதா நு ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா ॥

" த்வதங்க்ரிம் ", " உதீர்ண " என்கிற ஶ்லோகத்வயத்தாலே ப்ரபத்திபலமான பரபக்தியைச் சொல்லுகிறது என்னவுமாம்.

வ்யா:— (உதீர்ணஸம்ஸாரதவாஶுஶுக்ஷணிம்) கிளர்ந்து எரிகிற ஸம்ஸாரமாகிற காட்டில் அக்னியை அவிக்கவொண்ணாதாப்போலே. அவித்யாதிகளுக்கு இலக்காமித்தனை யொழிய, பரிஹரிக்கவொண்ணாது என்கை. ஆத்மா அதாஹ்யமென்கிறது, லௌகிகாக்னியி லிறே. ஸம்ஸாரியை (245) " **असन्नेव** " (அஸந்நேவ) என்கிறபடியே தக்தபடம்போலே ஆக்கு மிறே. (க்ஷணேந நிர்வாப்ய) (246) " **अथ सोऽभयङ्गतः** " (அத ஸோ ऽபயங்கத:) என்கிறபடியே அப்போதே அவித்து. " ததைவ முஷ்ணாதி ", " க்ஷணேந நிர்வாப்ய " என்று சொல்லுகை யாலே, அவ்வதிகாரிக்குப் பலத்துக்கு விளம்பமில்லை என்கிறார். (247) " **यथेषीकतूलमग्नौ प्रोतं प्रदूयेत** " (யதேஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத) என்கிறபடியே, இவன் பட்ட நோவை இவன் விரோதிவர்க்கத்தோடு போக்கும் ஈஶ்வரன் என்கை. (பராஞ்ச நிர்வ்ருதிம் ப்ரயச்சதி) ஒரு தேஶவிஶேஷத்திலே, ஆநந்தநிர்ப்பரனாயிருக்கும் இருப்பைத் தாராநிற்கும். (2) " **निरञ्जनः परमं साम्यमुपैति** " (நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி), (248) " **मम साधर्म्यमागताः** " (மம ஸாதர்ம்யமாகதா:), (122) " **स स्वराड्भवति** " (ஸ ஸ்வராட் பவதி) என்னும் ஸுகமிறே. (த்வச்சரணாருணாம்புஜேத்யாதி) ப்ராப்தனாய், ஸுலபனான உன்னுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகளில் அனுராகமாகிற அம்ருதஸாகரத்திலே ஒரு திவலை. அருணபதத்தாலே பரபாகரஸம் சொல்லுகிறது. அம்புஜஶப்தத்தாலே மென்மை, குளிர்ச்சி, நாற்றங்களால் வந்த ரஸம். (த்வயம்) அந்யோந்யஸத்ருஶமான சேர்த்தியழகால் வந்த ஸாரஸ்யம். இத்தால், அநுராகஜனகமான திருவடிகள் என்கை. (அநுராக) திருவடிகளில் அத்யவஸாயாத்மகமான ருசி என்னுதல்; ப்ரபத்திபலமாய் கைங்கர்யோபகரணமான பக்தி என்னுதல். ப்ரீதிகாரிதமிறே கைங்கர்யம். (அம்ருத) ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யத்தாலே ஸ்வயம் ப்ரயோஜனமாய் இருக்கையன்றியே பத்யமாயிருக்கை. (ஸிந்துஶீகர:) " அதனில் பெரிய என்னவா " என்கிற விஷயானுரூபமான ப்ரேமமெல்லாம் வேண்டா அபிமதஸித்திக்கு என்கை. 29.

30. பதவுரை:— விலாஸ விக்ராந்த பர அவர ஆலயம்—விளையாட்டாக அளக்கப் பட்ட மேலானவரான தேவர்களுடையவும், கீழான மனுஷ்யாதிகளுடையவும் உலகங்களை உடையதும், நமஸ்யத் ஆர்த்தி க்ஷபணே—வணங்கினவர்களின் துக்கங்களைப் போக்கும் விஷயத் தில், க்ருதக்ஷணம்—காலத்தைச் செலவிடுவதும், மதீயம் தநம்—எனக்குச் செல்வமா யிருப்பதுமான, தவ பாத பங்கஜம்—உன்னுடைய திருவடித்தாமரையை, கதா நு— எப்போதுதான், சக்ஷுஷா—கண்ணாலே, ஸாக்ஷாத்கரவாணி—காணப்போகிறேன் ?

அவ:— (விலாஸேதி) இப்படி விளம்பஹேதுவில்லாத ஸித்தோபாயத்தைப் பரிக்ரஹித்தவராகையாலே, க்ரமப்ராப்தி பற்றாதே த்வரை ப்ரேரிக்க, " கூவிக்கொள்ளும்

कदा पुनश्शङ्खरथाङ्गकल्पकध्वजारविन्दाङ्कुशवज्रलाञ्छनम् ।
त्रिविक्रम ! त्वच्चरणाम्बुजद्वयं मदीयमूर्धानमलङ्करिष्यति ॥ ३१ ॥

31. கதா புநஸ் ஸங்கரதாங்ககல்பகத்வஜாரவிந்தாங்குஸவஜ்ரலாஞ்சநம் ।
த்ரிவிக்ரம ! த்வச்சரணம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி ॥

காலம் இன்னம் குறுகாதோ" என்கிறார். ப்ரபத்திபலமான பரபக்தியாலே "கனைகழல் காண்பதென்றுகொல் கண்கள்" என்றும், "காணக் கருதுமென் கண்ணே" என்றும் சொல்லுகிறபடியே கண்ணாலே காண்பது என்று? என்கிறார் என்றுமாம்.

வ்யா:— (விலாஸேத்யாதி) லீலையாக ஆக்ரமிக்கப்பட்ட உத்க்ருஷ்டரான தேவதைகளுடைய இருப்புகளையும், மரணதர்மாக்களான மனுஷ்யாதிகளுடைய இருப்புகளையும் உடைத்தாயுள்ளத்தை. விமுகருடைய தலையிலே அநாயாஸேந சென்றிருந்த திருவடிகளுக்கு, ருசியையுடையார் தலையிலே இருக்கை பணியுண்டோ? (விக்ராந்த) அந்யபரரானார் பக்கலிலேயோ மேல் விழலாவது? அநந்யப்ரயோஜனர் பக்கலிலே மேல் விழலாகாதோ? (பராவராலயம்) வஸிஷ்டசண்டாளவிபாகமின்றிக்கே தூளிதானம் பண்ணின திருவடிகள் அத்தையொழியச்செல்லாத எனக்கு அரிதாவதே! (155) "**सङ्गैस्सुराणां**" (ஸங்கைஸ்-ஸுராணம்) என்கிற கர்மபாவனநிஷ்டரும், "தவஞ்செய்து நான்முகனே பெற்றான்" என்கிறபடியே உபயபாவனநிஷ்டரும் பெற்ற பேறு எனக்கு அரிதாவதே! (நமஸ்யதார்த்தி-க்ஷபணே க்ருதக்ஷணம்) ப்ராஸங்கிகமாகப் பிறந்த * அபதாநம் கிடக்க கிடீர்! திருவடிகளிலே தலை சாய்த்தாருடைய ஆர்த்திகளைப் போக்குகையிலே க்ருதாவஸரமாயுள்ளத்தை. ஆஸ்ரித ரக்ஷணத்திலே § அவஸரப்ரதீக்ஷமான திருவடிகளைக் காண்கைக்கு "கதா நு ஸாக்ஷாத்கர-வாணி சக்ஷுஷா" என்று கூப்பிடவேண்டுவதே! (தநம் மதீயம்) "வைத்தமாநிதி" என்கிறபடியே எனக்கு ப்ராப்யமுமாய், ப்ராபகமுமாய் உள்ளத்தை. (தவ பாதபங்கஜம்) ஸர்வ ஸுலபமுமாய், ஆஸ்ரிதவத்ஸலமுமாய், நிரதிஸயபோக்யமுமான திருவடிகளை. (கதா நு ஸாக்ஷாத்கரவாணி) த்ரைவிக்ரமாபதாநதூளிதானத்திலும் காணப்பெறாத நான் என்று காணவிருக்கிறேன்? 'விஷயங்களிலே மண்டிக்கிடக்கிற ஸம்ஸாரிகள் நடுவே இருக்கிற உமக்கு நம்மையொழியச் செல்லாதபடி புகுர நிறுத்தினோமாகில், ஒன்றும் செய்யாதாரைப்போலே கூப்பிடுகிறதென்?' என்ன, கண்ணாலே கண்டு விடாய் தீர இருக்கிற எனக்கு, ஸம்ஸாரிகளிற் காட்டில் ஒரு வ்யாவ்ருத்தி பண்ணித் தர அமையுமோ? (சக்ஷுஷா) ஒரு தேஸவிஸேஷத்திலே ஸதாதர்ஸநம் பண்ணப் பெறாதே காண விடாய்த்த எனக்கு, கண்ணாலே காணவேணும். 30.

31. பதவுரை:— த்ரிவிக்ரம!—திரிவிக்ரமாவதாரம் செய்த எம்பிரானே!, ஸங்க ரதாங்க கல்பக த்வஜ அரவிந்த அங்குஸ வஜ்ர லாஞ்சநம்—சங்கு, சக்கரம், கல்பகவ்ருக்ஷம், கொடி, தாமரை, அங்குசம், வஜ்ராயுதம் இவைகளை அடையாளமாக உடைய, த்வத் சரண அம்புஜ த்வயம்—உன் திருவடித்தாமரையிணை, மதீய மூர்த்தாநம்—என் தலையை, கதா புந: அலங்கரிஷ்யதி—எப்போதுதான் அலங்கரிக்கப்போகிறது?

* அபதாநம்—முன் நடந்த வ்ருத்தாந்தம். § அவஸரப்ரதீக்ஷம்—காலத்தை எதிர்பார்ப்பது.

विराजमानोज्ज्वलपीतवाससं स्मितातसीसूनसमामलच्छविम् ।
निमग्ननाभिं तनुमध्यमुन्नतं विशालवक्षस्स्थलशोभिलक्षणम् ॥ ३२ ॥

32. விராஜமாநோஜ்ஜ்வலபீதவாஸஸம் ஸ்மிதாதஸீஸூநஸமாமலச்சவிம் ।
நிமக்நநாபிம் தநுமத்யமுந்நதம் விஶாலவக்ஷஸ்ஸ்தலஶோபிலக்ஷணம் ॥

அவ:— (கதா புந:) இதில், கண்ணாலே காணுமளவும் போராது. "படிக்களவாக நிமிர்த்த நின் பாதபங்கயமே தலைக்கணியாய்", என்றும், "கோலமாம் என் சென்னிக்கு உன் கமலமன்ன குரைகழலே" என்றும் சொல்லுகிறபடியே உன் திருவடிகளாலே என் தலையை அலங்கரிக்கவேண்டும் என்கிறார்.

வ்யா:— (கதா புந:) திருவடிகளிலுண்டான ப்ராப்தியையும், ஸௌலப்யத்தையும், போக்யதையையும் அனுஸந்தித்து அத்தால் வந்த த்வரையாலும், விளம்பஹேதுவில்லாத உபாயத்தைப் பரிக்ரஹித்தவராகையாலும் 'பின்னை எப்போது செய்வது?' என்கிறார். (ஶங்கரதாங்கேத்யாதி) ஸர்வேஶ்வரனுடைய ஐஶ்வர்யஸூசகமாய், என் தலைக்கு ஆபரணமான ஶங்கசக்ராதிலக்ஷணங்களாலே லிகிதமாயுள்ளத்தை. அவனுக்கு ஐஶ்வர்யஸூசகமுமாய், ஆகர்ஷகமுமாய், திருவடிகளோட்டை ஸம்பந்தத்தாலே இவர் தலைக்கு ஶேஷத்வலக்ஷணமுமாய், ஆபரணமுமாயிறே இருப்பது. "பாதவிலச்சினை வைத்தான்" என்னக்கடவதிறே. (த்ரிவிக்ரம) குணகுணநிரூபணம் பண்ணாதே, திருவடிகளில் வைலக்ஷண்யமும் பாராதே எல்லார் தலையிலும் வைக்குமவனல்லையோ? (த்வச்சரணாம்புஜத்வயம்) இப்படி ப்ராப்தனுமாய், ஸுலபனுமான உன்னுடைய நிரதிஶயபோக்யமான திருவடிகள். (மதீயமூர்த்தாநம்) நரகஹேதுவான பதார்த்தங்களின் கால் காண ப்ரார்த்தித்துப் போந்த என் தலையை என்னுதல்; இதுக்கு ப்ராப்தனைப்போந்த என் தலையை என்னுதல். பதிவ்ரதைக்கு மங்களஸூத்ரம்போலேயிறே ஶேஷபூதனுக்குத் திருவடிகள். "மே மூர்த்நி பாதி" என்று தன் தலையிலே நீர்மைக்கு உடலாக ஸ்வஸம்பந்தம் அத்தலைக்கு ஏற்றமாகச் சொன்னார். இங்கு, தத்ஸம்பந்தமே இத்தலைக்கு ஏற்றம் என்கிறார் ஸ்வஶேஷத்வஸித்திக்காக. 31.

32. பதவுரை:— விராஜமான—(வர்ணச்சேர்த்தியால்) அழகாயிருப்பதும், உஜ்ஜ்வல—ப்ரகாஶமானதுமான, பீத வாஸஸம்—திருப்பீதாம்பரத்தை உடையவனாகவும், ஸ்மித—மலர்ந்த, அதஸீ ஸூந ஸம—காயாம்பூவை ஒத்த, அமலச் சவிம்—தோஷமற்ற காந்தியை உடையவனாகவும், நிமக்ந நாபிம்—ஆழ்ந்த உந்தியை உடையவனாகவும், தநு மத்யம்—சிறிய இடையை உடையவனாகவும், உந்நதம்—(இவைகளாலே) மேலானவனாகவும், விஶால வக்ஷஸ் ஸ்தல ஶோபி கௌஸ்துபம்—அகன்ற திருமார்பில் விளங்குகின்ற ஸ்ரீவத்ஸமென்னும் மறுவை உடையவனாகவும். *

அவ:— (விராஜமாந) இந்த ஶ்லோகம் முதலாக, "பவந்தம்" என்கிற ஶ்லோகத்தளவும், பர்வக்ரமத்தாலே, அவயவாபரணாயுத மஹிஷீ பரிஜந பரிச்சதங்களோட்டைச் சேர்த்தியழகை அனுபவித்து, அநுபவஜநிதப்ரீதிகாரிதமான கைங்கர்யத்தாலே உன்னை

* இந்த ஶ்லோகம் முதல் நாற்பத்தாறுவது ஶ்லோகம் வரை ஒரே வாக்யமாயிருக்கிறது.

चकासतं ज्याकिणकर्कशैश्शुभैश्चतुर्भिराजानुविलम्बिभिर्भुजैः ।
प्रियावतंसोत्पलकर्णभूषणश्लथालकाबन्धविमर्दशंसिभिः ॥ ३३ ॥

33. சகாஸதம் ஜ்யாகிணகர்க்கஶைஶ் ஶுபைஶ் சதுர்ப்பிராஜாநுவிலம்பிபிர் புஜை: ।
ப்ரியாவதம்ஸோத்பலகர்ணபூஷணஶ்லதாலகாபந்தவிமர்த்தஶம்ஸிபி: ॥

உகப்பிப்பது எப்போது? என்கிறார். இத்தால் தம்முடைய ப்ராப்யத்தை அருளிச்செய்கிறார். (249) "वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः। आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैस्सह॥" (வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:। ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ॥) என்றிறே வஸ்து இருப்பது.

வ்யா:— (விராஜமாந) 'திருவடிகளைத் தலையிலே வைக்க அமையுமோ?' என்ன, 'அவ்வளவு போராது' என்று ஸாமாந்யஶோபையை அநுபவிக்கிறார். (விராஜமாந) திருநிறத்துக்குப் பரபாகமான அழகு. (உஜ்ஜ்வல) (250) "महारजतं वासः" (மஹாரஜதம் வாஸ:) என்கிற ஸ்வரூபத்தாலே வந்த ஔஜ்வல்யம். "உடையார்ந்த ஆடை" என்று திருவரை பூத்தாப்போலே இருக்கிற அழகு. (பீதவாஸஸம்) "பீதகவாடையுடையான்" என்று அழகேயன்றிக்கே ஐஶ்வர்யஸூசகமுமாயிருக்கை. (ஸ்மிதாதஸீ) அலருகிறபோதே செவ்வியை உடைத்தான காயாம்பூப்போலே இருக்கை. (251) "अतसीपुष्पसङ्काशं" (அதஸீபுஷ்பஸங்காஶம்), "காயாம்பூ மலர்ப்பிறங்கலன்ன மாலை" என்று அபியுக்தர் ஆழங்கால் படும் நிலமிறே. (நிமக்நநாபிம்) (252) "आवर्त इव गङ्गायाः" (ஆவர்த்த இவ கங்காயா:) என்கிறபடியே, ஸௌந்தர்யவெள்ளம் சுழித்தாற்போலே இருக்கிற திருநாபியை உடையவன். "நந்தன் மதலைக்கு நன்றுமழகிய உந்தி" என்னக்கடவதிறே. (தநுமத்யம்) "சிற்றிடையும் வடிவும்", "துடிசேரிடையும்" என்னக்கடவதிறே. (உந்நதம்) இவ்வடிவாலும், உடையாலும், அழகாலும் ஸர்வாதிகனாயிருக்கிற இருப்பு தோற்றும்படி இருக்கை. (விஶாலேத்யாதி) விஸ்த்ருதமான திருமார்பிலே விளங்காநிற்பதான ஸ்ரீவத்ஸசிஹ்நமுடைய உன்னை. 32.

33. பதவுரை:— ஜ்யாகிணகர்க்கஶை:—நாண் தழும்பேறிக் கரடுமுரடாயிருப்பவையும், ஶுபை:—சுபமானவையும், ஆஜாநு விளம்பிபி:—முழந்தாள்கள் வரை தொங்குகின்றவையும், ப்ரியா அவதம்ஸ உத்பல கர்ணபூஷண ஶ்லத அலகாபந்த விமர்த்த ஶம்ஸிபி:—பிராட்டியின் திருச்செவி மலரான நீலோத்பலபுஷ்பமென்ன, கர்ணபூஷணமென்ன, அலைந்த திருக்குழல் கற்றையென்ன, இவை அழுந்தியிருப்பதைத் தெரிவிப்பவையுமான, சதுர்ப்பி: புஜை:—நான்கு புஜங்களாலும், சகாஸதம்—ப்ரகாசிப்பவனாகவும்.

அவ:— (சகாஸதம்) திருத்தோள்களில் ஶௌர்யவீர்யாதிகளையும், அழகையும் அநுபவிக்கிறார்.

வ்யா:— (ஜ்யாகிணகர்க்கஶை:) "தழும்பிருந்த சார்ங்க நாண் தோய்ந்தவாமங்கை" என்கிறபடியே, ஸ்ரீஶார்ங்கத்தில் நாணித்தழும்பு எல்லாவற்றிற்கும் உண்டாகையாலே * ஸவ்யஸாசி என்கை. ஆஶ்ரிதவிரோதிகளை அழியச்செய்து, தழும்பையுடைத்தான திருத்

* ஸவ்யஸாசி—இடது கைகளாலும் அம்புவிடுபவன்.

उदग्रपीनांसविलम्बिकुण्डलालकावलीबन्धुरकम्बुकन्धरम् ।
मुखश्रिया न्यक्कृतपूर्णनिर्मलामृतांशुबिम्बाम्बुरुहोज्ज्वलश्रियम् ॥ ३४ ॥

34. உதக்ரபீநாம்ஸவிலம்பி குண்டலாலகாவளீபந்துரகம்புகந்தரம் ।
முகஸ்ரியா ந்யக்க்ருதபூர்ணநிர்மலாம்ருதாம்ஶுபிம்பாம்புருஹோஜ்ஜ்வலஸ்ரியம் ॥

தோள்கள். வீரத்தழும்பு வீரபுஜங்களுக்கு அழகிறே. (ஶுபை:) (253) "**शुभेन मनसा ध्यातं**" (ஶுபேந மநஸா த்யாதம்) என்னுமாப்போலே, ஆஶ்ரித ஸம்ருத்தியே ப்ரயோஜனமாக வெறும் புறத்திலே உபகரிக்கும் தோள்கள் என்னுதல்; ஆஶ்ரிதர்க்கு ப்ராப்யமான தோள்கள் என்னுதல். (சதுர்ப்பி:) கல்பகதரு பணைத்தாப்போலே ஆஶ்ரிதரக்ஷணமே விளைநீராகப் பணைத்தபடி. (ஆஜாநுவிளம்பிபி:) ஆஜாநுபாஹுவாயிருக்கையிறே புருஷோத்தமலக்ஷணம். (ப்ரியாவதம்ஸேத்யாதி) ஆஶ்ரிதரக்ஷணமே யாத்ரையாயிருக்கும்படி சொல்லிற்று கீழ்; அதுவே ப்ச்சையாகப் பிராட்டி அணைக்கும்படி சொல்லுகிறது இங்கு. பிராட்டி திருச்செவி மலரான உத்பலமென்ன, கர்ணபூஷணமென்ன, ஸ்பர்ஶத்தாலே தத்காலத்தில் கிஞ்சிதா குஞ்சிதமான திருக்குழல் கற்றையென்ன, இவற்றினுடைய ஸம்மர்த்தத்தைக் கோட்சொல்லு மவையாய், அவற்றாலே விளங்காநின்றுள்ளவனை. (254) "**सीतया शोभितं पुरा**" (ஸீதயா ஶோபிதம் புரா) என்கிறபடியே வீரபுஜத்தையிறே வீரபத்னி அணைவது. அல்லாதபோது ஸஜாதீயையான ஸ்த்ரீயை அணைத்தவோபாதியிறே. ப்ரணயசிஹ்நங்களும், ரக்ஷணசிஹ்நங் களுமிறே திருத்தோள்களுக்கு மாங்கள்யம். (சகாஸதம்) இப்படிப்பட்ட தோள்களிறே நாராயணப்ரணயியானவனுக்கு ஔஜ்வல்யஹேதுக்கள். 33.

34. பதவுரை:— உதக்ர பீந அம்ஸ விலம்பி குண்டல அலக ஆவளீ பந்துர கம்பு கந்தரம்—உயர்ந்தும், பருத்துமிருக்கிற திருத்தோள்கள் வரை தாழ்ந்து தொங்கும் குண்டலங்களாலும், திருக்குழல்களாலும் அழகுபெற்றதாகவும், மூன்று கோடுகளை உடையதாகவுமிருக்கும் திருக்கழுத்தை உடையவனாகவும், முக ஸ்ரியா—திருமுகத்தின் ஒளியினாலே, ந்யக்க்ருத பூர்ண நிர்மல அம்ருதாம்ஶுபிம்ப அம்புருஹ உஜ்ஜ்வலஸ்ரியம்—பூர்ணமாய், தோஷமற்றதான சந்த்ரமண்டலத்தினுடையவும், அப்போதலர்ந்த தாமரைப் பூவினுடையவும் உயர்ந்த காந்தியை வென்றவனாகவும்.

அவ:— (உதக்ரேதி) திருத்தோள்களுக்கு அநந்தரமான திருக்கழுத்தையும், ததநந்தரமான திருமுகத்தில் ஸாமாந்யஶோபையையும் அனுபவிக்கிறார்.

வ்யா:— (உதக்ரேத்யாதி) ஓங்கித் தசைத்திருந்துள்ள அம்ஸத்திலேவரத் தாழ்ந்த திருக்குண்டலங்களென்ன, அவ்வளவு வரத் தாழ்ந்த திருக்குழல்களென்ன, இவற்றாலே ஸுந்தரமாய், வடிவுதான் ரேகாத்ரயாங்கிதமாயிருந்துள்ள திருக்கழுத்தை உடையவனை. (பந்துர) ஸுந்தர. (255) "**रेखात्रयाङ्किता ग्रीवा कम्बुग्रीवेति कथ्यते**" (ரேகாத்ரயாங்கிதா க்ரீவா கம்புக்ரீவேதி கத்யதே). * "மின்னு மணிமகரக் குண்டலங்கள் வில்வீச" என்றும், ‡ "மகரஞ்சேர் குழை இருபாடிலங்கியாட" என்றும் சொல்லுகிறபடியே திருக்கழுத்துக்குப் பரபாகமான ஒளியையுடைத்தாய், இரண்டு ஆதித்யர்கள் ஆபரணவேஷத்தாலே அலங்கரிக்கிறாப்போலே இருக்கை.

* பெரியதிருமடல். ‡ திருநெடுந்தாண்டகம்—21.

प्रबुद्धमुग्धाम्बुजचारुलोचनं सविभ्रमभ्रूलतमुज्ज्वलाधरम् ।
शुचिस्मितं कोमलगण्डमुन्नसं ललाटपर्यन्तविलम्बितालकम् ॥ ३५ ॥

35. ப்ரபுத்தமுக்தாம்புஜசாருலோசநம் ஸவிப்ரமப்ரூலதமுஜ்ஜ்வலாதரம் ।
ஶுசிஸ்மிதம் கோமலகண்டமுந்நஸம் லலாடபர்யந்தவிலம்பிதாலகம் ॥

---

* "கொள்கின்ற கோளிருளை" இத்யாதிப்படியே திருக்குழலாலே அலங்க்ருதமாயிருக்கிறபடி. (முகஶ்ரீயேத்யாதி) அத்திருக்குழலில் அழகு திருமுகத்திலே மூட்ட, அந்த அழகை அனுபவிக்கிறார். தன்னுடைய ஜ்யோதிஸ்ஸாலே பூர்ணசந்த்ரனுடைய ஒளியையும், அப்போதலர்ந்த தாமரைப்பூவிலழகையும் தோற்பிக்கும் திருமுகத்தை உடைய உன்னை. (முகஶ்ரியா) முக காந்த்யா. (ந்யக்க்ருத) அவன், ஸம்பூர்ணகலைகளாலும் பூர்ணமான பௌர்ணமாவாஸ்யையில் சந்த்ரமண்டலமாய் மறு கழற்றினவளவிலேயாயிற்று ஸத்ருஶமாயிருப்பது. ‡ "எத்தனை செய்யிலும் என் மகன் முகம் நேரொவ்வாய்" என்று அது தன்னைத் தாழவிட்ட இடத்திலேயாயிற்று ஒவ்வாதொழிவது. தேஜஸ்ஸேயன்றியே ஸௌகுமார்யத்துக்கும்; (256) "विकासिशारदाम्भोजमवश्यायजलोक्षितम् ।" (விகாஸிஶாரதாம்போஜமவஶ்யாயஜலோக்ஷிதம்). செவ்விக்கும், பரிமளத்துக்கும் தாமரைப்பூவும் ஸத்ருஶமன்று. (256) "परिभूय स्थितं" (பரிபூய ஸ்திதம்) என்னக்கடவதிறே. 34.

35. பதவுரை:— ப்ரபுத்த முக்த அம்புஜ சாரு லோசநம்—மலர்ந்ததும் புதியதுமான தாமரைபோன்று அழகிய திருக்கண்களை உடையவனாகவும், ஸவிப்ரமப்ரூலதம்—நெறிப்புடன் கூடியதும், கொடிபோன்றதுமான திருப்புருவங்களை உடையவனாகவும், உஜ்ஜ்வல அதரம்—மிகவும் ஒளிவிடும்படியான திரு அதரத்தை உடையவனாகவும், ஶுசி ஸ்மிதம்—பரிசுத்தமான புன்சிரிப்பை உடையவனாகவும், கோமல கண்டம்—அழகிய கபோலங்களை உடையவனாகவும், உந்நஸம்—உயர்ந்த திருமூக்கை உடையவனாகவும், லலாட பர்யந்த விலம்பித அலகம்—திருநெற்றிவரையிலும் தொங்குகிற திருக்குழலை உடையவனாகவும்.

அவ:— (ப்ரபுத்தேத்யாதி) * "கோளிழைத்தாமரை" என்கிறபடியே, திருமுகத்தில் அவயவஸௌந்தர்யத்தினுடைய சேர்த்தியை அனுபவிக்கிறார்.

வ்யா:— (ப்ரபுத்த) ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தாலே விகஸிதமாயிருக்கை. (முக்த) "கிங்கிணி வாய்ச்செய்த தாமரைப்பூப்போலே அங்கண் இரண்டுங்கொண்டு" என்கிறபடியே அலரத்துடங்கினவளவாய் இருக்குமென்னுதல்; "பேதுற முகஞ்செய்து" என்னும்படிக்கு ஆஶ்ரிதரோட்டைக் கலவியால் வந்த ஆனந்தாதிஶயத்தில் விக்ருதியைச் சொல்லுதல். (அம்புஜசாருலோசநம்) இப்படிப்பட்ட தாமரை த்ருஷ்டாந்தமாகப் போராமையாலே தார்ஷ்டாந்திகந்தன்னையே சொல்லுகிறது. (257) "तत् पुण्डरीकनयनं विष्णोर्द्रक्ष्याम्यहं मुखम् ।" (தத் புண்டரீகநயநம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம்) என்று ஆஶ்ரிதர் ஆசைப்படுமதிறே. (ஸவிப்ரமப்ரூலதம்) * "மன்னியசீர் மதனன் கருப்புச் சிலைகொல்" என்கிறபடியே ஆஶ்ரிதர் பக்கல் ஆதாரமெல்லாம் தோற்றும்படி நெறித்திருக்கும் புருவத்தையுடைய உன்னை. § "தன்கைச்

---

* திருவாய்மொழி (7—7). ‡ பெரியாழ்வார் திருமொழி (1—4—3).
§ நாச்சியார் திருமொழி (14—6).

स्फुरत्किरीटाङ्गदहारकण्ठिकामणीन्द्रकाञ्चीगुणनूपुरादिभिः ।
रथाङ्गशङ्खासिगदाधनुर्वरैर्लसत्तुलस्या वनमालयोज्ज्वलम् ॥ ३६ ॥

36. ஸ்புரத்கிரீடாங்கதஹாரகண்டிகாமணீந்தரகாஞ்சீகுணநூபுராதிபி: ।
ரதாங்கஶங்காஸிகதாதநுர்வரைர் லஸத்துலஸ்யா வநமாலயோஜ்ஜ்வலம் ॥

சார்ங்கமதுவேபோல்" என்று த்ருஷ்டாந்திக்கும்படியிறே. (உஜ்ஜ்வலாதரம்) * "வாலியதோர் கனிகொல்" என்றும், * "கோலந்திரள் பவளக் கொழுந்துண்டங்கொல்" என்றும், * "நீல நெடுமுகில் போல் திருமேனியம்மான் தொண்டை வாய்" என்றும் சொல்லுகிற படியே மிக்க அழகையுடைய திருவதரத்தையுடைய உன்னை. (ஶுசிஸ்மிதம்) † "பவளச் செந்துவர் வாயினிடைக் கோமள வெள்ளி முளைப்போல் சில பல்லிலக" என்றும், * "என்னுவியடும் அணி முத்தங்கொல்" என்றும் சொல்லுகிற திருமுறுவலையுடைய உன்னை. (கோமலகண்டம்) அனுபவிப்பார்க்கு ஆகர்ஷகமாய் ஸுகுமாரமான கண்டஸ்தலத்தை யுடைய உன்னை. (உந்நஸம்) * "மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ" என்கிற படியே நாஸாலதையை உடைய உன்னை. (லலாடபர்யந்தவிலம்பிதாலகம்) ‡ "முன்னமுகத் தணியார் மொய் குழல்கள்" என்றும், "சுருண்டிருண்ட குழல் தாழ்ந்த முகத்தான்" என்றும் சொல்லுகிற திரு நெற்றியின் எல்லையிலே வர அலையெறிகிற திருக்குழலையுடைய உன்னை. பின்பு 'அம்ஸவிலம்பி'யாய், முன்பு 'லலாடபர்யந்த'மாயிருக்கிறபடி. 35.

36. பதவுரை:— ஸ்புரத் கிரீட அங்கத ஹார கண்டிகா மணீந்த்ர காஞ்சீகுண நூபுர ஆதிபி:—ப்ரகாஶிக்கிற கிரீடம், தோள்வளைகள், ஹாரம், திருக்கழுத்தணி, ஸ்ரீகௌஸ்துபம், திருவரைநாண், திருச்சிலம்பு முதலிய திருவாபரணங்களாலும், ரதாங்க ஶங்க அஸி கதா தநுர்வரை:—சக்கரம், ஶங்கம், (நந்தகமென்னும்) வாள், (கௌமோதகீ என்னும்) கதை, (ஶார்ங்கம் என்னும்) வில் என்னும் ஆயுதங்களாலும், லஸத் துலஸ்யா— (உன் சேர்த்தியாலே) ப்ரகாஶிக்கும் திருத்துழாயை உடைய, வநமாலயா—வனமாலையாலும், உஜ்ஜ்வலம்— ப்ரகாஶிப்பவனாகவும்.

அவ:— (ஸ்புரதிதி) ஆபரணாயுதாதிகளுடைய சேர்த்தியழகை அனுபவிக்கிறார்.

வ்யா:— (ஸ்புரத்கிரீட) உபயவிபூதிநாதத்வமாகிற ஐஶ்வர்யத்துக்கு அனுரூபமாய், திருமுடியிலே விளங்காநிற்கிற திருவபிஷேகம். 'கதிராயிரமிரவி கலந்தெரித்தாலொத்த நீண்முடி'யிறே. (அங்கத) ஸர்வாஶ்ரயமான திருத்தோள்களைப்பற்றி விளங்காநின்றுள்ள திருத்தோள்வளைகள். (ஹார) "பொன்னின்மாமணியாரமணியாகத்திலங்குமால்" என்றும், "பெரிய வரைமார்பில் பேராரம்" என்றும் சொல்லுகிறபடியே விளங்காநின்ற திருவாரம். (கண்டிகா) திருக்கழுத்திலே விளங்காநின்ற முத்துத் திருக்கட்டுவடம். (மணீந்த்ர) அவன் தனக்கும் ஸதா ஸ்ப்ருஹணீயமான ஸ்ரீகௌஸ்துபம். (காஞ்சீகுண) திருவரையிலே விளங்காநின்ற அரைநூல், பட்டிகை. (நூபுர) திருவடிகளைப்பற்றி விளங்கா நின்றுள்ள திருச்சிலம்பு. (ஆதி) ஶப்தத்தாலே "பல பலவே ஆபரணம்" என்றும், (258) "अपरिमितदिव्यभूषण" (அபரிமிததிவ்யபூஷண) என்றும் சொல்லுகிறபடியே

* திருவாய்மொழி (7—7). † பெரியாழ். திரு. (1—5—9). ‡ பெரியாழ். திரு. (1—5—5).

**चकर्थ यस्या भवनं भुजान्तरं तव प्रियं धाम यदीयजन्मभूः।**
**जगत्समस्तं यदपाङ्गसंश्रयं यदर्थमम्भोधिरमन्थ्यबन्धि च ॥ ३७॥**

37. சகர்த்த யஸ்யா பவநம் புஜாந்தரம் தவ ப்ரியம் தாம யதீயஜந்மபூ: ।
ஜகத்ஸமஸ்தம் யதபாங்கஸம்ஶ்ரயம் யதர்த்தமம்போதிரமந்த்யபந்தி ச ॥

---

அஸங்க்யாதமென்கை. (ரதாங்க) இந்த ஆபரணங்களோடு விகல்பிக்கலாம்படி ஶோபாவஹமான திவ்யாயுதங்களின் சேர்த்தியை அநுபவிக்கிறார். (லஸத்துலஸ்யா வநமாலயோஜ்ஜ்வலம்) ஸர்வைஶ்வர்யஸூசகமாய், திருவடிகளளவும் தாழ்ந்து "அல்லித்துழாயலங்கல்" என்கிற வனமாலையாலே விளங்காநின்ற உன்னை. ஆபரணயுதாதிகள் தன்னைப்பற்றி விளங்குகையும், அவற்றாலே தான் விளங்குகையுமாகச் செல்லுகிறபடி. (259) "**स्रग्वस्त्राभरणैर्युक्तं स्वानुरूपैरनूपमैः। चिन्मयैः स्वप्रकाशैश्च अन्योन्यरुचिरञ्जकैः॥**" (ஸ்ரக்வஸ்த்ராபரணைர்யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை: । சிந்மயை: ஸ்வப்ரகாஶைஶ்ச அந்யோந்யருசிரஞ்ஜகை: ॥). 36.

37. பதவுரை:— தவ—உன்னுடைய, புஜாந்தரம்—திருமார்பை, யஸ்யா:—எந்தப் பிராட்டிக்கு, பவநம் சகர்த்த—இருப்பிடமாகச் செய்தருளினையோ, யதீய ஜந்மபூ:—எந்தப் பிராட்டியின் பிறந்த வீடான திருப்பாற்கடல், தவ—உனக்கு, ப்ரியம் தாம—இனிய இருப்பிடமாயிற்றோ, ஸமஸ்தம் ஜகத்—உலகெல்லாம், யத் அபாங்க ஸம்ஶ்ரயம்—எவளுடைய மந்தகடாக்ஷத்தைப் பற்றியிருக்கிறதோ, யதர்த்தம்—எவளுக்காக, அம்போதி:—கடலானது, அமந்தி அபந்தி ச—கடையவும், அணைகட்டவும் பட்டதோ.

அவ:— (சகர்த்தேதி) மேலில் ஶ்லோகத்வயத்தாலே பிராட்டியோட்டைச் சேர்த்தியை அநுபவிக்கிறார். இதில், முதல் ஶ்லோகத்தாலே பிராட்டியுடைய மேன்மையையும், இவள் பக்கல் ஈஶ்வரனுக்கு உண்டான வ்யாமோஹத்தையும் அருளிச்செய்கிறார்.

வ்யா:— (தவ புஜாந்தரம் யஸ்யா பவநம் சகர்த்த) (260) "**सर्वयज्ञमयं वपुः**" (ஸர்வயஜ்ஞமயம் வபு:) என்கிற திருமார்பைப் பிராட்டிக்குக் கோயிற்கட்டணமாகப் பண்ணியருளிற்று. 'யஸ்யா:' என்கிறது இதிலுண்டான ப்ரமாணப்ரஸித்தியாலே. (260) "**सर्वयज्ञमयं वपुरध्यास्ते**" (ஸர்வயஜ்ஞமயம் வபுரத்யாஸ்தே), (261) "**पश्यतां सर्वदेवानां ययौ वक्षस्स्थलं हरेः**" (பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷ:ஸ்தலம் ஹரே:), "நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கை", "திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும் திகழ்கின்ற திருமாலார்", "என்திருமகள் சேர் மார்பன்", "மையகண்ணாள் மலர்மேலுறைவாள் உறை மார்பினன்", "அலர்மேல் மங்கையுறை மார்பா", "மார்வத்து மாலை", "செய்யாள் திருமார்பினில் சேர் திருமால்". (தவ ப்ரியம் தாம யதீயஜந்மபூ:) யாவளொருத்தி அவதரித்த திருப்பாற்கடல் 'அயர்வறுமமரர்களதிபதி'யான தேவருக்கு இனிதமரும் இடமாயிற்று. (262) "**श्रीः पूर्वमुदधेः......देवदानवयत्नेन प्रसूतामृतमन्थने**" (ஶ்ரீ: பூர்வமுததே:........தேவதாநவயத்நேந ப்ரஸூதாம்ருதமந்தநே), (263) "**नेदानीं त्वदृते सीते स्वर्गोऽपि मम रोचते**" (நேதாநீம் த்வத்ருதே ஸீதே ஸ்வர்க்கோऽபி மம ரோசதே). (ஜகத் ஸமஸ்தம் யதபாங்கஸம்ஶ்ரயம்) (132) "**अस्येशाना जगतः**" (அஸ்யேஶாநா ஜகத:), (131) "**ईश्वरीं सर्वभूतानां**" (ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்), (264) "**त्वं माता सर्वलोकानां**" (த்வம் மாதா ஸர்வ-

**स्वैश्वरूप्येण सदाऽनुभूतयाऽप्यपूर्ववद्विस्मयमादधानया ।**
**गुणेन रूपेण विलासचेष्टितैस्सदा तवैवोचितया तव श्रिया ॥ ३८ ॥**

38. ஸ்வவைஶ்வரூப்யேண ஸதாऽநுபூதயாऽப்யபூர்வவத் விஸ்மயமாததாநயா ।
குணேந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா தவைவோசிதயா தவ ஶ்ரியா ॥

---

லோகாநாம்) என்கிறபடியே, இவ்வுபயவிபூதியும் யாவளொருத்தியுடைய மந்தகடாக்ஷத்தைப் பற்றி உண்டாயிருக்கிறது. (யதர்த்தமம்போதிரமந்தி) "விண்ணவர் அமுதுண அமுதில் வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமான்" என்கிறபடியே யாவளொருத்தியைப் பெறுகைக்குக் கடல் கடைந்தருளிற்று. (அபந்தி ச) யாவளொருத்தியுடைய பிரிவாற்றாமையாலே கடலை அடைத்தருளிற்று. (265) "**एष सेतुर्मया बद्धस्सागरे सलिलार्णवे। तव हेतोर्विशालाक्षि! नलसेतुस्सुदुष्करः॥**" (ஏஷ ஸேதுர் மயா பத்தஸ் ஸாகரே ஸலிலார்ணவே। தவ ஹேதோர் விஶாலாக்ஷி நளஸேதுஸ் ஸுதுஷ்கர:॥). 37.

38. பதவுரை:— ஸ்வ வைஶ்வரூப்யேண—தன் விஶ்வரூப நிலையுடன், ஸதா—எப்போதும், அநுபூதயா அபி—அனுபவிக்கப்பட்டபோதிலும், குணேந—குணங்களாலும், ரூபேண—வடிவழகாலும், விலாஸ சேஷ்டிதை:—அழகிய செயல்களாலும், அபூர்வவத்—புதியதுபோல், விஸ்மயம் ஆததாநயா—ஆஶ்சர்யத்தைத் தருபவளாய், ஸதா—(பரம், வ்யூஹம், விபவம் முதலிய) எல்லா நிலைகளிலும், தவ ஏவ உசிதயா—உனக்கே தகுந்தவளாய், தவ ஶ்ரியா—உனக்குச் செல்வமாயிருப்பவளான.

அவ:— (ஸ்வவைஶ்வரூப்யேண) இதில், பிராட்டியினுடைய நிரதிஶயபோக்யதையையும், "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்கிறபடியே அவனுக்கேயாயிருக்கிற இருப்பையும் அனுபவிக்கிறார்.

வ்யா:— (ஸ்வவைஶ்வரூப்யேண ஸதாநுபூதயாபி) ஸர்வஶக்தியான தேவர், ஸர்வ விக்ரஹத்தாலும், ஸர்வகாலமும், ஸர்வப்ரகாரத்தாலும் அனுபவியாநின்றாலும், பிராட்டியினுடைய போக்யதையைப் பரிசேதிக்கப் போகாது. ஸௌபரியைப்போலே அநேகவிக்ரஹத்தைப் பரிக்ரஹித்தாலும் முடியாது. (266) "**पर्यायेण प्रसुप्तश्च**" (பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச) என்கிறபடியே, ப்ரகாரங்கள் அநேகமானாலும் முடியாது. (அபூர்வவத் விஸ்மயமாததாநயா) நித்யாபூர்வம்போலே ஆஶ்சர்யாவஹமாயிருக்கும். (267) "**स एकधा भवति। द्विधा भवति।**" (ஸ ஏகதா பவதி। த்விதா பவதி।) என்று, நித்யஸூரிகள் தன் திறத்தில் படுமதெல்லாம் பிராட்டியைக் குறித்துத் தான் படும் என்கை. "பண்டிவரைக் கண்டறிவதெவ்வூரில்" என்றும், "அப்பொழுதைக்கப்பொழுதென் ஆராவமுதம்" என்றும் ஆழ்வார்களும், (113) "**सदा पश्यन्ति**" (ஸதா பஶ்யந்தி) என்று நித்யஸூரிகளும், நித்யாபூர்வதையாலே தேவர் திறத்தில் படுமதெல்லாம் தேவர் படும்படியாயிறே பிராட்டி போக்யதை இருப்பது. உகப்பிப்பது எவ்வழியாலே? என்னில்: (குணேந ரூபேண விலாஸசேஷ்டிதை:) வடிவழகாலும், ஶீலாதி குணங்களாலும். "ஸக்ருத் த்வதாகாரவிலோகநாஶயா" என்கிறபடியே, "ஈர்கின்ற குணங்களையுடையாய்" என்கிற குணங்களிலும், "உன் செய்கை நைவிக்கும்" என்கிற சேஷ்டிதங்களிலும், அபியுக்தர் ஆழங்காற்படும்படி இருக்குமிறே அவன். இப்படி இவள் ஸ்வரூபாதி

तया सहासीनमनन्तभोगिनि प्रकृष्टविज्ञानबलैकधामनि ।
फणामणिव्रातमयूखमण्डलप्रकाशमानोदरदिव्यधामनि ॥ ३९ ॥

39. தயா ஸஹாஸீநமநந்தபோகிநி ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி ।
பணாமணிவ்ராதமயூகமண்டலப்ரகாஶமாநோதர திவ்யதாமநி ॥

---

களிலே அழுந்துகிறான். அவன் ஸ்வரூபத்தாலே அபரிச்சிந்நன்; இவள் போக்யதையாலே அபரிச்சிந்நை. (ஸதா தவைவோசிதயா) (268) "**तुल्यशीलवयोवृत्तां**" (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்றும், "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்றும் சொல்லுகிறபடியே தேவர் தமக்குத்தகுதியாயிருக்குமவள். (ஸதா) என்று பரவ்யூஹவிபவரூபேண உண்டான ஸர்வாவஸ்தைகளிலும் என்கிறது. "குணைந ரூபேண விலாஸசேஷ்டிதைஸ் ஸதா தவைவோசிதயா" என்னவுமாம். (தவ ஶ்ரியா) (269) "**विष्णोः श्रीः**" (விஷ்ணோஶ்ஶ்ரீ:) என்றும், "உன் திரு" என்றும் சொல்லுகிறபடியே அநந்யார்ஹையென்னுதல்; தேவர்க்கு ஸம்பத்தாயிருக்குமென்னுதல். 38.

* 39 & 40. பதவுரை:— தயா ஸஹ—அந்தப் பிராட்டியுடன்கூட, ப்ரக்ருஷ்ட விஜ்ஞாந பல ஏக தாமநி—மேலான ஞானத்திற்கும், ஶக்திக்கும் நிகரற்ற இருப்பிடமானவனும், பணா மணி வ்ராத மயூக மண்டல ப்ரகாஶமாந உதர திவ்ய தாமநி—தன் படங்களிலிருக்கும் மணி ஸமூஹங்களுடைய கிரண மண்டலங்களாலே ஒளிவிடும் மத்யப்ரதேஶத்தையுடைய (பகவானுடைய) திவ்யாந்த:புரத்தை உடையவனும், நிவாஸ ஶய்யா ஆஸந பாதுகா அம்ஶுக உபதாந வர்ஷாதப வாரண ஆதிபி:—(பகவானுக்கு) எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாகவும், கண்வளர்ந்தருளுகிற படுக்கையாகவும், ஸிம்ஹாஸநமாகவும், பாதுகையாகவும், திருப்பரியட்டமாகவும், அணையாகவும், மழைக்கும், வெயிலுக்கும் குடையாகவும், மற்றும் பலபடியாகவும் ஆகின்றவையாய், யதோசிதம்—அந்தந்த காலத்திற்குத் தக்கபடி, தவ ஶேஷதாம் கதை:—உனக்கு அடிமைப்பட்டவையான, ஶரீரபேதை:—பல ஶரீரங்களாலே, ஶேஷ: இதி ஜநை: ஈரிதே—ஶேஷன் என்று எல்லா ஜனங்களாலும் சொல்லப்படுபவனுமான, அநந்தபோகிநி—திருவனந்தாழ்வானுடைய திருமேனியில், ஆஸீநம்—எழுந்தருளியிருக்கிறவனாகவும்.

39. அவ:— (தயா ஸஹ) இதில் பர்யங்கவித்யையில் சொல்லுகிறபடியே திருவனந்தாழ்வான் மடியிலே பிராட்டியோடே எழுந்தருளியிருக்கிற சேர்த்தியை அநுபவிக்கிறார்.

வ்யா:— (தயா ஸஹாஸீநம்) (249) "**श्रिया सार्धं जगत्पतिरास्ते**" (ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதிராஸ்தே) என்கிறபடியே, நித்யவிபூதியில் மிதுனமாயிருந்திறே அடிமை கொள்வது. அவதாரத்திலும், (28) "**भवांस्तु सह वैदेह्या**" (பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா) என்னக் கடவதிறே. (அநந்தபோகிநி) ஶ்ரிய:பதித்வத்தால் வந்த உத்கர்ஷத்தோபாதியிறே இவனோட்டைச் சேர்த்தியும். (270) "**गन्धर्वाप्सरसः सिद्धास्सकिन्नरमहोरगाः। नान्तं गुणानां गच्छन्ति तेनानन्तोऽयमुच्यते॥**" (கந்தர்வாப்ஸரஸஸ் ஸித்தாஸ் ஸகிந்நரமஹோரகா: । நாந்தம் குணாநாம் கச்சந்தி தேநாநந்தோऽயமுச்யதே ॥) என்கிறபடியே குணாநந்த்யத்தாலே அநந்த

---

* இவ்விரண்டு ஶ்லோகங்களும் சேர்ந்தே பொருள்படுவதால் பதவுரை சேர்த்து எழுதப்பட்டது.

**निवासशय्यासनपादुकांशुकोपधानवर्षातपवारणादिभिः ।**
**शरीरभेदैस्तव शेषतां गतैर्यथोचितं शेष इतीरिते जनैः ॥ ४० ॥**

40. நிவாஸஶய்யாஸநபாதுகாம்ஶுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி: ।
ஶரீரபேதைஸ் தவ ஶேஷதாம் கதைர் யதோசிதம் ஶேஷ இதீரிதே ஜநை: ॥

னென்னக்கடவதிறே. ஈஶ்வரன் ரக்ஷணத்திலே அஸங்க்யாதகுணன். இவன் கைங்கர்யார்த்தமாக அஸங்யாதகுணன். (போகிநி) மென்மை, குளிர்ச்சி, நாற்றம் இவற்றை ஸ்வபாவமாக உடைய திருமேனியிலே. போகம்—ஶரீரம். (ப்ரக்ருஷ்டவிஜ்ஞாநபலைகதாமநி) இருவருமாய்ப் பரிமாறும்போது அவர்களுக்கும் ‡ படியான ஜ்ஞானஶக்த்யாதிகளுக்கு ஆஶ்ரயமாயிருக்குமவன். ஒருத்தன் என்று அவனுக்குக் கூசவேண்டாதே துகைத்துப் பரிமாறலாம்படியான தாரணஸாமர்த்யத்துக்கு ஆஶ்ரயமாயிருக்குமவன். (பணாமணீத்யாதி) தன்னுடைய பணாமணிஸமூஹங்களினுடைய ரஶ்மிமண்டலங்களினாலே ப்ரகாஶியாநின்ற மத்யத்தையுடைய திவ்யாந்த:புரத்தை உடையவன். * "மணி விளக்காம்" என்கிறபடியே, திவ்யாந்த:புரத்துக்கு மங்களதீபமாயிறே இருப்பது. 39.

40. அவ:— (நிவாஸ) திருவனந்தாழ்வானுடைய வ்ருத்திவிஶேஷங்களை அநுபவிக்கிறார். தமக்கு அடிமையிலுண்டான த்வரையாலே (271) "**उपमानमशेषाणां साधूनां**" (உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம்) என்னும் ந்யாயத்தாலே, அடிமையில் ருசியுடையார்க்கெல்லாம் உதாஹரணபூதமாயிறே திருவனந்தாழ்வானுடைய வ்ருத்திவிஶேஷங்களிருப்பது. இவனுடைய காஷ்டையை அருளிச்செய்கிறார்.

வ்யா:— (நிவாஸ) எழுந்தருளியிருக்கிற திருமாளிகையாம். (ஶய்யா) கண்வளர்ந்தருளுகைக்குப் படுக்கையாம். (ஆஸந) * "இருந்தால் சிங்காசநமாம்". (பாதுகா) * "நின்றால் மரவடியாம்". (அம்ஶுக) பும்ஸ்த்வாவஹமான திருப்பரியட்டமாம். (உபதாந) * "புல்கும் அணையாம்". (வர்ஷாதபவாரணாதிபி:) * "சென்றால் குடையாம்" என்கிறபடியே, வர்ஷத்துக்கும் ஆதபத்துக்கும் சத்ரமாம். § ஆதிஶப்தத்தாலே, அடிமையில் அபிநிவேஶாநுரூபமாக ஶரீரத்துக்குத் துகையில்லை; (267) "**स एकधा भवति**" (ஸ ஏகதா பவதி) என்று தொடங்கி, (267) "**सहस्रधा भवति**" (ஸஹஸ்ரதா பவதி) என்னக்கடவதிறே. (ஶரீரபேதை:) கைங்கர்யபேதமே ஶரீரபேதத்துக்கு ஹேது. (தவ ஶேஷதாம் கதை:) தேவருடைய விக்ரஹங்கள் ரக்ஷணஹேதுவாயிருக்கிறப்போலே, இவனுடைய விக்ரஹங்கள் ஶேஷத்வத்தை அடைந்திருக்கும் என்கை. (யதோசிதம்) (272) "**यदा यदा हि कौसल्या**" (யதா யதா ஹி கௌஸல்யா) என்கிறபடியே, தத்தத்காலோசிதமாயிருக்கை. (ஜநை: ஶேஷ இதீரிதே) சிறியார் பெரியாரென்னாதே ஸர்வராலும் ஶேஷனென்று சொல்லப்படுகை. ஶேஷத்வந்தான் ஒரு வடிவுகொண்டாற்போலே இருக்கை. (ஜநை:) "பெருமக்களுள்ளவர்" என்கிறபடியே நித்யஸித்தரைச் சொல்லவுமாம். (273) "**परगतातिशयाधानेच्छयोपादेयत्वमेव यस्य स्वरूपं स शेषः । परश्शेषी ॥**" (பரகதாதிஶயாதாநேச்சயோபாதேயத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ

‡ படியான—ஒப்பான. * முதல் திருவந்தாதி-53. § 'ஆதிஶப்தத்தாலே' என்பதுமுதல் 'என்னக்கடவதிறே' என்பதுவரை சில ஸ்ரீகோஶங்களில் இல்லை.

**दासस्सखा वाहनमासनं ध्वजो यस्ते वितानं व्यजनं त्रयीमयः ।**
**उपस्थितं तेन पुरो गरुत्मता त्वदङ्घ्रिसंमर्दकिणाङ्कशोभिना ॥ ४१ ॥**

41. தாஸஸ் ஸகா வாஹநமாஸநம் த்வஜோ யஸ்தே விதாநம் வ்யஜநம் த்ரயீமய: ।
உபஸ்திதம் தேந புரோ கருத்மதா த்வதங்க்ரிஸம்மர்த்தகிணங்கஶோபிநா ॥

---

ஶேஷ: । பரஶ் ஶேஷீ ॥) என்கிற ஶேஷத்வத்தின்படியே. (274) "**पारतन्त्र्यं परे पुंसि**" (பாரதந்த்ர்யம் பரே பும்ஸி) இத்யாதி. 40.

41. பதவுரை:— த்ரயீமய:—வேதங்களை அவயவங்களாகக்கொண்ட, ய:—எந்த கருடாழ்வான், தே—உனக்கு, தாஸ:—அடியவனும், ஸகா—நண்பனும், வாஹநம்—வாஹன மும், ஆஸநம்—ஸிம்ஹாஸனமும், த்வஜ:—கொடியும், விதாநம்—(வெயிலைப்போக்கும்) மேற் கட்டியும், வ்யஜநம்—சாமரமுமாக இருக்கின்றனனே, த்வத் அங்க்ரி ஸம்மர்த்த கிண அங்க ஶோபிநா—உன்னுடைய திருவடிகள் நெருக்கின தழும்பை அடையாளமாகக்கொண்டு சோபிப்பவனான, தேந கருத்மதா—அந்த கருடாழ்வானாலே, புர: உபஸ்திதம்—திருமுன்பே ஸேவிக்கப்பட்டவனாகவும்.

அவ:— (தாஸஸ்ஸகேதி) இதில், வாஹந த்வஜாதி ஸர்வவ்ருத்திகளையும் உடையனாய், ஈஶ்வரனுக்கு மோம்பழம்போலே ஸதா விரும்புப்படி அபிமதனாயிருக்கிற பெரிய திருவடி யோட்டைச் சேர்த்தியை அநுபவிக்கிறார்.

வ்யா:— (தாஸ:) தன்னுடைய வ்யாபாரங்களடங்க ஈஶ்வரனுக்கு அதிஶயத்தை விளக்குமவையாயிருக்கும். (ஸகா) ஜகத்வ்யாபாரங்களில் ஈஶ்வரன் தன்னோடே உசாவ வேண்டும்படியான பெருமையை உடையவன். (வாஹநம்) ஆஶ்ரிதருடைய ஆபத்துக்களிலே ஈஶ்வரனைக் கொடுவந்து சேர்க்குமவனாயிருக்கை. (ஆஸநம்) ஒரு கார்யமில்லாதபோது, ஸிம்ஹாஸநஸ்தனாயிருந்தாலோபாதி தன் மேன்மைக்கு ஸத்ருஶம் என்னும்படி ஸிம்ஹாஸந மாயிருக்கை. (த்வஜ:) ஈஶ்வரன் கிட்டுவதற்கு முன்னே, எழுந்தருளிநின்றான் என்று ஆஶ்ரிதர்க்கு ப்ரீதிஹேதுவான கொடியானவன். அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு ஹேதுவானவன் என்றுமாம். "பொன் மலையின் மீமிசைக் கார்முகில்போல்" என்றும், "புள்ளூர் கொடியான்" என்றுமுண்டான ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. (விதாநம்) "விநதை சிறுவன் சிறகென்னும் மேலாப்பின் கீழ் வருவான்" என்கிறபடியே ஆதபநிவாரண மாயிருக்கை. (275) "**गरुडं च ददर्शोच्चैरन्तर्धानगतं द्विज । कृतच्छायं हरेर्मूर्ध्नि पक्षाभ्यां पक्षिपुङ्गवम् ॥**" (கருடஞ்ச ததர்ஶோச்சைரந்தர்த்தாநகதம் த்விஜ । க்ருதச்சாயம் ஹரேர் மூர்த்நி பக்ஷாப்யாம் பக்ஷிபுங்கவம் ॥) இதி பராஶர:. (வ்யஜநம்) தன்னை மேற்கொண்டு போம்போது சாமரங்கள் போலே திருச்சிறகாலே ஆஶ்வாஸகனாயிருக்கை. (த்ரயீமய:) (276) "**त्रिवृत्ते शिरः । गायत्रं चक्षुः ।**" (த்ரிவ்ருத் தே ஶிர: । காயத்ரம் சக்ஷு: ।) என்கிறபடியே, வேதங்களை அவயவங் களாக உடையனாயிருக்கை. 'அவயவார்த்தே மயட்'. ஈஶ்வரன் வேதப்ரதிபாத்யன்; இவன் வேதஶரீரன். (தேந கருத்மதா புர: உபஸ்திதம்) ஸர்வேஶ்வரன் தன்னை ப்ரகாஶிப்பிக்கும் நிலைக்கண்ணாடிபோலேயும், மோம்பழம்போலேயும், திருமுன்பே ஸர்வதா ஸந்நிஹிதனா யுள்ளவன். (த்வதங்க்ரிஸம்மர்த்தகிணங்கஶோபிநா) தன்னை மேற்கொண்டால் திருவடிகளாலே

त्वदीयभुक्तोज्झितशेषभोजिना त्वया निसृष्टात्मभरेण यद्यथा ।
प्रियेण सेनापतिना न्यवेदि तत्तथाऽनुजानन्तमुदारवीक्षणैः ॥ ४२ ॥

42. த்வதீயபுக்தோஜ்ஜிதஶேஷபோஜிநா த்வயா நிஸ்ருஷ்டாத்மபரேண யத்யதா ।
ப்ரியேண ஸேநாபதிநா ந்யவேதி தத் ததாऽநுஜாநந்தமுதாரவீக்ஷணை: ॥

---

நெருக்கின தழும்பு தனக்கு போகசிஹ்நமாகையாலே அத்தாலே விளங்காநிற்குமவன். ஈஶ்வரனுக்கு ஸ்ரீகௌஸ்துபம் லக்ஷணமானாற்போலே இவனுக்கும் அது தாஸ்யசிஹ்நமாயிருக்கும். 41.

42. பதவுரை:— த்வதீய புக்த உஜ்ஜித ஶேஷ போஜிநா—உன்னுடைய உண்டு மிகுந்த சேஷத்தை உண்பவனும், த்வயா—உன்னாலே, நிஸ்ருஷ்ட ஆத்மபரேண—வைக்கப்பட்ட உன்னுடைய (உபயவிபூதி நிர்வாஹரூபமான) பாரத்தை உடையவனும், ப்ரியேண—(எல்லாருக்கும்) அன்பனுமான, ஸேநாபதிநா—விஷ்வக்ஸேனராலே, யத் யதா ந்யவேதி—எந்தக் காரியம் எம்மாதிரி விண்ணப்பம் செய்யப்பட்டதோ, உதாரவீக்ஷணை:—அருள் நிரம்பிய கடாக்ஷங்களாலே, தத் ததா அநுஜாநந்தம்—அந்தக் காரியத்தை அம்மாதிரியே (செய்வதென்று) நியமித்தருளுகிறவனாகவும்.

அவ:— (த்வதீய) உபயவிபூதிவிஷயமான தன்னுடைய ஸர்வபரத்தையும் இவன் பக்கலிலே வைத்து இவனிட்ட வழக்காயிருக்கிற ஸ்ரீஸேநாபதியாழ்வானுடைய தாஸ்ய ஸாம்ராஜ்யத்தை அனுபவிக்கிறார்.

வ்யா:— (த்வதீயேதி) தேவர் அமுதுசெய்து கைவாங்கின ப்ரஸாதத்தாலே தரிக்குமவராயிருக்கை. 'த்வதீய' என்கையாலே வகுத்த ஸ்வாமியுடைய ஶேஷமே போஜ்யம் என்கிறது. (277) "यदुच्छिष्टमभोज्यं" (யதுச்சிஷ்டமபோஜ்யம்) என்கையாலே அல்லாதாருடைய உச்சிஷ்டம் அபோஜ்யமென்கை. 'புக்தோஜ்ஜிதம்' என்கையாலே, "கலத்ததுண்டு" என்கிறபடியே, அமுதுசெய்து கைவாங்கின பின்புற்றையதே போஜ்யம்; முன்பு பாத்ரஶேஷமே அபோஜ்யம் என்கிறது. (ஶேஷபோஜிநா) தனக்கு தாரகமாயிருக்குமளவன்றிக்கே (278) "रसान् भक्तस्य जिह्वायां" (ரஸாந் பக்தஸ்ய ஜிஹ்வாயாம்) என்கிறபடியே ஈஶ்வரனுக்கு போக்யமாவதும் ஆழ்வார் அமுதுசெய்தால் என்கை. (த்வயா நிஸ்ருஷ்டாத்மபரேண) நம்மிலும் பெரியவன்; ஸமர்த்தன் என்று தேவராலே தன் பக்கலிலே வைக்கப்பட்ட உபயவிபூதி ரூபமான பரத்தை உடையவனாலே. (ப்ரியேண) ஸர்வாபிமதனானவனாலே. (ஸேநாபதிநா) ஸர்வஸேநாநிர்வாஹகனாலே. "அசைவில் அமரர் தலைவர் தலைவா" என்னக்கடவதிறே. (யத் யதா ந்யவேதி) யாதொரு கார்யம் யாதொருபடி விண்ணப்பம் செய்யப்பட்டது. இதில் உள்மானம், புறமானம் பார்ப்பதில்லை; செய்யும் ப்ரகாரங்களும் அனுஸந்திப்பதுமில்லை; ஈஶ்வரன் இவன் உக்தியைப் பின்செல்லுமத்தனை. (உதாரவீக்ஷணைஸ்தத் ததாநுஜாநந்தம்) (114) "अवलोकनदानेन भूयो मां पालयाच्युत" (அவலோகநதாநேந பூயோ மாம் பாலயாச்யுத) என்றும், "உயிர்க்கெல்லாம் தாயாய் அளிக்கின்ற தண்டாமரைக்கண்ணன்" என்றும் சொல்லுகிறபடியே, அநவதிகதயாஸௌஹார்த்தாநுராககர்ப்பமான இக்கடாக்ஷங்களாலேயாயிற்று, 'இவன் இப்படிச் செய்வது' என்று நினைப்பிடுவது. 42.

हताखिलक्लेशमलैः स्वभावतस्सदानुकूल्यैकरसैस्तवोचितैः ।
गृहीततत्तत्परिचारसाधनैर्निषेव्यमाणं सचिवैर्यथोचितम् ॥ ४३ ॥

43. ஹதாகிலக்லேஶமலை: ஸ்வபாவதஸ் * ஸதாநுகூல்யைகரஸைஸ் தவோசிதை: ।
க்ருஹீததத்தத்பரிசாரஸாதநைர் நிஷேவ்யமாணம் ஸசிவைர் யதோசிதம் ॥

---

43. பதவுரை:— ஹத அகில க்லேஶ மலை:—எல்லா க்லேசங்களும், (ப்ரக்ருதிஸம்பந்தமாகிய) மலமும் அற்றவர்களாயும், ஸ்வபாவத:—இயற்கையாகவே, * ஸதா ஆநுகூல்ய ஏக ரஸை:—எப்போதும் (உன்னுடைய) கைங்கர்யத்தையே போக்யமாக உடையவர்களாயும், தவ உசிதை:—உனக்குத் தகுந்தவர்களாயும், க்ருஹீத தத் தத் பரிசார ஸாதநை:—அந்தந்த கைங்கர்யங்களுக்கு ஸாதனங்களான (மாலைகள், தூபம், தீபம் முதலியவைகளை) தரித்திருப்பவர்களாயும், ஸசிவை:—உனக்கு முறையுணர்த்தி அடிமை செய்பவர்களாயுமிருக்கும் நித்யஸூரிகளாலே, யதோசிதம்—ஸ்வரூபத்துக்குத்தக்கபடி, நிஷேவ்யமாணம்—ஸேவிக்கப்படுகிறவனாகவும்.

அவ:—(ஹதாகிலேதி) (113) "**सदा पश्यन्ति सूरयः**" (ஸதா பஶ்யந்தி ஸூரய:) இத்யாதிகளில் சொல்லுகிற நித்யஸூரிகளுடைய தாஸ்யைகஸம்ருத்தியை அநுபவிக்கிறார். "அடியார்கள் குழாங்களை—உடன் கூடுவதென்றுகொலோ" என்றிறே இவர் ப்ரார்த்தனை.

வ்யா:—(ஹதாகிலக்லேஶமலை:) (279) "**अविद्यास्मिताभिनिवेशरागद्वेषाः पञ्चक्लेशाः**" (**அவித்யாஸ்மிதாபிநிவேஶராகத்வேஷா: பஞ்ச க்லேஶா:**) என்கிறவை க்லேஶங்கள். அவற்றினுடைய ‡ ப்ராகபாவத்தை உடையவர்களென்கை. இத்தால் † பத்தவ்யாவ்ருத்தி சொல்லுகிறது. மலமென்று ப்ரக்ருதியாய், தத்ஸம்ஸர்க்காநர்ஹதயா வந்த ‡ ப்ராகபாவத்தை உடையவர்கள் என்கை. இத்தால் ப்ரபுத்தஸ்வபாவயுக்தரான முக்தவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. (ஸ்வபாவதஸ் * ஸதாநுகூல்யைகரஸை:) ஸத்தாப்ரயுக்தமாக தேவர் திருவடிகளில் கைங்கர்யத்தையே போக்யமாக உடையராயிருக்கை. இத்தாலும், ஒரு நாள் துடங்கி அடிமை செய்யத் துடங்கின முக்தவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. (தவோசிதை:) ஸ்வரூபரூப குணங்களாலே தேவருக்கு ஸத்ருஶலக்ஷணரானவர்கள். (க்ருஹீதேத்யாதி) கைங்கர்யோசித பரிகரங்களை ஆதராதிஶயத்தாலே விடமாட்டாமையாலே § 'சூட்டுநன் மாலை'ப்படியே தரித்திருக்கையாலே, தேவர்க்கே ஸத்ருஶரானவர்களாலே ஸேவிக்கப்படாநின்றுள்ள உன்னை. (ஸசிவை:) வாத்ஸல்யத்தாலே அவன் முறையழியப் பரிமாறநினைத்தாலும், அவனை முறையுணர்த்தி அடிமைசெய்யுமவர்கள்; 'நீதி வானவ'ரிறே. ஆஶ்ரிதரக்ஷணத்தில் தேவரை ப்ரேரிக்குமவர்களிறே. (யதோசிதம்) ஸ்வரூபாநுரூபமாக என்னுதல்; அவஸரோசிதமாக என்னுதல். 43.

44. பதவுரை:— அபூர்வ நாநாரஸ பாவ நிர்ப்பர ப்ரபத்தயா—(க்ஷணந்தோறும்) புதிதாயிருக்கும் பலவகை ரஸங்களாலும் நெருங்கிச் சேர்ந்திருப்பதும், க்ஷண அணுவத் க்ஷிப்த பர ஆதி காலயா—கணநேரத்தில் ஒரு பகுதிபோல் கழிக்கப்பட்ட (பிரமனின்

---

* 'த்வதாநுகூல்யைக' என்றும் பாடமுண்டு. ‡ ப்ராகபாவம்—முன் எப்பொழுதும் இல்லாதிருத்தல். † பத்தவ்யாவ்ருத்தி—ஸம்ஸாரிகளைக்காட்டிலும் வேறுபாடு. § திருவிருத்தம்-21.

**अपूर्वनानारसभावनिर्भरप्रबद्धया मुग्धविदग्धलीलया ।**
**क्षणाणुवत्क्षिप्तपरादिकालया प्रहर्षयन्तं महिषीं महाभुजम् ॥ ४४ ॥**

44. அபூர்வநாநாரஸபாவநிர்ப்பரப்ரபத்தயா முக்த்தவிதக்த்தலீலயா ।
க்ஷணாணுவத் க்ஷிப்தபராதிகாலயா ப்ரஹர்ஷயந்தம் மஹிஷீம் மஹாபுஜம் ॥

ஆயுட்காலமாகிய) பரகாலம் முதலியவற்றை உடையதுமான, முக்த்த விதக்த்த லீலயா— அழகியதாகவும், ஸாமர்த்யத்துடன் கூடியதாகவுமிருக்கும் விளையாட்டாலே, மஹிஷீம்— பெரிய பிராட்டியை, ப்ரஹர்ஷயந்தம்—ஸந்தோஷப்படுத்துகிறவனாகவும், மஹாபுஜம்—(பெரிய பிராட்டியாரை அணைக்கத் தகுந்த) பெரிய கைகளை உடையவனாகவும்.

அவ:— (அபூர்வேதி) (28) "**भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते**" (பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே) என்கிறபடியே, பிராட்டியை நாநாரஸங்களாலே உகப்பிக்கும்படியை அநுபவிக்கவேண்டும் என்கிறார்.

வ்யா:— (அபூர்வ) ப்ரதிக்ஷணமும் முன்பு கண்டறியாததுபோலே இருக்கை. (நாநாரஸபாவநிர்ப்பர) பஹுமுகமான ரஸத்தாலும், பாவத்தாலும் நெருங்கும்படி. (ப்ரபத்தயா) ஸம்பத்தயா. ரஸமாவது:— சேதனர் யாதொன்றை அநுஸந்தியாநின்றாலும் (280) "**येन माद्यति**" (யேந மாத்யதி) என்கிறபடியே மதியாநிற்பர்,—அதிறே ரஸம். அதுக்கு அடி பாவம்,—மாநஸவிகாஸம். (முக்த்தவிதக்த்தலீலயா) அவ்வோ தசாநுகுணமாய், முக்த்தமாயும், விதக்த்தமாயும் உள்ள லீலையாலே. (க்ஷணாணுவத்க்ஷிப்தபராதிகாலயா) ஒரு க்ஷணத்தில் ஏகதேசம்போலே போக்கப்பட்ட பரகாலம், பரார்த்தகாலம் இவற்றை உடைத்தாயிருக்குமதினாலே. பரகாலமாகிறது:—ப்ரஹ்மாயுஸ்ஸு; பரார்த்தகாலமாகிறது:— அதில் செம்பாதி. (மஹிஷீம் ப்ரஹர்ஷயந்தம்) (281) "**यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना**" (யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நிரயோ யஸ் த்வயா விநா), (282) "**त्वद्वियोगेन मे राम त्यक्तव्यमिह जिवितं**" (த்வத்வியோகேந மே ராம த்யக்தவ்யமிஹ ஜீவிதம்), (283) "**सर्वथा तेन हीनाया रामेण विदितात्मना। तीक्ष्णं विषमिवास्वाद्य दुर्लभं मम जीवितम् ॥**" (ஸர்வதா தேந ஹீநாயா ராமேண விதிதாத்மநா । தீக்ஷ்ணம் விஷமிவாஸ்வாத்ய துர்லபம் மம ஜீவிதம் ॥), "அகலகில்லேன் இறையும்" என்கிறபடியே வ்யதிரேகத்தில் ஆற்றமாட்டாத பிராட்டியை மிகவும் உகப்பியாநின்றுள்ளவனை. "ப்ரஹர்ஷயந்தம்" என்கையாலே இவ்வுகப்பு நித்யம் என்கை. (மஹாபுஜம்) கீழ்ச்சொன்ன லீலாரஸத்தாலே உகப்பிக்குமவனோபாதியன்று; 'அணி மானத் தடவரைத்தோளாலே' அணைத்து உகப்பிக்கும். என்றும் ஸ்வரூபகுணங்களைக்காட்டில் ரூபகுணமிறே இனிதாயிருப்பது. 44.

45. பதவுரை:— அசிந்த்ய திவ்ய அத்புத நித்ய யௌவந ஸ்வபாவ லாவண்ய மய அம்ருத உததிம்—நினைக்கமுடியாததாய், அப்ராக்ருதமாய், ஆச்சர்யமாய், நித்யமாயிருக்கும் யௌவனத்தை இயற்கையாக உடையவனாகவும், அழகு நிறைந்த அமுதக் கடலாகவும், ஸ்ரிய: ஸ்ரியம்—திருவுக்கும் திருவாகவும், பக்த ஜந ஏக ஜீவிதம்—பக்தஜநங்களுக்கு ஒருயிராகவும், ஸமர்த்தம்—(ஞானத்தினால் குறைந்தவர்களையும் கொஞ்சம் கொஞ்சமாகத் தன்னை அநுபவிக்கவல்ல) ஸாமர்த்யத்தை உடையவனாகவும், ஆபத் ஸகம்—ஆபத்திலுதவும் நண்பனாகவும், அர்த்தி கல்பகம்—யாசிப்பவர்களுக்குக் கல்பகவ்ருக்ஷம்போன்றவனாகவும்இருக்கிற.

अचिन्त्यदिव्याद्भुतनित्ययौवनस्वभावलावण्यमयामृतोदधिम् ।
श्रियः श्रियं भक्तजनैकजीवितं समर्थमापत्सखमर्थिकल्पकम् ॥ ४५ ॥

45. அசிந்த்யதிவ்யாத்புதநித்யயௌவநஸ்வபாவலாவண்யமயாம்ருதோததிம் ।
ஶ்ரிய: ஶ்ரியம் பக்தஜநைகஜீவிதம் ஸமர்த்தமாபத்ஸகமர்த்திகல்பகம் ॥

அவ:— (அசிந்த்யேதி) இப்படிப் பிராட்டியை உகப்பிக்கிற ரஸபாவங்களுக்கு ஆஶ்ரயமான வடிவையும், குணங்களையும் அநுஸந்திக்கிறார்.

வ்யா:— (அசிந்த்ய) விக்ரஹகுணங்களுடைய அவாங்மநஸகோசரத்வத்தைச் சொல்லுகிறது. (திவ்ய) (159) **"न भूतसङ्घसंस्थानो देहोऽस्य परमात्मनः"** (ந பூதஸங்கஸம்ஸ்தாநோ தேஹோऽஸ்ய பரமாத்மந:) என்கிறபடியே அப்ராக்ருதமாயிருக்கை. (அத்புத) க்ருஹீதாம்ஶம் ஆஶ்சர்யமாயிருக்கை. "முழுசி வண்டாடிய தண்டுழாயின் மொய் மலர்க்கண்ணி" என்கிறபடியே இருக்கை. (நித்ய) அகாலகால்யத்வத்தைச் சொல்லுகிறது. (யௌவந ஸ்வபாவ) (284) **"युवा कुमारः"** (யுவா குமார:) என்கிறபடியே இருக்கை. (285) **"तरुणौ रूपसंपन्नौ"** (தருணௌ ரூபஸம்பந்நௌ) என்கிற ஶ்லோகத்தின்படியே ஸ்வாபாவிகமான யௌவனத்தை உடைத்தாயிருக்கை. (லாவண்யமய) ப்ரசுரமான ஸாமாந்யஶோபையை உடைத்தாயிருக்கை. (அம்ருதோததிம்) ஸர்வப்ரகாரயோக்யதையாலே, (286) **"अप्रमेयो महोदधिः"** (அப்ரமேயோ மஹோததி:) என்கிறபடியே பரிச்சேதிக்கப்போகாமைக்கு ஒரு ஸமுத்ரமென்னுமத்தனை. (ஶ்ரிய: ஶ்ரியம்) "திருவுக்கும் திருவாகிய செல்வன்" என்கிறபடியே பிராட்டிக்கு மங்களாவஹனாயிருக்குமவனை. (பக்தஜநைகஜீவிதம்) "எல்லாம் கண்ணன்" என்கிறபடியே, ஆஶ்ரிதருக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவனை. பக்தஜநங்களையே தனக்கு தாரகமாக உடையவன் என்றுமாம். (287) **"मम प्राणा हि पाण्डवाः"** (மம ப்ராணா ஹி பாண்டவா:). (ஸமர்த்தம்) அளவுடையரான நித்யஸூரிகள் அநுபவிக்குமவனை, நித்யஸம்ஸாரிகள் அநுபவிக்கும்படி "ஆற்ற நல்ல வகை காட்டுமம்மானை" என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்யத்தையுடைய உன்னை. (ஆபத்ஸகம்) காணவாராயென்று கண்ணும் வாயும் துவர்ந்தவளவிலே உதவும் ஸ்வபாவனான உன்னை. (அர்த்திகல்பகம்) "என்னையாக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த கற்பகம்" என்கிறபடியே தன்னை ஔதார்யம் பண்ணுமவனை. 45.

46. பதவுரை:— பவந்தமேவ—உன்னையே, நிரந்தரம்—இடைவிடாமல், அநுசரந்—அநுஸரித்துக்கொண்டு, ப்ரஶாந்த நிஶ்ஶேஷ மநோரதாந்தர:—மற்ற எல்லா ஆசைகளும் வாஸனையுமில்லாமல் நீங்கப்பெற்றவனாய், ஐகாந்திக நித்ய கிங்கர:—ஒருபடிப்பட்டதாய் நித்யமான கைங்கர்யத்தை உடையவனாய், ஸநாத ஜீவித:—ப்ரயோஜனத்துடன் கூடிய வாழ்வை உடையவனாய், கதா அஹம் ப்ரஹர்ஷயிஷ்யாமி—என்று நான் (உன்னையே) மிகவும் உகப்பிக்கப் போகிறேன்?

அவ:— (பவந்தமித்யாதி) கீழ்ச்சொன்ன ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் பூர்ணனாய், நித்யவிபூதியிலே குறைவற எழுந்தருளியிருக்கிற தேவரை பாஹ்யமநோரதங்களைத் தவிர்த்து,

भवन्तमेवानुचरन्निरन्तरं प्रशान्तनिश्शेषमनोरथान्तरः।
कदाहमैकान्तिकनित्यकिंकरः प्रहर्षयिष्यामि सनाथजीवितः॥ ४६॥

46. பவந்தமேவாநுசரந் நிரந்தரம் ப்ரஶாந்தநிஶ்ஶேஷமநோரதாந்தர:।
கதாऽஹமைகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி ஸநாதஜீவித:॥

என்னுடைய ஸத்தையாலுள்ள ப்ரயோஜனம் பெறும்படி நித்யகைங்கர்யத்தாலே உகப்பிப்பது என்று? என்கிறார்.

வ்யா:— (பவந்தம்) ஸ்வரூபரூபகுணவிபவை: பரிபூர்ணம். * "இன்பம் பயக்க" என்று துடங்கி, * "ஆள்கின்ற எங்கள் பிரான்" என்கிற பூர்த்தியைச் சொல்லுகிறது. (ஏவ) "தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே" என்கிறபடியே, அநுகூலவ்ருத்தி தேவருக்கே அநுகூலமாயிருக்கை. (அநுசரந்) (25) "**येन येन धाता गच्छति**" (யேந யேந தாதா கச்சதி), (288) "**एतमानन्दमयमात्मानमुपसंक्रम्य**" (ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ரம்ய), (289) "**अनुसञ्चरन्**" (அநுஸஞ்சரந்), (204) "**कुरुष्व मामनुचरं**" (குருஷ்வ மாமநுசரம்) என்கிறபடியே அநுவர்த்தனத்தையுடையனாய். (நிரந்தரம்) இடைவிடாதேயிருக்கை. (ப்ரஶாந்தேத்யாதி) "மற்றை நம் காமங்கள் மாற்று" என்று, தேவரையொழிந்த விஷயங்களில் மநோவ்யாபாரங்களை ஸவாஸநமாகத் தவிர்த்து. (கதா) "என்று கொல் கண்கள் காண்பது?" "எந்நாள் யான் உன்னை இனி வந்து கூடுவன்?" என்னும்படியே காலத்துக்கு எல்லை அருளிச்செய்ய வேணும். (அஹம்) ருசியேயாய், இத்தலையால் உபாயமில்லாத நான். (ஐகாந்திகநித்யகிங்கர:) ஏகரூபமாய், யாவதாத்மபாவியான கைங்கர்யரூபமாக உடையனாய். (ஸநாதஜீவித:) ஸநாதமான ஸத்தையை உடையனாய்; என் ஸத்தையை ஸப்ரயோஜனமாக்கி என்கை. (ப்ரஹர்ஷயிஷ்யாமி) மிகவும் உகப்பிக்கக்கடவேன். தன்னுடைய அநுவ்ருத்தியால் ஈஶ்வரனுக்குப் பிறந்த ப்ரஹர்ஷமிறே சேதனனுக்கு ப்ராப்யம். 46.

47. பதவுரை:— பரமபுருஷ—புருஷோத்தமனே!, காமவ்ருத்த: ய: அஹம்—(என்னுடைய) இஷ்டப்படியெல்லாம் நடக்கிறவன் என்று ப்ரஸித்தனான யாவனொரு நான், யோகிவர்ய அக்ரகண்யை:—யோகிஶ்ரேஷ்டர்களுள் முதல்வராக எண்ணத்தகுந்த, விதி ஶிவ ஸநக ஆத்யை:—பிரமன், சிவன், ஸநகர் முதலியவர்களாலும், த்யாதும்—நினைப்பதற்கும், அத்யந்த தூரம்—வெகுதூரமாயுள்ள, தவ பரிஜநபாவம்—உன்னுடைய கைங்கர்யத்தை, காமயே—விரும்புகிறேனோ, அஶுசிம்—அபரிசுத்தனும், அவிநீதம்—(ஓர் ஆசார்யனாலே) ஶிக்ஷிக்கப்படாதவனும், நிர்த்தயம்—தயையற்றவனும், அலஜ்ஜம்—வெட்கமற்றவனுமான, (தம்) மாம் திக்—அப்படிப்பட்ட என்னை நிந்தித்துக்கொள்ளவேண்டும்.

அவ:— (திகிதி) இதில், ப்ராப்யனான ஈஶ்வரனுடைய வைலக்ஷண்யத்தையும், தம்முடைய பூர்வவ்ருத்தத்தையும் பார்த்து, விதிஶிவஸநகாதிகளுடைய மனஸ்ஸுக்கு அத்யந்ததூரமாய், அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகள் ஆசைப்படுமதான கைங்கர்யத்தை ஸம்ஸாரியானவன் ஆசைப்படுவதாவதென்? ராஜாந்நம் விஷஸம்ஸ்ப்ருஷ்டமாவதே! என்று § "வளவேழுலகில்" ஆழ்வாரைப்போலே தம்மை நிந்திக்கிறார்.

* திருவாய்மொழி (7-10-1). § திருவாய்மொழி (1-5).

धिगशुचिमविनीतं निर्दयं मामलज्जं परमपुरुष ! योऽहं योगिवर्याग्रगण्यैः ।
विधिशिवसनकाद्यैर्ध्यातुमत्यन्तदूरं तव परिजनभावं कामये कामवृत्तः ॥ ४७ ॥

47. திகஶுசிமவிநீதம் நிர்த்தயம் மாமலஜ்ஜம் பரமபுருஷ! யோऽஹம் யோகிவர்யாக்ரகண்யை: ।
விதிஶிவஸநகாத்யைர் த்யாதுமத்யந்ததூரம் தவ பரிஜநபாவம் காமயே காமவ்ருத்த: ॥

---

வ்யா:— (அஶுசிம்) அநாதியான தேஹஸம்பந்தயுக்தனை என்னை. தேஹஸம்பந்தாபாவம் ஸத்தாப்ரயுக்தமான நித்யஸித்தரிறே நித்யஶுத்தர். (அவிநீதம்) இவ்வாத்மாவுக்கு தேஹஸம்பந்தம் அஶுசிஹேது என்று அறிகைக்கு அடியான ஆசார்யஸேவையில்லாமையாலே ஸுஶிக்ஷிதனல்லாத என்னை. (நிர்த்தயம்) அம்ருதத்தை விஷத்தாலே தூஷித்தாற்போல, விலக்ஷணபோக்யமான பகவத்தத்வத்தைக் கண்ணற்று தூஷிக்கப் பார்த்த நிர்த்தயனை. (அலஜ்ஜம்) 'கடதாவஸி ஸார்வபௌமனை மேல் விழுமாப்போலே, நம்மைப் பாராதே மேல் விழுந்தோம்; இது அபஹாஸ்யம்' என்று லஜ்ஜிக்கவும் அறியாத என்னை. (மாம் திக்) இப்படி ஹேயகுணபூர்ணனை என்னை வேண்டேன் என்று தம்மை குத்ஸிக்கிறார். (பரமபுருஷ) ஸர்வாதிகனை புருஷோத்தமனே! (யோஹம்) நிஹீநாக்ரகண்யன் என்று ப்ரஸித்தனை நான். (யோகிவர்யேத்யாதி) யோகிஶ்ரேஷ்டரில் ப்ரதமகண்யரான ப்ரஹ்மருத்ராதிகளென்ன, ப்ரஹ்மபாவநாநிஷ்டரான ஸநகாதிகளென்ன, இவர்களாலே நினைக்கைக்கும் அத்யந்தம் தூரமாயுள்ளத்தை. (தவ பரிஜநபாவம்) ஆத்மஸ்வாமியாய் நிரதிஶயபோக்யரான தேவருடைய கைங்கர்யாம்ருதத்தை; ஸத்தாப்ரயுக்தமான ருசியையும், வைலக்ஷண்யத்தையுமுடைய நித்யஸூரிகள் ஆதரிக்குமத்தையன்றோ நான் ஆதரித்தது. (காமயே) ஸங்கத்தளவிலே நின்றேனோ? பெற்றல்லது தரியாத தஶையைப்பற்றி நின்றேன். "கதா நு ஸாக்ஷாத்கரவாணி" என்றும், "கதா ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்றும் கூப்பிட்டேன். (காமவ்ருத்த:) விஷயப்ரவணனாய் யுக்தாயுக்தங்கள் பாராதாப்போலே, தோற்றிற்றுச் செய்த நான். ராகம் ஸ்வரூபத்தைப் பார்க்கவொட்டாதிறே. 47.

48. பதவுரை:— ஹரே!— துக்கங்களையெல்லாம் போக்கும் எம்பிரானே!, அபராத ஸஹஸ்ர பாஜநம்— கணக்கற்ற குற்றங்களுக்கு இருப்பிடமாகவும், பீம பவ அர்ணவ உதரே— பயங்கரமான ஸம்ஸாரமாகிய கடலினுள், பதிதம்— விழுந்தவனாகவும், அகதிம்— (உன்னையொழிய வேறு) கதியற்றவனாகவும், ஶரணாகதம்— 'ஶரணாகதன்' என்று சொல்லிக்கொள்ளுமவனாகவுமிருக்கிற அடியேனை, கேவலம் க்ருபயா— (உன்) அருளினாலேயே, ஆத்மஸாத் குரு— உன்னுடையவனாகக் கொள்வாயாக.

அவ:— (அபராத) தம்முடைய அயோக்யதையை அநுஸந்தித்து அகலப்பார்த்தவர் ருசியின் மிகுதியாலே அகலமாட்டாதே நிற்க, 'இந்த அயோக்யதைக்குப் பரிஹாரமும் நம் க்ருபாஜநிதமான ப்ரபத்தியே காணும்' என்ன மீண்டாராய், இந்த அயோக்யதாஹேதுபூத ஸர்வாபராதங்களுக்கும் பரிஹாரம் தன்னுடைய வெறுமையை முன்னிட்டுப் பண்ணும் ப்ரபத்தியேயாகாதே என்று வேதாந்தரஹஸ்யத்தை முன்னிட்டு, 'கேவலக்ருபையாலே தேவர் என் பாபத்தைப் போக்கி விஷயீகரிக்கவேணும்' என்கிறார். அதவா, தாம் ப்ரார்த்தித்தபோதே ப்ராப்யம் ஸித்தியாமையாலே, 'ஸம்ஸாரியான நாம் ஆசைப்பட்டக்கடவோமோ?' என்று

अपराधसहस्रभाजनं पतितं भीमभवार्णवोदरे ।
अगतिं शरणागतं हरे ! कृपया केवलमात्मसात्कुरु ॥ ४८ ॥

48. அபராதஸஹஸ்ரபாஜநம் பதிதம் பீமபவார்ணவோதரே ।
அகதிம் ஶரணாகதம் ஹரே ! க்ருபயா கேவலமாத்மஸாத் குரு ॥

---

நிந்தித்துக்கொண்டு, பின்பும் ருசியாலே அகலமாட்டாதே, 'இப்படி விளம்பிக்கைக்கு ஹேதுவான பாபத்தையும் தேவருடைய கேவலக்ருபையாலே போக்கித்தந்தருளவேணும்' என்கிறாராகவுமாம். அத்தலையில் பெருமையின் எல்லையைப் பார்த்து அகன்றார் அங்கு; இங்கு நீர்மையின் எல்லையைப் பார்த்துக் கிட்டுகிறார்.

வ்யா:— (அபராதஸஹஸ்ரபாஜநம்) தேவர் குணைகபாஜநரானாப்போலே, அஸங்குசிதமான அபராதங்களுக்குக் கொள்கலமான என்னை. அபராதஶப்தத்தாலே சொல்லிற்று,— புண்யபாபரூபமான பகவந்நிக்ரஹாநுக்ரஹமென்கை. ஆகையால் இந்த வேதார்த்தத்தை வெளியிடுகிறார். (பதிதம்) அந்தப் பாபத்தை விளைக்கும் ஸம்ஸாரத்திலேயிருந்திறே கூப்பிடுகிறது. "கொடுவினைத் தூற்றுள் நின்று". (பீம) ஜ்ஞாநம் பிறந்தார்க்குக் கட்டடங்க பயாவஹமாயிருக்குமென்கை. (290) "अहं भीतोऽस्मि देवेश संसारेऽस्मिन् भयावहे" (அஹம் பீதோऽஸ்மி தேவேஶ ஸம்ஸாரேऽஸ்மிந் பயாவஹே). (பவார்ணவ) பரிச்சேதிக்க அரிதாய், அத்தாலே துஸ்தரமாயிருக்கை. ஸம்ஸாரமாகிற கடலிலே புக்கார்க்கு, விஷ்ணுபோத மொழியத் தந்தாமால் கரையேறவொண்ணாதிருக்கை. "வைகுந்தனென்பதோர் தோணி பெறாதுழல்கின்றேன்" என்னக்கடவதிறே. (உதரே) "நின் பன்மாமாயப் பல் பிறவியில் படிகின்ற யான்" என்கிறபடியே, எடுக்கப்பார்த்தாலும் உனக்கும் எட்டாதபடியாயிருக்கை. (பதிதம்) கர்மம் புகத்தள்ள விழுந்து கிடக்கிறபடி. (அகதிம்) உன்னையொழிய வேறு புகலற்று இருக்கிற என்னை. (ஶரணாகதம்) ஶரணாகதஶப்தயுக்தனான என்னை. (ஹரே) மித்ரபாவமேயடியாக ஸமஸ்த து:க்கங்களையும் போக்குகையே ஸ்வபாவமாக உடையவனே! (கேவலம் க்ருபயா) ஆர்த்தப்ரபந்நனல்லன் என்னாதே (291) "कृपामात्रमनोवृत्तिः" (க்ருபாமாத்ரமநோவ்ருத்தி:) என்கிறபடியே, ஸஹகாரமில்லாத க்ருபையினாலே. (ஆத்மஸாத் குரு) ஆத்மஸாத்தாகப் பண்ணியருளவேணும். நம்முடையவனென்று விஷயீகரித்தருளவேணும். 48.

49. பதவுரை:— பகவந்!—ஜ்ஞாநஶக்த்யாதிகுணங்கள் நிறைந்தவனே!, அச்யுத!— அடியவரைக் கைவிடாதவனே!, அவிவேக கந அந்த திங்முகே—விவேகமில்லாமையாகிற மேகங்களாலே இருளடைந்த திசைகளை உடையதும், பஹுதா—பலவிதமாக, ஸந்தத து:க்க வர்ஷிணி—இடைவிடாமல் துன்பங்களைப் பொழிகின்றதுமான, பவ துர்த்திநே—ஸம்ஸாரமாகிய மழைக்கால இருளிலே, பத: ஸ்கலிதம்—நல்வழியிலிருந்து தவறின, மாம்— அடியேனை, அவலோகய—நோக்கியருளுவாயாக.

அவ:— (அவிவேக) "அபராதபஹுளமானபின்பு, ஶாஸ்த்ரீயமான உபாயாந்தரங்களைப்பற்றிப் போக்குதல், விட்டுப் பற்றுதல் செய்கையொழிய, 'க்ருபயா கேவலமாத்மஸாத் குரு' என்று நம்மை நிர்பந்திக்கிறதென்?" என்ன, "ஶாஸ்த்ரீயாநுஷ்டானத்துக்கு

अविवेकघनान्धदिङ्मुखे बहुधा सन्ततदुःखवर्षिणि ।
भगवन् ! भवदुर्दिने पथः स्खलितं मामवलोकयाच्युत ! ॥ ४९ ॥

49. அவிவேககநாந்ததிங்முகே பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி ।
பகவந் ! பவதுர்த்திநே பத: ஸ்கலிதம் மாமவலோகயாச்யுத ! ॥

ஜ்ஞாநமேயில்லை; வேறு கதியில்லாமையாலே விடமாட்டேன். ஆனபின்பு, க்ருபாகார்யமான விஶேஷகடாக்ஷமே எனக்கு உஜ்ஜீவனஸாதனம்" என்கிறார்.

வ்யா:— (அவிவேக) அதாவது:— விவேகாபாவம்; ஜீவபரவிவேகாபாவம்; தேஹாத்ம விவேகாபாவம்; த்யாஜ்யோபாதேயவிவேகாபாவம்; பந்தவிமோசநவிவேகாபாவம்; இவையாகிற மேகபடலங்களாலே திரோஹிதமான மனஸ்ஸையுடையவனாகையாலே உஜ்ஜீவநோபாயத்தில் திங்மாத்ரமும் தெரியாதிருக்கிறதற்கு மேலே. (பஹுதா ஸந்ததது:க்கவர்ஷிணி) பஹுப்ரகாரமாய், இடைவிடாதேயுண்டான து:க்கவர்ஷத்தை உடைத்தானதிலே. அவிவேகம் து:க்கத்தை விளைக்கையாவது:— அஜ்ஞானத்தாலே கர்மமாய், அத்தாலே தேவாதிஶரீரப்ரவேஶமாய், அத்தாலே தாபத்ரயரூபமான து:க்கமாயிருக்கும். "பொய் நின்ற ஞானமும் பொல்லாவொழுக்கும் அழுக்குடம்பும்" என்கிறபடியே. (பஹுதா) ஆத்யாத்மிகாதிபஹுப்ரகாரமாயிருக்கை. (பகவந்) இத்தலையில் து:க்கத்தைப் பரிஹரிக்கைக்கு ஜ்ஞாநஶக்த்யபாவத்தாலும், தேவராலல்லது பரிஹாரமில்லாத இதிலும் தேவர் அறியாததுண்டோ? (பவதுர்த்திநே) ஸம்ஸாரமாகிற மழைக்காலவிருளிலே. துர்த்திநம்— மேகதிமிரம். (பத: ஸ்கலிதம்) "கொடுவினைத்தூற்றுள் நின்று பாவியேன் பலகாலம் வழி திகைத்து அலமருகின்றேன்" என்கிறபடியே. (மாம்) கர்மாத்யுபாயங்களில் ப்ரச்யுதனான என்னை. நான் படுகிற பாடு இதுவானால், ஶாஸ்த்ரீயானுஷ்டானத்துக்கு நான் ஆர்? தேவரையொழிய வேறு உண்டோ? என்று கருத்து. (அவலோகய) (114) "**अवलोकनदानेन भूयो मां पालय**" (அவலோகநதாநேந பூயோ மாம் பாலய) என்று சொல்லுகிறபடியே, ஸகல க்லேஶமும் போம்படி பார்த்தருளவேணும். ஸாதநாந்தரநிஷ்டர்க்கும் தேவர் விஶேஷ கடாக்ஷம் உத்தாரகமிறே. (292) "**जायमानं हि पुरुषं यं पश्येन्मधुसूदनः**" (ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந்மதுஸூதந:) என்று, அதிகாரஸித்தியும் தேவர் கடாக்ஷமிறே. (104) "**जितन्ते पुण्डरीकाक्ष**" (ஜிதந்தே புண்டரீகாக்ஷ) என்று, புறம்புள்ள துவக்கை அறுப்பதும் உன் கடாக்ஷமிறே. (அச்யுத) "அடியரை வல்வினைத் துப்பாம் புலனைந்தும் துஞ்சக்கொடான்" என்கிறபடியே, ஆஶ்ரிதரை ஒரு வழியாலும் நசிக்க விட்டுக்கொடாதவரிறே தேவர். 49.

50. பதவுரை:— நாத—எம்பிரானே!, மே—அடியேனுடைய, ஏகம் விஜ்ஞாபநம்— ஒரு விண்ணப்பத்தை, அக்ரத:—முதலில், ஶ்ருணு—கேட்டருள்வேணும்; ந ம்ருஷா—(இந்த விண்ணப்பம்) பொய்யன்று; பரமார்த்தம் ஏவ—உண்மையானதே; மே—அடியேனுக்கு, யதி ந தயிஷ்யஸே—அருளாயாகில், தத:—(அடியேன் கைதப்பிப்போன) பிறகு, தவ—உனக்கு, தயநீய:—அருளத்தக்கவன், துர்லப:—கிடைக்கமாட்டான்.

அவ:— (ந ம்ருஷேதி) "தேவர் க்ருபையாலல்லது வேறு எனக்கு இல்லாதவோபாதி, தேவர் க்ருபைக்கு நானல்லது விஷயமில்லை; இத்தை இழவாதே கொள்ளீர்" என்கிறார்.

**न मृषा परमार्थमेव मे शृणु विज्ञापनमेकमग्रतः ।**
**यदि मे न दयिष्यसे ततो दयनीयस्तव नाथ ! दुर्लभः ॥ ५० ॥**

50. ந ம்ருஷா பரமார்த்தமேவ மே ஶ்ருணு விஜ்ஞாபநமேகமக்ரத: ।
யதி மே ந தயிஷ்யஸே ததோ தயநீயஸ் தவ நாத! துர்லப: ॥

---

வ்யா:— (ந ம்ருஷா பரமார்த்தமேவ) 'இது ஸம்ஸாரத்திலே கேட்டறிவதொன்று அல்லாமையாலே, மெய்யாகமாட்டாது' என்று ஈஶ்வரஹ்ருதயத்தில் பிறந்த அதிஶங்கையைத் தவிர்க்கைக்காக, அந்வயவ்யதிரேகத்தாலே ஸத்யமென்கிறார். (ந ம்ருஷா) லௌகிகர் பக்கலிலே இரக்கம் பிறக்கைக்காக அபுத்த்யா சொல்லும் வார்த்தையைப்போலே பொய்யன்று. (பரமார்த்தமேவ) நினைவுக்கு வாய்த்தலையிலிருந்து அறியும் தேவர் திருமுன்பே, மெய்யே விண்ணப்பம் செய்யலாம்படி ஸத்யமே. (மே விஜ்ஞாபநம்) 'ஸர்வஜ்ஞரான தேவர் திருமுன்பே விண்ணப்பம் செய்யுமதுவே உஜ்ஜீவநோபாயம்' என்றிருக்கும் என்னுடைய விண்ணப்பத்தை. "மெய் நின்று கேட்டருளாய் அடியேன் செய்யும் விண்ணப்பம்" என்னக்கடவதிறே. (ஏகம்) அத்விதீயம்; இதுக்கு மேலாக நிஷ்கர்ஷித்துச் சொல்லுவது ஒரு வார்த்தையில்லை; இதுவே எல்லையான நிஷ்கர்ஷம். (அக்ரத: ஶ்ருணு) மேல் கார்யம் செய்யிலும், செய்யாதொழியிலும் முற்படக் கேட்டருளவேணும். ஸம்ஸாரத்தில் பரிமாறுவதொன்று என்று அனாதரியாதே, அவதானம் பண்ணிக் கேட்டருளவேணும். (யதி மே ந தயிஷ்யஸே) தயைகரக்ஷ்யனான எனக்கு தயைபண்ணியருளீராகில். (தத:) தேவரீரைக் கிட்டின இவ்வஸ்து தப்பினால், பின்பு. (தயநீயஸ்தவ) ரக்ஷ்யவிஷயார்த்தியான தேவருக்கு, ஸாபராதனாய், அநுதாபம் பிறந்த தயநீயவிஷயம். (நாத) ரக்ஷ்யவிஷயார்த்தியாகைக்கு, தயையேயன்று, ப்ராப்தியுமுண்டு என்கை. (துர்லப:) தயைகரக்ஷ்யராயிருப்பார் துர்லபர். (228) "**स महात्मा सुदुर्लभः**" (ஸ மஹாத்மா ஸுதுர்லப:) என்னுமவரிறே தேவர். 50.

51. பதவுரை:— பகவந்—ஜ்ஞாநம் நிறைந்தவனான எம்பெருமானே!, தத்—ஆதலால், அஹம்—அடியேன், த்வத் ருதே—உன்னைத்தவிர, ந நாதவாந்—(வேறு) நாதனற்றவன். த்வம் ச—நீயும், மத் ருதே—என்னைத்தவிர (வேறொருவனை), ந தயநீயவாந்—அருளுக்கு விஷயமாக உடையையல்லை. விதி நிர்மிதம்—உன் அருளாலே ஏற்பட்ட, ஏதத் அந்வயம்—இந்த ஸம்பந்தத்தை, பாலய—ரக்ஷித்துக்கொள். மா ஸ்ம ஜீஹப:—கைவிட்டுவிடவேண்டாம்.

அவ:— (ததஹம்) "இப்படி தயநீயதயாவான்களான இருவர்க்கும் முக்யமான இஸ்ஸம்பந்தம்தானும் தேவரீருடைய க்ருபையாலேயாயிற்று; ஆனபின்பு இதைக் கைவிடாதே ரக்ஷித்தருளவேணும்" என்கிறார்.

வ்யா:— (தத்) ஆதலால். தயநீயர் தேவருக்கு துர்லபமானபின்பு. (அஹம்) ஸாபராதனாய், அநுதாபம் பிறந்த நான். (த்வத்ருதே ந நாதவாந்) (196) "**भृशं भवति दुःखितः**" (ப்ருஶம் பவதி து:க்கித:) என்று, து:க்கியான என்னிலும் என் து:க்கத்தைப் பொறுக்கமாட்டாத தேவரையொழிய நாதவானல்லேன். பரது:க்காஸஹிஷ்ணுத்வமேயிறே தயை. (மத்ருதே த்வம் தயநீயவாந் ந ச) தயைகரக்ஷ்யனான என்னையொழிந்தாலும், தேவரீருடைய க்ருபை குமரிருந்து போமித்தனை. (ஏததந்வயம் விதிநிர்மிதம்) ஒருவரையொழிய

तदहं त्वदृते न नाथवान् मदृते त्वं दयनीयवान्न च ।
विधिनिर्मितमेतदन्वयं भगवन्! पालय मा स्म जीहपः ॥ ५१ ॥

51. ததஹம் த்வத் ருதே ந நாதவாந் மத் ருதே த்வம் தயநீயவாந் ந ச ।
விதிநிர்மிதமேததந்வயம் பகவந்! பாலய மா ஸ்ம ஜீஹப: ॥

वपुरादिषु योऽपि कोऽपि वा गुणतोऽसानि यथातथाविधः ।
तदयं तव पादपद्मयोरहमद्यैव मया समर्पितः ॥ ५२ ॥

52. வபுராதிஷு யோऽபி கோऽபி வா குணதோऽஸாநி யதாததாவித: ।
ததயம் தவ பாதபத்மயோரஹமத்யைவ மயா ஸமர்ப்பித: ॥

---

ஒருவருக்குச் செல்லாத இம்முக்யஸம்பந்தம் தேவரீருடைய கேவலக்ருபையாலே வந்தது. “விதிவாய்க்கின்று காப்பாரார்” என்கிறபடியே. இப்பக்ஷத்தில், ‘ததஹம்’ என்கிறவிடத்தில் தச்சப்தம் மேலுக்கு உடலாக இங்கும் அந்வயிக்கக்கடவது. அதவா, விதியென்று தைவமாய், (293) “इच्छात एव तव विश्वपदार्थसत्ता” (இச்சாத ஏவ தவ விஶ்வபதார்த்தஸத்தா) என்கிறபடியே ஸத்தாப்ரயுக்தமான ஸம்பந்தத்தைச் சொல்லிற்றாகவுமாம். (பகவந்) இவற்றில் தேவருக்கு அறிவிக்கவேண்டுவது உண்டோ? (பாலய) இதை ரக்ஷித்தருளவேண்டும் என்னுதல்; இதை புஜித்தருளவேண்டும் என்னுதல். ‘புஜ-பாலநாப்யவஹாரயோ:’. (மா ஸ்ம ஜீஹப:) இத்தலையில் பூர்வாபராதத்தைப் பார்த்தாதல், தேவர் பூர்த்தியைப் பார்த்தாதல் கைவிட்டருளாதொழியவேண்டும். 51.

52. பதவுரை:— வபுராதிஷு—ஶரீரம் முதலியவைகளுள், ய: அபி க: அபி வா—ஏதேனுமொன்றாகவும், குணத:—ஸ்வபாவத்தினால், யதா ததாவித:—ஏதேனுமொருபடிப்பட்டவனாகவும், அஸாநி—இருக்கக்கடவேன்; (அவைகளில் எனக்கு ஒரு நிர்ப்பந்தமுமில்லை.) தத்—ஆகையால், அயம் அஹம்—இந்த நான், தவ—உன்னுடைய, பாத பத்மயோ:—இரு திருவடித் தாமரைகளிலும், அத்யைவ—இந்த க்ஷணத்திலேயே, மயா—என்னால், ஸமர்ப்பித:—ஸமர்ப்பிக்கப்பட்டேன்.

அவ:— (வபுராதிஷு) இதில், “ஆத்மாநுரூபமாகவன்றோ நம்முடைய ரக்ஷணமிருப்பது; தயநீயரான உம்முடைய ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்து நம் பக்கலிலே ஸமர்ப்பியும்” என்ன, * “சிறப்பில் வீடு” என்கிற பாட்டின்படியே, “எனக்கு அதில் நிர்ப்பந்தமில்லை; அஹம்புத்திபோத்யமான இவ்வஸ்து, தேவர் திருவடிகளிலே என்னாலே ஸமர்ப்பிதம்” என்கிறார்.

வ்யா:— (வபுராதிஷு) தேஹேந்த்ரியமந:ப்ராணபுத்திகளைச் சொல்லுகிறது. இவற்றில் ஒன்றே ஆத்மா என்பாரும், ப்ரக்ருதே:பரமாய், ஜ்ஞாநாநந்தலக்ஷணம் என்பாருமாய், ஸ்வரூபத்திலே § விப்ரதிபத்தியுண்டாயிருக்கும். இவற்றில் ஏதேனுமொன்று ஸ்வரூபமாகவுமாம். (குணதோऽஸாநி யதாததாவித:) ஸ்வபாவத: அணுத்வ விபுத்வ ஶரீரபரிமாணத்வ நித்யத்வாநித்யத்வ ஜ்ஞாத்ருத்வாதிகளிலே § விப்ரதிபத்தியுண்டாயிருக்கும். அதில் ஏதேனுமொன்று ஸ்வரூபமாகிலும் அதிலும் எனக்கு ஒரு நிர்ப்பந்தமில்லை. (தத்) தஸ்மாத்; கீழ்ச்

---

* திருவாய்மொழி (2-9-5). § விப்ரதிபத்தி—அபிப்ராயபேதம்.

**मम नाथ ! यदस्ति योऽस्म्यहं सकलं तद्धि तवैव माधव ! ।**
**नियतस्वमिति प्रबुद्धधीरथवा किं नु समर्पयामि ते ॥ ५३ ॥**

53. மம நாத ! யதஸ்தி யோऽஸ்ம்யஹம் ஸகலம் தத்தி தவைவ மாதவ ! ।
நியதஸ்வமிதி ப்ரபுத்ததீரதவா கிந்நு ஸமர்ப்பயாமி தே ॥

---

சொன்ன ஸ்வரூபஸ்வபாவங்களிலே நிர்ப்பந்தமில்லாமையாலே. (அஹம்) பராகர்த்தவ்யாவ்ருத்தனாய், ப்ரத்யகர்த்தபூதனாய், ப்ரத்யக்ஷபூதனாய் ப்ரகாஶிக்கிற நான். (தவ பாதபத்மயோ:) ரக்ஷகரான தேவருடைய போக்யமான திருவடிகளிலே. (அத்யைவ) ஆத்மா க்ஷணிகமாகிலும், இந்த க்ஷணத்திலே ஸமர்ப்பிதமென்கை. (மயா ஸமர்ப்பித:) என்னாலே ஸமர்ப்பிதன். (294) "**योऽहमस्मि स सन् यजे**" (யோऽஹமஸ்மி ஸ ஸந் யஜே), (295) "**यस्यास्मि न तमन्तरेमि**" (யஸ்யாஸ்மி ந தமந்தரேமி), (296) "**आत्मा राज्यं धनं मित्रं कलत्रं वाहनानि च। ...... इति तत्प्रेक्षितं सदा ॥**" (ஆத்மா ராஜ்யம் தநம் மித்ரம் களத்ரம் வாஹநாநி ச । ........ இதி தத்ப்ரேக்ஷிதம் ஸதா ॥), (297) "**राज्यञ्चाहञ्च रामस्य धर्मं वक्तुमिहार्हसि**" (ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி). 52.

53. பதவுரை:— நாத மாதவ !—ஸர்வஸ்வாமியாய், லக்ஷ்மீநாதனான பெருமானே !, மம யத் அஸ்தி—எனக்கு யாதொன்று சொந்தமாயிருக்கிறதோ, ய: அஹம் அஸ்மி—யாவனொரு நான் இருக்கிறேனோ, தத் ஸகலம்—அது முழுவதும், தவ ஏவ—உனக்கே, நியத ஸ்வம்—எப்பொழுதும் சொந்தமானது, இதி—என்று, ப்ரபுத்த தீ:—தெரிந்துகொண்ட புத்தியை உடைய அடியேன், தே—உனக்கு, கிம் நு ஸமர்ப்பயாமி—எதைத்தான் ஸமர்ப்பிப்பேன் ?

அவ:— (மம நாதேதி) "இவரை ப்ரமத்தோடே விடுகிறதென் ?" என்று பார்த்தருளி, "நீர் ஆரத்தை ஆருக்கு ஸமர்ப்பித்தீர் ?" என்ன, நிரூபித்தவிடத்து, "எனதாவியாவியும் நீ.......எனதாவியார் ? யானார் ?" என்கிறபடியே, "உமதை நீரே ஸ்வீகரித்தீரித்தனை; ஆத்மஸமர்ப்பணமும் ஆத்மாபஹாரத்தோபாதி" என்று, பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தை அநுஶயிக்கிறார். பகவத்பரதந்த்ரமான ஆத்மாவுக்கு, அநாத்யவித்யாஸித்தமான ஸ்வாதந்த்ர்யமடியாக பகவத்வைமுக்யம் பிறந்து, அத்தாலே ஹதனென்று பீதி பிறந்தவளவிலே, ததீயத்வாநுஸந்தாநத்தால் வந்த தாதாத்ம்யைககரணஸங்கல்பமாதல்; ராஜாபரணத்தை ரக்ஷித்துவைத்து ப்ராப்தகாலங்களிலே கொடுக்குமாப்போலே, ஆத்மாவை ஈஶ்வரன் பக்கலிலே ஸமர்ப்பிக்கையென்னுதல்; இவை இரண்டும் அர்த்தமன்று என்னும்படி, பண்டே அவனதான வஸ்துவை அவனதாக இசையுமதொழிய, ஸமர்ப்பணமும் ஆத்மாபஹாரத்தோடு ஒக்கும்.

வ்யா:— (நாத) அகிலஜகத்ஸ்வாமிந் ! அவனதான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. (மம யதஸ்தி யோऽஹமஸ்மி) குணமாயும், விபூதியாயும் மமதாவிஷயமாயுள்ளது யாதொன்று; அதுக்கு ஆஶ்ரயமான நான் யாவனொருவனாகிறேன். (தத் ஸகலம்) ஔபாதிகமாயும், ஸ்வாபாவிகமாயும் உள்ளதெல்லாம். (மாதவ தவைவ) ஶ்ரிய:பதியாய், ஸர்வஶேஷியாயுள்ள உன்னுடையது. அவதாரணத்தால், அந்யஶேஷத்வத்தை வ்யாவர்த்திக்கிறது. (ஹி) (239) "**सर्वेषामेव लोकानां पिता माता च माधवः**" (ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா

**अवबोधितवानिमां यथा मयि नित्यां भवदीयतां स्वयम्।**
**कृपयैतदनन्यभोग्यतां भगवन्! भक्तिमपि प्रयच्छ मे ॥ ५४ ॥**

54. அவபோதிதவாநிமாம் யதா மயி நித்யாம் பவதீயதாம் ஸ்வயம் ।
க்ருபயைததநந்யபோக்யதாம் பகவந்! பக்திமபி ப்ரயச்ச மே ॥

ச மாதவ:) இத்யாதிப்ரமாணப்ரஸித்தியைச் சொல்லுகிறது. (நாத மாதவ) ஸர்வஸ்வாமியாய், ஶ்ரிய:பதியான வஸ்துவுக்கே அநந்யார்ஹஶேஷம் ஸர்வபதார்த்தங்களும் என்கை. "யானே நீ என் உடைமையும் நீயே". (நியதஸ்வமித்யாதி) ஸமர்ப்பணம் மிகையாம்படி ஜ்ஞாநம் பிறந்த காலத்துடன், ப்ரமித்த காலத்துடன் வாசியற நியதஸ்வம். (இதி ப்ரபுத்ததீ:) என்று தெரிந்த புத்தியையுடைய நான். (அதவா) கீழில் ஸமர்ப்பணபக்ஷ வ்யாவ்ருத்தி. (தே கிந்து ஸமர்ப்பயாமி) இத்தையுடைய உனக்கு எதை ஸமர்ப்பிப்பேன்? ஸமர்ப்பணீயம் ஏது? ஸமர்ப்பகரார்? ஸமர்ப்பணீயமாகைக்கு ஸ்வாம்யமில்லை. ஸமர்ப்பிக்கைக்கு ஸ்வாதந்த்ர்யமில்லை. ஸம்ஸாரபீதியாலே ஸமர்ப்பிக்கையும், ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநத்தாலே அநுஶயிக்கையுமிரண்டும் யாவந்மோக்ஷம் அநுவர்த்திக்கக்கடவது. 53.

54. பதவுரை:— பகவந்—எம்பிரானே!, மயி—என்னிடத்தில், நித்யாம்—என்றுமிருக்கும், இமாம் பவதீயதாம்—இந்த ஶேஷத்வத்தை, யதா—எப்படி, அவபோதிதவாந்—அறிவித்தாயோ (அப்படியே), ஸ்வயம் க்ருபயா—கேவலக்ருபையினாலே, ஏததநந்யபோக்யதாம்—இதைத்தவிர வேறொன்றில் இனிமையை உடையதல்லாத, பக்திம் அபி—பக்தியையும், மே ப்ரயச்ச—அடியேனுக்குக் கொடுத்தருளுவாயாக.

அவ:— (அவபோதித) "ஆத்மாபஹாரபர்யாயமான ஆத்மஸர்ப்பணத்தளவிலே நான் நில்லாமையாலே, நிர்ஹேதுகக்ருபையாலே இந்த ஶேஷத்வத்தை உணர்த்தினாப்போலே, இந்த ஜ்ஞாநம் புருஷார்த்தோபயோகியாம்படி இந்த க்ருபையாலே * ஸ்தாநத்ரயோதிதபர பக்தியைத் தந்தருளவேண்டும்" என்கிறார்.

வ்யா:— (மயி நித்யாம் பவதீயதாம் அவபோதிதவாந்) என் பக்கலிலே நியதையான த்வத்விஷயஶேஷதையை. 'பவதீயதை' என்கையாலே அந்யஶேஷத்வவ்யாவ்ருத்தி. 'மயி நித்யாம்' என்றது, இத்தலையில் பகவச்சேஷத்வம் ஸ்வரூபமென்கை. (298) "**स्वत्वमात्मनि सञ्जातं स्वामित्वं ब्रह्मणि स्थितम्**" (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம்). 'இமாம்' என்று, ஶேஷத்வத்தில் இனிமையாலே கொண்டாடுகிறார். (யதா அவபோதிதவாந்) யாதொருபடி அறிவிக்கப்பட்டேன். (ஸ்வயம் க்ருபயா) கேவலக்ருபையாலே. ஸ்வயம்—கேவலம். (ஏததநந்யபோக்யதாம்) இதொழிய வேறொன்றும் நெஞ்சுக்கு விஷயமாகாதபடியிருக்கும் போக்யதையை உடைத்தான பக்தியை. (பகவந்) ஒன்றை ஒருத்தனுக்குக் கொடுப்போமென்றால், ஒரு தடையில்லாத ஜ்ஞாநஶக்த்யாதிகளால் பூர்ணனென்கை. (பக்திமபி ப்ரயச்ச) யாதொருபடி ஜ்ஞானத்தைத் தந்தாய், அப்படியே பக்தியையும் தந்தருளவேணும். (மே) அஜ்ஞனாய், அஶக்தனாய், ருசிமாத்ரமேயாயிருக்கிற எனக்கு. 54.

* ஸ்தாநத்ரயோதிதபரபக்தியாவது:— கீதையில் "புருஷஸ் ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ்த்வநந்யயா" (8-22), "பக்த்யா த்வநந்யயா ஶக்ய:" (11-54), "மத்பக்திம் லபதே பராம்" (18-54) என்று மூன்று ஸ்தானங்களில் சொல்லப்பட்ட பரபக்தி.

**तव दास्यसुखैकसङ्गिनां भवनेष्वस्त्वपि कीटजन्म मे ।**
**इतरावसथेषु मा स्म भूदपि मे जन्म चतुर्मुखात्मना ॥ ५५ ॥**

55. தவ தாஸ்யஸுகைகஸங்கிநாம் பவநேஷ்வஸ்த்வபி கீடஜந்ம மே।
இதராவஸதேஷு மா ஸ்ம பூதபி மே ஜந்ம சதுர்முகாத்மநா॥

---

55. பதவுரை:— தவ—உன்னுடைய, தாஸ்ய ஸுக ஏக ஸங்கிநாம்—சேஷத்வமாகிற ஸுகமொன்றிலேயே ஈடுபட்டவர்களுடைய, பவநேஷு—திருமாளிகைகளில், மே—அடியேனுக்கு, கீடஜந்ம அபி—புழுவாய்ப் பிறப்பதாவது, அஸ்து—உண்டாகவேண்டும். இதர ஆவஸதேஷு—மற்றவர்களின் வீடுகளில், சதுர்முக ஆத்மநா ஜந்ம அபி—பிரமனாகப் பிறப்பதும், மே—எனக்கு, மா ஸ்ம பூத்—ஏற்படவேண்டியதில்லை.

அவ:— (தவ தாஸ்யேதி) பகவத்ப்ரஸாதத்தாலே லப்தமான பக்திப்ராசுர்யத்தாலே தச்சேஷத்வத்தளவில் பர்யவஸியாதே, ததீயசேஷத்வத்தை ப்ரார்த்திக்கிறார். ஆழ்வார் * 'கண்கள் சிவந்து'விலே பகவச்சேஷத்வத்தை அனுபவித்து, § 'கருமாணிக்கமலை'யிலே அநந்யார்ஹசேஷத்வத்தை அநுஸந்தித்து, அவ்வளவிலும் பர்யவஸியாதே, † 'நெடுமாற்கடிமை'யிலே ததீயசேஷத்வத்தை அனுஸந்தித்தாப்போலேயும், ஸ்ரீராமாயணபுருஷர்களில் ஸ்ரீசத்ருக்நாழ்வானைப்போலேயும் ததீயசேஷத்வத்தையே ப்ரார்த்திக்கிறார்.

வ்யா:— (தவ தாஸ்யஸுகைகஸங்கிநாம்) ஐச்வர்யகைவல்யஸுகங்கள் விக்னமாம்படியிறே தாஸ்யஸுகமிருப்பது. (299) "**तस्यान्तरायो मैत्रेय! देवेन्द्रत्वादिकं फलम्**" (தஸ்யாந்தராயோ மைத்ரேய! தேவேந்த்ரத்வாதிகம் பலம்), (300) "**स्वर्गाप्तिस्तस्य विघ्नोऽनुमीयते**" (ஸ்வர்க்காப்திஸ்தஸ்ய விக்நோऽநுமீயதே) என்றும், "அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர் செற்றது" என்றும், ‡ "இறுகலிறப்பு" என்றும் இவை தாஸ்யத்துக்கு விரோதியாயிறே இருப்பது. (ஏகஸங்கிநாம்) (30) "**निस्तरन्ति मनीषिणः**" (நிஸ்தரந்தி மநீஷிண:) என்றும், (29) "**सोऽध्वनः पारमाप्नोति तद्विष्णोः परमं पदम्**" (ஸோऽத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்) என்றும் ஸம்ஸாரநிவ்ருத்தியால் வந்த ஸுகமும், பரமபதப்ராப்தியால் வந்த ஸுகமும் தாஸ்யஸுகத்துக்கு அபாயமென்கை. (64) "**तस्य यज्ञवराहस्य विष्णोरमिततेजसः। प्रणामं येऽपि कुर्वन्ति तेषामपि नमो नमः**" (தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமிததேஜஸ:। ப்ரணாமம் யேऽபி குர்வந்தி தேஷாமபி நமோ நம:॥), (301) "**वासुदेवस्य ये भक्ताः शान्तास्तद्गतमानसाः। तेषां दासस्य दासोऽहं भवेज्जन्मनि जन्मनि॥**" (வாஸுதேவஸ்ய யே பக்தா: சாந்தாஸ்தத்கதமாநஸா:। தேஷாம் தாஸஸ்ய தாஸோऽஹம் பவேஜ்ஜந்மநி ஜந்மநி॥), † "அடியாரடியாரடியார் எம் கோக்கள் அவர்க்கே குடிகளாய்ச் செல்லும் நல்ல கோட்பாடே—வாய்க்க" என்னக்கடவதிறே தாஸ்யரஸம் ரஸித்தால். (தேஷாம் பவநேஷு கீடஜந்ம மேऽப்யஸ்து) அவர்கள் திருவடிகளில் அடிமைசெய்யவேண்டா; அவர்கள் திருமாளிகையில் ஒரு கீடமாய் ஜனிக்குமதாகிலும் உண்டாகவேண்டும். 'அபி' சப்தம் அவதாரணத்திலேயாய், கீடஜன்மமே உண்டாகவேண்டுமென்றுமாம். மனுஷ்யாதிஜன்மங்களில் ஆசைப்படாதொழிந்தது,— தேசாந்தரப்ரமணஸம்பாவனையாலே, உத்பத்திஸ்திதிலயங்கள் அங்கேயாகக்கிடையாது

---

* திருவாய்மொழி (8-8). § திருவாய். (8-9). † திருவாய். (8-10). ‡ திருவாய். (4-1-10).

सकृत्त्वदाकारविलोकनाशया तृणीकृतानुत्तमभुक्तिमुक्तिभिः ।
महात्मभिर्मामवलोक्यतां नय क्षणेऽपि ते यद्विरहोऽतिदुस्सहः ॥ ५६ ॥

56. ஸக்ருத் த்வதாகாரவிலோகநாஶயா த்ருணீக்ருதாநுத்தமபுக்திமுக்திபி:।
மஹாத்மபிர் மாமவலோக்யதாம் நய க்ஷணேऽபி தே யத்விரஹோऽதிதுஸ்ஸஹ: ॥

என்னுமத்தாலே. 'எல்லாரும் உத்க்ருஷ்டஜன்மங்களையன்றோ ஆசைப்படுவது?' என்ன, தந்தாமுகந்ததன்றோ புருஷார்த்தம் என்கிறது. எனக்கு இதுவே பெறவேணுமென்கை. (இதராவஸதேஷு) தாஸ்யரஸம் அறியாதே 'எனக்கு' என்னுமவர்கள் இருப்பிடத்திலே. (சதுர்முகாத்மநா ஜந்மாபி மா ஸ்ம பூத்) சதுர்முகரூபேண வரும் ஜன்மமும் எனக்கு உண்டாமதன்று. சதுர்முகாதிஜன்மம் லௌகிகருக்கு ஶ்லாக்யமானாலும், தாஸ்யருசியை உடைய எனக்கு வேண்டா என்கிறார். அந்வயத்திலும், வ்யதிரேகத்திலும் இரண்டிலு முண்டான நிர்ப்பந்தம் தோற்ற இருக்கலாம் என்கிறார். 55.

56. பதவுரை:— யத் விரஹ:—எந்தப் பெரியோர்களின் பிரிவானது, தே—உனக்கு, க்ஷணே அபி—ஒரு கணப்பொழுதும், அதிதுஸ்ஸஹ:—மிகவும் பொறுக்கமுடியாததாயிருக்கிறதோ, ஸக்ருத்—ஒரு தடவை, த்வத் ஆகார விலோகந ஆஶயா—உன்னுடைய திருமேனியைக் காணவேணும் என்னும் ஆசையினால், த்ருணீக்ருத அநுத்தம புக்தி முக்திபி:—த்ருணம்போல் நினைக்கப்பட்ட மேலான போகங்களையும், மோக்ஷத்தையும் உடையவர்களான, (தை:) மஹாத்மபி:—(அந்தப்) பெரியோர்களால், அவலோக்யதாம்—கடாக்ஷிக்கத் தக்கவனாயிருக்கும் தன்மையை (அடையும்படி), மாம் நய—என்னைச் செய்தருளவேண்டும்.

அவ:— (ஸக்ருதிதி( "வைஷ்ணவக்ருஹத்தில் பிறக்கும் பிறப்பால் வந்த ஏற்றமெல்லாம் வேணுமோ? அவர்கள் கண்டால் உபேக்ஷியாதே 'நம்முடையவன்' என்று விஶேஷகடாக்ஷம் பண்ணுகைக்கு அர்ஹனும்படி பண்ணியருளவேணும்" என்கிறார்.

வ்யா:— (ஸக்ருத் த்வதாகாரவிலோகநாஶயா) (302) "**पश्येम शरदश्शतं**" (பஶ்யேம ஶரதஶ்ஶதம்), (113) "**सदा पश्यन्ति सूरयः**" (ஸதா பஶ்யந்தி ஸூரய:) என்கிறபடியே, ஸதா தர்ஶனம் பண்ணவேண்டியிருக்க, 'ஸக்ருத்' என்றது ஸத்தையை தரிப்பிக்கைக்கு ஒரு கால் அமையும் என்கைக்காக. போகமோக்ஷங்களை உபேக்ஷிக்கைக்கும் ஒருகால் அமையும் என்கைக்காக. "ஒரு நாள் காண வாராய்" என்றிறே விடாய்த்தவர் வார்த்தை. "நம்மை ஒரு கால் காட்டி நடந்தால் நாங்கள் உய்யோமே?". (த்வதாகாரவிலோகந) ஸ்வரூபத்தளவிலும், ததாஶ்ரயமான குணத்தளவிலும் பர்யவஸியாதே, உபயத்துக்கும் ப்ரகாஶகமான விக்ரஹத்தளவிலே வர அவகாஹித்தவர்கள். (விலோகந) (303) "**सुगाढं परिषस्वजे**" (ஸுகாடம் பரிஷஸ்வஜே) என்னுமளவெல்லாம் வேண்டா; ஒருகால் காண அமையும். (ஆஶயா த்ருணீக்ருதாநுத்தமபுக்திமுக்திபி:) காணவேண்டா காண்! காணவேணும் என்னும் ஆசைதானே த்ருணீகரிப்பிக்கும். அநுத்தமபுக்தி:,—ப்ரஹ்மாதிகள் போகம். அநுத்தமமுக்தி:,—பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷம்.(304)"**अलमद्य हि भुक्तैर्नः परमार्थैरलञ्च नः । यथा पश्याम निर्यान्तं रामं राज्ये प्रतिष्ठितम् ॥**" (அலமத்ய ஹி புக்தைர் ந: பரமார்த்தைரலஞ்ச ந:। யதா பஶ்யாம நிர்யாந்தம் ராமம் ராஜ்யே ப்ரதிஷ்டிதம் ॥), (305) "**त्वयाऽपि प्राप्तमैश्वर्यं**"

**न देहं न प्राणान्न च सुखमशेषाभिलषितं न चात्मानं नान्यत्किमपि तव शेषत्वविभवात् ।**
**बहिर्भूतं नाथ ! क्षणमपि सहे यातु शतधा विनाशं तत्सत्यं मधुमथन ! विज्ञापनमिदम् ॥ ५७ ॥**

57. ந தேஹம் ந ப்ராணாந் ந ச ஸுகமஶேஷாபிலஷிதம்
ந சாத்மாநம் நாந்யத்கிமபி தவ ஶேஷத்வவிபவாத் ।
பஹிர்ப்பூதம் நாத ! க்ஷணமபி ஸஹே யாது ஶததா
விநாஶம் தத்ஸத்யம் மதுமதந ! விஜ்ஞாபநமிதம் ॥

---

(த்வயாபி ப்ராப்தமைஶ்வர்யம்), (306) “**एते वै निरयास्तात ! स्थानस्य परमात्मनः**” (ஏதே வை நிரயாஸ்தாத ! ஸ்தாநஸ்ய பரமாத்மந:). (மஹாத்மபி:) (163) “**महात्मानस्तु मां पार्थ ! दैवीं प्रकृतिमाश्रिताः**” (மஹாத்மாநஸ்து மாம் பார்த்த ! தைவீம் ப்ரக்ருதிமாஶ்ரிதா:), (228) “**स महात्मा सुदुर्लभः**” (ஸ மஹாத்மா ஸுதுர்லப:) என்றும், “பேராளன் பேரோதும் பெரியோரை” என்றும், ஈஶ்வரன் தானும், ஆழ்வார்களுங்கூடக் கவிபாடுகிறவர்களாலே. (மாம்) புருஷார்த்தத்தின் மேலெல்லையிலே ருசியையுடைய என்னை. (அவலோக்யதாம்) அவலோகன விஷயனும்படி. (நய) ஸர்வஶக்தியான தேவர் நிர்வஹிக்கவேண்டும். “நம் பக்கலொழிய நம்முடையார் பக்கல் ‘கீடஜந்ம மேऽப்யஸ்து’ என்றும், ‘அவலோக்யதாம் நய’ என்றும் அத்யாதரத்தைப் பண்ணுகிறது எத்தாலே?” என்ன, “ஸாபேக்ஷனை நான் ஆதரிக்கைக்கு ஹேதுவைச் சொல்லுகிறேன். ஸ்வத: பூர்ணரான தேவருக்கு அவர்களுடைய விஶ்லேஷம் அஸஹ்யமாயிருக்கைக்கு ஹேது அருளிச்செய்யவேணும்” என்கிறார்:(தே) ஸ்வத:பூர்ணனாய், அவாப்தஸமஸ்தகாமனான தேவருக்கு க்ஷணமாத்ரம் துஸ்ஸஹம் என்று. அதிதுஸ்ஸஹம் என்கை. (194) **चिरं जीवति वैदेही यदि मासं धरिष्यति । न जीवेयं क्षणमपि विना तामसितेक्षणाम् ॥**” (சிரம் ஜீவதி வைதேஹீ யதி மாஸம் தரிஷ்யதி । ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம் ॥), (82) “**यद्विना भरतं त्वाञ्च शत्रुघ्नञ्चाऽपि मानद !**” (யத்விநா பரதம் த்வாஞ்ச ஶத்ருக்நஞ்சாபி மாநத !), (307) “**संस्मराम्यस्य वाक्यानि**” (ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி), (184) “**ज्ञानी त्वात्मैव मे मतं**” (ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்), (287) “**मम प्राणा हि पाण्डवाः**” (மம ப்ராணா ஹி பாண்டவா:), (308) “**किं कार्यं सीतया मम**” (கிம் கார்யம் ஸீதயா மம). 56.

57. பதவுரை:— நாத !—எம்பெருமானே !, தவ ஶேஷத்வவிபவாத் பஹிர்ப்பூதம்—உனக்கு அடிமைப்பட்டிருக்கையாகிற செல்வத்திற்குப் புறம்பான, தேஹம்—ஶரீரத்தை, க்ஷணம் அபி ந ஸஹே—ஒரு கணப்பொழுதும் ஸஹிக்கமாட்டேன்; ப்ராணாந்—(அம்மாதிரியான) ப்ராணன்களையும், ந ஸஹே—ஸஹிக்கமாட்டேன்; அஶேஷ அபிலஷிதம் ஸுகம் ச ந ஸஹே—எல்லாரும் இச்சிக்கும் ஸுகத்தையும் பொறுக்கமாட்டேன்; ஆத்மாநம் ச ந ஸஹே—(ஶேஷத்வமற்ற) ஆத்மாவையும் ஸஹிக்கமாட்டேன்; அந்யத் கிமபி ந ஸஹே—வேறு எதையும் பொறுக்கமாட்டேன்; ஶததா விநாஶம் யாது—(ஶேஷத்வமற்ற முன் சொன்னவையெல்லாம்) உரு மாய்ந்து போகட்டும். மதுமதந !—மதுவைக் கொன்ற எப்பிரானே !, தத் ஸத்யம்—இது உண்மையானது; இதம் விஜ்ஞாபநம்—இது (என்) விண்ணப்பம்.

அவ:— (ந தேஹமிதி) கீழ் ஶேஷத்வகாஷ்டையான ததீயஶேஷத்வத்தை அநுஸந்தித்தார். இதில், “ஶேஷத்வத்துக்குப் புறம்பானவற்றில் அருசியைச் சொல்லி, அவற்றைத் தவிர்த்துத் தந்தருளவேணும்” என்கிறார்.

வ்யா: —(ந தேஹம்) அஹமபிமானத்துக்கு அர்ஹமாம்படி அந்தரங்கமான ஶரீரத்தையும், தேவருடைய ஶேஷத்வத்துக்குப் புறம்பாகில் வேண்டேன். (ந ப்ராணாந்) தேஹாதிகளுக்கு தாரகமான ப்ராணன்களையும், ஶேஷத்வபஹிர்ப்பூதமாகில் வேண்டேன். (ந ச ஸுகம்) தேஹாதிகளையும், ப்ராணன்களையும் ஆதரிப்பது ஸுகார்த்தமாகவிறே. அந்த ஸுகமும் வேண்டா. ஸுகமென்று மோக்ஷஸுகத்தைச் சொல்லவுமாம். (அஶேஷாபிலஷிதம் ஸுகம்) எல்லாரும் ஆதரிக்கும் ஸுகம் என்றுமாம். ஸுகமென்னென்னில்: தேவாதி ஸகலஜந்துக்களும் ஆதரிக்குமதிறே. ஸுகமென்று பிரியச் சொன்னபோது 'அஶேஷாபிலஷிதம் நாந்யத் கிமபி' என்று மேல் கூட்டக்கடவது. 'நாந்யத் கிமபி' என்கிறது,— புத்ரமித்ரகளத்ராங்களென்கிறது. (ந சாத்மாநம்) கீழ்ச்சொன்ன ஸகலத்துக்கும் ஆஶ்ரயமாய், ஜ்ஞாத்ருத்வ கர்த்ருத்வ போக்த்ருத்வங்களையுடைய ஆத்மாவை. (தவ ஶேஷத்வவிபவாத் பஹிர்ப்பூதம்) ப்ராப்தவிஷயத்தில் ஶேஷத்வமாகிற பெருமைக்குப் புறம்பானத்தை. அந்தர்ப்பூதமானவன்று எல்லாம் உபாதேயமென்கை. (நாத) ஶேஷத்வத்துக்குப் புறம்பானவை அஸஹ்யமென்கைக்கு அடியான † அவர்ஜநீய ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. (க்ஷணமபி ந ஸஹே) க்ஷணகாலமும் ஸஹிக்ககில்லேன். காமினிக்கு பர்த்ருவிரஹத்தில் சந்தனகுஸுமாதிகள் அஸஹ்யமானாப்போலே; * "மாறாளன் கவராத மணிமாமை குறைவிலமே", * "உயிரினால் குறைவிலமே". (309) "**न देवलोकाक्रमणं**" (ந தேவலோகாக்ரமணம்); இது இளையபெருமாளுடைய *'ஏறாளுமிறையோன்'. (யாது ஶததா விநாஶம்) உருமாய்ந்துபோகவேண்டும். அடிமைக்குப் புறம்பானவை அஸஹ்யமானாலும் போக்குகை ஈஶ்வரக்ருத்யம். அனுகூலங்கள் ஆதரணீயமானாலும் உண்டாக்குகை ஈஶ்வரக்ருத்யம். (தத் ஸத்யம்) "இது லோகத்திலே கேட்டறிவதொன்றன்று; மெய்யாகக் கூடுமோ?" என்ன, "இது அஹ்ருதயமாகச் சொன்னதன்று; மெய்". (மதுமதந) திருமுன்பே பொய் சொன்னேனாகில், உமக்குப் பொய்யனான மது பட்டது படுகிறேன். ஶேஷத்வத்துக்குப் புறம்பானவற்றை மதுவைப் போக்கினாப்போலே போக்கியருளவேணும் என்னவுமாம். (இதம் விஜ்ஞாபநம் தத் ஸத்யம்) ப்ராப்யாபேக்ஷையில் § புரையுண்டாகிலும் விரோதிவர்க்கத்தில் அருசியில் பொய்யில்லை. 57.

58. பதவுரை:— தயாஸிந்தோ!—கருணைக்கடலான பிரானே!, பந்தோ!—எல்லாவித பந்துவுமானவனே!, நிரவதிக வாத்ஸல்ய ஜலதே!—எல்லையற்ற வாத்ஸல்யத்துக்குக் கடல் போன்றவனே!, துரந்தஸ்ய—முடிவற்றதும், அநாதே:—ஆரம்பமில்லாததும், அபரிஹரணீயஸ்ய—போக்கமுடியாததுமான, மஹத: அஶுபஸ்ய—பெரிய பாபத்திற்கு, ஆஸ்பதம் அபி—உறைவிடமாயிருந்தபோதிலும், தவ—உன்னுடைய, குண கணம்—குணஸமூஹங்களை, ஸ்மாரம் ஸ்மாரம்—நினைத்து நினைத்து, கத பீ:—பயமற்றவனாய், இதி இச்சாமி—இம்மாதிரி ஆசைப்படுகிறேன்.

அவ:—(துரந்தஸ்யேதி) "நிக்ரஹஹேதுவான பகவதபசாரர்த்யஶுபங்கள் ஸஞ்சரிக்கிற ஸம்ஸாரத்திலே, கைங்கர்யவிரோதிகள் அஸஹ்யமாம்படி, அதிலே அருசி பிறந்து, அத்தைப் போக்கித்தந்தருளவேண்டும் என்று யோகிகளுக்கு துர்லபமான இதை

---

† அவர்ஜநீய—விடவொண்ணாத. * திருவாய்மொழி (4-8). § புரை—குற்றம்.

**दुरन्तस्यानादेरपरिहरणीयस्य महतो निहीनाचारोऽहं नृपशुरशुभस्यास्पदमपि ।**
**दयासिन्धो ! बन्धो ! निरवधिकवात्सल्यजलधे ! तव स्मारं स्मारं गुणगणमितीच्छामि गतभीः ॥ ५८ ॥**

58. துரந்தஸ்யாநாதேரபரிஹரணீயஸ்ய மஹதோ
நிஹீநாசாரோऽஹம் ந்ருபஶுரஶுபஸ்யாஸ்பதமபி ।
தயாஸிந்தோ ! பந்தோ ! நிரவதிகவாத்ஸல்யஜலதே !
தவ ஸ்மாரம் ஸ்மாரம் குணகணமிதீச்சாமி கதபீ: ॥

---

அபேக்ஷிப்பார் உண்டாவதே!" என்ன, "அவதியில்லாத அஶுபங்களையும் போக்கவல்ல தேவருடைய அபரிச்சின்ன குணங்களை நினைத்திருந்து அபேக்ஷிக்கிறேன்" என்கிறார்.

வ்யா:— (துரந்தஸ்ய) முடிவின்றிக்கேயிருக்கும் அஶுபம். ப்ராயஶ்சித்தத்தாலாதல், அனுபவத்தாலாதல், உத்தரகோடி காணவொண்ணாதிருக்கை. தூர்விபாகமாயிருக்குமது என்னவுமாம். * உதர்க்கத்தில் நரககர்ப்பவாஸங்கள் பலிக்கை. (அபரிஹரணீயஸ்ய) ஸர்வ ஶக்தியான தேவருக்கும் பிற்காலிக்கும்படியிருக்கை. (மஹத:) ஸங்க்யாவிரஹிதமாயிருக்கை. காலதத்வமுள்ளதனையும் அனுபவியாநின்றாலும், அவதி காணவொண்ணாதிருக்கையும், இப்படிப்பட்ட அஶுபத்திற்குத் தொகையின்றிக்கேயிருக்கையும்; (310) "**यद्ब्रह्मकल्पनियुतानुभवेऽप्यनाश्यं**" (யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாஶ்யம்). அணுபரிமாணனான சேதனன் இவற்றையெல்லாம் செய்தானென்று விஸ்மயப்படும்படியிருக்கை; "சீலமில்லாச் சிறியன்". (நிஹீநாசாரோऽஹம்) அஹம்புத்திபோத்யமான தர்மிஸ்வரூபம் அதர்மாசார நிரூபகமாயிருக்கை. ஆசாரமாகிறது,— விலக்ஷணதர்மத்திலே இழிகைக்கு § யோக்யதாபாதகங்களான ஸந்த்யாவந்தநாதிகள். பாபாநுஷ்டானத்துக்கு யோக்யனென்கை. (ந்ருபஶு:) சதுஷ்பாத்துக்களிற்காட்டில் த்விபாதமே விஶேஷமென்கை. (311) "**ज्ञानेन हीनः पशुभिस्समानः**" (ஜ்ஞாநேந ஹீந: பஶுபிஸ் ஸமாந:). ஶாஸ்த்ரவஶ்யஜன்மமாகையாலே பசுவென்னவொண்ணாது. 'ஆஹாரநித்ராபயமைதுநாதி'களிலே நியதியில்லாமையாலே மனுஷ்யனென்னவொண்ணாது. இரண்டு ஜன்மத்தையும் தப்பினேனென்கை. (அஶுபஸ்யாஸ்பதம்) அஶுபமாகிறது,— ஶுபவிரோதி. ஶுபமாகிறது புருஷார்த்தம். தத்விரோதிக்கெல்லாம் ஆஶ்ரயம். அக்ருத்யகரணம் முதலாக அஸஹ்யாபசாரம் முடிவானவற்றிற்கு ஆகரமாயிருக்கை. தேவர் குணநாம் ஆகரமானாப்போலே, நான் அஶுபாநாம் ஆகரம் என்கை. (அபி) இப்படிப்பட்டவனாயிருக்கச்செய்தேயும், 'க்ஷணமபி ஸஹே யாது ஶததா விநாஶம்' என்று அபேக்ஷிக்கைக்கும் ஒரு வழியுண்டு. அதென்னென்னில்: (தயாஸிந்தோ) கீழ்ச்சொன்ன அஶுபஸாகரமெல்லாம் தேவருடைய தயார்ணவத்திலே ஒரு குளப்படியாயன்றோ தேவருடைய க்ருபாஸத்தை. (169) "**वधार्हमपि काकुत्स्थः कृपया पर्यपालयत्**" (வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்), (196) "**व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः**" (வ்யஸநேஷு மநுஷ்யாணம் ப்ருஶம் பவதி து:க்கித:), (312) "**यदि वा रावणः स्वयम्**" (யதி வா ராவண: ஸ்வயம்), (313) "**गच्छानुजानामि**" (கச்சாநுஜாநாமி), (பந்தோ) ஆஶ்ரிதருடைய இழவுபேறு தன்னதாம்படியான நிருபாதிகஸம்பந்தம் சொல்லுகிறது. (165) "**अहं वो बान्धवो जातः**" (அஹம் வோ பாந்தவோ ஜாத:), (203) "**कृतकृत्यस्तदा रामः**" (க்ருதக்ருத்யஸ்

---

* உதர்க்கம்—எதிர்காலம். § யோக்யதாபாதகம்—யோக்யதையைக் கொடுப்பது.

**अनिच्छन्नप्येवं यदि पुनरितीच्छन्निव रजस्तमश्छन्नश्छद्मस्तुतिवचनभङ्गीमरचयम् ।**
**तथाऽपीत्थंरूपं वचनमवलम्ब्यापि कृपया त्वमेवैवंभूतं धरणिधर ! मे शिक्षय मनः ॥ ५९ ॥**

59. அநிச்சந்நப்யேவம் யதி புநரிதீச்சந்நிவ ரஜஸ்-
தமஶ்சந்நஶ்சத்மஸ்துதிவசநபங்கீமரசயம் ।
ததாऽபீத்தம்ரூபம் வசநமவலம்ப்யாऽபி க்ருபயா-
த்வமேவைவம்பூதம் தரணிதர ! மே ஶிக்ஷய மந: ॥

---

ததா ராம:), (206) "**ऋणं प्रवृद्धमिव मे**" (ருணம் ப்ரவ்ருத்தமிவ மே), (314) "**उरसा धारयामास पार्थं संछाद्य माधवः**" (உரஸா தாரயாமாஸ பார்த்தம் ஸஞ்சாத்ய மாதவ:), (287) "**मम प्राणा हि पाण्डवाः**" (மம ப்ராணா ஹி பாண்டவா:). (*நிரவதிகவாத்ஸல்யஜலதே*) *வாத்ஸல்யமாகிறது:— அன்றீன்ற கன்றின் பக்கல் தோஷம் தாய்க்கு போக்யமாயிருக்குமாப்போலே, ஆஶ்ரித தோஷம் போக்யமாயிருக்கை. க்ருபாஸமுத்ரத்துக்குக் கரையுண்டாகிலும் வாத்ஸல்ய ஸாகரத்துக்குக் கரையில்லையென்கை.* (315) "**शरणागत वत्सलः**" (ஶரணாகதவத்ஸல:), (316) "**रिपूणामपि वत्सलः**" (ரிபூணாமபி வத்ஸல:), (200) "**दोषो यद्यपि तस्य स्यात्**" (தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்), (308) "**त्वयि किञ्चित्समापन्ने किं कार्यं सीतया मम**" (த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம), (83) "**अप्यहं जीवितं जह्यां**" (அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்). (*தவ குணகணம் ஸ்மாரம் ஸ்மாரம்*) *ஸ்ம்ருத்வா ஸ்ம்ருத்வா.* (317) "**गुणानामाकरो महान्**" (குணாநாமாகரோ மஹாந்), (106) "**यथा रत्नानि जलधेः**" (யதா ரத்நாநி ஜலதே:), (318) "**चतुर्मुखायुः**" (சதுர்முகாயு:). (*இதீச்சாமி கதபீ:*) *அஶுபாஸ்பதமான என்னை நினைத்து அஞ்சாதே, தேவர் குணகணத்தை நினைத்து 'ந தேஹம் ந ப்ராணாந்' என்கிறபடியே இச்சியாநின்றேன்.* 58.

59. பதவுரை:— தரணிதர !—(*வராஹாவதாரத்தில் ரஸாதலத்திலிருந்து*) *பூமியை மேல் எடுத்த எம்பிரானே !*, ரஜஸ் தமஶ் சந்ந: (அஹம்)—*ரஜோகுண தமோகுணங்களாலே மறைக்கப்பட்ட அடியேன்,* ஏவம் அநிச்சந் அபி—*இம்மாதிரி விரும்பாதபோதிலும்,* இச்சந் இவ—(*உண்மையாக*) *விரும்புபவன்போல,* சத்ம ஸ்துதி வசந பங்கீம்—*கபடமான ஸ்துதி வசன ப்ரகாரத்தை,* யதி புந: அரசயம் ததா அபி—*செய்தேனாகிலும்,* இத்தம் ரூபம்—*இம்மாதிரியான,* வசநம்—*வார்த்தையை,* அவலம்ப்ய அபி—*பற்றுசாகக்கொண்டாவது,* க்ருபயா—*தயையினாலே,* த்வம் ஏவ—*நீயே,* ஏவம் பூதம் மே மந: ஶிக்ஷய—*இப்படிப்பட்ட என் மனஸ்ஸைத் திருத்தியருளவேணும்.*

அவ:— (*அநிச்சந்நிதி*) *"'இச்சாமி' என்கிற இச்சைதான் ஸத்யமோ ?" என்ன, "மந்தபுத்தியான நான் விஷயானுரூபமான இச்சையுண்டு என்று திருமுன்பே விண்ணப்பம் செய்யப்போகாது. இச்சாஸூசகமான வசனத்தை அவலம்பித்து மெய்யாம்படி என்னுடைய மனஸ்ஸை ஶிக்ஷித்தருளவேண்டும்" என்கிறார்.*

வ்யா:— (*ஏவமநிச்சந்நபி*) *உக்தமான ப்ரகாரத்துக்கு அனுரூபமான இச்சையின்றிக்கேயிருந்ததாகிலும், நாஸ்திகரல்லாமையாலே இச்சையில்லை என்னமாட்டார். பேற்றுக்கு அனுரூபமான இச்சை பெறுமையாலே உண்டு என்னமாட்டார்.* (*புநரிதீச்சந்நிவ*) *மெய்யான இச்சையுடையார் சொல்லுமாப்போலே.* (*சத்மஸ்துதிவசநபங்கீமரசயம்*)

**पिता त्वं माता त्वं दयिततनयस्त्वं प्रियसुहृत्त्वमेव त्वं मित्रं गुरुरसि गतिश्चासि जगताम् ।
त्वदीयस्त्वद्भृत्यस्तव परिजनस्त्वद्गतिरहं प्रपन्नश्चैवं सत्यहमपि तवैवास्मि हि भरः ॥ ६० ॥**

60. பிதா த்வம் மாதா த்வம் தயிததநயஸ்த்வம் ப்ரியஸுஹ்ருத்
த்வமேவ த்வம் மித்ரம் குருரஸி கதிஶ்சாஸி ஜகதாம் ।
த்வதீயஸ் த்வத்ப்ருத்யஸ் தவ பரிஜநஸ் த்வத்கதிரஹம்
ப்ரபந்நஶ்சைவம் ஸத்யஹமபி தவைவாஸ்மி ஹி பர: ॥

---

க்ருத்ரிமஸ்துதிவசனம் மெய்யென்று ப்ரமிக்கும்படி பண்ணினேன். வசனப்ரகாரத்தைப் பார்த்தால் ஸர்வஜ்ஞரான தேவரும் மெய்யென்று ப்ரமிக்கும்படி சொன்னேன். "பொய்யே கைம்மை சொல்லி" என்னுமாப்போலே. ஹேதுவென்? என்ன, (ரஜஸ்தமஶ்சந்ந:) அந்யதாஜ்ஞான விபரீதஜ்ஞான ஹேதுவான ரஜஸ்தமஸ்ஸுக்களாலே அநாதிகாலம் அந்த தேஹம் ஸ்வஸ்வரூபபரஸ்வரூபங்களை மறைத்துப்போந்தது ரஜஸ்தமோத்வாரத்தாலேயிறே. (ததாபி) இப்படி த்யாஜ்யமாகவேண்டும் செயலைச் செய்தேனாகிலும். (319) "**यथा तथ्येन वर्णितं**" (யதா தத்யேந வர்ணிதம்) என்கிறபடியே, ஸர்வஜ்ஞஸகாஶத்திலே மெய் சொல்லிப் பிழைக்கவேண்டியிருக்க, அங்கே பொய் பற்றினால் த்யாஜ்யனிறே. (இத்தம்ரூபம் வசநமவலம்ப்ய) 'ந தேஹம் ந ப்ராணம்', 'தயாஸிந்தோ பந்தோ' என்கிற வசனமாத்ரத்தையே பற்றாசாகக்கொண்டு. "மாதவன் என்றதே கொண்டு" என்றும், "திருமாலிருஞ்சோலையென்றேன் என்னத் திருமால் வந்து என் நெஞ்சு நிறையப் புகுந்தான்" என்றும், உக்திமாத்ரமே ஜீவிக்கையாம் விஷயமிறே. (க்ருபயா) (199) "**वधार्हं**" (வதார்ஹம்) என்கிறபடியே தோஷத்தில் 'அவிஜ்ஞாதா'வாயிற்று க்ருபாபாரதந்த்ர்யத்தாலே. (ஏவம்பூதம் மே மநஸ்த்வமேவ ஶிக்ஷய) சத்மஸ்துதிக்கு உபகரணமான மநஸ்ஸை, அடிமைகொள்ளக் கடவ தேவரே அதுக்கு உபகரணமாம்படி ஶிக்ஷித்தருளவேண்டும். "தீ மனம் கெடுத்தாய்", "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்கிறபடியே, பாஹ்யமான மனஸ்ஸைத்தவிர்த்து அடிமைக்கு அநுகூலமான மனஸ்ஸைத் தந்தருளவேணும். "மனனக மலமறக் கழுவி" என்கிறபடியே, மநோநைர்மல்யம் யோகத்தாலே பிறக்கக்கடவது உபாஸகனுக்கு. அந்த யோகஸ்தானத்திலே பகவதனுக்ரஹமாயிறே இவ்வதிகாரிக்கு இருப்பது. (தரணிதர) ரஸாதலகதையான பூமியை ஆபத்தே ஹேதுவாக உத்தரித்தவரல்லீரோ தேவர், "ஏனமாய் நிலம் கீண்ட என்னப்பனே!" என்றும், "பன்றியாய் அன்று பாரகம் கீண்ட பாழியான்" என்றும் ஸம்பந்தமும் ஶக்தியுமுண்டு. இவனிடத்தில் இனி இச்சையே வேண்டுவது. அதை உண்டாக்கி ரக்ஷித்தருளவேண்டும் என்கிறார். 59.

60. பதவுரை:— ஜகதாம்—உலகங்களுக்கெல்லாம், பிதா த்வம்—தந்தையும் நீயே; மாதா த்வம்—தாயும் நீயே; தயித தநய: த்வம்—பிரியனான புத்திரனும் நீயே; ப்ரிய ஸுஹ்ருத் த்வம் ஏவ—நல்ல மனதையுடைய நண்பனும் நீயே; த்வம் மித்ரம்—(ரஹஸ்யங்களையும் சொல்லத்தக்க) தோழனும் நீயே; குரு: அஸி—ஆசாரியனும் நீயே; கதிஶ்ச அஸி—உபாயமும், (உபேயமும்) நீயே; அஹம்—நானோவெனில், த்வதீய:—உன்னுடையவன்; த்வத் ப்ருத்ய:—உன்னுடைய அடிமை; தவ பரிஜந:—உன்னுடைய தாஸன்; த்வத் கதி:—உன்னையே பரமப்ராப்யமாக உடையவன்; ப்ரபந்ந: ச—உன்னையே உபாயமாகக் கொண்டவன்; ஏவம் ஸதி—இம்மாதிரியிருக்கையில், தவ ஏவ—உனக்கே, பர: அஸ்மி ஹி—ரக்ஷிக்கத்தக்கவனாக இருக்கிறேனன்றோ.

அவ:— (பிதா த்வமிதி) "இச்சையுமின்றிக்கே, உக்திமாத்ரத்தைக் கொண்டு இச்சையையும் உண்டாக்கி ரக்ஷித்தருளவேண்டுமென்கிறதென்?" என்ன, அவர்ஜனீயஸம்பந்தத்தைச் சொல்லுகிறார்.

வ்யா:— (பிதா த்வம்) உத்பாதகராய், ஹிதகாமராய் இருக்கிறவர் தேவர். (மாதா த்வம்) கர்ப்பதாரணம் பண்ணி, ப்ரஸவக்லேஶத்தை அநுபவித்து, அஶுசிப்ரஸவங்களையும் மதியாதே இவன் ப்ரியஹிதமே அபேக்ஷித்திருக்கும் தாயைப்போலே பரிவுடையீர் தேவர். (320) "**पिताऽहमस्य जगतः**" (பிதாऽஹமஸ்ய ஜகத:), (321) "**भूतानां योऽव्ययः पिता**" (பூதாநாம் யோऽவ்யய: பிதா), "தஞ்சமாகிய தந்தை தாய்". (தயிததநயஸ்த்வம்) அபிமதனை நிரயநிஸ்தாரகனை புத்ரனைப்போலே நின்று ஸஹகரிப்பீர் தேவர். "நன் மக்களும் மேலாத் தாய் தந்தையும் அவரே". (ப்ரியஸுஹ்ருத் த்வமேவ) ஸர்வகாலத்திலும் ஶோபனத்தையே பண்ணும் திருவுள்ளத்தையுடையராயிருப்பீர் தேவரீர். அநர்த்தத்தைப் பண்ணினாலும் விடவொண்ணாத அபிமத * (ஸுஹ்ருத்) த்வம். அநபிமதனானாலும் விடவொண்ணாத * (அபிமத) ஸுஹ்ருத்த்வம். அவதாரணம் ஸர்வத்திலும் அன்வயிக்கக்கடவது. (த்வம் மித்ரம்) அர்ஜுனன் ஸுபத்ரையுடைய ஸ்வயம்வரத்தை தேவருக்கு அறிவித்து லபித்தாற்போலே அஶேஷரஹஸ்யங்களையும் அறிவிக்கலாம்படி விஶ்வஸநீயராயிருப்பீர் தேவரே. (குருரஸி) (322) "**मन्मना भव मद्भक्तः**" (மந்மநா பவ மத்பக்த:) என்றும், (49) "**मामेकं शरणं व्रज**" (மாமேகம் ஶரணம் வ்ரஜ) என்றும் நின்ற நிலைகளிலே ஹிதோபதேஶம் பண்ணும் ஆசார்யரும் தேவரே. (கதிஶ்சாஸி) புருஷார்த்தோபாயபூதரும் தேவர் என்னுதல்; "கந்தவ்யத்வாத் கதி:" என்று பரமப்ராப்யர் தேவர் என்னுதல். (ஜகதாம்) இந்த ஸம்பந்தம் தேவாதிஸகலப்ராணிகளுக்கும் ஸாதாரணம். உபயவிபூதிக்கும் ஸாதாரணமென்னவுமாம். (த்வதீய:) அந்த ஸாமாந்யமொழிய தமக்குண்டான விஶேஷப்ரதிபத்தியை அருளிச்செய்கிறார். (295) "**यस्याऽस्मि**" (யஸ்யாஸ்மி) என்கிறபடியே தேவருக்கு ஶேஷபூதன். (த்வத்ப்ருத்ய:) தேவருக்கு அதிஶயத்தை விளைத்து ஸ்வரூபம் பெறும் ஸம்பந்தத்தை உடையன் என்கை. அதினாலே தேவருக்கு ஸ்ப்ருஹணீயன் என்னுதல். (தவ பரிஜந:) (323) "**आत्मदास्यं**" (ஆத்மதாஸ்யம்) என்கிற நிருபாதிகதாஸபூதன் என்னுதல். (18) "**दासभूताः स्वतस्सर्वे ह्यात्मानः परमात्मनः**" (தாஸபூதாஸ் ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந:), (28) "**अहं सर्वं करिष्यामि**" (அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று ஸர்வகைங்கர்யத்துக்கும் அர்ஹன். (த்வத்கதி:) தேவரே ப்ராப்யபூதர் என்றிருக்கிறேன். (அஹம் ப்ரபந்நஶ்ச) ப்ராப்யம் பெறுகைக்கு தேவரையே உபாயமாக அத்யவஸிக்கிறேன். (ஏவம் ஸதி) தேவர் ஸர்வவிதபந்துவுமாய், நான் அநந்யகதியுமான பின்பு. (அஹமபி) அஹ்ருதயோக்தனானாலும். (தவைவ பரோऽஸ்மி) தேவருக்கே பரனாகிறேன். ஜ்ஞானஶக்த்யாதியாலும், பராப்தியாலும் என் கார்யம் தேவருக்கே பரம் என்கை. பரமாகையாவது,— ஸர்வதேஶ ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வப்ரகார நிர்வாஹ்யனாகை. 60.

61, பதவுரை:— ஶரணத!—ஶரணமளிக்கும் பிரானே!, அஹம்—அடியேன், ஜகதி—உலகில், க்யாத யஶஸாம்—ப்ரஸித்தமான புகழையுடையவர்களும், ஶுசீநாம்—

* ( ) இக்குறியினுள் இருப்பவை ப்ரக்ஷிப்தமாயிருக்கலாம்.

**जनित्वाऽहं वंशे महति जगति ख्यातयशसां शुचीनां युक्तानां गुणपुरुषतत्त्वस्थितिविदाम् ।**
**निसर्गादेव त्वच्चरणकमलैकान्तमनसामधोऽधः पापात्मा शरणद ! निमज्जामि तमसि ॥ ६१ ॥**

61. ஜநித்வாऽஹம் வம்ஶே மஹதி ஜகதி க்யாதயஶஸாம்
ஶுசீநாம் யுக்தாநாம் குணபுருஷதத்த்வஸ்திதிவிதாம் ।
நிஸர்க்காதேவ த்வச்சரணகமலைகாந்தமநஸாம்
அதோऽத: பாபாத்மா ஶரணத ! நிமஜ்ஜாமி தமஸி ॥

---

பரிசுத்தமானவர்களும், யுக்தாநாம்—உன்னுடன் சேர்க்கையை விரும்புபவர்களும், குண புருஷ தத்த்வ ஸ்திதி விதாம்—அசித், சித் என்னும் தத்வங்களின் ஸ்வரூபஸ்வபாவங்களை அறிந்தவர்களும், நிஸர்க்காத் ஏவ—இயற்கையாகவே, த்வத் சரண கமல ஏகாந்த மநஸாம்—உன்னுடைய திருவடித்தாமரைகளிலேயே ஈடுபட்ட மனஸ்ஸை உடையவர்களுமான பெரியோர்களுடைய, மஹதி வம்ஶே—பெருங்குலத்திலே, ஜநித்வா—பிறந்தும், பாபாத்மா—பாபமே உருவெடுத்தாற் போலிருப்பவனாய், தமஸி—ப்ரக்ருதியில், அத: அத:—கீழே கீழே, நிமஜ்ஜாமி—அழுந்திக் கொண்டிருக்கிறேன்.

அவ:— (ஜநித்வேதி) "நீர் மஹாவம்ஶப்ரஸூதரல்லீரோ? நிராலம்பரைப்போலே இங்ஙன் சொல்லுகிறதென்?" என்ன, "இவ்வம்ஶத்தில் பிறந்தேனேயாகிலும் பாபப்ரசுரனுகையாலே ஸம்ஸாரத்தில் அழுந்தாநின்றேன்; எடுத்தருளவேண்டும்" என்கிறார்.

வ்யா:— (மஹதி வம்ஶே அஹம் ஜநித்வா) வம்ஶத்துக்கு மஹத்தையாவது,— மஹாத்மாக்கள் வந்து ஜனிக்கை. (324) "**एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम्**" (ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருஶம்) என்னும் வம்ஶத்திலே பிறந்து வைத்து அநர்த்தப்படா நின்றேனென்கை. (ஜகதி க்யாதயஶஸாம்) சதுஸ்ஸாகரபர்யந்தமான பூமியெல்லாம் ப்ரஸித்தமான புகழையுடையவர்கள். "திகழும் தன் திருவருள் செய்துலகத்தார் புகழும் புகழ் தானது காட்டித்தந்து" என்கிறபடியே பகவத்விஷயீகாரத்தால் வந்த புகழ். (ஶுசீநாம்) பகவத்வ்யதிரிக்தவிஷயங்களில் போக்யதாகந்தரஹிதராயிருக்கை. ஆந்தரபாஹ்யமான உபய ஶுசியைச் சொல்லவுமாம். இவ்வம்ஶத்திலே பிறந்த ஶூபாஸ்பதமென்னக்கடவீரோ? (யுக்தாநாம்) (325) "**कृतकृत्याः प्रतीक्षन्ते**" (க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே) என்கிறபடியே நித்ய யோகத்தில் ஆகாங்க்ஷமாணராயிருக்குமவர்கள். "மாக வைகுந்தம் காண்பதற்கு என் மனம் ஏகமெண்ணும்" என்று இருக்கை. இளையபெருமாளைப்போலே தேவரோடேயல்லது செல்லாதவர்களென்னுதல். "இப்படிப்பட்ட வம்ஶத்திலே பிறந்து 'இச்சை போராது' என்னக்கடவீரோ?" என்ன; (குணபுருஷதத்த்வஸ்திதிவிதாம்) சிதசிதீஶ்வரர்களுடைய ஸ்வரூபஸ்வபாவ ஸம்பந்தங்களை அறியுமவர்கள். 'குணம்' என்று குணாஶ்ரயமான ப்ரக்ருதியைச் சொல்லுகிறது. ஸ்திதியாவது,— ஸ்வரூபஸ்வபாவாதிகள். (நிஸர்க்காதேவேத்யாதி) வத்ஸமானது ஜனித்தபோதே தாய் முலையிலே வாய் வைக்குமாப்போலே த்வச்சரணாரவிந்தங்களிலே ஏகாந்தமான மனஸ்ஸை ஜன்மப்ரப்ருதியாக உடையவர்கள். கீழ்ச்சொன்ன ஶுசியோகாதிகள் நைஸர்க்கிகமென்கை. (பாபாத்மா) பாபந்தான் ஒரு வடிவு கொண்டாற் போலே இருக்குமவன். ஜ்ஞாநாநந்தமொழிய, பாபமே நிரூபகமாயிருக்கை. (ஶரணத) இவ்வளவிலும் உன் பக்கல் அபகாரமுண்டாம்படி ஆள் பார்த்து உழிதரும் தேவரீரே. (தமஸி

**अमर्यादः क्षुद्रश्चलमतिरसूयाप्रसवभूः कृतघ्नो दुर्मानी स्मरपरवशो वञ्चनपरः ।
नृशंसः पापिष्ठः कथमहमितो दुःखजलधेरपारादुत्तीर्णस्तव परिचरेयं चरणयोः ॥ ६२ ॥**

62. அமர்யாத: க்ஷுத்ரஶ் சலமதிரஸூயாப்ரஸவபூ:
க்ருதக்நோ துர்மாநீ ஸ்மரபரவஶோ வஞ்சநபர: ।
ந்ருஶம்ஸ: பாபிஷ்ட: கதமஹமிதோ து:க்கஜலதே:
அபாராதுத்தீர்ணஸ் தவ பரிசரேயம் சரணயோ: ॥

---

அதோऽதோ நிமஜ்ஜாமி) ப்ரக்ருதியிலே, தேவர் எடுக்க நினைத்தாலும் கைக்கெட்டாதபடி ஆழநின்றேன். "பன்மாமாயப் பல் பிறவியில் படிகின்ற யான்" என்கிறபடியே இன்னம் தரை கண்டிலேன் என்கிறார். இத்தால் ஸாந்தாநிகர் தேவர் பக்கல் அவகாஹித்த அளவும் நான் ப்ரக்ருதியிலே உள் புக்கேனென்கை. ஜனித்த வம்ஶமிது; தேவர் ஶரண்யர்; நான் படுகிற பாடு இதுவிறே. அஸமஞ்ஜனைப்போலே வம்ஶப்ரபாவமும் ஜீவியாதே தேவருடைய நீர்மையும் ஜீவியாதேயிருக்கிறபடியிறே என்னுடைய பாபப்ராசுர்யம் என்கிறார். 61.

62. பதவுரை:— அமர்யாத:—வேதவரம்பை மீறினவனும், க்ஷுத்ர:—நீச விஷயங்களில் மிகவும் சாபல்யமுள்ளவனும், சல மதி:—நிலையற்ற நெஞ்சையுடையவனும், அஸூயா ப்ரஸவ பூ:—(பிறர் குணத்தையும் தோஷமாகப் பார்க்கும்) அஸூயைக்குப் பிறப்பிடமானவனும், க்ருதக்ந:—நன்மை செய்தவர்களுக்குத் தீமை செய்பவனும், துர்மாநீ—ஹேயமான கர்வத்தையுடையவனும், ஸ்மர பரவஶ:—காம வசப்பட்டவனும், வஞ்சநபர:—வஞ்சிப்பவனும், ந்ருஶம்ஸ:—கொடுமையான காரியங்களைச் செய்பவனும், பாபிஷ்ட:—பாபத்திலேயே ஊன்றியிருப்பவனுமான, அஹம்—நான், இத:—இந்த, அபாராத்—கரைகாணவொண்ணாத, து:க்க ஜலதே:—துன்பக்கடலிலிருந்து, உத்தீர்ண:—கரையேறியவனாய், தவ சரணயோ:—உன்னுடைய திருவடிகளில், கதம் பரிசரேயம்—எப்படி அடிமைசெய்யப்பெறுவேன்?

அவ:— (அமர்யாத:) "இவ்வம்ஶத்தில் ஜன்மத்தையும் அஸத்ஸமமாக்கவல்ல பாபம் உமக்கு ஏது?" என்ன, "பாபாத்மா" என்கிறத்தைப் பரக்கப்பேசுகிறார்.

வ்யா:— (அமர்யாத:) வேதமர்யாதைக்கு பஹிர்ப்பூதன். (க்ஷுத்ர:) க்ஷுத்ரத்வமாவது,— நீசவிஷயங்களில் அதிசபலன்; உஜ்ஜீவனஹேதுவான வேதமர்யாதையை அநாதரித்து, அதுக்கு மேலே விநாஶஹேதுவான நீசஸேவையிலே அதிசபலன். (சலமதி:) "நீசவிஷயப்ராவண்யம் நாஶஹேது; வேதப்ரதிபாத்யவிஷயமே உத்தேஶ்யம்" என்று ஒரு ஜ்ஞாநாதிகன் ஹிதம் சொன்னால், அதில் வ்யவஸ்திதசித்தனல்லேன். (அஸூயாப்ரஸவபூ:) பரகுணங்களிலே தோஷத்தை உண்டாக்குகைக்கு உத்பத்திஸ்தானம். தனக்கு தோஷமுண்டாமளவன்றிக்கே, பிறர் குணங்களிலும் தோஷத்தை உண்டாக்குமவனென்கை. (க்ருதக்ந:) உபகரித்த விஷயத்திலே அபகாரத்தைப் பண்ணுகை. (326) "**गोघ्ने चैव सुरापे च चोरे भग्नव्रते तथा । निष्कृतिर्विहिता सद्भिः कृतघ्ने नास्ति निष्कृतिः ॥**" (கோக்நே சைவ ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா । நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: ॥) என்று மாதாபித்ருஶததிலும் வத்ஸலதரமான ஶாஸ்த்ரத்திலும் பஹிஷ்க்ருதனென்கை. (துர்மாநீ) இப்படி நிக்ருஷ்டனாயிருக்கச்செய்தேயும் ஸர்வோத்க்ருஷ்டருக்கு அவ்வருகாகத் தன்னை நினைத்து, (327) "**ईश्वरोऽहं**" (ஈஶ்வரோऽஹம்) என்று இருக்குமவன். (ஸ்மரபரவஶ:)

रघुवर ! यदभूस्त्वं तादृशो वायसस्य प्रणत इति दयालुर्यच्च चैद्यस्य कृष्ण ! ।
प्रतिभवमपराद्धुर्मुग्ध ! सायुज्यदोभूर्वद किमपदमागस्तस्य तेऽस्ति क्षमायाः ॥ ६३ ॥

63. ரகுவர ! யதபூஸ்த்வம் தாத்ருஶோ வாயஸஸ்ய
ப்ரணத இதி தயாளுர் யச்ச சைத்யஸ்ய க்ருஷ்ண ! ।
ப்ரதிபவமபராத்துர் முக்த ! ஸாயுஜ்யதோபூ:
வத கிமபதமாகஸ்தஸ்ய தேऽஸ்தி க்ஷமாயா: ॥

தன்னை உத்க்ருஷ்டாத்மாக்களுக்கும் மேலாக நினைத்திருக்கிறவளவன்றிக்கே, விஷயப்ராவண்ய ஹேதுவான காமனுக்குப் பரதந்த்ரனாகவும், பகவத்ப்ராவண்யஹேதுபூதராானாரைத் தாழ நினைத்தும் அனர்த்தப்பட்டேனென்கை. (வஞ்சநபர:) காமபாரவஶ்யத்தாலே விஷயங்களிலே ப்ரவணனாய், அவ்விஷயங்களிலும் த்ரவ்யங்களை வஞ்சித்து வர்த்திக்குமவன். "சூதனாய்க் கள்வனாகி", "சூதினைப் பெருக்கிக் களவினைத் துணிந்து" என்று சொல்லுகிறபடியே. (ந்ருஶம்ஸ:)தான் விரும்பின விஷயங்களில் வஞ்சகனாயன்றிக்கே,தன்னை விஶ்வஸித்திருப்பார் பக்கல் க்ரூரகர்மாவாயிருக்குமவன். (பாபிஷ்ட:) இதுக்கெல்லாம் அடி பாபருசியாய், அதிலே வ்யவஸ்திதனாயிருக்கை. "பாவமே செய்து பாவியானேன்", "ஒப்பில்லாத் தீவினையேன்", "நானே நானாவிதநரகம் புகும் பாவம் செய்தேன்", (230) "**अहमस्म्यपराधानामालयः**" (அஹமஸ்ம்யபராதாநாமாலய:), (328) "**रावणो नाम दुर्वृत्तः**" (ராவணோ நாம துர்வ்ருத்த:), "நீசனேன் நிறைவொன்றுமிலேன்" என்று அறிவுடையார் தந்தாமைப் பேசும்படியான பாபத்திலே நிஷ்டையுடையவன். (அபாராத் து:க்கஜலதே: கதம் உத்தீர்ண:) ஒரு நாளிலே தொடங்கின து:க்கமென்னுதல், மேல் ஒரு நாளிலே முடிவு காணுதல் செய்யுமதல்லாமையாலே, த்ருஷ்டிவிஷம்போலே காணவே பயமாயிருக்கிற து:க்கஸாகரத்தில் நின்றும். (கதமுத்தீர்ண:) இதில் அழுந்திக்கிடக்கிற நான் கரையேறவென்பதொன்று உண்டோ? "முத்தனார்" என்கிறபடியே அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தரான தேவரே கரையேற்றவேண்டுமென்கை. (தவ சரணயோ: கதம் பரிசரேயம்) து:க்கநிவ்ருத்திக்கும் அக்ஷமனாயிருக்கிற நான் நித்யஸூரிகள் அடிமை செய்கிற தேவர் திருவடிகளிலே எங்ஙனே பரிசர்யை பண்ணுவன் ? து:க்கநிவ்ருத்தியும் தேவருக்கே பரம்; அடிமைகொள்ளுகையும் தேவருக்கே பரமென்கை. 62.

63. பதவுரை:— ரகுவர !—ரகுகுலத்தில் மேலானவனை ராமனாக அவதரித்தவனே!, தாத்ருஶ: வாயஸஸ்ய—அப்படிப்பட்ட (பெரும் பாவம் செய்த) காகாஸுரன் விஷயத்தில், ப்ரணத: இதி—ஶரணாகதன் என்று நினைத்து, த்வம்—நீ, தயாளு: அபூ:—அருளினையன்றோ. முக்த ! க்ருஷ்ண !—தோஷங்களை அறியாத க்ருஷ்ணனே !, ப்ரதிபவம்—ஜன்மந்தோறும், அபராத்து:—அபராதம் செய்த, சைத்யஸ்ய—சேதிகுலத்தவனை சிசுபாலனுக்கு, ஸாயுஜ்யத: அபூ: ச யத்—மோக்ஷம் கொடுத்தருளினவனல்லவா. தஸ்ய தே—அப்படிப்பட்ட உன்னுடைய, க்ஷமாயா:—பொறுமைக்கு, அபதம்—பாத்திரமல்லாத, ஆக:—பாபம், கிம் அஸ்தி—என்ன இருக்கிறது ? வத—(நீயே) அருளிச்செய்யவேணும்.

அவ:— (ரகுவரேதி) "புத்திபூர்வேண பண்ணின ப்ராதிகூல்யங்களைப் போக்கப் போமோ ?" என்ன, "காகாபராதத்தையும், ஶிஶுபாலாபராதத்தையும் பொருத்தருளின தேவருக்குப் பொறுக்கமுடியாதது உண்டோ ?" என்கிறார்.

வ்யா:— (ரகுவர) ஶரணாகதரக்ஷணம் பண்ணிப் போந்த ரகுப்ரப்ருதிகள் ஸாதகர் என்னும்படி ஶரணாகதரக்ஷணத்திலே அதிகராயிருக்கை. ரகுராக்ஷஸஸம்வாதத்தில் ஶரணாகதரக்ஷணம் பண்ணிப்போந்தவர்களளவன்றிக்கே, (329) "**सुग्रीवं शरणं गतः**" (ஸுக்ரீவம் ஶரணம் கத:) என்றும், (308) "**त्वयि किञ्चित्समापन्ने**" (த்வயி கிஞ்சித் ஸமாபந்நே) என்றுமிறே இவர் படி. (தாத்ருஶ:) அப்படிப்பட்டவன் என்னுமதொழிய அனுபாஷிக்கைதான் அஸஹ்யமாம்படியிறே பண்ணின அபராதம். (வாயஸஸ்ய) அபராதம் பண்ணுகைக்காக, ப்ராப்தமான தேவத்வத்தை விட்டு நிஹீனமான திர்யக்த்வத்தைப் பரிக்ரஹித்தானென்கை. (ப்ரணத இதி) (199) "**स पित्रा च परित्यक्तः**" (ஸ பித்ரா ச பரித்யக்த:) என்கிறபடியே, இவனைப் பரிக்ரஹிக்கில் நமக்கு அனர்த்தம் என்று ஸர்வரும் உபேக்ஷிக்க, புகலற்று (199) "**स तं निपतितं भूमौ**" (ஸ தம் நிபதிதம் பூமௌ) என்கிறபடியே விழுந்தவனை ஶரணாகதனென்று ப்ரதிபத்தி பண்ணி. ருஷி, (199) "**शरणागतं**" (ஶரணாகதம்) என்றதும் ராமாபிப்ராயத்தாலே. (த்வம் தயாளுரபூ:) ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காமளவிலே தேவர் (199) "**कृपया पर्यपालयत्**" (க்ருபயா பர்யபாலயத்) என்கிறபடியே தயாளுவானீர். (330) "**क्षिपामि**" (க்ஷிபாமி) என்றும், (331) "**न क्षमामि**" (ந க்ஷமாமி) என்றும் பண்ணிவைத்த ப்ரதிஜ்ஞை பலியாதே, தேவர் க்ருபாகார்யமே பலித்துவிட்டது பிராட்டி ஸந்நிதியாகையாலிறே. (யச்ச) சஶப்தத்தாலே, "காகாபராதத்தைப் பொறுத்தவளவேயோ?" என்று உதாஹரணாந்தரத்தை ஸமுச்சயிக்கிறார். (சைத்யஸ்ய) யதுவம்ஶபூதரிற்காட்டில், சேதிகுலோத்பவனென்று தன்னை உத்க்ருஷ்டனாக அபிமானித்திருக்குமவன். (ப்ரதிபவமபராத்து:) காகத்தைப்போலே ஒருகால் அபராதத்தைப் பண்ணினவளவன்றியே ஜன்மந்தோறும் ப்ராதிகூல்யத்திலே வாஸனை பண்ணினவனுக்கு. (ஸாயுஜ்யதோऽபூ:) (228) "**बहूनां जन्मनामन्ते**" (பஹூநாம் ஜந்மநாமந்தே) என்றும், (332) "**अनेकजन्मसंसिद्धः**" (அநேகஜந்மஸம்ஸித்த:) என்றும், ஜன்மந்தோறும் ஆஶ்ரயித்தார் பெறும் பேற்றையிறே கொடுத்தது. ஸாயுஜ்யமாகிறது,— ஸமானகுணயோகம். (333) "**सायुज्यं प्रतिपन्ना ये तीव्रभक्तास्तपस्विनः। किङ्करा मम ते नित्यं भवन्ति निरुपद्रवाः॥**" (ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரபக்தாஸ் தபஸ்விந: । கிங்கரா மம தே நித்யம் பவந்தி நிருபத்ரவா: ॥) (முக்த) "ஆயர்குலத்தீற்றிளம்பிள்ளை" என்கிறபடியே அபராதாநபிஜ்ஞனிறே க்ருஷ்ணன். அதுக்கு மேலே ஒரு பேற்றை, முடிக்கிற தஶையிலே ஸ்வரூபமான வடிவைக் கண்ணுக்கு இலக்காக்கின ஏற்றம். (தஸ்ய தே க்ஷமாயா: அபதமாக: கிமஸ்தி) காலபேதத்தாலே தேவர் வேறே யொருவனாகிறீரல்லீர். தேவர் க்ருபைக்கு அவிஷயமான பாபம் உண்டோ? கிம் க்ஷேபே. அபதம்—அஸ்தானம்; அவிஷயம் இத்யர்த்த:. (வத) ஸர்வஜ்ஞரான தேவருக்கும் மறுமாற்றமில்லை; க்ஷமைக்கு விஷயீகரிக்குமித்தனை என்கை. 63.

64. பதவுரை:— நாத!—எம்பிரானே!, ஸக்ருத் ஏவ ப்ரபந்ந: இதி—'ஒரு தடவை ஶரணாகதி செய்தேன்' என்றும், அஹம் தவ அஸ்மி இதி ச—'நான் உனக்கே ஆட்பட்டவனாக வேணும்' என்றும் (சொல்லி), யாசமாந: (அஹம்)—யாசிக்கிற அடியேன், ப்ரதிஜ்ஞாம் ஸ்மரத: தவ—(விபீஷணனைக்குறித்துக் கடற்கரையில் பண்ணின) பிரதிஜ்ஞையை நினைத்துக்கொண்டிருக்கும் உனக்கு, நநு அநுகம்ப்ய:—அருள்செய்யத்தக்கவனன்றோ; தே இதம் வ்ரதம்—உன்னுடைய இந்த விரதமானது, மத் ஏக வர்ஜம் கிம்?—என்னை ஒருவனைமட்டும் தவிர்த்தோ?

ननु प्रपन्नस्सकृदेव नाथ ! तवाहमस्मीति च याचमानः ।
तवानुकम्प्यः स्मरतः प्रतिज्ञां मदेकवर्जं किमिदं व्रतं ते ॥ ६४ ॥

64. நநு ப்ரபந்நஸ் ஸக்ருதேவ நாத ! தவாஹமஸ்மீதி ச யாசமாந: ।
தவாநுகம்ப்ய: ஸ்மரத: ப்ரதிஜ்ஞாம் மதேகவர்ஜம் கிமிதம் வ்ரதம் தே ॥

அவ:— (நந்விதி) "ஸ்வதந்த்ரரான நாம் சிலர் திறத்தில் ஒன்றைச் செய்தோமென்று, இதுவே மர்யாதையாகக்கடவதோ?" என்ன, "கடற்கரையிலே ஆஶ்ரிதஸாமாந்யத்திலே தேவர் பண்ணின ப்ரதிஜ்ஞை என்னையொருவனை ஒழியவோ?" என்கிறார்.

வ்யா:— (நநு ப்ரபந்ந:) (44) "**सकृदेव**" (ஸக்ருதேவ) என்றத்தை ஸ்மரிக்கிறார். (ஸக்ருதேவ) என்றது,— *'ஸஹஸைவ' என்று ஆழ்வான் நிர்வஹிக்கும். "அநாதிகாலம் ஸம்ஸரித்துப்போந்த இவன், ஒரு ஜன்மமெல்லாம் ப்ரபத்தியை அநுஸந்தித்தால் தான் 'ஸக்ருத்' என்கைக்குப் போருமோ?" என்பர் எம்பார். "பகவத்ப்ரபாவத்தைப் பார்த்தால் ஒருகாலுக்குமேல் மிகை. ப்ராப்யருசி ப்ராப்தியளவும் அநுவர்த்திக்கும்" என்பர் பட்டர். (நாத) ஒருகால் பண்ணின ப்ரபத்தி அமைகிறது வகுத்த நாதனுகையாலே. ஆபிமுக்யமாத்ரமே அமைந்திருக்கிறது,— இழவுபேறு தன்னதான குடல் துடக்கு. அஶரண்யவிஷயத்தில் ஆர்த்தப்ரபத்திக்கும் பலம் ப்ராபகம். வகுத்தவிஷயத்தில் த்ருப்தப்ரபத்திக்கும் பலவ்யாப்தி யுண்டு. (தவாஸ்மீதி ச யாசமாந:) (அஹம் தவாஸ்மி) ப்ரத்யக்வஸ்துவானது கிஞ்சித்கரித்துத் தன் ஸத்தையை லபிக்கவேணுமென்று யாசிக்கை; § உத்தரார்த்தப்ரக்ரியையாலே கைங்கர்யத்தை ப்ரார்த்திக்கை. "த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே" என்று, என்னுடைய வெறுமையை முன்னிட்டுக்கொண்டு ப்ரபத்திபண்ணினேன். "ஐகாந்திகநித்யகிங்கர: ப்ரஹர்ஷயிஷ்யாமி" என்று ப்ராப்யாபேக்ஷையும் பண்ணினேன். இரண்டு பதத்தாலும் பக்திப்ரபத்திகள் இரண்டிலும் அதிகரித்த அதிகாரிகள் இருவரையும் சொல்லுகிறது என்பாரு முண்டு. (ப்ரதிஜ்ஞாம் ஸ்மரதஸ் தவ அநுகம்ப்ய:) (44) "**एतद्व्रतं मम**" (ஏதத் வ்ரதம் மம) என்று கடற்கரையில் பண்ணின ப்ரதிஜ்ஞையை ஸ்மரியாநின்றுகொண்டு தேவருக்கு அநுக்ராஹ்யன். (தே வ்ரதமிதம் மதேகவர்ஜம் கிம்) ஸர்வஸாதாரணபூதரான தேவருடைய அஸாதாரணமான இந்த ஸங்கல்பம் என்னையொழிந்திருக்குமோ? கிம் க்ஷேபே. 'இன்னானை யொழிய' என்று விஶேஷித்ததாகிலன்றோ எனக்கு இழக்கவேண்டுவது. தேவர் ஸத்ய ஸங்கல்பராகையால் என்னை ரக்ஷித்தருளவேணுமென்கை. 64.

65. பதவுரை:— மத் வ்ருத்தம்—என்னுடைய நடத்தையை, அசிந்தயித்வா—நினைக்காமல், அக்ருத்ரிம த்வத் சரணாரவிந்த ப்ரேமப்ரகர்ஷ அவதிம்—உன்னுடைய திருவடித்தாமரைகளில் இயற்கையாயிருக்கும் மேலான அன்பிற்கு எல்லைநிலமாயிருப்பவரும், ஆத்மவந்தம்—ஆத்மஸ்வரூபத்தை உணர்ந்தவரும், பிதாமஹம்—எனக்குப் பாட்டனருமாகிய, நாதமுநிம்—நாதமுனிகளை, விலோக்ய—கடாக்ஷித்து, ப்ரஸீத—(என்னை) க்ஷமித்தருளவேண்டும்.

அவ:— (அக்ருத்ரிமேதி) (334) "**रामो द्विर्नाभिभाषते**" (ராமோ த்விர்நாபிபாஷதே) என்கிற ஸங்கல்பத்தை விட்டீரேயாகிலும், பெரிய முதலியாரோடு வித்யையாலும், ஜன்மத்

* ஸஹஸைவ—உடனேயே. § உத்தரார்த்தம்—த்வயத்தின் பின்பாகம்.

**अकृत्रिमत्वच्चरणारविन्दप्रेमप्रकर्षावधिमात्मवन्तम् ।**
**पितामहं नाथमुनिं विलोक्य प्रसीद मद्वृत्तमचिन्तयित्वा ॥ ६५ ॥**

65. அக்ருத்ரிமத்வச்சரணாரவிந்தப்ரேமப்ரகர்ஷாவதிமாத்மவந்தம் ।
பிதாமஹம் நாதமுநிம் விலோக்ய ப்ரஸீத மத்வ்ருத்தமசிந்தயித்வா ॥

தாலும் உண்டான ஸம்பந்தத்தையே பார்த்தருளி, என்னுடைய நன்மை தீமைகளைப் பாராதே விஷயீகரிக்கவேணும்" என்ன, அதுக்குக் கண்ணழிவு இல்லாமையாலே, "அப்படிச் செய்கிறோம்" என்று ஈஶ்வரன் அனுமதி பண்ண, தாம் அனுமதி பெற்றாராய், ஸ்தோத்ரம் தலைக்கட்டுகிறார்.

வ்யா:— (அக்ருத்ரிம) * க்ரியயா நிர்வ்ருத்த: க்ருத்ரிம:; தத்ரஹித: அக்ருத்ரிம:; ஸ்வாபாவிக இத்யர்த்த:. குலந்தானே யோகிகுலமாகையாலே நைஸர்க்கிகமென்கை. மெய்யான ப்ரேமமென்னவுமாம். (த்வத்) ப்ராப்தஶேஷியான உன்னுடைய. (சரணாரவிந்த) ஆஶ்ரிதருக்கு இழியும் துறையாய் போக்யமான திருவடிகளை. (ப்ரேமப்ரகர்ஷாவதிம்) ப்ரேமாதிஶயஸீமா பூமியானவர். நமக்கு இதரவிஷயங்களில் ப்ரேமமெல்லாம் இவர்க்கு வகுத்தவிஷயத்திலேயிறே இருப்பது. (ஆத்மவந்தம்) பகவச்சேஷத்வம் ஸ்வரூபமாகவே ஆத்மயாதாத்ம்யஜ்ஞானமுடையவரென்கை. 'தநவந்தம்' என்னுமாப்போலே. (பிதாமஹம் நாதமுநிம்) குடல் துடக்கை உடையராய், பகவத்ஜ்ஞாநநிதியாயுள்ளவரை. (விலோக்ய) கடாக்ஷித்து. (ப்ரஸீத) அபராதங்களைப் பொறுத்தருளவேணும். (மத்வ்ருத்தமசிந்தயித்வா) அஸத்கர்மத்தை விஸ்மரிக்கக்கடவராகவேணும் என்கை. 'மத்வ்ருத்தம்' என்று ஸத்கர்மத்தை நினைக்கிறது. வ்ருத்தவானென்றால் ஸத்கர்மவ்ருத்தனையிறே சொல்லுகிறது. ஸ்வகதமானவற்றை அநாதரித்து, பெரிய முதலியார் ஸம்பந்தம் எனக்குத்தஞ்சமாகவேணுமென்று ப்ரார்த்தித்து, ஸ்தோத்ரத்தைத் தலைக்கட்டியருளுகிறார்.

ஆளவந்தார் விஷயமாக எம்பெருமானார் அருளிச்செய்த தனியன்:—

**यत्पदाम्भोरुहध्यानविध्वस्ताशेषकल्मषः ।**
**वस्तुतामुपयातोऽहं यामुनेयं नमामि तम् ॥**

யத்பதாம்போருஹத்யாநவித்வஸ்தாஶேஷகல்மஷ: ।
வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ॥

ஆளவந்தார் திருவடிகளே ஶரணம்.
பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே ஶரணம்.
ஸ்தோத்ரரத்ந வ்யாக்யானம் ஸம்பூர்ணம்.



* ஒரு காரியத்தினால் உண்டாக்கப்பட்டது க்ருத்ரிமம்; அப்படியற்றது அக்ருத்ரிமம்; இயற்கையானது என்று பொருள்.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# சதுச்ச்லோகீ வ்யாக்யாநம்.

**श्रीमत्कृष्णसमाह्वाय नमो यामुनसूनवे। यत्कटाक्षैकलक्ष्याणां सुलभः श्रीधरस्सदा॥**

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே।
யத்கடாக்ஷைக லக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ்ஸதா॥

அவதாரிகை:— நம் தர்ஶனத்துக்கு ப்ரதாநம் ரஹஸ்யத்ரயமென்றும், ஶ்லோகத்வயமென்றும், சதுஶ்ஶ்லோகீ என்றும் நம் ஆசார்யர்கள் அருளிச்செய்துபோருவர்கள். இதில் திருமந்த்ரத்தாலே ஸ்வரூபமும் ஸ்வரூபாநுரூபமான புருஷார்த்தமும் ப்ரதிபாதிக்கப்படுகையாலே, அந்தப் புருஷார்த்தத்துக்கு உபாயசிந்தை பண்ணுகிறது சதுஶ்ஶ்லோகியாலும் ஶ்லோகத்வயத்தாலும். இவ்விடத்தில் சதுஶ்ஶ்லோகியால் செய்கிறது என்னென்றால்: நம்பெருமாளுக்கு தேவதாந்தரங்களைக்காட்டிலும் வாசி மோக்ஷப்ரதத்வம், ஜகத்காரணத்வம் என்கிற இவை; இவைதான் எத்தாலே வந்ததென்றால்; ஸ்ரிய:பதித்வநாராயணத்வங்களாலே வந்த பரத்வாதிகுணங்களாலே என்கை. வேதார்த்தமாயிருந்துள்ள அர்த்தபஞ்சகத்துக்கு விவரணமான ஸ்ரீவிஷ்ணுபுராணத்திற்கு........* பர்யாலோசனம் பண்ணியிருந்துள்ள ஆளவந்தார் ஸ்தோத்ரீகரித்து,ஸ்ரிய:பதித்வநிபந்தநமான ஸௌலப்யாதிகுணங்களை அநுபவிக்கிறார் சதுஶ்ஶ்லோகியாலே. இதில் முதல் ஶ்லோகத்தால் பிராட்டியினுடைய நாராயண ஸம்பந்தநிபந்தநமான பரத்வம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. இரண்டாம் ஶ்லோகத்தாலே அந்தப் பரத்வத்தை அனுபவித்துக்கொண்டு பிராட்டியுடைய புருஷகாரத்வம் சொல்லப்படுகிறது. மூன்றாம் ஶ்லோகத்தாலே இப்படிக்கொத்த ஸௌலப்யாதிகுணங்களையுடைய பெரிய பிராட்டியாருக்கு ஜகத்காரணத்வத்திலும் அந்தர்பாவமுண்டு என்னுமிடத்தைச்சொல்லி உபாயகீர்த்தனம் பண்ணப்படுகிறது. நாலாம் ஶ்லோகத்தாலே கீழ்ச்சொன்ன உபாய........* படுவதாயிருந்துள்ள பலஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது.

1. பதவுரை:— பகவதி—கல்யாணகுணங்களால் நிறைந்தவளே!, புருஷோத்தம:—புருஷோத்தமனான பகவான், தே—உனக்கு, காந்த:—பிரியனான கணவன்; பணிபதி:—நாகங்களுக்கு அரசனான ஆதிசேஷன், ஶய்யா—படுக்கை; வேதாத்மா—வேதத்தை சரீரமாக உடையவனும், விஹகேஶ்வர:—புள்ளரையனுமான பெரியதிருவடி, ஆஸநம் வாஹநம்—ஆஸனமாகவும், வாஹனமாகவுமிருப்பவன்; ஜகந்மோஹிநீ—உலகத்தை மோஹிக்கச்செய்வதான, மாயா—ப்ரக்ருதி, யவநிகா—(உனக்கு) முகத்திரையாயிருக்கிறது; ஸதயித:—தங்களுடைய மனைவிமாருடன் கூடிய, ப்ரஹ்மேஶாதிஸுரவ்ரஜ:—பிரமன், சிவன் முதலிய தேவஸமூஹம், த்வத்தாஸதாஸீகண:—உன்னுடைய தாஸகணமாகவும், தாஸீகணமாகவும்

---

* இவ்விடத்தில் சில பதங்கள் விட்டுப்போயிருக்கின்றன.

## ஆளவந்தார் அருளிச்செய்த சதுச்ச்லோகீ.

**कान्तस्ते पुरुषोत्तमः फणिपतिः शय्याऽऽसनं वाहनं वेदात्मा विहगेश्वरो यवनिका माया जगन्मोहिनी। ब्रह्मेशादिसुरव्रजस्सदयितस्त्वद्दासदासीगणः श्रीरित्येव च नाम ते भगवति ब्रूमः कथं त्वां वयम्॥ १॥**

1. காந்தஸ் தே புருஷோத்தம: பணிபதிஸ் ஸய்யாऽऽஸநம் வாஹநம்
வேதாத்மா விஹகேஸ்வரோ யவநிகா மாயா ஜகந்மோஹிநீ।
ப்ரஹ்மேஸாதிஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீகண:
ஸ்ரீரித்யேவ ச நாம தே பகவதி ப்ரூம: கதம் த்வாம் வயம்॥

---

இருக்கிறது; தே நாமச—உன்னுடைய திருநாமமும், ஸ்ரீ: இதி ஏவ—'ஸ்ரீ:' என்பதேயாயிருக்கிறது; த்வாம்—(இப்படிப்பட்ட பெருமைகள் பொருந்திய) உன்னை, வயம்—(அறிவிலிகளான) நாங்கள், கதம் ப்ரூம:—எப்படிச் சொல்லுவோம்?

வ்யா:— (காந்தஸ்தே புருஷோத்தம:) பிராட்டியை நிரூபிக்கும்போது எம்பெருமானுடைய ஸம்பந்தநிபந்தநநிரூபணம் பண்ணவேணும். இவனையும் இவளுடைய ஸம்பந்தத்தாலே என்றும் நிரூபிக்கவேண்டும். அதெங்ஙனே? என்னில்: (1) "**कः श्रीः श्रियः**" (க: ஸ்ரீ: ஸ்ரிய:) என்றும், (2) "**श्रियःश्रियं भक्तजनैकजीवितं**" (ஸ்ரிய: ஸ்ரியம் பக்தஜநைகஜீவிதம்) என்றும், * "திருவுக்கும் திருவாகிய செல்வா" என்றும், † "என் திருமகள் சேர் மார்வனே என்னும்" என்றும் சொல்லுகையாலே. பிராட்டியை நிரூபிக்கும்போதும் "காந்தஸ்தே புருஷோத்தம:" என்னும்படியாயிறே இருப்பது. "பர்த்தா தே புருஷோத்தம:" என்னாதே, "காந்தஸ்தே புருஷோத்தம:" என்பானென்? என்றால்: (3) "**राघवोऽर्हति वैदेहीं तं चेयमसितेक्षणा**" (ராகவோऽர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா) என்றும், (4) "**भगवन्नारायणाभिमतानुरूपस्वरूपरूपगुणविभवैश्वर्यशीलाद्यनवधिकातिशयासङ्ख्येयकल्याणगुणगणां**" (பகவந்நாராயணாபிமதாநுரூபஸ்வரூப ரூப குண விபவைஸ்வர்யஸீலாத்யநவதிகாதிஸயாऽஸங்க்யேயகல்யாணகுணகணாம்) என்றும், (5) "**श्रीवल्लभ**" (ஸ்ரீவல்லப) என்றும், (6) "**भोगोपोद्घातकेलीचुलकितभगवद्वैश्वरूप्यानुभावा**" (போகோபோத்காதகேளீசுளகித பகவத்வைஸ்வரூப்யாநுபாவா) என்றும், ‡ "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ!" என்றும், § "பித்தர் பனி மலர்மேல் பாவைக்கு" என்றும் ப்ரயோகம் பண்ணுகிறார்களிறே.

"ஹரி:" என்னுதல், "விஷ்ணு:" என்னுதல் செய்யாதே "புருஷோத்தம:" என்பானென்? என்றால்: (7) "**द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च। क्षरस्सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते॥ उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः। यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः॥ यस्मात्क्षरं**" (த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஸ்சாக்ஷர ஏவ ச। க்ஷரஸ் ஸர்வாணி பூதாநி கூடஸ்தோऽக்ஷர உச்யதே॥ உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:। யோ லோகத்ரயமாவிஸ்ய பிபர்த்யவ்யய ஈஸ்வர:॥ யஸ்மாத் க்ஷரம்) இத்யாதி. "அசித்தானது, ஸ்வரூபாந்யதாபாவயுக்தமாயிருக்கும்; சித்தானது ஸ்வபாவாந்யதாபாவயுக்தமாயிருக்கும்; ஆக,

---

* பெரிய திருமொழி. (7-7-1). † திருவாய். (7-2-9). ‡ திருவாய். (10-10-6). § திருநெடுந்தாண்டகம்-18.

(உபயாந்யதாபாவரஹிதன் ஈஶ்வரன் என்றுகொண்டு, தனக்கு விபூதிபூதமான சேதநாசேதந விலக்ஷணனென்றிட்டு 'புருஷோத்தம:' என்கிறதன்றோ" என்கிறார்.

(பணிபதிஶ் ஶய்யா) ஒரு ராஜாவுக்கு அபிமதையாயிருப்பாளொருத்தி, கண்டபோது ரஸிப்பதித்தனையொழிய ஒரு படுக்கையில் ஏறப்பெறுதேயாய்த்து இருப்பது. அங்ஙனன்றிக்கே, (4) "भगवन्नारायणाभिमतानुरूपस्वरूपरूप" (பகவந்நாராயணுபிமதாநுரூபஸ்வரூபரூப), என்றும், ‡ "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவை" என்றும், (3) "राघवोऽर्हति वैदेहीं" (ராகவோऽர்ஹதி வைதேஹீம்) என்றும் இப்படி ப்ரமாணம் உண்டாகையாலே கேவலம் அபிமதையான மாத்ரமன்றிக்கே, அநுரூபையுமாயிருக்கையாலே அவனுக்கான படுக்கை இவளுக்கும் ப்ராப்தமென்கிறார். (பணிபதி:) என்கையாலே, (8) "अकारेणोच्यते विष्णुस्सर्वलोकेश्वरो हरिः। उद्धृता विष्णुना लक्ष्मीरुकारेणोच्यते सदा॥ मकारस्तु तयोर्दास इति प्रणवलक्षणम्॥" (அகாரேணுேச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஶ்வரோ ஹரி: । உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணுேச்யதே ஸதா॥ மகாரஸ்து தயோர் தாஸ இதி ப்ரணவலக்ஷணம்), (9) "भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यते। अहं सर्वं करिष्यामि" (பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே। அஹம் ஸர்வம் கரிஷ்யாமி) என்று சொல்லுகிறபடியே ஆத்மவஸ்துவுக்கு ஒரு மிதுநஶேஷத்வம் பரமபுருஷார்த்தமாகையாலே இங்கும் வாஸுகிதக்ஷகப்ரப்ருதிகளான அஷ்டமஹாநாகங்களுக்குப் * பரிப்ருடனுய், ஶேஷபூதருக்கும் தலையாயிருந்துள்ள திருவனந்தாழ்வான் இருக்கும்போது உன் திருப்படுக்கை என்கிறார்.

(ஆஸநம் வாஹநம் வேதாத்மா விஹகேஶ்வர:) (10) "सुपर्णोऽसि गरुत्मान् त्रिवृत्ते शिरो गायत्रं चक्षुः स्तोम आत्मा साम ते तनूर्वामदेव्यं बृहद्रथन्तरे पक्षौ यज्ञा यज्ञियं पुच्छं छन्दांस्यङ्गानि धिष्णियाः शफा यजूंषि नाम" (ஸுபர்ணேऽஸி கருத்மாந் த்ரிவ்ருத்தே ஶிரோ காயத்ரம் சக்ஷு: ஸ்தோம ஆத்மா ஸாம தே தநூர் வாமதேவ்யம் ப்ருஹத் ரதந்தரே பக்ஷௌ யஜ்ஞா யஜ்ஞியம் புச்சம் சந்தாம்ஸ்யங்காநி திஷ்ணியாஶ்ஶபா யஜூம்ஷி நாம) என்கிறபடியே நாகஜாதிகளுக்கு நாயகனை அநந்தன் திருப்படுக்கையானுப்போலே, இங்கும் வேதமயனுய் பறவைகளுக்கு ஆதாரனுயிருந்துள்ள பெரிய திருவடி இவளுக்கு ஆஸநவாஹனங்கள் என்கிறார். அபிமதையானுல் படுக்கையில் அணைக்க ப்ராப்தமாயிருக்கும்; ஏகாஸநத்திற்கொண்டு இருக்க யோக்யையன்றிக்கேயாய்த்து இருப்பது. அங்ஙனன்றிக்கே, (11) "वैकुण्ठे तु परे लोके श्रिया सार्धं जगत्पतिः। आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तैर्भागवतैस्सह" (வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ॥) என்கிறபடியே இவள் அநுகூலரூபையாயிருக்கையாலே இவனுக்கான ஆஸநமும், வாஹனமும் இவளுக்கும் ப்ராப்தம் என்று அருளிச்செய்கிறார்.

ஆக, இப்படிக் கீழ்ச்சொன்ன யுக்திகளாலே பிராட்டிக்கு நித்ய விபூதிஸம்பந்தம் சொல்லப்பட்டது. இனிமேல் ஶ்லோகபூர்வார்த்தாலே லீலாவிபூதியோகமென்ன, ததந்தர்வர்த்திகளாயிருந்துள்ள ப்ரஹ்மருத்ராதி தேவகணங்களுடைய ஶேஷத்வமென்ன இவை சொல்லப்படுகிறது. அதெங்ஙனேயென்னுல்: (யவநிகா மாயா ஜகந்மோஹிநீ) (12) "मायान्तु

‡ திருவாய். (10-10-6). * பரிப்ருடன் — தலைவன்.

प्रकृतिं विद्यान्मायिनन्तु महेश्वरम्" (மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநம் து மஹேஶ்வரம்) என்றும், (13) "इन्द्रो मायाभिः पुरुरूप ईयते" (இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே) என்றும், (14) "दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया। मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते॥" (தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா। மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே॥) என்றும் இத்யாதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிற பகவந்மாயையன்றோ உனக்கு யவநிகை. ஒரு திரையின் உள்ளிருக்கும் பேரைப் புறம்பிலவர் காணுதபடியாய், புறப்பட்டிருக்கும் பேரை உள்ளிருக்குமவர்கள் காணுதபடியாயிற்று இருப்பது. அங்ஙனிருக்கையன்றிக்கே (ஜகந்மோஹிநீ) என்று எம்பெருமானுக்குத் திரோதாயகையாகையன்றிக்கே ஜகத்துக்குத் திரோதாயகையாயிருக்குமென்கிறுர்.

(ப்ரஹ்மேஶாதிஸுரவ்ரஜஸ் ஸதயிதஸ் த்வத்தாஸதாஸீகண:) பூலோகம் துடங்கி ஸத்யலோகபர்யந்தமாக மேலுள்ள லோகங்களென்ன, அதலவிதலஸுதல பாதாளோத்தால ரஸாதல போகவதி பர்யந்தமான கீழேழு லோகங்களென்ன, இவற்றில் காணப்பட்டுடையராயிருந்துள்ள தேவகணங்களென்ன, இவர்களுக்குக் கொத்துமுதலிகளாயிருந்துள்ள ப்ரஹ்மருத்ராதிகளென்ன, ஸரஸ்வதீருத்ராணீபுலோமஜாப்ரப்ருதிகளாயிருந்துள்ள தேவஸ்த்ரீகளென்ன, அப்ஸரோகணங்களென்ன, இவர்களெல்லாரும் ஆணடிமையும், பெண்ணடிமையுமாயிருக்கும் என்கிறுர்.

'இவையெல்லாம் யதார்த்தம் என்றோ? ஸ்தோத்ரம் என்றோ? இது எங்ஙனே கூடும்படி?' என்றுல்: (ஸ்ரீரித்யேவ ச நாம தே) 'ஸ்ரீ' என்றன்றோ உனக்குத் திருநாமம் என்கிறுர். 'இத்தாலே இவளுக்கு ஸர்வஶேஷிணீத்வமும் தெரிவிக்கப்பட்டதோ?' என்றுல்: "ஸ்ரீஞ்–ஸேவாயாம்" என்கிற தாதுவாலே, தன்னையொழிந்த சேதநாசேதநங்களாலே ஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திகளுக்காக ஆஶ்ரயிக்கப்படுகிறுள் என்றுகொண்டு 'ஸ்ரீ' என்கிறது. அதுக்கு ப்ரமாணம் (15) "ईश्वरीं सर्वभूतानां" (ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்) என்றும், (16) "अस्येशाना जगतः" (அஸ்யேஶாநா ஜகத:) என்றும் உண்டாகையாலே. (பகவதி) (17) "तुल्यशीलवयोवृत्तां तुल्याभिजनलक्षणां" (துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம்) என்கிறபடியே எம்பெருமானோடொக்க ஹேயப்ரதிபடமாயிருந்துள்ள கல்யாணகுணைகதாநத்வம் சொல்லப்படுகிறது. "मैत्रेय! भगवच्छब्दस्सर्वकारणकारणे। संभर्तेति तथा भर्ता भकारोऽर्थद्वयान्वितः॥ नेता गमयिता स्रष्टा गकारार्थस्तथा मुने॥ ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः। ज्ञानवैराग्ययोश्चैव षण्णां भग इतीरणा॥ वसन्ति तत्र भूतानि भूतात्मन्यखिलात्मनि। स च भूतेष्वशेषेषु वकारार्थस्ततोऽव्ययः॥ ज्ञानशक्तिबलैश्वर्यवीर्यतेजांस्यशेषतः। भगवच्छब्दवाच्यानि विना हेयैर्गुणादिभिः॥ एवमेष महाशब्दो मैत्रेय भगवानिति। परमब्रह्मभूतस्य वासुदेवस्य नान्यगः॥ तत्र पूज्यपदार्थोक्तिपरिभाषासमन्वितः। शब्दोऽयं नोपचारेण त्वन्यत्र ह्युपचारतः॥" (மைத்ரேய! பகவச்சப்தஸ் ஸர்வகாரணகாரணே। ஸம்பர்த்தேதி ததா பர்த்தா பகாரோऽர்த்தத்வயாந்வித:॥ நேதா கமயிதா ஸ்ரஷ்டா ககாரார்த்தஸ் ததா முநே॥ ஐஶ்வர்யஸ்ய ஸமக்ரஸ்ய வீர்யஸ்ய யஶஸஶ் ஶ்ரிய:। ஜ்ஞாநவைராக்யயோஶ் சைவ ஷண்ணாம் பக இதீரணா॥ வஸந்தி தத்ர பூதாநி பூதாத்மந்யகிலாத்மநி। ஸ ச பூதேஷ்வஶேஷேஷு வகாரார்த்தஸ் ததோऽவ்யய:॥ ஜ்ஞாநஶக்திபலைஶ்வர்யவீர்யதேஜாம்ஸ்யஶேஷத:। பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர் குணாதிபி:॥

ஏவமேஷ மஹாஶப்தோ மைத்ரேய! பகவாநிதி। பரமப்ரஹ்மபூதஸ்ய வாஸுதேவஸ்ய நாந்யக:॥ தத்ர பூஜ்யபதார்த்தோக்திபரிபாஷாஸமந்வித:। ஶப்தோऽயம் நோபசாரேண த்வந்யத்ர ஹ்யுபசாரத:॥) என்றுகொண்டு ப்ரமாணமுண்டாகையாலே. ஸ்ரிய:பதியை நிர்தேஶிக்கும்போது (19) "**प्रदिशतु भगवानशेषपुंसां**" (ப்ரதிஶது பகவாநஶேஷபும்ஸாம்) என்றும், (20) "**स्मर्तव्यो भगवान् हरिः**" (ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:) என்றும், (21) "**भगवान् भूतैर्बालः क्रीडनकैरिव**" (பகவாந் பூதைர் பால: க்ரீடநகைரிவ) என்றும், (4) "**भगवन्नारायण**" (பகவந்நாராயண) என்றும் இப்படி வ்யவஹரிக்கவடுப்பதாயிறே இருப்பது. அவளை நிர்தேஶிக்கும்போது (4) "**भगवतीं श्रियं देवीं**" (பகவதீம் ஸ்ரியம் தேவீம்), "ஸ்ரீரித்யேவ ச நாம தே பகவதி" என்னும்படியாயிருக்கும்.

(ப்ரூம: கதம் த்வாம் வயம்) ஈஶ்வரகுணஸ்தவம் பண்ணும்போது (22) "**अनन्ता वै वेदाः**" (அநந்தா வை வேதா:) என்கிற வேதங்களுமகப்பட, (23) "**यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह**" (யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ) என்றுகொண்டு அளவுகோல் முறிந்து மடங்குப்படியாயிறே இருப்பது. அவன்தன்னையுமகப்பட சுலகித பகவத்வைஶ்வரூப்யையாயிருந்துள்ள உன்னை மந்தமதிகளுக்கு அக்ரேஸராராயிருந்துள்ள நாங்கள் என் சொல்லி வ்யவஹரிப்பது? என்றுகொண்டு பிராட்டியினுடைய பரத்வத்தை ப்ரதிபாதிக்கிறார் ஆளவந்தார். 1.

2. பதவுரை:— லோகைகேஶ்வரி—லோகத்திற்கு ஒரே ஈஶ்வரியாயிருப்பவளே!, லோகநாதயிதே—லோகங்களுக்கெல்லாம் ஸ்வாமியான எம்பெருமானுக்கு ப்ரியமஹிஷியாயிருப்பவளே! காந்தே—கருணைகல்பவல்லியே! யஸ்யா: தே—எந்த உன்னுடைய, நிரவதிம்—அளவற்றதும், ஸ்வத: நித்யாநுகூலம்—இயற்கையாகவே (பகவானுக்கு) எப்போதும் அனுகூலமாயிருப்பதுமான, மஹிமாநம்—பெருமையை, ப்ரபு: த்வத்வல்லப: அபி—ஈச்வரனை உன்னுடைய வல்லபனும், ஆத்மந இவ—தன்னுடைய பெருமையைப்போல், இயத்தயா—இவ்வளவென்று, மாதும் ந அலம்— அளவிட்டறிய மாட்டானே, தாம் த்வாம்—அப்படிப்பட்ட உன்னை, தாஸ இதி—'தாஸன்' என்றும், ப்ரபந்ந இதி ச—'சரணமடைந்தவன்' என்றும், தே தயாம் விதந் அஹம்—உன்னுடைய கருணையை அறியும் நான், நிர்ப்பய:—பயமற்றவனாய், ஸ்தோஷ்யாமி—துதிக்கிறேன்.

வ்யா:— (யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்வல்லபோऽபி ப்ரபுர் நாலம் மாதுமியத்தயா நிரவதிம் நித்யாநுகூலம் ஸ்வத:) (24) "**यस्यायुतायुतांशांशे विश्वशक्तिरियं स्थिता**" (யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்திதா) என்றும், (25) "**स्वशक्तिलेशोद्धृतभूतसर्गः**" (ஸ்வஶக்திலேஶோத்த்ருதபூதஸர்க்க:) என்றும், (26) "**मनसैव जगत्सृष्टिं संहारञ्च करोति यः**" (மநஸைவ ஜகத்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய:) என்றும், (27) "**परास्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च**" (பராஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச) என்றும், (28) "**एको ह वै नारायण आसीत्**" (ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்) என்றும், (29) "**दिव्यो देव एको नारायणः**" (திவ்யோ தேவ ஏகோ நாராயண:) என்றும், இப்படி ப்ரமாணங்களாலே ப்ரதிபாதிக்கப்பட்ட பரத்வத்தை உடையவனாய், உனக்கு வல்லபனான ஸர்வேஶ்வரனுமகப்பட, யச்சப்தத்தாலே அவாங்மநஸகோசரமா

**यस्यास्ते महिमानमात्मन इव त्वद्वल्लभोऽपि प्रभुः नालं मातुमियत्तया निरवधिं नित्यानुकूलं स्वतः।**
**तां त्वां दास इति प्रपन्न इति च स्तोष्याम्यहं निर्भयो लोकैकेश्वरि! लोकनाथदयिते! दान्ते! दयान्ते विदन्॥ २॥**

2. யஸ்யாஸ்தே மஹிமாநமாத்மந இவ த்வத்வல்லபோऽபி ப்ரபு:
நாலம் மாதுமியத்தயா நிரவதிம் நித்யாநுகூலம் ஸ்வத: ।
தாம் த்வாம் தாஸ இதி ப்ரபந்ந இதி ச ஸ்தோஷ்யாம்யஹம் நிர்ப்பயோ
லோகைகேஶ்வரி ! லோகநாததயிதே ! தாந்தே ! தயாந்தே விதந் ॥

---

யிருக்கிற உன்னுடைய அளவிறந்திருக்கிற பெருமையை இவ்வளவென்று நிரூபிக்குமளவில் * "தனக்கும் தன் தன்மையறிவரியான்" என்கிறபடியே தன் வைபவநிரூபணம் பண்ணத் தான் மாட்டாதாப்போலே உன்னுடைய வைபவநிரூபணம் பண்ணும்போது அஸமர்த்தனு யிருக்கும். 'ஆனால் ஜகத்துக்கு ஶேஷித்வித்வம் உண்டோ?' என்றால்: (நித்யாநுகூலம் ஸ்வத:) (16) "**अस्येशाना जगतो विष्णुपत्नी**" (அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ) என்கையாலே ஜகத்தைப் பற்ற இவளுக்கு ஶேஷிணீத்வமும், அவனைப்பற்ற ஶேஷத்வமும் ப்ரதிபாதிக்கப்படுகையாலே ஶேஷித்வித்வமில்லை. 'ஆனால் இவனைப்பற்ற இவள் ஶேஷபூதையாகில் இவளுடைய வைபவநிரூபணம பண்ணவொண்ணாதே' என்னவொண்ணாது. அதெங்ஙனே யென்றால்: (30) "**अपूर्वनानारसभावनिर्भरप्रबद्धया मुग्धविदग्धलीलया**" (அபூர்வநாநாரஸபாவநிர்ப்பரப்ரபத்தயா முக்தவிதக்தலீலயா) என்று அதிவிதக்தமாயிருந்துள்ள க்ரீடாவைபவத்தாலே † "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்கிறபடியே ப்ரேமபரவஶனாயிருக்கையாலே ஸர்வஜ்ஞனாயிருந்தானேயாகிலும் நிரூபிக்கமாட்டாதேயாய்த்து இருப்பது.

(தாம் த்வாம்) கீழ் ப்ரதிபாதிக்கப்பட்ட பரத்வத்தை நிரூபகதர்மமாக உடையையா யிருக்கிற உன்னை என்றபடி. (தாஸ இதி) அடியேன் என்றுகொண்டு ஆஶ்ரயிக்கிறேன் என்கிறார். (15) "**ईश्वरीं सर्वभूतानां**" (ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்) என்றும், (16) "**अस्येशाना जगतः**" (அஸ்யேஶாநா ஜகத:) என்றும் சொல்லுகையாலே, நமக்கு ஜகத்தைப் பற்ற ஶேஷிணீத்வம் ஸாதாரணமன்றோ? உமக்கு அவர்களிற்காட்டில் விஶேஷமென்? என்று பிராட்டி அருளிச்செய்தார். 'அவர்களிற்காட்டில் நெடுவாசியுண்டே; ஸ்வரூபாநுரூபமான ஶேஷத்வபூர்வகமாக ப்ரபந்நனானேன்' என்கிறார்,— (ப்ரபந்ந இதிச) என்றுகொண்டு. (ஸ்தோஷ்யாம்யஹம் நிர்ப்பயோ) அதினாலே நிர்ப்பயனாய்க்கொண்டு ஸ்தோத்ரம் பண்ணுகிறேன் என்கிறார். ஸ்தோத்ரமாகிறது இல்லாததொன்றைச் சொல்லுகையாயிருக்கும். இங்குத்தைக்கு அங்ஙனல்ல; (31) "**भूतार्थव्याहृतिस्सा हि न स्तुतिः परमेष्ठिनः**" (பூதார்த்தவ்யாஹ்ருதிஸ் ஸா ஹி ந ஸ்துதி: பரமேஷ்டிந:) என்கிறபடியே உள்ள குணங்களைத்தான் யதாவத் ப்ரதிபாதிக்கப்போகாதேயாய்த்து இருப்பது. இவையும் எத்தாலேயென்றால்: (லோகைகேஶ்வரி) ஜகத்தைப்பற்ற இவள் ஶேஷிணியாகையாலே. இவளுக்கு ஜகத்தைப் பற்ற ஸ்வாமிநீத்வம் எத்தாலே வந்ததென்றால்: (லோகநாததயிதே) லோகநாதனாயிருக்கிற நாராயணனுக்கு திவ்யமஹிஷியாகையாலே.

---

* திருவாய். (8-4-6). † திருநெடுந்தாண்டகம்-18.

"இங்ஙனெத்த மேன்மையை உடையோமான நம்மை உம்மால் பரிச்சேதிக்கப் போமோ?" எனப் பிராட்டி திருவுள்ளமாக, "அது ஒக்கும்; உம்முடைய மேன்மையை நிரூபித்தோமாகிலன்றோ நாங்கள் பங்குராதீ (भङ्गुरधी)களாவது. உம்முடைய நீர்மையை நிரூபிக்கும்போது மந்தமதிகளாயிருந்துள்ள அஸ்மதாதிகளுக்கும் ஸ்தோத்ரம் பண்ணுகையிலே யோக்யதையுண்டாம்" என்கிறார். (தாந்தே) § கருணோஜ்ஜ்வலஸம்வர்த்திதையாயிருக்கிற கற்பகக் கொடியே! (தயாம் தே விதந்) தயையாவது,— "ஸ்வார்த்தநிரபேக்ஷா பரது:க்காஸஹிஷ்ணுதா" என்றிறே தயாலக்ஷணமிருக்கும்படி. அங்ஙனெத்திருந்துள்ள உன்னுடைய தயையை அறியாநின்றுகொண்டேன் என்றபடி. "அங்ஙனெத்த க்ருபை நம் பக்கலுண்டோ?" என்று திருவுள்ளமாக, (32) "पापानां वा......नापराध्यति" (பாபாநாம் வா........நாபராத்யதி) என்றுகொண்டு, எம்பெருமான் தேவகார்யார்த்தமாக யாதொரு திவ்ய மங்களவிக்ரஹத்தைக் கொண்டான் ததனுகூலமாக தேவரீரும் வடிவைக்கொள்ளக்கடவதாயிருக்கையாலே, அவன் ராகவனாய்க்கொண்டு அவதரித்தபோது, தேவரீரும் ஸ்ரீஜநகராஜன் திருமகளான ஸீதையாய்க்கொண்டு அவதரித்து, ராவணனைப் புத்ரமித்ரகளத்ராதிகளோடு த்ரைப்படுத்துகைக்காகவும், ஸ்ரீவிபீஷணாழ்வானை ஸ்தாபிக்கைக்காகவும் அசோகவனிகையிலே இருந்து, காட்டை வெட்டி நாடாக்கினாப்போலேயும், களைபரித்துப் பயிராக்குமாப்போலேயும், அஸந்நிராஸபூர்வகமாக ஸத்பாலனம் பண்ணுகைக்காக ராவணனைக் கொன்றருளினவனந்தரமாக, தர்ஜநபர்த்ஸநாதிகளைப் பண்ணின ராக்ஷஸிகளைக் கொல்லுகையிலே உத்யுக்தனாயிருந்துள்ள திருவடியைக் குறித்து உன் பரமக்ருபையை ப்ரகடீகரித்தபடியை புத்திபண்ணிக்கொண்டு நிர்ப்பயனாய் ஸ்தோத்ரம் பண்ணினேனென்கிறார் ஆளவந்தார். 2.

3. பதவுரை:— தத் அலாபத:—அந்தக் கடாக்ஷம் இல்லாமையாலே, ப்ராக் நஷ்டம்—முன் நசித்துக் கிடந்ததான, த்ரிபுவநம்—மூவுலகமும், ஸம்ப்ரதி—இப்போது, ஈஷத்—சிறிதுபோது, த்வத் கருணா நிரீக்ஷண ஸுதா ஸந்துக்ஷணாத்—உன்னுடைய கருணாகடாக்ஷமாகிற அம்ருதவர்ஷத்தினால், அநந்தோதயம்—அளவற்ற பெருமையை உடைத்தாகும்படி, ரக்ஷ்யதே—காப்பாற்றப்படுகிறது; ந்ருணாம்—மனிதர்களுக்கு, ஸம்ஸ்ருதி அக்ஷர வைஷ்ணவாத்வஸு—ஐச்வர்யம், கைவல்யம், பரமபதம் இவைகளில், ஶ்ரேய:—மேன்மையானது, அரவிந்த லோசந மந: காந்தா ப்ரஸாதாத் ருதே—தாமரைக்கண்ணனின் மனத்துக்கினியவளான ஸ்ரீதேவியின் அருளில்லாமல், ந ஹி ஸம்பாவ்யதே—ஏற்படாதன்றோ.

வ்யா:— (ஈஷத் த்வத்கருணாநிரீக்ஷணஸுதா ஸந்துக்ஷணாத் ரக்ஷ்யதே நஷ்டம் ப்ராக் தத்லாபதஸ் த்ரிபுவநம்) (33) "पृथिव्यप्सु प्रलीयते। आपस्तेजसि लीयन्ते। तेजो वायौ लीयते। वायुराकाशे लीयते। आकाशमव्यक्ते लीयते। अव्यक्तमक्षरे लीयते। अक्षरं तमसि लीयते। तमः परे देव एकीभवति॥" (ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே। ஆபஸ்தேஜஸி லீயந்தே। தேஜோ வாயௌ லீயதே। வாயுராகாஶே லீயதே। ஆகாஶமவ்யக்தே லீயதே। அவ்யக்தமக்ஷரே லீயதே। அக்ஷரம் தமஸி லீயதே। தம: பரே தேவ ஏகீபவதி॥) என்றும், (28) "न ब्रह्मा नेशानः। नेमे द्यावापृथिवी" (ந ப்ரஹ்மா நேஶாந:। நேமே த்யாவாப்ருதிவீ॥) என்றும், (34) "आनीदवातं स्वधया तदेकं।

§ "கருணாம்ருதஸம்வர்த்திதையான கற்பகக்கொடியே" என்று இவருடைய குமாரரான நாயனாராச்சான் பிள்ளையின் வ்யாக்யானபாடம்.

ईषत्त्वत्करुणानिरीक्षणसुधासन्धुक्षणाद्रक्ष्यते नष्टं प्राक्तदलाभतस्त्रिभुवनं संप्रत्यनन्तोदयम्।
श्रेयो नह्यरविन्दलोचनमनःकान्ताप्रसादादृते संसृत्यक्षरवैष्णवाध्वसु नृणां संभाव्यते कर्हिचित्॥ ३॥

3. ஈஷத் த்வத்கருணாநிரீக்ஷணஸுதாஸந்துக்ஷணாத் ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக் ததலாபதஸ் த்ரிபுவநம் ஸம்ப்ரத்யநந்தோதயம்।
ஶ்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத்ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே கர்ஹிசித்॥

---

तस्माद्धान्यं न परः किञ्चनास।" (ஆநீதவாதம் ஸ்வதயா ததேகம்। தஸ்மாத்தாந்யம் ந பர: கிஞ்சநாஸ।) என்றும், (35) "तद्धेदं तर्ह्यव्याकृतमासीत्" (தத்தேதம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத்) என்றும், (36) "आसीदिदं तमोभूतमप्रज्ञातमलक्षणम्। अप्रतर्क्यमविज्ञेयं प्रसुप्तमिव सर्वतः॥" (ஆஸீதிதம் தமோபூதமப்ரஜ்ஞாதமலக்ஷணம்। அப்ரதர்க்யமவிஜ்ஞேயம் ப்ரஸுப்தமிவ ஸர்வத:॥) என்றும் * "ஒன்றும் தேவுமுலகுமுயிரும் மற்றும் யாதுமில்லாவன்று" என்றும் ஶ்ருதியோடு ஸ்ம்ருதியோடு ஆழ்வார் பாசுரத்தோடு வாசியற ப்ரதிபாதிக்கிற ப்ரளயகாலத்திலே, (37) "नारायणाद्ब्रह्मा जायते। नारायणाद्रुद्रो जायते।" (நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே। நாராயணாத் ருத்ரோ ஜாயதே।) என்றும், (28) "स एकाकी न रमेत" (ஸ ஏகாகீ ந ரமேத) என்றும், (38) "बहुस्यां प्रजायेयेति" (பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்றும், (39) "तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्" (தத் ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிஶத்) என்றும், (35) "तन्नामरूपाभ्यां व्याक्रियत" (தந்நாமரூபாப்யாம் வ்யாக்ரியத) என்றும், (40) "सर्वाणि रूपाणि विचित्य धीरः नामानि कृत्वाऽभिवदन् यदास्ते" (ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர: நாமாநி க்ருத்வாऽபிவதந் யதாஸ்தே) என்றும், (41) "सर्वे निमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि" (ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி) என்றும், (42) "अप एव ससर्जादौ तासु वीर्यमवासृजत्। तदण्डमभवद्धैमं सहस्रांशुसमप्रभम्॥ तस्मिन् जज्ञे स्वयं ब्रह्मा सर्वलोकपितामहः॥ ततः स्वयंभूर्भगवानव्यक्ते व्यञ्जयन्निदम्। महाभूतादि वृत्तौजाः प्रादुरासीत्तमोनुदः॥" (அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு வீர்யமவாஸ்ருஜத்। ததண்டமபவத்தைமம் ஸஹஸ்ராம்ஶுஸமப்ரபம்॥ தஸ்மிந் ஜஜ்ஞே ஸ்வயம் ப்ரஹ்மா ஸர்வலோகபிதாமஹ:॥ ததஸ் ஸ்வயம்பூர் பகவாநவ்யக்தே வ்யஞ்ஜயந்நிதம்। மஹாபூதாதி வ்ருத்தௌஜா: ப்ராதுராஸீத் தமோநுத:॥) என்றும், * "நான்முகன் தன்னொடு தேவருலகோடுயிர் படைத்தான்" † "நான்முகனை நாராயணன் படைத்தான் நான்முகனும், தான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்" என்றும் இப்படி ப்ரதிபாதிக்கப்பட்ட ப்ரஹ்மா முதலான ஸ்ருஷ்டியை ஈஶ்வரன் உகக்கும்போது (6) "यद्भ्रूभङ्गाः प्रमाणं स्थिरचररचनातारतम्ये मुरारेः, वेदान्तास्तत्त्वचिन्तां मुरभिदुरसि यत्पादचिह्नैस्तरन्ति।" (யத்ப்ரூபங்கா: ப்ரமாணம் ஸ்திரசரரசநாதாரதம்யே முராரேர் வேதாந்தாஸ் தத்த்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நைஸ் தரந்தி।) என்றும், (43) "उल्लासपल्लवितपालितसप्तलोकीनिर्वाहकोरकितनेमकटाक्षलीलां" (உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீநிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம்) என்றும் இவள் கடாக்ஷமடியாகவாய்த்து உண்டாவது.

---

* திருவாய். (4-10-1). † நான்முகன் திருவந்தாதி-1.

§ இன்னமும், "பிராட்டிக்கு ஜகத்காரணத்வத்திலே அந்வயமுண்டோ?" என்று நடாதூரம்மாள் பிள்ளானை ப்ரஶ்நம் பண்ண, "ஆவதென்? இவ்வர்த்தத்தில் ஸந்தேஹமுண்டோ? (44) "**आवाभ्यां कर्माणि कर्तव्यानि। प्रजाश्चोत्पादयितव्याः॥**" (ஆவாப்யாம் கர்மாணி கர்த்தவ்யாநி। ப்ரஜாஶ்சோத்பாதயிதவ்யா:॥) என்றன்றோ இருப்பது. இவள் ஸஹதர்மசாரிணியன்றோ" என்று அருளிச்செய்தார் பிள்ளான்.

ஆக, இப்படி ஶ்ருதிஸ்ம்ருதிகளென்ன, ஆழ்வார் பாசுரமென்ன, இவற்றை அடியொற்றினவர் பாசுரமென்ன, இவற்றாலே ஈஶ்வரன் (38) "**तदैक्षत बहु स्यां प्रजायेयेति**" (ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி) என்று ஸ்ருஷ்டிக்கக்கடவதாகப் பார்த்தருளின போது, (ஈக்ஷத் த்வத்கருணாநிரீக்ஷணஸுதாஸந்துக்ஷணாத் ரக்ஷ்யதே) அவன் பார்வைக்கு அநுகூலமாய், கருணாஜலபரிபூர்ணமாயிருந்துள்ள உன்னுடைய கடாக்ஷவிக்ஷேபங்களாலேயன்றோ ஜகத்து ரக்ஷிக்கப்படுகிறது. (நஷ்டம் ப்ராக் ததலாபத:) அம்ருதஜலவர்ஷங்களாயிருக்கிற அந்தக் கடாக்ஷமின்றியே இருக்கையாலேயன்றோ (45) "**असन्नेव स भवति**" (அஸந்நேவ ஸ பவதி) என்கிறபடியே நாமரூபவிபாகாநர்ஹமாய்க்கொண்டு இருந்தது. (ஸம்ப்ரத்யநந்தோதயம்) கடுங்கோடையிலே நொந்த பயிர் மேகமேறி வர்ஷித்தால் தேறுமாப்போலே, நீர் பார்த்தருளுகையாலே இப்போது அநந்தோதயமாய்த்து. 'ஆவதென்?' என்றால்: மஹீமஹீதரஜலநிதிரூபமான ஜகத்தென்ன, தந்தர்வர்த்திகளான தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபமான சதுர்விததேஹப்ரவேஶம் பண்ணியிருக்கிற ஆத்மகோடிகளென்ன, இவற்றை உடைத்தாயிற்று.

(ஶ்ரேயோ ந ஹ்யரவிந்தலோசநமந: காந்தாப்ரஸாதாத் ருதே) (46) "**तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी**" (தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ) என்றுகொண்டு ஈஶ்வரனுடைய உத்புல்லமான தாமரைப்பூப்போலே இருந்துள்ள திருக்கண்மலரில் அழகு. (47) "**मत्स्यः कमललोचनः**" (மத்ஸ்ய: கமலலோசந:) என்றும், (48) "**महावराहः स्फुटपद्मलोचनः**" (மஹாவராஹ: ஸ்புடபத்மலோசந:) என்றும், (49) "**रामो राजीवलोचनः**" (ராமோ ராஜீவலோசந:) என்றும், (50) **कृष्णः कमललोचनः**" (க்ருஷ்ண: கமலலோசந:) என்றும் இப்படி மத்ஸ்யமநுஷ்யாதிவிக்ரஹபரிக்ரஹம் பண்ணினாலும் கண்ணை மறைக்கப்போகாதேயிறேயிருப்பது. ஸர்வாங்கங்களும் மறையும்படியாகக் கவசமிட்டாலும் கண்ணைக் கவசமிடுவானிலனிறே. ஆக, தாமரைக்கண்ணன் என்கையாலே இவனுக்கு அவாப்தஸமஸ்தகாமத்வம் சொல்லப்பட்டது.

(அரவிந்தலோசநமந: காந்தா) இங்ஙனொத்த வைபவத்தை உடையனாயிருந்துள்ள ஈஶ்வரனுடைய திருவுள்ளத்திற்கு உகப்பைப் பண்ணுமவளாயிருக்கும். "பார்யை" என்னாதே "காந்தை" என்பானென்? என்றால்: "உனக்கேற்கும் கோலமலர்ப்பாவைக்கன்பாகிய என் அன்பேயோ!" என்றும், "பித்தர் பனிமலர்மேல் பாவைக்கு" என்றும், (51) "**अस्या देव्या मनस्तस्मिंस्तस्य चास्यां प्रतिष्ठितम्**" (அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிம்ஸ்தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்) என்றும் ப்ரமாணமுண்டாகையாலே காந்தாஶப்தப்ரயோகம் பண்ணுகிறார். (ப்ரஸாதாத்ருதே) இங்ஙனொத்திருந்துள்ள இவளுடைய ப்ரஸாதத்தையொழிய.

---

§ இந்த ஐதிஹ்யம் நாயனாராச்சான் பிள்ளையின் வ்யாக்யானத்திலும் காணப்படுகிறது.

**शान्तानन्दमहाविभूति परमं यद्ब्रह्म रूपं हरेः मूर्तं ब्रह्म ततोऽपि तत्प्रियतरं रूपं यदत्यद्भुतं।**
**यान्यन्यानि यथासुखं विहरतो रूपाणि सर्वाणि तान्याहुः स्वैरनुरूपरूपविभवैर्गाढोपगूढानि ते ॥४॥**

4. ஶாந்தாநந்தமஹாவிபூதி பரமம் யத் ப்ரஹ்ம ரூபம் ஹரே:
மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம்।
யாந்யந்யாநி யதாஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணி தாந்-
யாஹு: ஸ்வைரநுரூபரூபவிபவைர் காடோபகூடாநி தே॥

(*ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு நருணும் ஸம்பாவ்யதே கர்ஹிசித்*) *ஸம்ஸ்ருதியாவது ஐச்வர்யம்; அக்ஷரமாவது கைவல்யமோக்ஷம்; வைஷ்ணவாத்வாவாகிறது,*— (52) "**न च पुनरावर्तते। न च पुनरावर्तते।**" (ந ச புநராவர்த்ததே। ந ச புநராவர்த்ததே।) *என்றும்,* (53) "**तद्विष्णोः परमं पदं**" (தத் விஷ்ணோ: பரமம் பதம்) *என்றும்.* * "*புணைக்கொடுக்கிலும் போகவொட்டார்*" *என்றும், இப்படி ஶ்ருதியோடு, ஆழ்வார் பாசுரத்தோடு வாசியற ப்ரதிபாதிக்கிற பரமபதம். ஆக, இவ்வழிகளில் அரவிந்தலோசநமந:காந்தையுடைய ப்ரஸாதத்தையொழிய மநுஷ்யரில் வைத்துக்கொண்டு ஒருவருக்கும் ஶ்ரேயஸ் வாராது என்கிறார் ஆளவந்தார்.* 3.

4. பதவுரை:— ஶாந்த—*ஷடூர்மிகளற்றதாய்,* ஆநந்த—*ஆநந்தமயமாய்,* மஹாவிபூதி—*பெரிய விபூதிகளை உடையதாய்,* பரமம்—*தனக்கு மேலானதற்றதாய்,* ப்ரஹ்ம—*பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச் செய்வதாலும் ப்ரஹ்மஶப்தத்தாலே சொல்லப்படுவதாயிருக்கும்,* ஹரே: யத் ரூபம்—*ஹரியினுடைய யாதொரு ஸ்வரூபமுண்டோ,* தத: அபி—*அதைக்காட்டிலும்,* தத் ப்ரியதரம்—*அந்த பகவானுக்கு மிகவும் பிரியமாயிருப்பதும்,* மூர்த்தம்—*கண்ணால் காணக்கூடியதும்,* ப்ரஹ்ம—*ப்ரஹ்மஶப்தத்தால் சொல்லப்படுவதும்,* அத்யத்புதம்—*மிகவும் அத்புதமானதுமான,* ரூபம் யத்—*யாதொரு ரூபம் உண்டோ,* யதாஸுகம் விஹரத:—*இஷ்டப்படி விளையாடும் எம்பெருமானுக்கு,* அந்யாநி ரூபாணி யாநி—*மற்றும் யாவை சில ரூபங்களுண்டோ,* தாநி ஸர்வாணி—*அந்த ரூபங்களெல்லாம்,* தே—*உனக்கு,* ஸ்வை: அநுரூபரூபவிபவை:—*அஸாதாரணங்களாய் தகுந்தவையாயிருக்கும் திவ்ய ரூபங்களால்,* காடோபகூடாநி ஆஹு:—*நன்றாக ஆலிங்கனம் செய்யப்பட்டவையென்று (ப்ரமாணங்கள்) சொல்லுகின்றன.*

வ்யா:— (*ஶாந்தாநந்தமஹாவிபூதி பரமம் யத் ப்ரஹ்ம ரூபம் ஹரே:*) *ஶாந்தியாவதென்னென்றால்,*— (54) "**अशनायाऽपिपासे च शोकमोहौ जरामृती। षडूर्मिभिर्विशुद्धा**" (அஶநாயா-ऽபிபாஸே ச ஶோகமோஹௌ ஜராம்ருதீ। ஷடூர்மிபிர் விஶுத்தா) *என்றுகொண்டு ஶ்ருதியில் சொல்லப்பட்டபடி ஷடூர்மிரஹிதமாயிருக்குமென்றபடி. இன்னமும்,* (55) **अपक्षयविनाशाभ्यां परिणामर्धिजन्मभिः। वर्जितः शक्यते वक्तुं यस्सदाऽस्तीति केवलम्॥**" (அபக்ஷயவிநாஶாப்யாம் பரிணாமர்த்திஜந்மபி:। வர்ஜித: ஶக்யதே வக்தும் யஸ்ஸதாऽஸ்தீதி கேவலம்॥) *என்றுகொண்டு பராஶர ப்ரஹ்மர்ஷியாலே ப்ரதிபாதிக்கப்பட்டபடி ஷட்பாவவிகாரரஹிதம் என்கிறதாகவுமாம்.* (*ஆநந்த*) (56) "**ज्ञानानन्दमयं यस्य स्वरूपं परमात्मनः**" (ஜ்ஞாநாநந்தமயம் யஸ்ய ஸ்வரூபம்

* *பெரியாழ். திரு.* (4.5-2).

பரமாத்மந:) என்கிறபடியே ஆநந்தரூபமாயிருக்கும். 'ஆநந்தரூபமாயிருக்கையாவதென்?' என்றால்: தன்னைத் தான் அநுபவிக்கும்போது ஸுகாவஹமாயிருக்கை. (மஹாவிபூதி) (57) "**अङ्गुलस्याष्टभागोऽपि न सोऽस्ति मुनिसत्तम। न सन्ति प्राणिनो यत्र कर्मबन्धनिबन्धनाः॥**" (அங்குலஸ்யாஷ்டபாகோऽபி ந ஸோऽஸ்தி முநிஸத்தம। ந ஸந்தி ப்ராணிநோ யத்ர கர்மபந்தநிபந்தநா:॥) என்றுகொண்டு மஹர்ஷியாலே ப்ரதிபாதிக்கப்படுகையாலே. யாதோரிடத்தில் ஜீவஸமூஹமுண்டு, அங்கே பரமாத்மஸந்நிதி உண்டாயிருக்கும். அதெங்ஙனேயென்னில்: (58) "**यस्यात्मा शरीरं। यस्य पृथिवी शरीरं।**" (யஸ்யாத்மா ஶரீரம்। யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்।) என்றுகொண்டு ப்ரமாணமுண்டாகையாலே. ஶரீரத்தையொழிந்தன்றிறே ஶரீரியிருப்பது. ஆக, "மஹாவிபூதி" என்று திவ்யாத்மஸ்வரூபத்தினுடைய விபுத்வம் ப்ரதிபாதிக்கப்பட்டது.

(பரமம்) "பரோ மாऽஸ்யேதி பரம:" என்கிறபடியே இது தன்னுடைய நிருபமத்வம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. 'இதுக்கு ப்ரமாணமென்?' என்றால்: (59) "**न तत्समश्चाभ्यधिकश्च दृश्यते**" (ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே), (60) "**न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुसा पश्यति कश्चनैनम्**" (ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சநைநம்) * "ஒத்தார் மிக்காரையிலையாய மாயாயா!" என்றுமுண்டாகையாலே. யச்சப்தத்தாலே (61) "**वचसामात्मसंवेद्य**" (வசஸாமாத்மஸம்வேத்யம்) என்கிறபடியே இது தன்னுடைய அவாங்மநஸகோசரத்வம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. (ப்ரஹ்ம) (62) "**बृहत्त्वाद्बृंहणत्वाच्च ब्रह्म इत्यभिधीयते**" (ப்ருஹத்த்வாத் ப்ரும்ஹணத்வாச்ச ப்ரஹ்ம இத்யபிதீயதே) என்று சொல்லுகிற படியே, கீழ்ச்சொன்ன மஹாவிபூதிஶப்தத்தாலே ஆர்த்தமாக ப்ரதிபாதிக்கப்பட்ட திவ்யாத்ம ஸ்வரூபவிபுத்வம் ப்ரஹ்மஶப்தத்தாலே ஶாப்தமாக ப்ரதிபாதிக்கப்படுகிறது. ஆக, இப்படிப் பூர்வபாதத்தாலே ஷடூர்மிரஹிதமாய், தனக்கு ஸுகாவஹமாய், நிருபமமாய், அவாங்மநஸ கோசரமாய், ப்ருஹத்த்வப்ரும்ஹணத்வகுணயோகியாயிருக்கிற திவ்யாத்மஸ்வரூபம் ப்ரதி பாதிக்கப்பட்டது.

இனி, உத்தரவாக்யத்தாலே திவ்யமங்களவிக்ரஹம் ப்ரதிபாதிக்கப்படுகிறது. (மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம்) கீழ் ப்ரதிபாதிக்கப்பட்ட அமூர்த்தமான ப்ரஹ்மத்திற்காட்டில் பகவானுக்கு அத்யந்தம் ப்ரீதிப்ரகர்ஷஜநகமாய், மூர்த்தமாய், ப்ரஹ்ம ஶப்தவாச்யமாய், அத்யாஶ்சர்யமாயிருக்கிறது யாதொரு திவ்யமங்களவிக்ரஹம் அது ப்ரதிபாதிக்கப்படுகிறது. "விக்ரஹோ........†" என்றும், (63) "**अरूपी हि जनार्दनः**" (அரூபீ ஹி ஜநார்தந:) என்றும், (64) "**न ते रूपं न चाकारः**" (ந தே ரூபம் ந சாகார:) என்றும் இப்படி ஈஶ்வரனுக்கு விக்ரஹமில்லையென்றுகொண்டு ப்ரமாணங்கள் உண்டாயிருக்க திவ்யம் ஸ்வரூபம் என்றும், திவ்யமங்களவிக்ரஹமென்றும் எங்ஙனே? என்று இப்படிச்சொல்லுவார் வேதாந்தநிஷ்டருடைய கோஷ்டியில் பஹிஷ்க்ருதரான பேரிறே. "ஆவதென்? சோத்யம் பண்ணினால் பரிஹரிக்குமித்தனையொழிய பரிவாதியாநின்றீர். இப்படி ப்ரமாணமுண்டோ?" என்றால்,— உண்டு. அதெங்ஙனேயென்றால்: (46) "**य एषोऽन्तरादित्ये हिरणमयः पुरुषो दृश्यते**" (ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே) (41) "**सर्वे निमेषा जज्ञिरे विद्युतः पुरुषादधि**" (ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி) (65) "**आदित्यवर्णं तमसः परस्तात्**"

---

* திருவாய். (2-3-2). † இந்த ப்ரமாணம் தெளிவாக விளங்கவில்லை.

(ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்) (66) "ध्येयस्सदा सवितृमण्डलमध्यवर्ती नारायणस्सरसिजासनसन्निविष्टः। केयूरवान् मकरकुण्डलवान् किरीटी हारी हिरण्मयवपुर्धृतशङ्खचक्रः॥" (த்யேயஸ்ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட: । கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர் த்ருதஶங்கசக்ர: ॥), (67) "किरीटकौस्तुभधरं मित्राणामभयप्रदम्" (கிரீடகௌஸ்துபதரம் மித்ராணாமபயப்ரதம்), * "நீண்டபொன் மேனியொடும் நிறைந் தென்னுள்ளே நின்றொழிந்தான்" என்றுகொண்டு இப்படி ப்ரமாணமுண்டாகையாலே உன்னுடைய அபிமதம் ஸித்தியாது.

(யாங்யங்யாநி யதாஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணி) (68) "अजायमानो बहुधा विजायते" (அஜாயமானோ பஹுதா விஜாயதே) என்றும், † "பிறப்பில் பல் பிறவிப் பெருமான்" என்றும் இப்படி ப்ரமாணமுண்டாகையாலே ஜநிஜராதிதுரிததூரனுயிருந்துள்ள ஸர்வேஶ்வரன் தன்னுடைய ஸௌலப்யம் என்கிற குணத்தை ஒப்பமிடுகைக்காக, (38) "बहु स्यां प्रजायेय" (பஹு ஸ்யாம் ப்ரஜாயேய) என்றும், (69) "एष नारायणः श्रीमान् क्षीरार्णवनिकेतनः। नागपर्यङ्कमुत्सृज्य ह्यागतो मथुरां पुरीं॥" (ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: । நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் ॥) என்றும், (70) "स हि देवैरुदीर्णस्य रावणस्य वधार्थिभिः। अर्थितो मानुषे लोके जज्ञे विष्णुस्सनातनः॥" (ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: । அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந: ॥) (71) "संभवामि युगे युगे" (ஸம்பவாமி யுகே யுகே) என்றும், (25) "इच्छागृहीताभिमतोरुदेहः संसाधिताशेषजगद्धितोऽसौ।" (இச்சாக்ருஹீதாऽபிமதோருதேஹஸ் ஸம்ஸாதிதாऽஶேஷஜகத்திதோऽஸௌ ।) என்றும், (72) "विष्णुत्वमुपजग्मिवान्" (விஷ்ணுத்வமுபஜக்மிவாந்) என்றும் இப்படி ப்ரமாணமுண்டாகையாலே, அதிதிக்கு த்வாதஶபுத்ரனாய்க்கொண்டு அவதரித்த அவதாரத்தோடும், § "தயரதன் பெற்ற மரதக மணித்தடம்" என்கிற ராமாவதாரத்தோடும், ‡ "மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்" என்கிறபடியே தேவகார்யார்த்தமாக அவதரித்தருளின ராமக்ருஷ்ணாத்யவதாரங்களோடும் வாசியற.

(தாங்யாஹு: ஸ்வைரநுரூபரூபவிபவைர் காடோபகூடாநி தே) (73) "राघवत्वेऽभवत्सीता रुक्मिणी कृष्णजन्मनि। अन्येषु चावतारेषु विष्णोरेषाऽनपायिनी॥" (ராகவத்வேऽபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி । அந்யேஷு சாऽவதாரேஷு விஷ்ணோரேஷாऽநபாயிநீ ॥) என்கிறபடியே அவ்வோ அவதாரவிக்ரஹங்களுக்கு அநுரூபமான உன்னுடைய அவ்வோ அவதாரங்களிலுண்டான திவ்யமங்களவிக்ரஹத்தாலே, (74) "उपेतं सीतया भूयश्चित्रया शशिनं यथा" (உபேதம் ஸீதயா பூயஶ் சித்ரயா ஶஶிநம் யதா) என்றும், (75) "भर्तारं परिषस्वजे" (பர்த்தாரம் பரிஷஸ்வஜே) என்றும் இப்படி ப்ரமாணமுண்டாகையாலே காடமாக ஆலிங்கநம் பண்ணும்படியிறே இருப்பது. ஆக, இந்நாலு ஶ்லோகத்தால் லக்ஷ்மீவிஶிஷ்டமான வஸ்துவே உபேயமாகக்கடவது என்றத்தை அருளிச்செய்கிறார் ஆளவந்தார்.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.
பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.
பரமகாருணிகரான பெரியவாச்சான பிள்ளை அருளிச்செய்த
சதுச்ச்லோகீவ்யாக்யாநம் முற்றிற்று.

———[*****]———

* திருவாய். (5-5-7). † திருவாய். (2-9-5). § திருவாய். (10-1-8). ‡ திருவாய். (9-1-10).

ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த

# ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யானம்.

**श्रीमत्कृष्णसमाह्वाय नमो यामुनसूनवे ।**
**यत्कटाक्षैकलक्ष्याणां सुलभः श्रीधरस्सदा ॥**

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே ।
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலப: ஸ்ரீதரஸ் ஸதா ॥

அவதாரிகை:— 'ஜிதந்தே'யாவது ருக்வேதகிலம்; தத்வப்ரதிபாதகபரமான ஸ்ரீபுருஷ ஸூக்தம் ஸர்வஶ்ருதிகளிலும் ஓதிப்போருமாப்போலே, இதுவும் ஸ்ரீஶாஸ்த்ரத்திலும், இதிஹாஸ புராணங்களிலேயும் மஹாமந்த்ரமென்று திருமந்த்ரத்தோபாதி பரமரஹஸ்யமாகச் சொல்லிப்போருமதொன்று. வேதாக்ஷரராஶியை பௌருஷேயமான இதிஹாஸ புராணங்களிலே எழுதிப்படித்துப் போருவானென்னென்னில்: கிலமாகிறது அப்ரஹதம் ஸ்தாநம்; ஸூத்ரகாரர்கள் கிலஸஹிதமாகத் தாங்கள் அத்யயனம் பண்ணிப்போந்தவர்களாகையாலே ஸ்மார்த்தவிதாநங்களிலே மந்த்ரமாக விநியோகித்துப் போராநின்றார்களிறே. இப்படி இதிஹாஸபுராணங்களிலே, ஸ்ரீஶாஸ்த்ரத்திலே (1) "**जितन्त इति मन्त्रेण**" (ஜிதந்த இதி மந்த்ரேண) என்று மந்த்ரமாக விநியோகித்துப்போருமதொன்று.

ஶ்வேதத்வீபவாஸிகள் க்ஷீராப்திநாதனுடைய ஸௌந்தர்யாதிகளிலே தோற்று ஈடுபட்டுச் சொல்லும் ஸ்தோத்ரம்; இதுக்கு ஸ்தோத்ரத்வமும் ஸ்தவப்ரியனுக்கு ப்ரியதமத்வமாகை. ப்ரஹ்மாதிகளுக்கு துஷ்ப்ராபமான ஸ்தலத்திலே தோன்றின இது இதிஹாஸ புராணங்களிலே எழுதிப்படிக்கும்படி ஸுலபமானபடி என்னென்னில்: இம்மந்த்ரத்துக்கு ப்ரதிபாத்யனான க்ஷீராப்திநாதனைத் திருவடித் தொழ ஆதரித்து ஸ்ரீநாரதபகவான் ஶ்வேதத்வீபத்திலே சென்றவளவிலே, ஏகத த்வித த்ரிதர்கள் தபஸ் பண்ணிக்கொண்டிருக்க, 'இவர்களுக்கும் கிட்டவொண்ணாத விஷயத்தை நம்மால் காணமுடியாது' என்று மீண்டு, அவர்களைக் குறித்து "எனக்குச் செய்ய அடுப்பதென்?" என்று கேட்க, "இத்திருமாளிகைக்குள்ளே ஶ்வேதத்வீபவாஸிகள் க்ஷீராப்திநாதனைக்கண்டு பண்ணும் ஸ்தோத்ரம், நெடுநாளே நாங்கள் தபஸ் பண்ணுகிறோமாகையால் ஜ்ஞாதவ்யமாயிற்று; எங்கள் பக்கல் இத்தை லபித்து அநுஸந்தி" என்ன, அவனும் அவர்கள் பக்கலிலே ஜிதந்தே ஸ்தோத்ரத்தை லபித்துப்போராநிற்க, ஜயந்தம் என்கிற பர்வதத்திலே பகவதுபாஸனம் பண்ணுகிற ப்ரஹ்மாவை வந்து அநுவர்த்தித்துப் பிறந்த வ்ருத்தாந்தத்தை அவனுக்கு விஜ்ஞாபிக்க, "எனக்கு அந்த ஸ்தோத்ரத்தைச் சொல்" என்று ஸ்ரீநாரதபகவான் பக்கலிலே க்ரஹித்தான்

குடும்பி. அவன் பக்கலிலே புக்கதாகையாலே இதிஹாஸபுராணங்களிலே எழுதப்பட்டு பகவத்பரராயிருப்பார் எல்லார்க்கும் லபிக்கும்படி ஸுலபமாயிற்று. இது ஜிதந்தேயினுடைய அவதாரம்.

இது தன்னுடைய உள்வாயை அநுஸந்தித்தால் ப்ரபத்திக்கு வ்யாக்யானமாயிருக்கிறது; ப்ராப்யப்ராபகங்கள் இரண்டையும் சொல்லுகிறது. "ப்ரபத்திக்கு அதிகாரிகள் அஜ்ஞரும், ஸர்வஜ்ஞரும் பக்திபரவசரும் என்று த்ரிவிதர்" என்று பட்டர் அருளிச்செய்தாரிறே. (2) "**अविद्यातो देवे परिबृढतया वा विदितया, स्वभक्तेर्भूम्ना वा जगति गतिमन्याम-विदुषाम्। गतिर्गम्यश्चासौ हरिरिति जितन्ताह्वयमनो, रहस्यं व्याजह्रे स खलु भगवान् शौनकमुनिः॥**" (அவித்யாதோ தேவே பரிப்ருடதயா வா விதிதயா, ஸ்வபக்தேர் பூம்நா வா ஜகதி கதிமந்யாமவிதுஷாம்। கதிர் கம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ கலு பகவாந் ஶௌநகமுநி:॥). அஜ்ஞனுகிறான்,— பகவல்லாபத்துக்குத் தன் பக்கலிலே ஜ்ஞானஶக்த்யாதிகள் இல்லாதவன். ஸர்வஜ்ஞனுகிறான்,— "தேசகாலவஸ்துக்களாலே பரிச்சேதிக்கவொண்ணுத வைபவத்தையுடையவன் ஈஶ்வரன்" என்றிருக்கையாலே, அநந்யஸாத்யனென்று இருக்குமவன். பக்திபரவஶனுகிறான்,— ஜ்ஞாநஶக்த்யாதிகள் உண்டாயிருக்கச்செய்தேயும் அடைவுபட அநுஷ்டிக்கமாட்டாதவன். இவர்கள் மூவரும் பகவத்விஷயமொழிய வேறு உபாயம் உண்டென்று அறியாதவர்கள். "'இவர்களுக்கு ப்ராபகனுமாய், ப்ராப்யனுமாய் இருக்கும் ஸர்வேஶ்வரன்' என்று, 'ஜிதந்தே' என்று பேரை உடைத்தான மந்த்ரரஹஸ்யத்தை ஸர்வஜ்ஞனை சௌநகபகவான் வ்யாக்யானம் பண்ணப் பெறுவதே!" என்கிறார். (3) "**स्वत्वमात्मनि सञ्जातं**" (ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம்) என்றும், (4) "**आत्मदास्यं हरेः स्वाम्यं स्वभावं च**" (ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச) என்றும் சொல்லுகிறபடியே த்வயத்துக்கு அதிகாரியாவான், ஈஶ்வரனுக்கே அநந்யார்ஹஶேஷபூதனானவனிறே, இப்படிப்பட்ட ஶேஷத்வத்தை உடைய இவ்வாத்மாக்கள், அநாதியான ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே அறியாதே ஈஶ்வரனுடைய ஸ்வாமித்வஸ்வாதந்த்ர்யங்களைத் தங்கள் தலையிலே ஏறிட்டுக்கொண்டு ஆத்மாபஹாரிகளாய் வர்த்திப்பார்கள். ஆத்மாபஹாரமாவது,— அஹங்காரமமகாரங்கள்; (5) "**द्व्यक्षरस्तु भवेन्मृत्युः**" (த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யு:) என்றும், (5) "**ममेति द्व्यक्षरो मृत्युः**" (மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யு:) என்றும் சொல்லுகிறபடியே. * "யானே என்னை அறியகிலாதே யானே என்றனதே என்றிருந்தேன்" என்றிறே அபியுக்தர் வார்த்தையும். பாபங்களிலே தலையான பாபமும் இவ்வாத்மாபஹாரமே; (6) "**योऽन्यथा सन्तमात्मानं**" (யோऽந்யதா ஸந்தமாத்மாநம்) இத்யாதிகளிலே ஸ்புடம். பாபத்துக்கு ப்ராயஶ்சித்தம் இவ்வாத்மா பகவச்சேஷமென்றால் விவாதம் பண்ணுதிருக்கை. (7) "**तेन चेदविवादस्ते**" (தேந சேதவிவாதஸ்தே) என்றும், ‡ "உம்முயிர் வீடுடையானிடை வீடுசெய்ம்மினே" என்றும், (8) "**क्षेत्रज्ञस्येश्वरज्ञानाद्विशुद्धिः परमा मता**" (க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத் விஶுத்தி: பரமா மதா) என்றும் சொல்லக்கடவதிறே. ஈஶ்வரன், இப்படி அஹங்காரமமகாரக்ரஸ்தராய், ஶப்தாதிவிஷயப்ரவணராய், அதிலே, (9) "**परमेश्वरसंज्ञोऽज्ञ! किमन्यो मय्यवस्थिते**" (பரமேஶ்வரஸம்ஜ்ஞோऽஜ்ஞ! கிமந்யோ மய்யவஸ்திதே) என்றும், (10)

* திருவாய். (2-9-9). ‡ திருவாய். (1-2-1).

ஜிதந்தே ஸ்தோத்ரம்.

**जितन्ते पुण्डरीकाक्ष ! नमस्ते विश्वभावन ! ।**
**नमस्तेऽस्तु हृषीकेश ! महापुरुष ! पूर्वज ! ॥ १ ॥**

1. ஜிதந்தே புண்டரீகாக்ஷ ! நமஸ்தே விஶ்வபாவந ! ।
நமஸ்தேऽஸ்து ஹ்ருஷீகேஶ ! மஹாபுருஷ ! பூர்வஜ ! ॥

"**द्विधा भज्येयमप्येवं न नमेयं तु कस्यचित्**" (த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்) என்றுமிருக்கும் ஹிரண்யராவணாதிகளைப்போலே தன்னோடே எதிரம்பு கோத்து நிற்கிற ஆத்மாக்களைப் பார்த்தருளி, "இவை ஶாஸ்த்ரமார்க்கத்தாலே திருத்த ஒருப்பட்டதல்ல; இவர்களுடைய விஷயப்ராவண்யமே பற்றாசாக நம்முடைய அழகுகளையும், ஶீலாதிகுணங்களையும் காட்டித்திருத்துவோம்" என்று வழியிட்டு, ப்ரதமத்திலே ருசிஜனகனாய், ருசி பிறந்தார்க்கு உபாயமுமாய், அதிலே நிஷ்டரானார்க்கு ப்ராப்யனுமாய் இருக்கும்படியைச் சொல்லுகிறது இப்ரபந்தம்.

"ப்ராப்யப்ராபகங்களை முதல் ஶ்லோகத்தாலே ஸங்க்ரஹமாகச் சொல்லி மேலில் ஶ்லோகங்களாலே விஸ்தரிக்கிறது" என்று பட்டர் நிர்வாஹம். முதல் இரண்டு ஶ்லோகத்தாலே ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லி, மேலில் ஶ்லோகங்களாலே அதுக்கு அடியான ஶரண்யதையைச் சொல்லுகிறதாகவுமாம். ஶரண்யதையை முதலில் சொல்லி உபாயோபேயங்களைச் சொல்ல ப்ராப்தமாயிருக்க, பின்பே ஶரண்யதையைச் சொல்லுவானென்? என்னில்: "'முனியே நான்முக'னிலே திருவாணையிட்டுப் பின்பு அது பெறுவாணையல்லாமை ஸாதித்தாப்போலே இது" என்று திருநறையூர் அரையர் நிர்வாஹம்.

அவதாரிகை ஸம்பூர்ணம்.

---

1. பதவுரை:— புண்டரீகாக்ஷ—செந்தாமரைக்கண்ணா ! ஜிதம் தே—உன்னால் (இவ்வாத்மவஸ்து) ஜயிக்கப்பட்டது; நம:—(இது) என்னுடையதல்லவே; தே—உன்னுடையதாயிற்றே; விஶ்வபாவந—உலகையெல்லாம் உண்டாக்கினவனே ! ஹ்ருஷீகேஶ—இந்திரியங்களை நியமிப்பவனே ! மஹாபுருஷ—கொடுப்பதில் சிறந்தவனே ! பூர்வஜ—முற்பாடனாகப் பிறப்பவனே ! நம: தே அஸ்து—(இவ்வாத்மவஸ்து) எனக்காகை தவிர்ந்து உனக்கே ஆகவேணும்.

அவ:— முதல் ஶ்லோகத்தாலே ப்ராப்யநிஷ்கர்ஷபர்யந்தமாக இவன் ப்ரார்த்திக்கும்படியாக ஈஶ்வரன் தன் அழகாலே தோற்பித்துக் கொண்டபடியைச் சொல்லுகிறது.

வ்யா:— (ஜிதந்தே) * "யாதானும் பற்றி நீங்கும் விரதம்" என்கிறபடியே, விஷயாந்தரங்களைப் பற்றி, 'எம்பெருமான் முகத்தில் விழியேன்' என்று இவன் வ்ரதம் கொண்டிருக்க, ஈஶ்வரன் § "தானொட்டி வந்து" என்கிறபடியே விஷயாந்தரங்களில் துவக்கை அறுத்து, ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்கி, 'அவஶ்யம் உம்மைக் கொண்டல்லது விடேன்' என்று வ்ரதம் கொண்டு, யாத்ருச்சிகமாக இவன் விஷயாந்தரங்களிலே நெகிழ நின்றவளவிலே, † "இருந்தான் கண்டுகொண்டு" என்கிறபடியே தன் அழகைக் காட்டி

---

* திருவிருத்தம்-95. § திருவாய். (1-7-7). † திருவாய். (8-7-2).

ஜயித்து, இவன் தோற்றமை கண்டு ப்ரீதனாய் "தோற்றார் ஆர்?" என்று கேட்டருள, † "தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு" என்கிறபடியே "ஜயஸ்தவ" என்கிறான். த்ருதீயார்த்தே ஷஷ்டியாய் உன்னாலே ஜயம் என்னுதல்; பாவே நிஷ்டையாய் உன்னுடைய ஜயம் என்னுதல். பந்தமடியான ஸங்கல்பம் அவனது; அதின் ஸந்நிதியிலே கர்மமடியாக வந்த இவன் ஸங்கல்பம் ஜீவிக்கவோ? ஸர்வஶக்தி ஸங்கல்பத்தை விஷயசபலனுடைய ஸங்கல்பம் அழிக்கவோ? 'நாம் என்கொண்டு உம்மை வெல்ல?' என்ன: (புண்டரீகாக்ஷ) அழகிய கண்களாகிற ப்ரஹ்மாஸ்த்ரத்தை உடைய உனக்கு வெல்லவொண்ணாதது உண்டோ? சேதனர் சேதனங்களை அகப்படுத்துவது கண்வழியாலேயாகையாலே திருக்கண்களாலே ஜயித்தாய் என்கை. ஸ்வதந்த்ரனை முறையைக்காட்டி மீட்கலாம்; விஷயப்ரவணனை மீட்க அழகல்லது பரிகாரமுண்டோ? (நமஸ்தே) 'ஆரதை ஆர் வென்றார்?' என்னில்: ஆராய்ந்தவாறே உன்னதை நான் அபஹரிக்க, என்னை ஜயித்து, நீயே உன்னதைக் கைக்கொண்டாயாயிருந்தது. (11) "**अहमपि न मम। भगवत एवाहमस्मि।**" (அஹமபி ந மம। பகவத ஏவாஹமஸ்மி।) என்னக்கடவதிறே. நமஶ்ஶப்தம் ஶரணபர்யாயமாகையால் ப்ரபதனமென்னவுமாம். எங்ஙனேயென்னில்: கண்ணழகிலே ஈடுபட்டு மிடுக்கற்கையாலே அஶக்தாதிகாரமான உபாயத்தைப் பற்றுகிறான். ப்ராப்யத்தில் ருசி பிறந்தால் அத்தை லபிக்கும் ஸாதனமிறே அனந்தரம் தேட்டம். அத்தைச் சொல்லுகிறது. 'விஷயாந்தரங்களில் துவக்கை அறுத்த உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாக என் ஆத்மாவைத் தந்தேன்' என்று ஆத்மஸமர்ப்பணத்தைச் சொல்லுகிறது என்றுமாம். * "எனதாவி தந்தொழிந்தேன்" என்னுமாப்போலே. இது வகைப்பொருள். (நமஸ்தேऽஸ்து) அப்படி எனக்காகை தவிர்ந்து உனக்கேயாம்படி பண்ணியருளவேணும். § "மனக்காராமை மன்னி உண்டிட்டாய் இனி உண்டொழியாய்" என்னுமாப்போலே. 'ருசியைப் பிறப்பித்துத் தன் பேறாக உபகரியாநிற்க, மேல் விழுந்து அர்த்திப்பானென்?' என்னில்: ருசியை விளைப்பித்து ஸ்வரூபஜ்ஞானத்தை உண்டாக்கினவாறே ஸ்வரூபாநுகுணமான அடிமையை ப்ரார்த்திக்கிறான். கூனி கூன் நிமிர்ந்து யோக்யதை பெற்றவாறே (12) "**वस्त्रे प्रगृह्य गोविन्द! मम गेहं व्रजेति वै**" (வஸ்த்ரே ப்ரக்ருஹ்ய கோவிந்த! மம கேஹம் வ்ரஜேதி வை) என்று மடிபிடித்தாப்போலே இங்கும். ஆத்மாவினுடைய ‡ கோணையாலே கண்ணழகாலே நிமிர்த்துக் கொண்டான் என்கை. அஹங்காரமமகாரமாகிற ‡ கோண் போய், பாரதந்த்ர்யம் ப்ரகாஶித்தாலிறே கைங்கர்யரஸத்துக்கு யோக்யமாவது. ஸ்ரீமாலாகாரரை அழகாலே ருசியைப் பிறப்பித்து, (13) "**पुनः पुनः प्रणम्याह मालाकारोऽति विस्मितः**" (புந: புந: ப்ரணம்யாஹ மாலாகாரோऽதிவிஸ்மித:) என்று திருவடிகளிலே விழும்படி பண்ணி அடிமை கொண்டானிறே. (விஶ்வபாவந) மேல் அபேக்ஷிதம் செய்கைக்கு ப்ராப்தி சொல்லுகிறது. விஶ்வம் பாவயதீதி விஶ்வபாவந:; உரு மாய்ந்து கிடந்த இந்த ஜகத்தை உண்டாக்கினவனல்லையோ? இல்லாததை உண்டாக்கினவனுக்கு உள்ளதுக்கு ஒரு குணம் விளைப்பிக்கைக்குப் பணியுண்டோ? முமுக்ஷுவிஸிஸ்ருக்ஷயாவன்றோ பகவத்ஸ்ருஷ்டி. (ஹ்ருஷீகேஶ) 'ஸ்ருஷ்டிகாலத்தில் விலக்கும் பரிகாரமில்லை; இப்போது உன் இந்த்ரியங்களைத் திருத்தவொண்ணாமையாலே

† திருவாய். (2-1-7). * திருவாய். (2-3-4). § திருவாய். (10-10-6). ‡ கோண்—கூன்; வளைவு.

விலக்கும் பரிகரம் உண்டே' என்னில்: அவையும் நீ இட்ட வழக்கன்றோ? (14) "**हृषीकाणीन्द्रियाण्याहुस्तेषामीशो यतो भवान्। हृषीकेश इति ख्यातः**" (ஹ்ருஷீகாணீந்த்ரியாண்யாஹுஸ்தேஷாமீசோ யதோ பவாந்। ஹ்ருஷீகேஶ இதி க்யாத:) என்றும், * "இருடீகேசன் எம்பிரான் இலங்கை அரக்கர் குலம் முருடு தீர்த்த பிரான்" என்றும் சொல்லக்கடவதிறே. இந்த்ரியங்களுக்கு என்னோடு உண்டான ஸம்பந்தம் கர்மோபாதிகம்; (15) "**यश्चक्षुषि तिष्ठन्—वाचि तिष्ठन्**" (யஶ் சக்ஷுஷி திஷ்டந்—வாசி திஷ்டந்) என்கிறபடியே நிருபாதிகஸம்பந்தம் உன்பாடேயன்றோ? (மஹாபுருஷ) 'ஶக்தி உண்டானாலும் வல்லதெல்லாம் செய்வாருண்டோ?' என்னில்: (புருஷ) "புரு-பஹு, ஸநோதீதி புருஷ:" என்னும்படியே மறித்து உன் பாடு வரவேண்டாதபடி அபேக்ஷிதங்களை மிகவும் கொடுக்கவல்ல பரமோதாரனல்லையோ? அன்றிக்கே, உன்னையும், உன் உடைமையையும் "பக்தாநாம்" (ஶ்லோ-5) என்கிறபடியே அர்த்தியாய்க்கொடுக்கை. (16) "**स सर्वानर्थिनो दृष्ट्वा समेत्य प्रतिनन्द्य च**" (ஸ ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்ய ச) என்னக்கடவதிறே. (பூர்வஜ) கீழ்ச்சொன்ன ஔதார்யந் தன்னை அநுஷ்டானத்தாலே விவரிக்கிறது. ஸ்ருஷ்டியோடு அவதாரத்தோடு உபாயத்தோடு வாசியற இழவுபேறு துடக்கமான எல்லாத்துக்கும் முற்பாடனல்லையோ? (17) "**बहु स्यां**" (பஹு ஸ்யாம்) என்று ப்ரயோஜனமும் அபிமானமும் தன்னதானவோபாதி (18) "**स एकाकी न रमेत**" (ஸ ஏகாகீ ந ரமேத) என்னும் இழவும் தன்னதாகச் சொல்லிற்றிறே. அவதாரத்திலும், 'ஸ்ருஷ்டமான ஜகத்திலே நம்மை அபிமுகிகளாகக்கடவார்' என்னும் நோயாசையாலே, (19) "**संभवाम्यात्ममायया**" (ஸம்பவாம்யாத்மமாயயா) என்று ஸ்வேச்சையாலேயாயிருப்பது. (20) "**स हि देवैरर्थितो जज्ञे**" (ஸ ஹி தேவைரர்த்திதோ ஜஜ்ஞே) என்று தேவர்களுடைய அர்த்தித்வம் இல்லையோ? என்னில்: அது வ்யாஜம்; ஸாதுபரித்ராணமே ப்ரயோஜனம். (21) "**परित्राणाय साधूनां**" (பரித்ராணாய ஸாதூநாம்) என்று தொடங்கி (21) "**धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे**" (தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே) என்றானிறே. அர்ஜுனனுடைய யுத்தப்ரோத்ஸாஹநவ்யாஜமாக ஸ்வவிஷயபக்தியோகத்தை அவதரிப்பித்தாப்போலே. (22) "**उपायोपेयत्वे तदिह तव तत्त्वं**" (உபாயோபேயத்வே ததிஹ தவ தத்த்வம்) என்று உபேயபாவத்தோபாதி உபாயபாவமும் நித்யமிறே. ஒருத்தன் ஸ்வீகரித்த போதாக உபாயமாகிறானன்றிறே. போகவேளையிலும் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களிற் காட்டில் தன்னுடைய முற்பாடு தோற்றுகைக்காகவிறே திருக்குழலை வாய் வைத்தருளிற்று. இந்த போகந்தான் அவிச்சிந்நமாகவேணுமென்று அபிநிவேஶம் பிறந்தவனுக்கு, அப்போது அவிச்சிந்நபோகஸ்தாநம் எங்கேயோ என்று தேடவேண்டாதபடி (23) "**श्रिया सार्धं जगत्पतिः—आस्ते**" (ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:—ஆஸ்தே) என்கிறபடியே நித்யவிபூதியிலே இவனுடைய வரலாறு பார்த்திருக்கிறானிறே.

2. பதவுரை:— தேவாநாம்—விஷ்ணுபக்தியுடையவர்களுக்கும், தாநவாநாம் ச—பகவத்பக்தியற்றவர்களுக்கும், ஸர்வதா—எப்போதும், ஸாமாந்யம் அதிதைவதம்—ஸமானமாகப் பற்றலாம்படியிருக்கும், தவ—உன்னுடைய, சரணத்வந்த்வம்—திருவடியிணையை, ஶரணம்—உபாயமாக, வ்ரஜாமி—நிச்சயிக்கிறேன்.

---

* திருவாய். (2-7-10).

**देवानां दानवानां च सामान्यमधिदैवतम् ।**
**सर्वदा चरणद्वन्द्वं व्रजामि शरणं तव ॥ २ ॥**

2. தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம் ।
ஸர்வதா சரணத்வந்த்வம் வ்ரஜாமி ஶரணம் தவ ॥

அவ:— (தேவாநாம் இத்யாதி) கீழ் ஶ்லோகத்திலே உபேயத்தை நிர்ணயித்து, தத்ஸித்யர்த்தமாக உபாயத்தை அத்யவஸிக்கிறான். உபேயத்திலும் தலையான உபேயத்தை லபித்தாப்போலே, உபாயத்திலும் தலையான உபாயத்தை லபிக்கப்பெற்றபடி. புத்ரபஶ்வந்நாதிகளையே ப்ராப்யமென்று இருப்பாரும், தேவர்களைப்பற்றி ஸ்வர்க்கத்தை லபிக்கையே புருஷார்த்தம் என்றிருப்பாரும், ஈஶ்வரனையே பற்றி வைத்து, இந்த்ரபதம் முதலான பதங்களையே புருஷார்த்தமென்று அவன் பக்கலிலே லபிக்கவிருப்பாருமாயிருக்கிற ஸம்ஸாரத்திலே, ஸர்வாதிகனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய், உபயவிபூதிநாயகனாயிருக்கிற ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே நித்யகைங்கர்யத்தையே புருஷார்த்தமென்று இருக்கையாகிற இது ஒருத்தருக்கும் கிட்டுவதொன்றன்றிறே. (24) "**मनुष्याणां सहस्रेषु**" (மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு) என்றும், (25) "**स महात्मा सुदुर्लभः**" (ஸ மஹாத்மா ஸுதுர்லப:) என்றும் அவன் தனக்கும் துர்லபமாயிறே இருப்பது. அதுபோலே உபாயங்களிலும் வந்தால் கர்மயோகாத்யுபாயங்களைப் பற்றுவாரும், (26) "**किं जपन् मुच्यते जन्तुर्जन्मसंसारबन्धनात्**" (கிம் ஜபந் முச்யதே ஜந்துர் ஜந்மஸம்ஸாரபந்தநாத்) என்கிறபடியே திருநாமங்களைப் பற்றுவாரும், (27) "**देशोऽयं सर्वकामधुक्**" (தேஶோऽயம் ஸர்வகாமதுக்) என்கிறபடியே தேஶவிஶேஷங்களைப் பற்றுவாருமாக, இப்படிச் சேதநபேதத்தோபாதி உபாயபேதமும் அஸங்க்யாதமாகச் சொல்லுகிற ஸம்ஸாரத்திலே ஸுஶகமாய், நிரபாயமாயிருக்கிற ஸித்தோபாயபரிக்ரஹம் கிடைப்பதொன்றன்றிறே. அப்படிப்பட்ட உபாயபரிக்ரஹத்தைச் சொல்லுகிறது. 'த்வயத்துக்கு வ்யாக்யானம் பண்ணுகிறதாகில், அதில் க்ரமமொழிய, முற்பட ப்ராப்ய நிஷ்கர்ஷம் பண்ணுவானென்?' என்னில்: இப்ராப்யம் தான் இத்தலையில் ருசியால் வந்ததன்றிக்கே ருசியே தொடங்கி அத்தலையால் வந்ததாகையாலே, முற்பட நிஷ்கர்ஷித்து, அனந்தரம், உபாயஸ்வீகாரத்தைப் பண்ணுகிறான்.

வ்யா:— "தேவாநாம் தாநவாநாம் ச ஸாமாந்யமதிதைவதம்" என்று இவ்வுபாய ஸ்வீகாரத்துக்கு அதிகாரிநியதியில்லை என்கிறது. தேவர்களாகிறார்,— ஈஶ்வரனுக்கு அனுகூலகோடியிலுள்ளார். தாநவராகிறார்,— ப்ராதிகூல்யத்திலே வ்யவஸிதராயிருக்குமவர்கள். (28) "**विष्णुभक्तिपरो देवो विपरीतस्तथाऽसुरः**" (விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ் ததாऽஸுர:) என்னக்கடவதிறே. (29) "**द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन् दैव आसुर एव च**" (த்வௌ பூதஸர்கௌ லோகேऽஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச) என்று இரண்டுக்குள்ளே அந்தர்ப்பூதையிறே ஸ்ருஷ்டி. (ஸாமாந்யமதிதைவதம் சரணத்வந்த்வம்) ஸர்வஸாதாரணமான திருவடிகளை. இத்தால் ஸம்பந்தஸாமாந்யத்தைச் சொல்லுகிறதன்று. ஆஶ்ரயணீயத்வே ஸமமாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. இப்படி விஶேஷிக்கிறது எத்தாலே? என்னில்: விமுகரான

காலத்தில் ஆஶ்ரிதவிரோதிகளென்றிட்டு அழியச்செய்யுமவனுகையாலே. * "அவுணர்க்கென்றும் சலம் புரிந்தங்கருளில்லாத் தன்மையாளன்" என்னக்கடவதிறே. நிஹீனஜன்ம குணவ்ருத்தரோடு இவற்றால் உத்க்ருஷ்டரோடு வாசியற எல்லார்க்கும் ஆதித்யோதயம்போலே எனக்கென்று பற்றலாம்படியான திருவடிகளென்கை. ராவணன் எச்சிலைத் தின்றுவந்த ஸ்ரீவிபீஷணாழ்வான், (30) "**सर्वलोकशरण्याय**" (ஸர்வலோகஶரண்யாய) என்று வழக்குப்பேசிப் பற்றலாம்படியிறே இருப்பது. (31) "**समोऽहं सर्वभूतेषु**" (ஸமோऽஹம் ஸர்வபூதேஷு) என்றிறே ஶரண்யன் வார்த்தை. (32) "**व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः**" (வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:க்கித:) என்று ஆஶ்ரயணயோக்யமான மனுஷ்யஸாமான்யத்திலே க்ருபை மிக்கிறே இருப்பது. பரதுக்காஸஹிஷ்ணுத்வமிறே க்ருபையாவது. ஆஶ்ரயண வேளையில் (33) "**यदि वा रावणः स्वयं**" (யதி வா ராவணஸ் ஸ்வயம்) என்றுனிறே. † "எல்லா உலகும் தொழும் ஆதிமூர்த்தி" என்றும், ‡ "பொது நின்ற பொன்னங்கழல்" என்றுமிறே அபியுக்தர் வார்த்தை. (ஸர்வதர) ப்ராதிகூல்யம் பண்ணுகிற வேளையேயானாலும் ரக்ஷாபேக்ஷையே வேண்டுவதாக விஷயீகரிக்கும் திருவடிகள். (34) "**पापानां वा .... कार्यं करुणमार्येण**" (பாபாநாம் வா...கார்யம் கருணமார்யேண) என்னக்கடவதிறே. § "ஈடுமெடுப்புமிலீசன்" என்று ஆழ்வாரும் அருளிச்செய்ததுக்கும் அடி இதுவிறே. (35) "**अनालोचितविशेषाऽशेषलोकशरण्य**" (அநாலோசிதவிஶேஷாऽஶேஷலோகஶரண்ய) என்றதுக்கும் முதல் இதுவிறே. (சரணதவந்த்வம்) அந்யோந்யம் சேர்த்தியழகைச் சொல்லுகிறது. உபாயமாக அனுஸந்திக்குமளவிலே வேறொரு ப்ரயோஜனமும் வேண்டா. ப்ரயோஜனமும் இதுவே போருமென்றிருக்கை. (ஶரணம் வ்ரஜாமி) உபாயமாக அடைகின்றேன். கீழ்ச்சொன்ன ஸர்வாதிகாரத்வம் ஸித்தோபாயத்தைக் குறித்து என்கை. ஸாதனாந்தரங்கள் அதிக்ருதாதிகாரங்களாயிறே இருப்பது. "வ்ரஜ—கதௌ" என்கிற கத்யர்த்தம் புத்யர்த்தமாய் 'அத்யவஸிக்கிறேன்' என்றபடி. இத்தால் ஶரண்யன் ஸந்நிதி வேண்டா; ப்ராப்தியே அமையுமென்கை. ஆசார்யருசிபரிக்ருஹீதமான வாக்யத்தில் க்ரியாபதத்தில் வர்த்தமானநிர்த்தேஶத்துக்கும் அடி "வ்ரஜாமி" என்கிற வர்த்தமான நிர்த்தேஶமே. அதை கௌணமாக உபதேஶித்துப்போருகிறதும் அதனுடைய (36) "**सकृदेव प्रपन्नाय**" (ஸக்ருதேவ ப்ரபந்நாய) என்கிற வாக்யத்தைப் பற்ற. ஆக, ஸக்ருத்விதாநம் ஈஶ்வரவிஷயீகாரத்தைப் பற்ற. ப்ராப்யருசியாலே ப்ராப்தியளவும் செல்ல அனுவர்த்திக்கக்கடவது ராகத்தாலே. (வ்ரஜாமி) வ்ரீஹிஸ்வீகாரம், தேவதாமுத்திஶ்ய த்ரவ்யத்யாகரூபமான யாகமுமன்றிக்கே, ததங்கமான ப்ரயாஜாதிகளுமன்றிக்கே இருக்கிறாப்போலே, உபாயஸ்வீகாரமும் உபாயமன்று அதுக்கு; அங்கமுமன்றிக்கே அதிகாரிவிஶேஷணமாய்க் கிடக்கிறது. (தவ) (37) "**अप्यहं जीवितं जह्यां**" (அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம்) என்றும், (38) "**कपोतो वा नरश्रेष्ठ ! किं पुनर्मद्विधो जनः**" (கபோதோ வா நரஶ்ரேஷ்ட கிம் புநர் மத்விதோ ஜந:) என்றும் தன்னை அழியமாறி ஶரணாகதபரித்ராணம் பண்ணின கபோதோபாக்யானமும் அருளிச்செய்த தேவருடைய. "சரணத்வந்த்வம் வ்ரஜாமி" என்று அந்வயம்.

---

* திருநெடுந்தாண்டகம்-6. † திருவாய். (3-3-5). ‡ 3-திருவந்தாதி-88. § திருவாய். (1-6-3).

एकस्त्वमसि लोकस्य स्रष्टा संहारकस्तथा ।
अध्यक्षश्चानुमन्ता च गुणमायासमावृतः ॥ ३ ॥

3. ஏகஸ்த்வமஸி லோகஸ்ய ஸ்ரஷ்டா ஸம்ஹாரகஸ் ததா ।
அத்யக்ஷஶ்சானுமந்தா ச குணமாயாஸமாவ்ருத: ॥

---

முதல் ஶ்லோகம் ப்ராப்யஸங்க்ரஹமானபோது, இந்த ஶ்லோகம் "நமஸ்தே" என்கிற பதத்துக்கு விவரணமாகிறது. விவரணாபேக்ஷை என்னென்னில்: (39) "**मद्याजी मां नमस्कुरु**" (மத்யாஜீ மாம் நமஸ்குரு) என்று நமஶ்ஶப்தம் ஸாதநாந்தரத்துக்கும் ஸாதாரணமாகையாலே, ஶரணஶப்தபர்யாயம் நமஶ்ஶப்தத்தினுடைய விவரணமாகிறது. (40) "**गच्छध्वमेनं शरणं शरण्यं पुरुषर्षभाः**" (கச்சத்வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபா:) என்று விதித்த ஶரணாகதியினுடைய அனுஷ்டானவேளையிலே (41) "**द्रौपद्या सहितास्सर्वे नमश्चक्रुर्जनार्दनम्**" (த்ரௌபத்யா ஸஹிதாஸ் ஸர்வே நமஶ்சக்ருர் ஜநார்த்தநம்) என்று நமஸ்காரம் பண்ணினார்கள். ஆகையாலே ஸ்தாநப்ரமாணத்தாலே ஶரணஶப்தபர்யாயம் நமஶ்ஶப்தம். 2.

3. பதவுரை:— லோகஸ்ய—எல்லா உலகங்களையும், ஸ்ரஷ்டா—ஸ்ருஷ்டித்தவன், த்வம் ஏக: அஸி—(ஸஹாயாந்தரத்தை எதிர்பாராத) நீ ஒருவனேயாகிறாய்; ததா—அப்படியே, ஸம்ஹாரக:—ஸம்ஹரிப்பவனும் (நீ ஒருவனே); அத்யக்ஷஶ்ச—ரக்ஷிப்பதற்குக் காலத்தை எதிர்பார்த்திருப்பவனாகவும், அநுமந்தா ச—(பந்தத்தைத் தரும் கர்மங்களில் ஈடுபடுபவனைத் தடுக்காமல்) அனுமதிப்பவனாகவும், குணமாயாஸமாவ்ருத:—ஸத்வரஜஸ்தமோ குணங்களுடன் கூடிய ப்ரக்ருதியால் மறைக்கப்பட்டவனாகவும் இருக்கிறாய்.

அவ:— (ஏகஸ்த்வமஸீத்யாதி) கீழ் இரண்டு ஶ்லோகத்தாலே ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லிற்றாய், அந்த உபாயஸ்வீகாரத்துக்கு அடியான ஶரண்யதையைச் சொல்லுகிறது மேலில் ஶ்லோகங்கள். அதில் இந்த ஶ்லோகத்தில், அநந்தரம் ஶரண்யதைக்கு உறுப்பாக அவனுடைய ஜகத்காரணத்வப்ரயுக்தமான ஸர்வஜ்ஞத்வாதிமஹாகுணங்களைச் சொல்லுகிறது. (42) "**कारणन्तु ध्येयः**" (காரணந்து த்யேய:) என்கிறபடியே உபாஸ்யம் ஜகத்காரணவஸ்துவானவோபாதி ஶரண்யமும் ஜகத்காரணவஸ்துவேயிறே. எங்ஙனேயென்னில்: (43) "**यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै**" (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை) என்று ஜகத்காரணவஸ்துவைச் சொல்லி, (43) "**मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये**" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே) என்று மோக்ஷஸித்திக்காக அவன் திருவடிகளில் பண்ணும் ப்ரபத்தியை ஸோபாநமாக விதித்ததிறே.

வ்யா:— (லோகஸ்ய ஸ்ரஷ்டா த்வம் ஏக: அஸி; லோகஶப்தத்தாலே, "லோக்யத இதி லோக:" என்கிற வ்யுத்பத்தியால் ப்ரத்யக்ஷஸித்தமாயும் ஶ்ருதிஸித்தமுமாயுள்ள ஸகலபதார்த்தங்களுக்கும் ஸ்ரஷ்டாவென்கை. "த்வம்" என்கிற ஏகவசனத்தாலே ஸ்ரஷ்ட்ரந்தரவ்யாவ்ருத்தியைச் சொல்லுகிறது. (44) "**आकाशाद्वायुः। वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी।**" (ஆகாஶாத் வாயு:। வாயோரக்நி:। அக்நேராப:। அத்ப்ய: ப்ருதிவீ।) என்று அசேதனங்களுக்கும், (45) "**ब्रह्माऽसृजत्**" (ப்ரஹ்மாऽஸ்ருஜத்) இத்யாதிகளிலே சேதனர்க்கும் ஶ்ருதிஸ்ம்ருதிகளிலே கர்த்ருத்வம் சொல்லாநிற்க, ஈஶ்வரனே ஸர்வஸ்ரஷ்டா

என்றபடியென்? என்னில்: சேதநாசேதநஶரீரியானவன் ஸர்வஸ்ரஷ்டாவாகையால் ஸர்வஸ்ரஷ்டா ஈஶ்வரனே. (46) "स्वात् शरीरात् सिसृक्षुर्विविधाः प्रजाः" (ஸ்வாத் ஶரீராத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா:) என்று மனு. (47) "स एव सृज्यस्स च सर्गकर्ता, स एव पात्यत्ति च पाल्यते च। ब्रह्माद्यवस्थाभिरशेषमूर्तिर्विष्णुर्वरिष्ठो वरदो वरेण्यः॥" (ஸ ஏவ ஸ்ருஜ்யஸ்ஸ ச ஸர்க்ககர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச। ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷமூர்த்திர் விஷ்ணுர் வரிஷ்டோ வரதோ வரேண்ய:॥) இதி பராஶர:; (48) "तदभिध्यानादेव तु तल्लिङ्गात्सः" (ததபித்யாநாதேவ து தல்லிங்காத் ஸ:) இதி ஸூத்ரம். 'ஏக'பதத்தாலே ஸஹாயாந்தரநிரபேக்ஷதையைச் சொல்லுகிறது. (18) "एकाकी न रमेत" (ஏகாகீ ந ரமேத) என்று இழவு தன்னதானபடி சொல்லுகிறது. (17) "बहु स्यां प्रजायेय" (பஹு ஸ்யாம் ப்ரஜாயேய) என்று இவனுடைய ப்ரயோஜனமும் அபிமானமும் தன்னதென்கிறது. (49) "एकमेवाद्वितीयं" (ஏகமேவாத்விதீயம்) என்று ஸஹகாரிநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. இந்த ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யந்தன்னை * "தனி மாப்புகழே எஞ்ஞான்றும்" என்கிற பாட்டிலே ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. இத்தால் அர்த்தித்வநிரபேக்ஷமாக இவற்றை உண்டாக்கினவன் அர்த்தித்வமும் உண்டானால் ரக்ஷிக்கச் சொல்லவேண்டாவிறே என்கை. சரமஶ்லோகத்தில் ஏகபதம் உபாயநைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. இந்த ஏகபதம் உத்பாதகத்வத்தில் நைரபேக்ஷ்யத்தைச் சொல்லுகிறது. (ததா ஸம்ஹாரக:) ஸ்ருஷ்டியோபாதியும் ஹிதகாமனாய் ஸம்ஹரிக்கிறாய் நீ ஒருவனுமேயன்றோ. புருஷார்த்தோபயோகியாக ஶரீரத்தைக் கொடுக்க, இத்தைக்கொண்டு பரஹிம்ஸாதிகளிலே இழிந்து அதிப்ரவ்ருத்தனாய்த் தன்னை நஶிப்பித்துக்கொள்ளுமளவிலே அந்த ஶரீரத்தையும் அழியச் செய்கை ஹிதமேயிறே. இத்தாலும் ஶரண்யதையைச் சொல்லுகிறது. இவன் தன்னை இவன் கையில் காட்டிக்கொடாமையால். (அத்யக்ஷஶ்ச) "ஸ்ருஷ்டிப்ரயோஜனமான மோக்ஷருசி இவர்களுக்கு உண்டாகவற்றோ?" என்று அவஸரப்ரதீக்ஷனாயிருக்கிறபடியைச் சொல்லுகிறது. ‡ "ஆள் பார்த்து உழிதருவாய் கண்டுகொள்" என்னக்கடவதிறே. "புருஷார்த்தஸாதனமான ஸ்வஶரீரங்கொண்டு புருஷார்த்தத்தில் இழிகையன்றிக்கே, ஸ்ருஷ்டிஸம்ஹாரத்துக்கே விஷயமாவதே இவை" என்று இவற்றினுடைய அனர்த்தத்தை அனுஸந்தித்திருக்கிறபடியைச் சொல்லுகிறதென்றுமாம். (32) "व्यसनेषु मनुष्याणां भृशं भवति दुःखितः" (வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:க்கித:) என்னக்கடவதிறே. இப்படியிருக்கிறவன் புருஷார்த்தத்தை அபேக்ஷித்தால் ரக்ஷிக்கச் சொல்லவேண்டாவிறே. (அநுமந்தா ச) விஷயாந்தரங்களில் ப்ராவண்யத்தால் தத்ஸாதனமான பந்தககர்மங்களிலே ப்ரவர்த்தியாநின்றாலும் அங்கண்ணனாய்க்கொண்டு நிஷேதிக்கமாட்டாதே நிற்கும். எத்தாலே யென்னில்: "க்ஷுத்ரப்ரயோஜனத்துக்காகவாகிலும் நம் பக்கலிலே வரப்பெற்றோமே; ஸர்வஶக்தியான நாம் உளோமிறே; இடம் வந்தவிடத்திலே ரக்ஷிக்கிறோம்" என்னும் நினைவாலே. 'இப்படி வத்ஸலனானவன் இத்தலை இசைந்தால் ஹிதகாமனென்னுமிடம் சொல்ல வேணுமோ?' என்று கருத்து. (குணமாயாஸமாவ்ருத:) 'இப்படி இவர்கள் பஹிர்முகராகைக்கு அடியென்?' என்னில்: குணமயியான மாயையால் மறைக்கப்படுகையாலே. (50) "भगवत्स्वरूपतिरोधानकरीं" (பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்) என்கிறபடியே இச்சேதனனை

---

* திருவாய். (8-10-7). ‡ 4-திருவந்தாதி-60.

संसारसागरं घोरमनन्तक्लेशभाजनम् ।
त्वामेव शरणं प्राप्य निस्तरन्ति मनीषिणः ॥ ४ ॥

4. ஸம்ஸாரஸாகரம் கோரமநந்தக்லேஶபாஜநம் ।
த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண: ॥

---

மாயை மறைக்கையால் அவனையும் மறைத்ததாமிறே. தன் உடைமையான இவன் குணவஶ்யனாய், 'பொய்ந்நின்ற ஞான'த்திலே கலங்கினால் இக்குணஸம்பந்தமின்றிக்கே ஸர்வஜ்ஞனானவனே ஶரண்யனாகவேணும் என்று கருத்து. (51) "**सत्त्वादयो न सन्तीशे यत्र च प्राकृता गुणाः**" (ஸத்த்வாதயோ ந ஸந்தீஶே யத்ர ச ப்ராக்ருதா குணா:) என்னக்கடவதிறே.

முதல் ஶ்லோகம் ஸர்வஸங்க்ரஹமானபோது இஶ்லோகம் "விஶ்வபாவந" என்கிற பதத்தினுடைய விவரணமாகிறது. ஜநிஸ்திதிலயங்களுக்கு ஆஶ்ரயமாகையும் ஸஹகாரி நைரபேக்ஷ்யமுமிறே பகவல்லக்ஷணம்; அது இஶ்லோகத்தில் சொல்லுகிறது. 3.

4. பதவுரை:— மநீஷிண:—மனஸ்ஸை ஜயித்திருப்பவர்கள், த்வாமேவ—உன்னையே, ஶரணம்—உபாயமாக, ப்ராப்ய—அடைந்து, அநந்தக்லேஶபாஜநம்—கணக்கற்ற துக்கங்களுக்குப் பிறப்பிடமாய், கோரம்—மிகக்கொடிதாயிருக்கும், ஸம்ஸாரஸாகரம்—ஸம்ஸாரமாகி ஸமுத்ரத்தை, நிஸ்தரந்தி—தாண்டுகிறார்கள்.

அவ:— (ஸம்ஸாரஸாகரமித்யாதி) கீழ்ச்சொன்ன பகவத்காரணத்வம், (42) "**कारणन्तु ध्येयः**" (காரணந்து த்யேய:) என்றும், (43) "**यो ब्रह्माणं विदधाति पूर्वं**" (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்) என்றும், (43) "**मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये**" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே) என்றும் உபாஸனத்துக்கும் ஸாதாரணமாகையாலும், ப்ரபத்தி உபாஸநத்துக்கு அங்கமாவதொழிய ஸ்வதந்த்ரோபாயமென்கைக்கு அனுஷ்டானமுண்டோ? என்ன: "ஸ்ருஷ்டியில் கர்மீபவித்தவர்களிலே தந்தாமுடைய மனஸ்ஸுக்கு நிர்வாஹகராயிருப்பார் சிலர் உன்னையே உபாயமாகப்பற்றி ஸம்ஸாரத்தைக் கடவாநிற்பார்கள்" என்கிறது. இத்தால் ப்ரபத்திக்கு ப்ரமாணப்ரஸித்தியேயன்று உள்ளது; ஶிஷ்டாசாரமும் உண்டு என்கிறது.

வ்யா:— ஸம்ஸாரமாகிறது:— அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்பந்தங்களும், ஷட்பாவவிகாரங்களும். புத்ர மித்ர களத்ராதிகளும் தத்கார்யமாகையாலே ஸம்ஸாரஶப்த வாச்யங்களாகிற இத்தனை. (26) "**जन्मसंसारबन्धनात् — मुच्यते**" (ஜந்மஸம்ஸாரபந்தநாத் — முச்யதே) என்று ஜன்மாதிகளைக் கார்யவர்க்கங்களாகவும், அவித்யாதிகளைக் காரணவர்க்கமாகவும் சொல்லிற்றிறே. பரிச்சேதிக்கவொண்ணாமையாலும், தன் பக்கல் இழிந்தாரைக் கொண்டு இழியுமதாகையாலும், புகலாமித்தனைபோக்கி, புக்கால் தந்தாமால் கரையேற வொண்ணாமையாலும், இத்தை ஸாகரமாக நிரூபிக்கிறது. (கோரம்) கொடிதாயிருக்கை. அதாகிறது:— ஸர்வர்க்கும் துக்கமென்று மீளலாம் நரகாதிகளைப்போலன்றிக்கே, ஆத்மாவுக்கு விநாஶஹேதுவாய் இருக்கச்செய்தேயும் * "இன்னமுதெனத் தோன்றி" என்று முகப்பிலே ஆகர்ஷகமாயிருக்கும் தன்மையை உடைத்தாயிருக்கை. அஹங்காரவஸித்திக்கும் விஷயாந்தர

---

* திருவாய். (7-1-8)

**न ते रूपं न चाकारो नायुधानि न चास्पदम् ।**
**तथाऽपि पुरुषाकारो भक्तानां त्वं प्रकाशसे ॥ ५ ॥**

5. ந தே ரூபம் ந சாகாரோ நாயுதாநி ந சாஸ்பதம் ।
ததாऽபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாஶஸே ॥

போகத்துக்கும் ஸம்ஸாரிகள் உபாயானுஷ்டானம் பண்ணுகிறார்களிறே. (அநந்தக்லேஶ-பாஜநம்) தாபத்ரயதுக்கத்தாலே தொகையற்ற க்லேஶத்துக்கெல்லாம் உத்பத்திஸ்தானமாயிருக்கை. † "நலமந்தமில்லதோர் நாடு" என்று ஒரு தேஶவிஶேஷத்தில் ஸுகத்திற்கு முடிவில்லாதாப்போலே, இதில் துக்கத்துக்கு முடிவில்லை என்கை. (த்வாமேவ ஶரணம் ப்ராப்ய) தாரதம்யத்தை உடைத்தான ஸம்ஸாரத்தினுடைய கொடுமை சொல்லிற்று கீழ். இத்தைக் கடப்பிக்கும் உபாயத்தினுடைய ஸௌலப்யத்தைச் சொல்லுகிறது. (த்வாம்) "ஏகஸ்த்வமஸி" என்கிற ஶ்லோகத்தில் ஜகத்காரணத்வப்ரயுக்தமான மஹாகுணங்களை உடைய உன்னை. அவதாரணத்தாலே ஜகத்ஸ்ருஷ்டியில் ஸஹாயாந்தரநைரபேக்ஷ்யம்போல, உபாயபாவத்திலும் ஸஹகாரிஸாபேக்ஷனல்லனென்கிறது. (52) "**त्वमेवोपायभूतो मे भव**" (**த்வமேவோபாயபூதோ மே பவ**) என்கிற இதினுடைய உபப்ரும்ஹணமான ஶாஸ்த்ரத்திலும் இந்த நைரபேக்ஷ்யம் உக்தமிறே. (53) "**मामेव ये प्रपद्यन्ते**" (**மாமேவ யே ப்ரபத்யந்தே**) என்றிறே ஶரண்யன் வார்த்தையும். ஆசார்யஸேவையும் இவ்வவதாரணத்துக்குத் தாத்பர்யமறிகை. "ஶரணம்" என்று உபாஸனத்தை வ்யாவர்த்திக்கிறது. "வ்ரஜாமி ஶரணம் தவ" என்கிறவிடத்திலே 'வ்ரஜாமி'யினுடைய ஸ்தானத்திலே "ப்ராப்ய" என்கிறது,—பகவல்லாபத்தோபாதி உபாயபாவமும் ஸுலபமென்று தோற்றுகைக்காக. ‡ "ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்" என்று இவ்வுபாயப்ரஸித்தியை பகவத்ப்ரஸாதகார்யமாக ஆழ்வார் அருளிச்செய்தாரிறே. (நிஸ்தரந்தி) உன்னாலே இத்தைக் கடப்பார்கள். (மநீஷிண:) "மநோஜேதார:— மநீஷிண:"; விஷயாந்தரப்ரவணமான மனஸ்ஸையும், ஸாதநாந்தரப்ரவணமான மனஸ்ஸையும் ஜயித்திருக்குமவர்கள். (54) "**संसारार्णवमग्नानां**" (**ஸம்ஸாரார்ணவமக்நாநாம்**) என்று ஶாஸ்த்ராந்தரத்திலே இத்தை உபப்ரும்ஹித்ததிறே.

முதல் ஶ்லோகம் ஸங்க்ரஹமான பக்ஷத்தில் "நமஸ்தே" என்கிற பதத்தைப்பற்றி உதிக்கிறது இஶ்லோகம். இரண்டாம் ஶ்லோகமும் அதனுடைய அனுஷ்டான ப்ரகாரம் சொல்லுகிறது. அதனுடைய ப்ராவண்யத்துக்காகப் பலபர்யந்தமான ஶிஷ்டாசாரம் சொல்லுகிறது இஶ்லோகம். 4.

5. பதவுரை:— ரூபம்—(உன்னுடைய) திவ்யாத்மஸ்வரூபமானது, தே—உனக்காக, ந—இராது; (ஸ்வதந்த்ரமான அது ஆஶ்ரிதர்களுக்காகப் பரதந்த்ரமாகவும் ஆகும் என்று தாத்பர்யம்) ஆகார: ச—திவ்யமங்களவிக்ரஹமும், தே ந—உனக்காயிராது; ஆயுதாநி—திவ்யாயுதங்களும், தே ந—உனக்காயிருக்கவில்லை; ஆஸ்பதம் ச—இருப்பிடமான வைகுண்டம் முதலியவைகளும், தே ந—உனக்காயிருக்கவில்லை; (இவையெல்லாம் உன் அடியார்களுக்கா

† திருவாய். (2-8-4). ‡ திருவாய். (5-7-10).

யிருக்கும் என்று பொருள்) பக்தாநாம் த்வம்—பக்தர்களுடைய உடைமையான நீ, ததாபி—இப்படி ஆஶ்ரிதபரதந்த்ரமான ஸ்வரூபரூபகுண விபூதிகளை உடையனுயிருந்தபோதிலும், புருஷாகார:—புருஷஸூக்தத்தில் சொல்லப்பட்ட ஸர்வாதிகனுயிருக்கும் தன்மையுடன், ப்ரகாஶஸே—விளங்குகிறுய்.

அவ:— (ந தே ரூபம் இத்யாதி) "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி" என்று உன்னையே உபாயமாகப் பற்றி ஸம்ஸாரத்தைக் கடக்குமவர்களுக்கு உன்னையும், உன் உடைமையையும் அனுகூலமாக்கிவைப்புதி என்கிறது இத்தால். ஆஶ்ரிதர் தங்களையும், தங்கள் உடைமையையும் ஈஶ்வரனுக்கு ஆக்கிவைக்கிறது ஸ்வரூபத்தாலே; அவன் தன்னையும் தன் உடைமையையும் அவர்களுக்கு ஆக்கிவைக்கிறது வாத்ஸல்யஸௌஶீல்யாதிகளாலே. ஆகையாலே இத்தால் வாத்ஸல்யஸௌஶீல்யாதிகளைச் சொல்லுகிறது. இத்தாலும் ஶரண்யதையைச் சொல்லுகிறது. கீழ் "ஏகஸ்த்வமஸி" என்கிற ஶ்லோகத்திற்சொன்ன ஸ்வாமித்வஸௌலப்யங்களோபாதி வாத்ஸல்யஸௌஶீல்யங்களும் ஶரண்யலக்ஷணமாகையாலே.

வ்யா:— (ந தே ரூபம்) "ரூபம்" என்பது திவ்யாத்மஸ்வரூபத்தைச் சொல்லுகிறது; "ஆகார:" என்று திவ்யவிக்ரஹத்தை மேலே சொல்லுகையாலே. 'இஶ்லோகத்தால் ஸ்வரூபாதிகள் இவனுக்கு இல்லையென்கிறது எங்ஙனே?' என்னில்: 'தே' என்று நிர்த்தேஶித்துவைத்து ஸ்வரூபாதிகளை நிஷேதிக்கையாலே, நிஷேதிக்கிறது எவ்வாகாரத்தாலேயென்னில், ஸ்வரூபாதிகளாலே தேவர் கொள்ளுவதொரு கார்யமில்லையென்று ஸ்வார்த்தத்தை நிஷேதிக்கிறது. (தே ரூபம் ந தே) உன்னுடைய திவ்யாத்மஸ்வரூபமும் உனக்காயிராது. ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு அனுகூலமாயிருக்கில் ஸ்வதந்த்ரமாயிருக்கிற அது பரதந்த்ரமாயிருக்கிலும் இருக்கும். (55) "**मयि भृत्ये स्थिते देवानाज्ञापयत किं नृपैः**" (மயி ப்ருத்யே ஸ்திதே தேவாநாஜ்ஞாபயத கிம் ந்ருபை:), (56) "**किङ्करौ समुपस्थितौ**" (கிங்கரௌ ஸமுபஸ்திதௌ) என்று சொல்லக்கடவதிறே. ஸர்வநியந்தாவானவன் ஒரு ஸம்ஸாரிக்குப் புத்ரனுனனிறே. இதிறே ஆஶ்ரிதார்த்தமான ஸ்வரூபாந்யதாபாவம். இந்த ஸ்வரூபஶப்தத்தாலே ஸ்வரூபாஶ்ரயமான ஜ்ஞானஶக்த்யாதிகளையும் உபலக்ஷிக்கிறது. எத்தாலேயென்னில்: இஶ்லோகத்தை விவரிக்கிற கூரத்தாழ்வான் (57) "**प्रवरगुणगणाश्च ज्ञानशक्त्यादयस्ते**" (ப்ரவரகுணகணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாதயஸ்தே) என்றுனிறே. (58) "**यस्सर्वज्ञस्सर्ववित्**" (யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்) என்று ஶ்ருதிஸித்தமான ஸர்வஜ்ஞதையை உடையவன், ஆஶ்ரிதார்த்தமாக (59) "**अविज्ञाता**" (அவிஜ்ஞாதா) என்று அஜ்ஞனுமாய், ஆயுதம் எடேனென்று ஆயுதமெடுத்து அஸத்யஸங்கல்பனுனனிறே. (60) "**अनन्याधीनत्वं तव किल जगुर्वैदिकगिरः पराधीनं त्वां तु प्रणतपरतन्त्रं मनुमहे। उपालंभोऽयं भोः श्रयति बत सार्वज्ञ्यमपि ते यतो दोषं भक्तेष्विह वरद! नैवाकलयसि**" (அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர: பராதீநம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே। உபாலம்போऽயம் போ: ஶ்ரயதி பத ஸார்வஜ்ஞ்யமபி தே யதோ தோஷம் பக்தேஷ்விஹ வரத! நைவாகலயஸி) என்று ஆழ்வானும் ஆஶ்ரிதவிஷயத்தில் பாரதந்த்ர்யத்தையும், தத்கததோஷத்தில் அஜ்ஞதையையும் சொன்னுனிறே. திவ்யவிக்ரஹமும் ஆஶ்ரிதரக்ஷணத்துக்கு அனுகூலமான ப்ரகாரத்தை உடைத்தாயிருக்கும். பரமபதத்தில் ஸூரிகளுக்கு போகயோக்யமாயிருக்கும்; வ்யூஹங்களில் வந்தால்

ஶ்வேதத்வீபவாஸிகளுக்கு போகயோக்யமாயிருக்கும்; ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயமாயிருக்கும்; விபவங்களில் வந்தால் அதீந்த்ரியமான விக்ரஹத்தை ஸாதுபரித்ராணார்த்தமாக இந்த்ரியகோசரமாக்கி அநுபவிப்பிக்கப்பார்த்தால் அநுபவிக்கலாயிருக்கும்; இந்த 'ஆகார' ஶப்தத்தாலே ஆகாராஶ்ரயமான திவ்யாபரணங்களையும் உபலக்ஷிக்கிறது. (57) "**भूषणान्यायुधानि**" (பூஷணாந்யாயுதாநி) என்றானிறே ஆழ்வானும். (61) "**वस्त्राण्याभरणानि च। तं विना कैकयीपुत्रं भरतं धर्मचारिणम्॥**" (வஸ்த்ராண்யாபரணாநி ச। தம் விநா கைகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம்) என்றவையும் ஆஶ்ரிதார்த்தமாயிறே இருப்பது. (ஆயுதாநி) இவை ஆஶ்ரித விரோதிநிரஸனத்துக்கு ஆயுதமாயும், வினையற்று அநுபவிப்பார்க்கு ஆபரணமாயுமிருக்கும். * "எப்போதும் கைகழலா நேமியான் நம்மேல் வினை கடிவான்" என்றும், † "கூராராழி வெண் சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்" என்றும், ‡ "சங்கென்னும் சக்கரமென்னும் துழாயென்னும்" என்றும் சொல்லக்கடவதிறே. (57) "**परिजनपरिबर्हा भूषणान्यायुधानि**" (பரிஜநபரிபர்ஹா பூஷணாந்யாயுதாநி) என்கிறபடியே பரிஜந பரிச்சதங்களுக்கு உபலக்ஷணமாய், (62) "**यत्र पूर्वे साध्याः सन्ति देवाः**" (யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:) § "அடியார்கள் குழாங்களை—உடன்கூடுவது என்றுகொலோ?" என்று, ஆஶ்ரிதர்க்கு ப்ராப்யமாயிறே பரிஜனமிருப்பது. பரிச்சதங்களும் ஸூரிகோடியிலே அந்தர்ப்பூதமாயிருக்கச்செய்தேயும், நித்யஸூரிகளுக்குக் கைங்கர்யோபகரணமாயிறே இருப்பது. (ந சாஶ்வதம்) பரமபதம் முதலான போகஸ்தானங்களும் தனக்கு போகஸ்தானமன்றிக்கே ஆஶ்ரிதர்க்காக நின்ற நிலைகளிலே காட்டி அநுபவிக்கச் சமைந்தவையாயிருக்கும். (ததாபி புருஷாகார:) இப்படியிருக்கச்செய்தேயும் புருஷப்ரகாரனாயிருக்கிற இருப்பு எப்போதும் குலையாதேயிருக்கும். (63) "**पुरुष एवेदं सर्वं**" (புருஷ ஏவேதம் ஸர்வம்), (64) "**सहस्रशीर्षा पुरुषः**" (ஸஹஸ்ரஶீர்ஷா புருஷ:) என்னும் வேதாந்தங்களிலே ஸர்வாதிகனாக ஓதிப்போருகிறவன். இப்படி ஆஶ்ரிதாதீநன் நான் என்கிற மஹாகுணம் தோற்றுகைக்காக, (பக்தாநாம் த்வம்) பக்தர்களுக்காயிருப்பது. அவர்கள் உனக்காயிருக்கும் இருப்பு ஸ்வரூபத்தாலே; நீ அவர்க்காயிருக்கும் இருப்பைக் குறித்து உன்னுடைய தாதர்த்யம் ஆஶ்ரிதஸங்கல்பத்தாலேயாயிருக்கும். இத்தை (57) "**सकलमेतत्संश्रितार्थं चकर्थ**" (ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தம் சகர்த்த) என்றானிறே ஆழ்வானும். (57) "**परिजनपरिबर्हा भूषणान्यायुधानि प्रवरगुणगणाश्च ज्ञानशक्त्यादयस्ते। परमपदमथाण्डान्यात्मदेहस्तथात्मा वरद! सकलमेतत् संश्रितार्थं चकर्थ॥**" (பரிஜநபரிபர்ஹா பூஷணாந்யாயுதாநி ப்ரவரகுணகணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாதயஸ்தே। பரமபதமதாண்டாந்யாத்மதேஹஸ் ததாத்மா வரத! ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தம் சகர்த்த॥). (ப்ரகாஶஸே) 'ஸ்வதந்த்ரனுக்குத் தத்விருத்தமான பாரதந்த்ர்யம் அநுபபன்னமன்றோ?' என்னில்: இதிஹாஸ புராணங்களிலே (65) "**यद्विना भरतं त्वां च शत्रुघ्नं चापि मानद। भवेन्मम सुखं किञ्चित् भस्मसात्कुरुतां शिखी**" (யத்விநா பரதம் த்வாஞ்ச ஶத்ருக்நஞ்சாபி மாநத। பவேந்மம ஸுகம் கிஞ்சித் பஸ்மஸாத் குருதாம் ஶிகீ॥) என்றும், (66) "**निसृष्टात्मा सुहृत्सु च**" (நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு ச) என்றும் இத்யாதிகளிலே ஆஶ்ரிதபரதந்த்ரனாய் ப்ரகாஶியாநின்றாயென்னுதல்; ஆஶ்ரயிப்பாருக்கு எளியனாக உஜ்ஜ்வலியாநின்றாயென்னுதல்.

* பெரிய திருவந்.-87. † திருவாய். (6-9-1). ‡ திருவாய். (4-2-9). § திருவாய். (2-3-10).

नैव किञ्चित्परोक्षन्ते प्रत्यक्षोऽसि न कस्यचित् ।
नैव किञ्चिदसिद्धन्ते न च सिद्धोऽसि कस्यचित् ॥ ६ ॥

6. நைவ கிஞ்சித் பரோக்ஷந்தே ப்ரத்யக்ஷோऽஸி ந கஸ்யசித் ।
நைவ கிஞ்சிதஸித்தந்தே ந ச ஸித்தோऽஸி கஸ்யசித் ॥

---

முதல் ஶ்லோகம் ஸங்க்ரஹமான பக்ஷத்தில் "ஹ்ருஷீகேஶ" என்கிற பதத்தின் விவரணமாயிருக்கிறது இஶ்லோகம்; அப்ராப்தமான விஷயாந்தரங்களில் நின்றும் மீட்டுத் தன்னையே விஷயமாக்குகையாலே. அப்ராப்தங்களில் நின்றும் மீட்டு ப்ராப்தங்களிலே அந்வயிப்பிக்கை நிர்வாஹகக்ருத்யமிறே. 5.

6. பதவுரை:— தே—உனக்கு, பரோக்ஷம்—அப்ரத்யக்ஷமாயிருப்பது, ந கிஞ்சித்—ஒன்றுமில்லை; கஸ்யசித்—ஒருவர்க்கும், ப்ரத்யக்ஷ:—கண்ணால் காணக்கூடியவனாக, ந அஸி—ஆகிறாயல்லை; தே—உனக்கு, அஸித்தம்—செய்யமுடியாதது, ந கிஞ்சித்—சிறிதும் இல்லை; கஸ்யசித்—ஒருவருக்கும், ஸித்த:—(ஸ்வயத்னத்தாலே) அடையக்கூடியவனாக, ந அஸி—(நீ) ஆகிறாயல்லை.

அவ:— (நைவ கிஞ்சிதித்யாதி) "ஏகஸ்த்வமஸி" என்கிற ஶ்லோகத்தில் ஜகத் காரணத்வப்ரயுக்தமான ஸ்வாமித்வஸௌலப்யங்கள் உண்டானாலும், கீழ் ஶ்லோகத்தில் தன்னையும் தன் உடைமையையும் ஆஶ்ரிதார்த்தமாக்கின வாத்ஸல்யஸௌஶீல்யங்கள் உண்டானாலும், ஜ்ஞானஶக்த்யாதிகள் இல்லையாகில் ஶரண்யனாகக்கூடாது. அதுக்காக ஜ்ஞானஶக்த்யாதிகளைச் சொல்லுகிறது இஶ்லோகம். முன்பு உக்தமான குணங்கள் ஆஶ்ரிதர்க்கு அவனை விஷயீகரிக்கைக்கு உறுப்பாமித்தனையொழிய அபிமதஸித்திக்கு ஜ்ஞானஶக்திகள் வேணுமிறே.

வ்யா:— (நைவ கிஞ்சித் பரோக்ஷந்தே) "தே பரோக்ஷம் ந கிஞ்சிதேவ"; உனக்கு அப்ரத்யக்ஷமாயிருப்பது ஒன்றுமில்லை. (58) "**यस्सर्वज्ञस्सर्ववित्**" (யஸ்ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்) என்கிறபடியே ஸர்வஜ்ஞனென்றும், (67) "**स्वाभाविकी ज्ञानबलक्रिया च**" (ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச) என்று ஸ்வதஸ்ஸர்வஜ்ஞத்வம் ஸத்தாப்ரயுக்தமென்றும், (68) "**यो वेत्ति युगपत्सर्वं प्रत्यक्षेण सदा स्वतः**" (யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத:) என்று யுகபத்ஸாக்ஷாத்காரமும் ப்ரமாணஸித்தமிறே. அப்படிப்பட்ட தேவர்க்கு என்னுடைய ஸ்வரூபயாதாத்ம்யத்தையும், ஸ்வரூபானுரூபமான ப்ராப்யஸ்வரூபத்தையும், தத்விரோதி ப்ரக்ருதிஸம்பந்தம் என்னுமிடத்தையும், 'ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே நான் புகாத நரகமில்லை; நான் நுழையாத கர்ப்பமில்லை' என்றும் வாயாலே விண்ணப்பம் செய்யவேண்டுவதொன்று உண்டோ? இன்னமும் நான் அறிந்தவளவன்றோ விண்ணப்பம் செய்யலாவது. ப்ரவாஹரூபேண அநாதியாய்ப்போந்த என்னுடைய அக்ருத்யகரணாதிபூர்வவ்ருத்தம் பழகிப்போந்த தேவரையொழிய மற்றறிவாருண்டோ? அறிந்து விண்ணப்பம் செய்யலான விஜ்ஞாபன ப்ரகாரம் தான் வேறறிவார் உண்டோ? இவற்றில் எனக்கு ஒரு ஜ்ஞானமில்லாதாப்போலே தேவர்க்கும் அஜ்ஞாதமாயிருப்பதொன்றுமில்லை. (கஸ்யசித் ந ப்ரத்யக்ஷோऽஸி) (69) "**न सन्दृशे तिष्ठति रूपमस्य न चक्षुषा पश्यति कश्च नैनं**" (ந ஸந்த்ருஶே திஷ்டதி ரூபமஸ்ய ந

சக்ஷுஷா பஶ்யதி கஶ்ச நைநம்) என்று ஒருவர்க்கும் சக்ஷுர்விஷயனல்லே; அந்வய வ்யதிரேகத்தாலே தேவருடைய அதீந்த்ரியத்வத்தை த்ருடீகரிக்கிறதிறே ஶ்ருதிதான்; இப்படிப் பட்ட தேவரை ப்ரத்யக்ஷிக்கும்போது ஆனைக்கு உதவினாப்போலே ஆவிர்ப்பவித்துக் காட்டக் காணுதல், அவதரித்துக் காட்டக்காணுதலிறே. மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வாரும் * "வாசத் தடம்போல் வருவானே ஒரு நாள் காண வாராயே" என்று காண ஆசைப்பட்டா ரித்தனையிறே; தாம் காண யத்நம் பண்ணிற்றிலர். (70) "कदा नु साक्षात्करवाणि चक्षुषा" (கதா நு ஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா) என்றிறே ஆளவந்தார் வார்த்தையும். (தே அஸித்தம் ந கிஞ்சிதேவ) (67) "पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते" (பரா஽ஸ்ய ஶக்திர் விவிதைவ ஶ்ரூயதே) என்கிறபடியே ஸர்வஶக்தியான தேவர்க்கு ஆஶ்ரிதரக்ஷணத்தில் அகடிதமென்று கைவாங்க வேண்டுவதொன்று உண்டோ? ஸங்கல்பமடியாக ஸர்வமும் ஸித்தமன்றோ. (71) "संजीवयन्नपि मृतं सुतमुत्तरायाः, सान्दीपिनेश्चिरमृतं सुतमानयंश्च। धाम्नो निजात् द्विजसुतान् पुनरानयन्वा स्वामेव तां तनुमहो कथमानयस्त्वं॥" (ஸஞ்ஜீவயந்நபி ம்ருதம் ஸுதமுத்தராயாஸ் ஸாந்தீபிநேஶ் சிரம்ருதம் ஸுதமாநயம்ஶ்ச। தாம்நோ நிஜாத் த்விஜஸுதாந் புநராநயந் வா ஸ்வாமேவ தாம் தநுமஹோ கதமாநயஸ்த்வம்॥) என்று இப்படி அகடிதங்களை கடிப்பிக்கும் தேவரே நித்யஸம்ஸாரியான என்னை நித்யஸூரிகள் பரிமாற்றத்திலே அந்வயிப்பிக்கத் தட்டில்லை என்று கருத்து. (கஸ்யசித் ந ஸித்தோ஽ஸி) ஒருவர்க்கும் ஸ்வஸாமர்த்யத்தாலே ப்ராபிக்க அரியையாகாநின்றாய். க்ருதக்ருத்யனானாலும் ப்ராப்திக்கு (72) "नयामि परमां गतिं" (நயாமி பரமாம் கதிம்) என்கிறபடியே அவன் கை பார்த்திருக்கவேணுமென்கை. ஆக, பேற்றுக்கு உறுப்பான ஜ்ஞானஶக்த்யாதிகள் உள்ளது உனக்கே; உன்னையொழிந்தாரடங்கலும் அஜ்ஞரும் அஶக்தரும். கண்ணும் காலும் உடையாய் நீயே; உன்னையொழிந்தாரடங்கலும் குருடும், முடமும். சேதனனுடைய ஜ்ஞானஶக்திகளுக்கு விநியோகம், ப்ரதமத்தில் உபாயஸ்வீகாரத்திலே ஜ்ஞானமும், அத்யவஸாயத்திலே ஶக்தியுமாகக்கடவது. இந்த ஜ்ஞானஶக்த்யாதிகள் இரண்டும் போகத்திலேயாகக்கடவது. இத்தால் சொல்லிற்றாய்த்து,— இத்தலை இசைவே அடியாகக்கொண்டு ஸ்வஸம்பந்தத்தாலே ரக்ஷியா விடில் தேவர்க்குப் பழியென்றதாயிற்று. ரக்ஷணதர்மத்தில் ஈஶ்வரனுடைய ஜ்ஞான ஶக்த்யாதிகளே தாரகம். "ஆத்மாவுக்கு ஈஶ்வரப்ராப்தியன்று; ஈஶ்வரனுக்கு ஆத்மப்ராப்தி காண் நினைவு" என்று ஜீயர் அருளிச்செய்வர். (73) "अहमन्नं" (அஹமந்நம்) என்கிற இதுவே அர்த்தம்; (73) "अन्नादः" (அந்நாத:) என்று இத்தலையில் போக்த்ருத்வம் ஸ்வலாபத்தால் ஈஶ்வரனுக்குப் பேரான ஹர்ஷம் தனக்குப் புருஷார்த்தமாகை. ஸங்க்ரஹ பக்ஷத்தில் இஶ்லோகம் "ஜிதந்தே" என்கிற பதத்தினுடைய விவரணமாகக்கடவது. 6.

7. பதவுரை:— கார்யாணாம்—கார்யங்களான எல்லாப் பொருள்களுக்கும், பூர்வம் காரணம்—ஆதி காரணமாகவும், வசஸாம்—சொற்களுக்கு, உத்தமம் வாச்யம்—மேலான சொற்பொருளாகவும், யோகாநாம்—யோகங்களுக்கு, பரமாம் ஸித்திம்—மேலான ப்ராப்ய மாகவும், தே—உன்னுடைய, பரமம் பதம்—மேலான திருவடிகளை, விது:—(பெரியோர்கள்) அறிகிறார்கள்.

* திருவாய். (8-5-1).

कार्याणां कारणं पूर्वं वचसां वाच्यमुत्तमम् ।
योगानां परमां सिद्धिं परमं ते पदं विदुः ॥ ७ ॥

7. கார்யாணும் காரணம் பூர்வம் வசஸாம் வாச்யமுத்தமம் ।
யோகாநாம் பரமாம் ஸித்திம் பரமம் தே பதம் விது: ॥

அவ:— (கார்யாணும் காரணமித்யாதி) கீழ் ஶ்லோகத்தில் சொன்ன ஜ்ஞான ஶக்த்யாதிகளை அனுஸந்தித்து, அந்த ஶக்திகாரிதமான பகவதனுபவத்துக்கு வர்த்தகமான பரமபதத்தே என்னைப் போகவிடவேணும் என்கிறது. "முக்தப்ராப்யமான பூமியைத் தருவானிறே ஶரண்யனுவான்" என்று பட்டர் நிர்வாஹம்; "நித்யானுபாவ்யமான தேவர் திருவடிகளை லபிக்கவேணுமென்கிறது" என்னவுமாம். இது பூர்வர்கள் நிர்வாஹம்.

வ்யா:— (கார்யாணும் காரணம் பூர்வம்) அந்யோந்யகார்யகாரணபாவங்களை வ்யாவர்த்திக்கிறது. (74) "**प्रधानपुंसोरजयोः कारणं कार्यभूतयोः**" (ப்ரதாநபும்ஸோரஜயோ: காரணம் கார்யபூதயோ:) என்கிறபடியே ப்ரதானபுருஷர்களும் ஈஶ்வரனைக் குறித்துக் கார்யங்களாகக்கடவதிறே- (75) "**यतः प्रसूता जगतः प्रसूती तोयेन जीवान् व्यससर्ज भूम्यां**" (யத: ப்ரஸூதா ஜகத: ப்ரஸூதீ தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூம்யாம்) என்றதிறே. அந்த ப்ரக்ருதிபுருஷர்களைக் காரணமாக உடைத்தாயிறே மஹதாதிகார்யங்களிருப்பது. அவற்றைக் காரணமாக உடைத்தாயிறே அண்டமிருப்பது. அண்டாந்தர்வர்த்தியான ப்ரஹ்மாவைக் காரணமாக உடைத்தாயிறே தேவாதிசதுர்விதசேதனரும், தத்போக்ய போகோபகரண போகஸ்தானங்களும் இருப்பது. ஆக, பஹுமுகமான காரணங்களுக்கெல்லாம் ப்ரதம காரணமாயிறே ஸர்வேஶ்வரன் இருப்பது. "கார்யாணும் காரணம் பூர்வம்" என்று தேஶபரமானபோது அவனுக்கு ப்ரக்ருதி நித்யவிஶேஷணமாகையாலே அத்தை ஜகத்காரணமென்றாப்போலே, பரமபதம் அவனுக்கு நித்ய விஶேஷணமாகையாலே பூர்வக்ஷணவர்த்தியாய், பூர்வகாரணமென்னலாம். இத்தால் பரமபதத்தினுடைய நித்யதை சொல்லுகிறது. (76) "**तदक्षरे परमे व्योमन्**" (ததக்ஷரே பரமே வ்யோமந்) என்றும், "கலங்காப் பெரு நகரம்" என்றும் சொல்லக்கடவதிறே. (வசஸாம் வாச்யமுத்தமம்) லௌகிகமாயும், வைதிகமாயுமுள்ள ஸர்வஶப்தங்களுக்கும் ப்ரதாநவாச்யன் ஈஶ்வரன் என்கிறது. (77) "**अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य नामरूपे व्याकरवाणि**" (அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி) என்றும், (78) "**तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्**" (தத் ஸ்ருஷ்ட்வா ததேவாநுப்ராவிஶத்) என்று தொடங்கி, (78) "**सत्यञ्चानृतञ्च सत्यमभवत्**" (ஸத்யம் சாந்ருதம் ச ஸத்யமபவத்) என்றும் சொல்லக்கடவதிறே. (79) "**चराचरव्यपाश्रयस्तु स्यात्तद्व्यपदेशो भाक्तस्तद्भावभावित्वात्**" (சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேஶோ பாக்தஸ் தத்பாவபாவித்வாத்) என்கிற ஸூத்ரமும் ப்ரதானதயா வாச்யன் ஈஶ்வரனென்றதிறே. இத்தால் ஸ்ருஷ்டமான பதார்த்தங்களில் ஆராத்யரானதேவதைகளோடு ஆராதகரான மனுஷ்யரோடு ஆராதநோபகரணங்களான திர்யக்ஸ்தாவரங்களோடு வாசியற ஸர்வாந்தராத்மாவாய் இருக்கிறபடியைச் சொல்லுகிறது. "வசஸாம் வாச்யமுத்தமம்" என்கிறது தேஶபரமானபோது ப்ராதாந்யத்தை லக்ஷிக்கிறது.

**अहं भीतोऽस्मि देवेश ! संसारेऽस्मिन् भयावहे ।**
**पाहि मां पुण्डरीकाक्ष ! न जाने शरणं परम् ॥ ८ ॥**

8. அஹம் பீதோ஽ஸ்மி தேவேஶ ! ஸம்ஸாரே஽ஸ்மிந் பயாவஹே ।
பாஹி மாம் புண்டரீகாக்ஷ ! ந ஜாநே ஶரணம் பரம் ॥

---

(76) "**परमे व्योमन्**" (பரமே வ்யோமந்) என்றும், * "தனியுலகு" என்றும் சொல்லக் கடவதிறே. (யோகாநாம் பரமாம் ஸித்திம்) என்று ப்ராப்யாந்தர்க்கதமான ஸம்ஸாரவிமோசனத்தை வ்யாவர்த்திக்கிறது. "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:" (ஶ்லோ-4) என்றதிறே. இத்தால் நிரவதிக்போக்யமான திருவடிகளைச் சொல்லுகிறது. § "நலமந்தமில்லதோர் நாடு" என்று தேஶமும் நிரதிஶயபோக்யமாயிறே இருப்பது. (தே பரமம் பதம்) ஸர்வகாரணனுமாய், ஸர்வஶப்தவாச்யனுமாய், ஸர்வோபாய ஸாத்யனுமாயிருந்துள்ள உன்னுடைய, ஸர்வாதிகமாய், நிரதிஶயபோக்யமான திருவடிகளை என்னுதல்; உன்னுடைய நிரதிஶயபோக்யமான ஸ்தானத்தை என்னுதல். (விது:) ஜ்ஞாநாதிகரா யிருக்குமவர்கள் அறியாநிற்பர்கள்; நித்யமாய், ப்ரதாநாத் அதிகமாய், நிரதிஶயபோக்யமா யிருப்பதொரு நாடு உண்டென்றும், அந்த தேஶத்தே (23) "**श्रिया सार्धं जगत्पतिः — आस्ते**" (ஶ்ரீயா ஸார்த்தம் ஜகத்பதி: — ஆஸ்தே) என்கிறபடியே இருப்பதொரு விக்ரஹமுண்டென்றும் அறிவார் ஸகலவேதாந்ததாத்பர்யம் கைப்பட்ட ஸர்வஜ்ஞரிறே. அபேக்ஷிக்கிறவன்றன் சிறுமையைப் பார்த்தும், அவனுடைய நிருபாதிகஸ்வாதந்த்ர்யத்தைப் பார்த்தும், அர்த்தியாதே இங்குத்தை வைலக்ஷண்யத்தைக் கொடுக்கிறான், கருத்தறிந்து அங்கே போகவிடுகைக்காக. ஒருத்தன் கையிலே எலுமிச்சம்பழம் இருந்தால், அதன் நன்மையாலே ஒருத்தன் அதைக்கொண்டாடினால் உதாரனானவன் எதிர்த்தலையில் நினைவறிந்து கொடுக்கு மாப்போலே. ஸங்க்ரஹபக்ஷத்தில் "மஹாபுருஷ" என்கிற பதத்தினுடைய வ்யாக்யானமா யிருக்கிறது. 7.

8. பதவுரை:— தேவேஶ — நித்யஸூரிகளுக்குத் தலைவனே !, பயாவஹே — பயத்தைக் கொடுக்கும், அஸ்மிந் ஸம்ஸாரே — இந்த ஸம்ஸாரத்தில், அஹம் — அடியேன், பீதோ஽ஸ்மி — பயப்படாநின்றேன். புண்டரீகாக்ஷ ! — செங்கண்மாலே ! மாம் — அடியேனை, பாஹி — காத்தருள்வாயாக; பரம் ஶரணம் — (உன்னைத்தவிர) வேறொரு உபாயத்தை, ந ஜாநே — அறிகின்றிலேன்.

அவ:— (அஹம் பீதோ஽ஸ்மீத்யாதி) கீழ் ஶ்லோகத்திலே பரமபதத்தில் போக்யதையை அநுஸந்தித்தான்; அந்த போக்யதாநுஸந்தானத்தாலே ஸம்ஸாரத்திலே பொருந்தாதபடி யான பயம் பிறந்தது. அந்த பயநிவ்ருத்தியைப் பண்ணியருளவேணுமென்று அபேக்ஷிக்கிறது இஶ்லோகம். ஸம்ஸாரபயநிவர்த்தகனிறே ஶரண்யனாவான். ஸம்ஸாரத்தை உள்ளபடி அறிந்தவனுக்கும் ஸம்ஸாரம் பயஸ்தானமாயிருக்கும். ஸ்வரூபத்தை உள்ளபடி அறிந்தவனுக் கும் அது பயஸ்தானமாயிருக்கும். அவ்வோபாதி ப்ராப்யபூமியில் போக்யதையை அநுஸந்தித்தாலும் பயஸ்தானமாயிருக்குமிறே.

---

* பெரியாழ். திரு. (5-4-9). § திருவாய். (2-8-4).

வ்யா:— (பயாவஹே அஸ்மிந் ஸம்ஸாரே அஹம்) 'ஸம்ஸாரமாகிறதேது? அது பயாவஹமாயிருக்கிறபடி எங்ஙனே?' என்னில்: அவித்யா கர்ம வாஸநா ருசி ப்ரக்ருதிஸம்பந்தங்கள் ஸம்ஸாரமாகிறது. அவித்யையாகிறது அஜ்ஞாநம்; அதாகிறது:— புக்க சரீரத்தில் அஹம்புத்தியும், ஶரீராநுபந்தியான பதார்த்தத்தில் மமதாபுத்தியும். (80) "**अनात्मन्यात्मबुद्धिर्या अस्वे स्वमिति या मतिः**" (அநாத்மந்யாத்மபுத்திர் யா அஸ்வே ஸ்வமிதி யா மதி:) என்றானிறே ஸ்ரீபராஶரபகவான். * "யானே என்னை அறியகிலாதே யானே என்றனதே என்றிருந்தேன்" என்றும், பிறர்க்கு உபதேஶிக்கிற இடத்திலும், † "நீர் நுமது" என்றும் அருளிச்செய்தாரிறே ஆழ்வாரும். அஹங்காரம் ஶேஷத்வத்தை அழிக்கையாலே பயாவஹம். மமதை, பகவத்விஷயத்தில் போக்யதையை அழிக்கையாலே பயாவஹம். புண்யபாபரூபமாயாய்த்து கர்மமிருப்பது. பாபம் நரகாத்யனுபவத்துக்கு ஹேதுவாகையாலே பயாவஹம்; புண்யம் பயாவஹமானபடியென்? என்னில்: புண்யபலமாவது ஸ்வர்க்காத்யனுபவங்களிறே. அவை ஸ்வரூபத்தை நசிப்பிக்கக்கடவ அஹங்காரமமகாரத்தை வர்த்திப்பிக்கையாலே பயாவஹம்; அநர்த்தஹேதுவான ஶப்தாதிகளிலே மூட்டுகையாலே பயாவஹம். தேஹஸம்பந்தம், ஆதிரூபத்தாலும், வ்யாதிரூபத்தாலும், பரபரிபவரூபத்தாலும், ஶீதோஷ்ணாதிகளாலும் பயாவஹம். இப்படிகளால் ருசிவாஸனைகளும் பயாவஹங்கள். எங்ஙனேயென்னில்: ஆதிபரதன் ஸமாதிதஶையிலே மானின் பக்கலிலே ருசி பிறந்து மானாய்ப் பிறந்தானிறே. அதுதனக்கு அடி விஷயாந்தரப்ராவண்யமன்று; ரக்ஷகத்வவாஸனையாலேயிறே. ஆகையாலே வாஸநாருசிகளும் பயாவஹங்கள். த்ருஷ்டிவிஷம்போலே ருசிதானே பயாவஹமாயிருக்கிறபடி. அதாகிறது,— ஸம்ஸாரிகளுக்கு, விட்டில் போலே அஹங்காரத்தை ஆதரித்து மேல்விழுந்து வர்த்திக்கையாலே, காண்கைதானே பயாவஹமாயிருக்குமிறே. (81) "**भूमौ निपात्यमानोऽद्रेरन्तरास्ते स्वपन्निव**" (பூமௌ நிபாத்யமாநோऽத்ரேரந்தராஸ்தே ஸ்வபந்நிவ) என்று மலையினின்றும் பூமியில் விழுகிறவன் நடுவே உறங்குகிறாப்போலேயிறே ஸம்ஸாரிகள் வருகிற அநர்த்தத்தைப்பற்றி புத்திபண்ணாதே ஸுகிக்கிறபடி. ‡ "நலமந்தமில்லதோர் நாடு" என்று ஒரு விபூதியாக முற்றடங்கி ஸுகமாயிருக்குமாப்போலேயிறே இங்கும் கட்டடங்க பயாவஹமாயிருக்கும்படி. (அஹம் பீதோऽஸ்மி) ஸம்ஸாரத்தை அநந்தக்லேஶபாஜனமாக அனுஸந்தித்த நான் பயப்படாநின்றேன். வர்த்தமானநிர்த்தேஶத்தாலே பயநிவ்ருத்திக்கு ஓர் அவகாஶம் காண்கிறிலேன். ஸம்ஸாரத்தில் பயநிவ்ருத்திக்கு அவகாஶமுண்டோ? என்னில்: ஈஶ்வரன் பக்கலிலே ந்யஸ்தபரனாயிருக்குமவன் நிர்ப்பயனாயிருக்குமிறே. அதுவும் எனக்கு அபயஸ்தானமாகிறதில்லை. ப்ராப்யத்தில் அதிப்ராவண்யத்தாலே த்வரை பிறந்தவனுக்கு அத்யவஸாயத்தாலே தரிக்கவொண்ணாதிறே. § "களைகண் மற்றிலேன்" என்றும், a "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றும் அத்யவஸிதரான ஆழ்வார் b "அந்தமில் பேரின்பத்தடியரோடிருந்தமை" என்று அத்தேஶவிஶேஷத்தில் போக்யதையை ஸாக்ஷாத்கரித்து, அநந்தரம் c "முனியே! நான்முகனே!" என்று கூப்பிட்டாரிறே. (தேவேஶ) d "அயர்வறுமமரர்கள்" என்கிறபடியே நீயும் அவர்களுமாய் அங்கே களித்துத் திரியாநிற்க, அவர்களோபாதி போகத்துக்கும் யோக்யனாயிருக்கிற நான் இங்கே க்லேஶப்

* திருவாய். (2-9-9). † திருவாய். (1-2-3). ‡ திருவாய். (2-8-4). § திருவாய். (5-8-8).
a திருவாய். (5-10-11). b திருவாய். (10-9-11). c திருவாய். (10-10-1). d திருவாய். (1-1-1).

**कालेष्वपि च सर्वेषु दिक्षु सर्वासु चाच्युत!।**
**शरीरे च गतौ चापि वर्तते मे महद्भयम्॥ ९॥**

9. காலேஷ்வபி ச ஸர்வேஷு திக்ஷு ஸர்வாஸு சாச்யுத!।
ஶரீரே ச கதௌ சாபி வர்த்ததே மே மஹத்பயம்॥

---

படுகை தேவர்க்குப் போருமோ? பிராட்டியும் பயஸ்தானமான லங்கையிலே இருந்தவிடத்திலே (82) "**हा राम! हा लक्ष्मण!**" (ஹா ராம! ஹா லக்ஷ்மண!) என்றாளிறே. * "இமையோர் தலைவா" என்றும், † "விண்ணுளார் பெருமானேயோ" என்றும் அருளிச்செய்தாரிறே ஆழ்வார். (மாம் பாஹி) "யோகாநாம் பரமாம் ஸித்திம்" என்கிறபடியே அத்தேஶத்தில் போக்யதையை அநுஸந்தித்து மேல்விழுந்த என்னை. (83) "**एहि पश्य शरीराणि**" (ஏஹி பஶ்ய ஶரீராணி) என்னுமாப்போலே வடிவைக் காட்டுகிறான் என்றுமாம். (பாஹி) ஶரீரஸம்பந்தத்தை அறுத்து அர்ச்சிராதிமார்க்கத்தாலே நிர்ப்பயமான தேஶத்திலே கொண்டுபோகவேணும். (புண்டரீகாக்ஷ) உன்னுடைய ஆகர்ஷகமான திருக்கண்களாலே என்னைக் குளிரநோக்கியருள வேணும். நான் என்னுடைய பயநிவ்ருத்திக்கு யத்னம் பண்ணுமன்றன்றோ நேர்த்தியுள்ளது. தேவர் செய்தருளுமிடத்தில் அநாயாஸமன்றோ. கீழ்ச்சொன்ன ஆஶ்ரயணீயமான வாத்ஸல்யாதிகளும், பலஸித்திக்கு உடலான ஜ்ஞானஶக்த்யாதிகளும் வேணுமோ என்னை ரக்ஷிக்கைக்கு? முதல் "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்று எனக்குப் புறம்புள்ள அந்யபரதையைத் தவிர்த்தாப்போலே பயத்தையும் போக்கி ரக்ஷித்தருளவேணும். (ந ஜாநே ஶரணம் பரம்) "பரம் ஶரணம் ந ஜாநே"; உன்னையொழிய வேறொரு உபாயம் அறிகிறிலேனே. (84) "**निदिध्यासितव्यः**" (நிதித்யாஸிதவ்ய:) என்று ஶ்ருதிகள் சொன்னாலும், (85) "**मन्मना भव मद्भक्तः**" (மந்மநா பவ மத்பக்த:) என்று ரக்ஷகரான தேவரீர் அருளிச்செய்தாலும், நான் வேறோர் உபாயம் அறிகிலேனே. 'அதுக்கு ஹேது என்?' என்னில்: சேதநனோடு அவனுக்கு உபகரணமான கரணங்களோடு வாசியற தேவர் அதீனமாகையாலே. "நமஸ்தேऽஸ்து" என்றும், "ஹ்ருஷீகேஶ" என்றும் அநுஸந்தித்தவனிறே. (86) "**मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च**" (மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநம் ச) என்றிறே தேவர் வார்த்தையும். ஸங்க்ரஹபக்ஷத்தில் இஶ்லோகம் "புண்டரீகாக்ஷ" என்கிற பதத்தினுடைய விவரணம். 8.

9. பதவுரை:— அச்யுத—அடியவர்களை நழுவவிடாதவனே! ஸர்வேஷு காலேஷு அபி ச—எல்லாப் புண்யகாலங்களிலும், ஸர்வாஸு திக்ஷு ச—எல்லா திசைகளிலுமுள்ள புண்யக்ஷேத்ரங்களிலும், ஶரீரே ச—(தர்மஸாதனமான) சரீரத்திலும், கதௌ அபி ச—சரீராந்தரகதியிலும், மே—அடியேனுக்கு, மஹத் பயம்—அதிகமான பயம், வர்த்ததே—உள்ளது.

அவ:— (காலேஷ்வபி சேத்யாதி) "ந ஜாநே ஶரணம் பரம் என்னலாமோ? ஆத்மாவுக்கு உஜ்ஜீவனஹேதுவான உபாயங்களை ஶாஸ்த்ரமுகத்தாலே உண்டாக்கிவைத்து, அதுக்கு மேல் அல்பவ்யாபாரத்தினாலே ஸகலதுரிதங்களும் நஶிக்கும்படியாகப் புண்யகாலம், புண்யக்ஷேத்ரம் முதலானவற்றை உண்டாக்கி வைத்திலோமோ? வேறு உபாயாந்தரங்களும்

---

* திருவிரு-1. † திருவாய். (7-1-5).

உண்டாக அறிகிறிலேன் என்னலாமோ? என்னில்: "அவற்றினுடைய ஸத்பாவத்தை இல்லை என்கிறேனல்லேன்; அவற்றிலே இழிந்த நான் நித்யஸம்ஸாரியான நானாகையாலே முன்பு நின்ற நிலையும் கெடுமென்று சொன்னேன்" என்கிறான். இத்தால் உபாயாந்தரபரித்யாக பூர்வகமாயிருக்கும் ஸித்தோபாயபரிக்ரஹம் என்னுமத்தைச் சொல்லுகிறது. இப்படி நிரபேக்ஷோபாயபூதனிறே ஶரண்யனாவான்.

வ்யா:— (காலேஷ்வபி ச) புண்யமான அயநவிஷ்வாதிகளிலும், அவற்றை விஶேஷிக்கிற அர்த்தோதயாதிகாலங்களிலும். அதாகிறது:— இவ்விலக்ஷணகாலங்களிலே ஸேதுதர்ஶனஸங்கமங்களிலே பண்ணும் தீர்த்ததாநாதிகளுக்கு ஸகலபாபவிமோசநாதிகளைச் சொல்லக்கடவதிறே. (87) "कृतघ्नोऽपि विशुद्ध्यति" (க்ருதக்நோऽபி விஶுத்த்யதி) (88) "गोघ्ने चैव सुरापे च चोरे भग्नव्रते तथा। निष्कृतिर्विहिता सद्भिः कृतघ्ने नास्ति निष्कृतिः॥" (கோக்நே சைவ ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா। நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி:) என்கிறபடியே ப்ராயஶ்சித்தமில்லை என்கிற க்ருதக்னனுடைய பாபமுட்படப் போமென்றது. (ஸர்வேஷ்வபி) (89) "अश्वत्थं सिन्धुराजञ्च सदा सेवेत न स्पृशेत्। मन्दवारे स्पृशेत्पूर्वमपरं पर्वणि स्पृशेत्॥" (அஶ்வத்தம் ஸிந்துராஜம் ச ஸதா ஸேவேத ந ஸ்ப்ருஶேத்। மந்தவாரே ஸ்ப்ருஶேத் பூர்வமபரம் பர்வணி ஸ்ப்ருஶேத்॥) என்று அபர்வணி கடல் தீண்டலாகாது என்னும் நியமமின்றிக்கே ஸர்வகாலமும் ஸேவிக்கலாயிருக்கும் கங்காதி தீர்த்தங்களை ஸமுச்சயிக்கிறது. (திக்ஷு) ஸகலபாவனங்களாகச் செய்துவைத்த இவை யொழிய (27) "देशोऽयं सर्वकामधुक्" (தேஶோऽயம் ஸர்வகாமதுக்) என்கிறபடியே ப்ரதமத்திலே பாவனமாய், பின்பு பகவத்ப்ராப்திக்கு ஸாதனமுமாய், பின்பு போக்யமுமாயிருக்கும் புண்யதேஶம் முதலான தேஶங்களை ஸமுச்சயிக்கிறது. (90) "मथुरा नाम नगरी पुण्या पापहरी शुभा" (மதுரா நாம நகரீ புண்யா பாபஹரீ ஶுபா) என்னக்கடவதிறே. (ஸர்வாஸு ச) இத்தால் அவதரித்தருளின தேஶங்களையொழிய பகவத்ஸந்நிதி மாறாத ஸாளக்ராமமண்டலம் முதலான தேஶங்களை ஸமுச்சயிக்கிறது. (ஶரீரே ச) கீழ்ச்சொன்ன தேஶங்களில் பண்ணும் உபாயாநுஷ்டானத்துக்காக (91) "शरीरमाद्यं खलु धर्मसाधनं" (ஶரீரமாத்யம் கலு தர்மஸாதநம்) என்றும், (92) "विचित्रा देहसंपत्तिरीश्वराय निवेदितुम्" (விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும்) என்றும் சொல்லப்படுகிற இந்த ஶரீரம் எனக்கு வ்யர்த்தமாகாநின்றதாகை. (கதௌ ச) (93) "स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः" (ஸ்வதர்மே நிதநம் ஶ்ரேய: பரதர்மோ பயாவஹ:) என்கிறபடியே ஸாதநாநுஷ்டானமத்யே மரணமுண்டானாலும், ஶரீராந்தரத்திலே தலைக்கட்டும்படியான ஶரீராந்தரகதியும் எனக்கு வ்யர்த்தம். (கதௌ) ஶரீராந்தரகதௌ. 'அபி'ஶப்தத்தாலே அனுஷ்டேயமான கர்ம ஜ்ஞானபக்த்யாதிகளைச் சொல்லிற்று என்னுதல்; முன்பு போன ஶரீரங்களை ஸமுச்சயிக்கிறது என்னுதல். முன்பு பரிக்ரஹித்துப் போகட்ட ஶரீரங்கள் வ்யர்த்தமானவோபாதி வர்த்தமான ஶரீரமும் வ்யர்த்தமென்று கருத்து. (மே மஹத்பயம்) இவை வ்யர்த்தமான அளவேயல்ல. தேஶகால ஶரீரங்களிலும், இவற்றைப் பற்றி நின்று அனுஷ்டிக்கும் கர்மயோகாத்யுபாயங்களிலும் பயம் வர்த்தியாநின்றது. 'பயம் வர்த்திப்பானென்?' என்னில்: முன்பு தேவர் திருவடிகளை உபாயமாகப் பற்றி வர்த்திக்கையாலே தேவருடைய இரக்கமும் கெடுமென்று இவை பயாவஹமாகாநின்றன. 'அனுகூலமானவை பயஸ்தானமாவானென்?' என்னில்:

**त्वत्पादकमलादन्यन्न मे जन्मान्तरेष्वपि ।**
**निमित्तं कुशलस्यास्ति येन गच्छामि सद्गतिम् ॥ १० ॥**

10. த்வத்பாதகமலாதந்யந்ந மே ஜந்மாந்தரேஷ்வபி।
நிமித்தம் குஶலஸ்யாऽஸ்தி யேந கச்சாமி ஸத்கதிம் ॥

---

ஸ்வீகரித்த உபாயம் வேறொன்றை ஸஹியாமையாலே. முதலிலே "த்வாமேவ ஶரணம் ப்ராப்ய" (ஶ்லோ-4) என்றவனிறே; (94) "**तमेव**" (தமேவ) என்றிறே ஶாஸ்த்ரவிதாநமும்; (95) "**मामेकं**" (மாமேகம்) என்றிறே ஶரண்யனுடைய வாக்யமும். (மஹத் பயம் வர்த்ததே) "பயாவஹே" (ஶ்லோ-8) என்கிற ஸம்ஸாரபயத்தளவன்று இந்த பயம். விஷயாந்தரப்ராவண்யத்தால் வந்த பயத்தளவன்றிறே ஸாதநாந்தராநுஷ்டானத்தால் வந்த பயம் என்கை. விஷயாந்தரப்ராவண்யத்தால் வந்த பயத்துக்கு ஈஶ்வரன் க்ருபையைப் பற்றலாம். அத்தையும் நழுவும்படி பண்ணுகிறதிறே ஸாதநாந்தரபரிக்ரஹம். (அச்யுத) இப்படி ஸர்வோபாயஶூந்யராயிருப்பாரையும் நழுவவிடாத ஸ்வபாவத்தாலேயிறே தேவர்க்கு "அச்யுத:" என்கிற திருநாமம் உண்டாயிற்று. "யஸ்மாத் ப்ராப்தா ந ச்யவந்தே ஸோऽச்யுத:" என்றிறே திருநாமத்துக்கு நிர்வாஹம். (96) "**द्वारकानिलयाच्युत !**" (த்வாரகாநிலயாச்யுத!) என்று தேவரை விஶ்வஸித்துக் கையை விட்டவளை அத்தஶையில் விடாதவரிறே தேவர். (97) "**त्वत्प्रसादान्मयाच्युत !**" (த்வத்ப்ரஸாதாந் மயாச்யுத!) என்று சொல்லக்கடவதிறே. ஸர்வஸங்க்ரஹபக்ஷத்தில் "நமஸ்தே" என்கிற பதத்துக்கு ஶேஷமாகக்கடவது. அந்த ப்ரபதனமும் உபாயாந்தரநிவ்ருத்திபூர்வகமாகையாலே. 9.

10. பதவுரை:— யேந—எந்த உபாயத்தினால், ஸத்கதிம்—நற்கதியை, கச்சாமி—அடியேன் அடைவேனோ, தஸ்ய குஶலஸ்ய—அப்படிப்பட்ட உபாயத்துக்கு, நிமித்தம்—காரணமான ப்ரதமஸுக்ருதம், த்வத் பாத கமலாத் அந்யத்—உம்முடைய திருவடித் தாமரைகளிற்காட்டிலும் வேறானது, மே—அடியேனுக்கு, ஜந்மாந்தரேஷ்வபி நாஸ்தி—எப்பிறப்பிலும் இல்லை.

அவ:— (த்வத்பாதகமலாதித்யாதி) "உபாயோபேயங்கள் இரண்டும் நாமேயானாலும் அநாதிகாலம் இப்படி விஷயப்ரவணனாய் நம் பக்கலிலே விமுகனாய்ப்போந்த ஸம்ஸாரிக்கு விஷயவைமுக்யபூர்வகமாக நம் பக்கலிலே ஆபிமுக்யம் பிறக்கைக்கு அடியான ப்ரதமஸுக்ருதம் இவன் தலையிலே ஆகவேண்டாவோ? இஸ்ஸுக்ருதத்தாலே ஆபிமுக்யம் பிறந்தால் பின்பன்றோ யதார்த்தஜ்ஞானம் பிறப்பது? அந்த ஜ்ஞானத்தாலேயன்றோ த்யாஜ்யோபாதேய விபாகம் பிறப்பது? த்யாஜ்யநிவ்ருத்திபூர்வகமான ப்ராப்யஸித்திக்கு உபாயம் அபேக்ஷிதமாவது பின்பன்றோ? அத்தாலேயன்றோ ப்ராப்யஸித்தி? இதெல்லாத்துக்கும் அடியான ப்ரதமஸுக்ருதம் இவன் கையாலே ஆகவேண்டாவோ?" என்னில்: "அந்த ஸுக்ருதமும் தேவர் திருவடிகளே; எனக்கு வேறில்லை" என்கிறது. ப்ராப்யப்ராபகங்கள் அவனேயென்று கீழ் உக்தமான அர்த்தத்தை நிகமிக்கிறது என்னவுமாம். "தவ சரணத்வந்த்வம் வ்ரஜாமி" என்றும், "யோகாநாம் பரமாம் ஸித்திம் பரமம் தே பதம் விது:" என்றும் ப்ராப்யப்ராபகங்கள் கீழே உக்தமிறே.

**विज्ञानं यदिदं प्राप्तं यदिदं स्थानमार्जितम् ।**
**जन्मान्तरेऽपि मे देव ! माभूत्तस्य परिक्षयः ॥ ११ ॥**

11. விஜ்ஞாநம் யதிதம் ப்ராப்தம் யதிதம் ஸ்தாநமார்ஜிதம் ।
ஜந்மாந்தரேऽபி மே தேவ மாபூத் தஸ்ய பரிக்ஷய: ॥

வ்யா:— (த்வத்பாதகமலாதந்யத் குஶலஸ்ய நிமித்தம் மே நாஸ்தி) தேவர் திருவடிகள் ப்ராப்யமுமாய், ப்ராபகமுமானவோபாதி ப்ரதமஸுக்ருதமும் எனக்கு தேவர் திருவடிகளை யொழிய வேறில்லை. "த்வதந்யத் குஶலஸ்ய நிமித்தம் மே நாஸ்தி" என்னவுமாயிருக்க, "பாத கமலம்" என்கிற பதத்வயங்கள் ப்ராப்யப்ராபகங்களை ஸ்மரிப்பிக்கின்றன. கமலபதம் போக்யதையை ஸ்மரிப்பிக்கிறவோபாதி பாதபதம் உபாயத்தை ஸ்மரிப்பிக்கிறது. "சரணத்வந்த்வம் ஶரணம் வ்ரஜாமி" என்று திருவடிகளையிறே உபாயமாகச் சொல்லிற்று. (குஶலஸ்ய நிமித்தம்) மங்களரூபமான உபாயஸித்திக்கு ஹேதுவான ப்ரதமஸுக்ருதம். சேதனனுக்கு மங்களரூபமாயிறே இவ்வுபாயம் ரஸித்திருப்பது. (98) "**बहूनां जन्मनामन्ते ज्ञानवान् मां प्रपद्यते**" (பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே) என்கிறபடியே உபாயஸித்தி ஹேதுவாய், அநேகஜன்மஸுக்ருத ஸாத்யமாயிருக்கிற பகவத்ஜ்ஞானமாகிற ப்ரதமஸுக்ருதம் "த்வத்பாதகமலாதந்யந்நாஸ்தி" என்னக்கடவதோ? என்னில்: (மே நாஸ்தி) அஜ்ஞாநியானாலும் எனக்குத் திருவடியொழிய வேறில்லை. 'அதுவென்?' என்னில்: ஸுக்ருதகார்யமாவது ஶப்தாதிவிஷயப்ராவண்யத்தினின்றும் மீட்டு இவ்வாத்மாவுக்கு பகவதாபிமுக்யத்தைப் பிறப்பிக்கையிறே. அது, "ஜிதந்தே புண்டரீகாக்ஷ" என்கிறபடியே; இவ்வர்த்தம் தேவர் அழகாலே பிறந்த பின்பு, அந்த ஸுக்ருதம் எனக்கு தேவர் திருவடிகளே. (ஜந்மாந்தரேஷ்வபி) அழகைக் காட்டி மீட்டதுவும் ஜந்மாந்தரங்களில் ஒரு ஸுக்ருதவிஶேஷம் உண்டாய் அதன் பலமானாலோவென்னில்: விஷயப்ரவணனை மீட்கைக்கு ஒரு ஸுக்ருதாபேக்ஷை இல்லாமையாலே அதுவும் வேண்டுவதில்லை. § "என் ஆவியை நடுவே வந்துய்யக் கொள்கின்ற நாதனை" என்று ஆழ்வார் அருளிச்செய்ததுக்கும் அடி இதுவிறே. (யேந குஶலேந ஸத்கதிம் கச்சாமி) ஸத்கதி என்கிறது விலக்ஷணமான ப்ராப்யம். அதாவது:— "யோகாநாம் பரமாம் ஸித்திம் பரமம் தே பதம் விது:" என்கிற பரமபதம். "யேந குஶலேந ஸத்கதிம் கச்சாமி தஸ்ய குஶலஸ்ய நிமித்தம் ஜந்மாந்தரேஷ்வபி த்வத்பாதகமலாதந்யந் மே நாஸ்தி" என்று அந்வயம். நிகமனபேதத்திலே "யேந உபாயேந ஸத்கதிம் கச்சாமி தஸ்ய தத்கதிரூபஸ்ய குஶலஸ்ய ஹேதுபூதம் உபாயம் ஜந்மாந்தரேஷ்வபி த்வத்பாதகமலாதந்யந் மே நாஸ்தி" என்றபடி. ஸங்க்ரஹபக்ஷத்தில் "பூர்வஜ" என்கிற பதத்தினுடைய விவரணமாயிருக்கிறது. 10.

11. பதவுரை:— தேவ—எம்பிரானே! மே—அடியேனுக்கு, யத் இதம் விஜ்ஞாநம்—(நீயே உபாயமும் உபேயமும் என்கிற) யாதொரு ஜ்ஞானமானது, ப்ராப்தம்—கிடைத்திருக்கிறதோ, யத் இதம் ஸ்தாநம்—(இந்த ஜ்ஞானவிஷயமான அத்யவஸாயமாகிற) யாதொரு நிலை, ஆர்ஜிதம்—(அடியேனால்) ஸம்பாதிக்கப்பட்டிருக்கிறதோ, தஸ்ய—அவற்றுக்கு, பரிக்ஷய:—குறைவானது, ஜந்மாந்தரே அபி—எப்பிறப்பிலும், மாபூத்—ஏற்படவேண்டாம்.

§ திருவாய். (1-7-5).

அவ:— (விஜ்ஞாநமித்யாதி) "ப்ராப்யப்ராபகங்களும், அதுக்கு அடியான ஸுக்ருதமும் நாமேயாகிலும் உபாயபூதனை நான் மேலே செய்யவேண்டுவதென்?" என்னில்: "பிறந்த விஜ்ஞானமும், ஜ்ஞானமடியாகப் பிறந்த அத்யவஸாயமும் நசியாதொழியப்பெறில் 'யோகாநாம் பரமாம் ஸித்திம் பரமம் தே பதம் விது:' என்கிற ப்ராப்யபூமியிலே போகவும் வேண்டா; பயாவஹமான ஸம்ஸாரநிவ்ருத்தியும் வேண்டா; எனக்கு என்றுமொக்க இதுவே அமையும்" என்கிறது.

வ்யா:— (விஜ்ஞாநம்) விலக்ஷணமான ஜ்ஞானம்; ஸர்வாதிகமான ப்ராப்யவிஷயமாகவும், ஸர்வாதிகமான ப்ராபகவிஷயமாகவும் பிறந்த ஜ்ஞானம். ப்ராப்யங்களில் பகவத்ப்ராப்திக்கு அவ்வருகாயிருப்பதொரு ப்ராப்யமில்லாதாப்போலே ஸாதனங்களிலும் ஸித்தோபாயத்துக்கு அவ்வருகாயிருப்பதொன்று இல்லையிறே. (யதிதம் ஜ்ஞாநம்) ப்ரமாண ஸித்தமுமாய், ஹ்ருதயகமலத்திலே ஸந்நிஹிதமுமாயிருக்கிற ஜ்ஞானம். வேதாந்தங்களிலே ப்ராப்யமும், ப்ராபகமும் ஈஶ்வரனேயென்று ப்ரஸித்தமிறே. (99) "**आनन्दमयः**" (ஆநந்தமய:) என்றும், (100) "**रसो वै सः**" (ரஸோ வை ஸ:) என்றும், (101) "**सर्वगन्धस्सर्वरसः**" (ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:) என்றும் ப்ராப்யமாக ப்ரஸித்தமிறே. (43) "**यो ब्रह्माणं विदधाति पूर्वं**" (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்) என்று தொடங்கி, (43) "**मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये**" (முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே) என்றும், (102) "**तस्मान्न्यासमेषां तपसामतिरिक्तमाहुः**" (தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்றும், (100) "**एष ह्येवानन्दयाति**" (ஏஷ ஹ்யேவாநந்தயாதி) என்றும் உபாயமாகவும் ப்ரஸித்தமிறே. (ப்ராப்தம்) ப்ரயோஜநாந்தரபரர்க்கும் ஸாதநாந்தரநிஷ்டர்க்கும் உட்பட உன்னாலே ப்ராபிக்கப்பட்டது. (யதிதம் ஸ்தாநமார்ஜிதம்) ஸ்தாநம் என்று ஸ்திதி; அதாகிறது:— இந்த ஜ்ஞாநவிஷயமான அத்யவஸாயம். (யதிதம்) என்று ப்ரதேஶாந்தரத்தில் ப்ரஸித்தியையும், ஸ்வஹ்ருதய ஸந்நிதியையும் சொல்லுகிறது. (103) "**व्यवसायादृते ब्रह्मन्! नासादयति तत्परम्**" (வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மந்! நாஸாதயதி தத்பரம்) என்னக்கடவதிறே. † "நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு" என்றாரிறே ஆழ்வாரும். (ஆர்ஜிதம்) பகவத் ப்ரஸாத ஸித்தமாகையாலே ஜ்ஞானத்தை ப்ராப்தமென்கிறது. அதிகாரிவிஶேஷணமாய், ஈஶ்வரனை அர்த்தித்தே நாம் புருஷார்த்தமாகப் பெறவேண்டுவதொன்றாகையாலே அத்யவஸாயத்தை ஆர்ஜிக்கப்பட்டது என்கிறது. (ஜந்மாந்தரேऽபி) இஜ்ஜந்மம் நஶித்தாலும், இந்த ஜ்ஞாநாத்யவஸாயங்கள் நஶியாதொழியவேணும் என்கிறது. 'இத்தைப் புருஷார்த்தமாக அபேக்ஷிப்பாரைக் கண்டறியோமே' என்ன: (மே) எனக்கு இதுவே புருஷார்த்தம்; தாம் தாம் அர்த்தித்ததன்றோ புருஷார்த்தமாவது. (தேவ) 'அர்த்திப்பார் உண்டானாலும் நாம் புருஷார்த்தமாகக் கொடுத்துப் போருவதொன்றன்றே' என்ன: (தேவ) ஸம்ஸாரிகளைப்போலே என்னைக்கொண்டு அறியாதொழியவேணும். லீலாரஸம் அநுபவிக்கைக்கு விஷயபூதர் ஸம்ஸாரிகளன்றோ. (தஸ்ய) ஜ்ஞாநாத்யவஸாயங்களுக்குண்டான ஐககண்ட்யத்தாலே, ஏகவசநத்தாலே சொல்லுகிறது. (பரிக்ஷயோ மாபூத்) ஜ்ஞானத்துக்குப் பரிக்ஷயமாகிறது விஸ்ம்ருதி. அத்யவஸாயத்துக்குப் பரிக்ஷயமாகிறது விநாஶம். ஜ்ஞாநவிஸ்ரம்பங்களுக்கு விஸ்ம்ருதி விநாஶமின்றிக்கே ஒழியவேணும் என்கிறது. கீழ், பரமபதத்தே கொடுபோகவேணுமென்று அபேக்ஷித்தும்,

† திருவாய். (5-10-11).

दुर्गतावपि जातायां त्वद्गतो मे मनोरथः।
यदि नाशं न विन्देत तावताऽस्मि कृती सदा॥ १२।

12. துர்க்கதாவபி ஜாதாயாம் த்வத்கதோ மே மநோரத: ।
யதி நாஶம் ந விந்தேத தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா ॥

---

பயாவஹமான ஸம்ஸாரத்தைத் தவிர்த்துத் தரவேணுமென்று அபேக்ஷித்தும் வைத்து, ஜ்ஞாநாத்யவஸாயங்களே அமையுமென்றேன் என்றது இவற்றினுடைய ரஸ்யதையாலே. உபகாரஸ்ம்ருதியாலே ஆசார்யன் பக்கல் பிறந்த போக்யதாதிஶயத்தாலே * "தேவு மற்றறியேன்" என்னப் பண்ணிற்றிறே. ஸம்ஸாரிகளை தர்ஶித்தால் ஜ்ஞாநாத்யவஸாயங்கள் முக்தப்ராப்யஸ்தலம் போலேயிறே இருப்பது. † "மேலால் பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவலன்று மறப்பின்மை யான் வேண்டும் மாடு" என்னும் ஆழ்வாருடைய வார்த்தைக்கும் அடி இதுவிறே. ஸங்க்ரஹபக்ஷத்தில் இஶ்லோகம் "நமஸ்தே" என்கிற பதத்தை ஸ்மரித்துக் கிடக்கிறது. 11.

12. பரவுரை:— த்வத் கத:—தேவரீரிடத்தில் ஈடுபட்டிருக்கிற, மே—என்னுடைய, மநோரத:—மநோரதமானது, துர்க்கதௌ ஜாதாயாம் அபி—மிகவும் கீழான நிலை ஏற்பட்டபோதிலும், நாஶம் ந விந்தேத யதி—அழியாதிருக்குமேயாகில், தாவதா—அவ்வளவாலே, ஸதா—எப்பொழுதும், க்ருதீ அஸ்மி—க்ருதக்ருத்யனாயிருக்கிறேன்.

அவ:— (துர்க்கதாவபீத்யாதி) துக்கரூபமான ஸம்ஸாரநிவ்ருத்தியும், ஸுகரூபமான தேஶப்ராப்தியும் வேண்டா; அதிகாரிவிஶேஷணமான ஜ்ஞாந விஸ்ரம்ப ஸித்தியாலே புருஷார்த்தம் தலைக்கட்டிற்றாமோ? இன்னும் "ஜந்மாந்தரேऽபி" என்று பகவத்ப்ராப்தி விரோதியான ஜந்மத்தை அநுமதி பண்ணுகையும் விருத்தமன்றோ? என்னில்: 'கீழ் அபேக்ஷித்தவை ஒன்றும் வேண்டா; ஸம்ஸாரியுமாய், அது தன்னிலும் துர்க்கதியுமாய்ச் செல்லாநிற்கிலும், தேவர் திருவடிகளில் உபாயோபேயங்கள் முதலான ஸகலலாபங்களும் கிடையாதே மநோரதமாத்ரமேயானாலும், ஸ்வவஶர் போலே என்றுமொக்க க்ருதக்ருத்யனாகா நின்றேன்' என்கிறது.

வ்யா:— (துர்க்கதாவபி ஜாதாயாம்) துர்க்கதியாவது:— மநஸ்ஸையொழிய இதர கரணங்கள் உதவாத தஶை. அதாகிறது:— அஶக்தியாலே ‡ "ஐயார் கண்டமடைக்கிலும்" என்கிற உத்க்ரமண தஶையிலும், ஸ்வாபத்தாலே பாஹ்யகரணங்கள் அடங்க உபஸம்ஹ்ருதமான ஸ்வப்நதஶையிலும். இத்தஶையிலேயாய்ச் செல்லாநின்றாலும். (த்வத்கத:) ஸ்வரூபரூபகுணவிபூதிகளெல்லாம் தனித்தனியேயாகப் பரமமான தேவர் திருவடிகளிலே அடையப்பட்ட மநோரதமாத்ரமென்கை. (மே மநோரத:) இழிந்த துறையிலே சபலனுமாய், அவ்வருகு போக க்ஷமனன்றிக்கே இருக்கிற என்னுடைய மநோரதம். மநோரதமாவது:— அபேக்ஷிதமான புருஷார்த்தம் ஸித்தியாதொழிந்தாலும், அதில் நசையாலே அவற்றை எண்ணுநிற்கை. 'ஸித்தியின்றிக்கேயிருக்க மநோரதமாத்ரமே புருஷார்த்தமாகக்கூடுமோ?' என்னில்: ஊர்வசியோடே அநுபவித்துப் புண்யக்ஷயத்தாலே விஶ்லேஷித்துப் போந்தவனுக்கு,

---

* கண்ணிநுண் சிறுத்தாம்பு-2. † பெரிய திருவ-58. ‡ திருவாய். (2-9-3).

வேறு சில விஷயங்களை அநுபவயோக்யமாக்கினாலும், அவற்றில் நெஞ்சு செல்லாதே, அவள் தன்னையே நினைத்திருக்கை புருஷார்த்தமாமாப்போலே இதுவும் கூடும். அவிலக்ஷண விஷயத்தில் போகங்களைக்காட்டில் விலக்ஷணவிஷயத்தில் மநோரதமாத்ரமே ரஸிக்குமிறே. பகவத்விஷயத்தில் மநோரதமாவது:— (104) **"पिता त्वं माता त्वं"** (பிதா த்வம் மாதா த்வம்) என்கிறபடியே ஸர்வவிதபந்துவும் அவனேயாகவேணுமென்றும், * 'உண்ணும் சோறு பருகு நீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம்' அவனேயாகவேணுமென்றும், அவனைப் பெறுகைக்கு உபாயம் அவனேயாகவேணுமென்றும் இவையிறே. (யதி நாஶம் ந விந்தேத) இம்மநோரதம் விஷயாந்தரஸம்ஸர்க்கத்தாலே விச்சேதத்தை அடையாதாகில். 'யதி' என்கிறது விஷயாந்தரங்கள் ஸாம்ராஜ்யம் பண்ணுகிற ஸம்ஸாரத்தில் பகவந்மநோரதத்துக்கு விச்சேதமின்றிக்கேயொழிகையாகிற இது கிடைப்பதொன்றன்றிறே. ஒரு தேஶலாபத்தாலே வந்த ஸுகஸித்தியோபாதியும், ஸாம்ஸாரிகமான துக்கநிவ்ருத்தியோபாதியும், ஜ்ஞாந ஸித்தியோபாதியும், இம்மநோரதஸித்தியும் பகவத்ப்ரஸாதாயத்தம் என்று கருத்து. (தாவதாऽஸ்மி க்ருதீ ஸதா) இம்மநோரதமாத்ரத்தாலே க்ருதக்ருத்யனாகாநின்றேன்; என்றுமொக்க க்ருதக்ருத்யனாகாநின்றேன். ஸ்வஸ்தஶரீரனை போதோடு ருக்ணஶரீரனை போதோடு வாசியற (105) **"आसीना वा शयाना वा तिष्ठन्तो यत्र कुत्र वा"** (ஆஸீநா வா ஶயாநா வா திஷ்டந்தோ யத்ர குத்ர வா) என்கிற ந்யாயத்தாலே ஸ்திதிஶயநாத்யவஸ்தாவிஶேஷங்களோடு ஜன்மாந்தரங்களோடு வாசியற ப்ராப்யஸித்தியிற்போலே இம்மநோரதஸித்தி மாத்ரத்தாலே க்ருதக்ருத்யனாகாநின்றேன் என்கை. கீழ் ஶ்லோகத்தில் ப்ராப்யஸித்தியில் ஸாரஸ்யம் போலே ஜ்ஞானமாத்ரமே ரஸிக்கும் என்கிறது. இதில் 'அந்த ஸித்தியும் வேண்டா; தத்ஸித்த்யர்த்தமான மநோரதமாத்ரமே அமையும்' என்று அந்த ஸாரஸ்யத்தினுடைய எல்லையைச் சொல்லுகிறது. ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யமிறே ஸ்ம்ருதிக்கு ஸாரஸ்யம். ஆகையாலே, ஸ்மர்த்தவ்யபகவத்விஷயஸாரஸ்யத்தினுடைய அவதியில்லாமையைச் சொல்லிற்றாய்த்து. § "நினைந்தென்னுள்ளே நின்று நெக்குக் கண்கள் அசும்பொழுக, நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன் நேமி நெடியவனே" என்று பெரியாழ்வார் அருளிச்செய்ததற்கு முதல் இதுவேயிறே. (106) **"नाहन्तु सख्यो भजतोऽपि जन्तून् भजाम्यमीषामनुवृत्तिवृत्तये। यथाऽधनो लब्धधने विनष्टे तच्चिन्तयान्यन्निभृतो न वेद॥ एवं मदर्थोज्झितलोकवेदस्वानां हि वो मय्यनुवृत्तयेऽबलाः। मया परोक्षं भजता तिरोहितं मासूयितुं मार्हथ तत्प्रियं प्रियाः॥ न पारयेऽहं निरवद्यसंयुजां सुसाधु कर्तुं विबुधायुषाऽपि वः। या मा भजन् दुर्जरगेहशृङ्खलां संवृश्च्य तद्वः प्रतियातु साऽधुना॥"** (நாஹம் து ஸக்யோ பஜதோऽபி ஜந்தூந் பஜாம்யமீஷாமநுவ்ருத்திவ்ருத்தயே। யதாऽதநோ லப்ததநே விநஷ்டே தச்சிந்தயாந்யந் நிப்ருதோ ந வேத॥ ஏவம் மதர்த்தோஜ்ஜிதலோகவேதஸ்வாநாம் ஹி வோ மய்யநுவ்ருத்தயேऽபலா:। மயா பரோக்ஷம் பஜதா திரோஹிதம் மாஸூயிதும் மார்ஹத தத் ப்ரியம் ப்ரியா:॥ ந பாரயேऽஹம் நிரவத்யஸம்யுஜாம் ஸுஸாது கர்த்தும் விபுதாயுஷாऽபி வ:। யா மா பஜந் துர்ஜரகேஹஶ்ருங்கலாம் ஸம்வ்ருஶ்ச்ய தத் வ: ப்ரதியாது ஸாऽதுநா॥) என்றிறே சேஷி வார்த்தையும். 12.

* திருவாய். (6-7-1). § பெரியாழ். திரு. (5-4-8).

न कामकलुषं चित्तं मम ते पादयोः स्थितम्।
कामये वैष्णवत्वं तु सर्वजन्मसु केवलम्॥१३॥

13. ந காமகலுஷம் சித்தம் மம தே பாதயோஸ்ஸ்திதம் ।
காமயே வைஷ்ணவத்வந்து ஸர்வஜந்மஸு கேவலம் ॥

---

13. பதவுரை:— தே—தேவரீருடைய, பாதயோ:—திருவடிகளில், ஸ்திதம்—நிலை நின்ற, மம சித்தம்—அடியேனுடைய மனம், காம கலுஷம் ந—மற்ற ஆசைகளினால் கலங்க வில்லை; ஸர்வ ஜந்மஸு—எல்லாப் பிறப்புகளிலும், வைஷ்ணவத்வம் து கேவலம்—வைஷ்ணவனாயிருக்கும் தன்மையை மட்டுமே, காமயே—ஆசைப்படுகிறேன்.

அவ:— (ந காமகலுஷமித்யாதி) இஶ்லோகத்தால் நான் உனக்கேயாயிருக்கும் பாரதந்த்ர்யஸுகமே எனக்கு ப்ராப்யமென்கிறது. "கீழே, பரமபதத்தை ப்ராப்யமென்றும், ஸம்ஸாரபயத்தைப் போக்கித் தரவேண்டுமென்றும், 'இவை ஒன்றும் வேண்டா, ஜ்ஞானமே அமையும்' என்றும், 'அதுதானும் வேண்டா; மநோரதமாத்ரமே அமையும்' என்றும், ப்ராப்யவிரோதியான ஜன்மத்தை அனுமதி பண்ணியும் இப்படி வ்யாஹதபாஷணம் பண்ணிற்றென்? ஒன்றே புருஷார்த்தமாக நிர்ணயித்து அபேக்ஷிக்கவேண்டாவோ?" என்னில்: "அவை வ்யாஹதபாஷணமல்ல; அடிமைக்கு ஏகாந்ததேஶமான பரமபதத்தை ஆசைப் பட்டேன்; அடிமைக்கு விரோதியென்று ஸம்ஸாரத்தை வேண்டாமென்கிறது; உன்னுடைய போக்யதாதிஶயத்தாலே த்வத்விஷயஜ்ஞானமே அமையுமென்றேன்; ஜந்மத்தை இசைந்ததும் ஜ்ஞானத்தினுடைய ஸாரஸ்யாதிஶயத்தாலே; இவையெல்லாம் ப்ராஸங்கிகம்; முதலிலே 'நமஸ்தேऽஸ்து' என்று சொன்ன பாரதந்த்ர்யஸுகமே எனக்குக் காமவிஷயம்" என்று புருஷார்த்தத்தை நிர்ணயித்துத் தலைக்கட்டுகிறது.

வ்யா:— (தே பாதயோ: ஸ்திதம் மம சித்தம் ந காமகலுஷம்) நிருபாதிகஶேஷியாய், நிரதிஶயபோக்யனாயிருந்துள்ள உன்னுடைய திருவடிகளிலே ஸ்திதமான என்னுடைய சித்தம் வேறொன்றை ஸ்வயம் புருஷார்த்தமாக நினைத்துக் கலங்குகிறதன்று. "ஜிதம் தே புண்டரீகாக்ஷ" என்கிறபடியே நான் இருந்தவிடத்தே வந்து முகம் காட்டி ருசியைப் பிறப்பித்துப் புகுரநிறுத்தினபடியாலே நிருபாதிகஶேஷித்வமும், நிரதிஶயபோக்யத்வமும் எனக்கு அனுபூதமிறே. (ஸ்திதம்) ஸம்ஸ்திதம். (107) "यस्याऽस्मि" (யஸ்யாऽஸ்மி) என்கிறபடியே வந்தேறியன்றிக்கே, (108) "गुणैर्दास्यमुपागतः" (குணைர்தாஸ்யமுபாகத:) என்கிறபடியே அழகுக்குத் தோற்று இழிந்த என்னுடைய நெஞ்சாகையாலே விஷயாந்தரம் கண்டு போகுவதொன்றன்று என்கை. (மம சித்தம்) * "என் மனனே" என்னுமாப்போலே நெஞ்சினுடைய பவ்யதையைக் கண்டு உகக்கிறான். (வைஷ்ணவத்வம் து) 'து' ஶப்தத்தாலே அவதாரணத்தைச் சொல்லுகிறது. வைஷ்ணவத்வமாவது,— பகவத்பாரதந்த்ர்யஸுகமாதல், ததநுகூலவ்ருத்தியாதல். (109) "एतमानन्दमयमात्मानमुपसंक्रामति" (ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி), (110) "अनुसञ्चरन्" (அநுஸஞ்சரந்) என்றும், (111) "येन येन धाता गच्छति। तेन तेन सह गच्छति - छाया वा सत्त्वमनुगच्छेत्" (யேந யேந தாதா கச்சதி। தேந தேந

---

* திருவாய். (1-1-1).

इत्येवमनया स्तुत्या स्तुत्वा देवं दिने दिने।
किङ्करोऽस्मीति चात्मानं देवायैवं निवेदयेत्॥ १४॥

14. இத்யேவமநயா ஸ்துத்யா ஸ்துத்வா தேவம் திநே திநே।
கிங்கரோऽஸ்மீதி சாத்மாநம் தேவாயைவம் நிவேதயேத்॥

---

ஸஹ கச்சதி – சாயா வா ஸத்த்வமநுகச்சேத்) என்றும் வேதாந்தங்கள் பாரதந்த்ர்யத்தையே புருஷார்த்தமாகச் சொல்லிற்றினவிறே. (112) "**कुरुष्व मामनुचरं**" (குருஷ்வ மாமநுசரம்) என்னக்கடவதிறே. 13.

14. பதவுரை:— இதி ஏவம்—இம்மாதிரியாக, அநயா ஸ்துத்யா—இந்த ஸ்தோத்ரத்தாலே, தேவம்—எம்பெருமானை, திநே திநே—தினந்தோறும், ஸ்துத்வா—துதித்து, கிங்கர: அஸ்மி இதி ச—(அடியேன்) உனக்கு அடிமையாக ஆகவேணும் என்று, தேவாய—ஸர்வேச்வரன் பொருட்டு, ஏவம்—இம்மாதிரியாக, நிவேதயேத்—(ஆத்மாவை) ஸமர்ப்பிக்கக்கடவன்.

அவ:— (இத்யேவமித்யாதி) இதில் ஓடின பாவவ்ருத்தியின்றிக்கே ஒழிந்தவன் இப்பாசுரத்தை நாடோறும் படித்து, 'அடியேனாகவேணும்' என்று ஆத்மஸமர்ப்பணத்தைப் பண்ணுவான்.

வ்யா:— (இத்யேவம்) 'இதி' என்றும், 'ஏவம்' என்றும் அர்த்தத்தினுடையவும் ஶப்தத்தினுடையவும் ஸ்வரூபம் சொல்லுகிறது. இத்தால் அல்லாத ஜிதந்தைகளிற்காட்டில் இதுக்கு உண்டான ஏற்றம் சொல்லுகிறது. (அநயா ஸ்துத்யா) (1) "**जितन्त इति मन्त्रेण**" (ஜிதந்த இதி மந்த்ரேண) என்று ப்ரதேஶாந்தரத்திலே மந்த்ரமாகச் சொல்லிற்று; இங்கு ஸ்தோத்ரமாகச் சொல்லிற்று; இதுக்கு அடி என்? என்னில்: "மந்தாரம் த்ராயத இதி மந்த்ர:" என்கிறபடியே அநுஸந்தாதாவை உத்தரிப்பிக்குமென்றிட்டு மந்த்ரமென்கிறது. ஸ்தவ்யனாய், ஸ்தவப்ரியனான ஈஶ்வரன் திருச்செவி சாற்றினால் முகமலருமதாகையாலே ஸ்தோத்ரமென்கிறது. (தேவம்) (113) "**साक्षाद्देवः पुराणोऽसौ**" (ஸாக்ஷாத் தேவ: புராணோऽஸௌ) என்று நிருபாதிகதேவனாகச் சொல்லக்கடவதிறே. (திநே திநே) அர்த்தஜ்ஞானம் உடையவனுக்கு இந்த ஶப்தோச்சாரணம் காதாசித்கமாகவுமாம்; இந்தப் பாசுரத்தைப் பற்றுமவனுக்கு நாள்தோறும் உச்சரிக்கவேணும். (கிங்கரோऽஸ்மீத்யாதி) நான் கிங்கரனாகவேணுமென்று ஸர்வேஶ்வரன் திருவடிகளிலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணுவான். 'இவ்வித அநுஷ்டானத்துக்கு ப்ரயோஜனமென்?' என்னில்: விலக்ஷணராயிருப்பார் சொன்ன பாசுரத்தை தேஹாத்மாபிமானிகள் சொன்னாலும், அவர்களை நினைத்து, அவர்களைப்போலே ஈஶ்வரன் விஷயீகரிக்கும் என்று கருத்து. 'எது போல?' என்னில்: ஒரீற்று நல்ல கன்றிட்டுக் கறந்த பசு, பின்பு அசல் கன்றிட்டாலும் மறைத்துத் தோற்கன்றை மடுவிக்க, பின்புத்தைக் கன்றையே நினைத்துப் பால் சுரக்குமாப்போலே.

பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்த ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யானம் முற்றிற்று.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

——(:)——

## ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யானத்திலுள்ள சில கடின பதங்களுக்கு அர்த்தங்கள்.

ப்ரதிபாதகம்—அறிவித்தல்.
பௌருஷேயம்—புருஷனால் செய்யப்பட்டது.
துஷ்ப்ராபமான—அடைய அரிதான.
ப்ரதிபாத்யன்—அறிவிக்கப்படுபவன்.
லபித்து—அடைந்து.
பரிச்சேதிக்க—அளவிட.
அநந்யஸாத்யன்—மற்றொன்றால் அடைய முடியாதவன்.
அநந்யார்ஹஶேஷபூதன்—வேறொருவனுக்கு உரித்தானவனல்லாத அடிமை.
க்ரஸ்தர்—பிடிக்கப்பட்டவர்கள்.
ப்ரவணர்—ஈடுபட்டவர்கள்.
ஶரண்யதை—ஶரணமடையத்தகுந்தவனாயிருக்கும் தன்மை.
விஷயாந்தரம்—வேறு விஷயங்கள்.
அடி—காரணம்.
பர்யாயம்—ஒரே பொருளையுடைய சொல்.
முமுக்ஷுஸிஸ்ருக்ஷயா—மோக்ஷத்தில் இச்சையுடையவனை ஸ்ருஷ்டிப்பதில் விருப்பத்தால்.
கர்மோபாதிகம்—கர்மத்தைக் காரணமாகக் கொண்டது.
நிருபாதிக—ஒரு காரணத்தால் ஏற்படாத; இயற்கையான.
மறித்து—மறுபடியும்.
பரித்ராணம்—ரக்ஷணம்.
ப்ரோத்ஸாஹனம்—தூண்டுதல்.
அவிச்சின்னம்—இடைவிடாதது.
அஸங்க்யாதம்—கணக்கற்றது.
ஸுஶகம்—ஸுலபமாகச் செய்யத்தக்கது.
வ்யவஸிதர்—தீர்மானத்தையுடையவர்.
வ்ருத்தம்—நடத்தை.
பரதுக்காஸஹிஷ்ணுத்வம்—பிறருடைய துக்கத்தை ஸஹியாமை.
அதிக்ருதர்—அதிகாரமுள்ளவர்கள்.
கௌணம்—அமுக்யம்.
ஸ்ரஷ்ட்ரந்தரவ்யாவ்ருத்தி—மற்ற ஸ்ரஷ்டாக்களிற்காட்டில் வித்தியாசம்.
நைரபேக்ஷ்யம்—அபேக்ஷியாமலிருக்கும் தன்மை.
கர்மீபவித்தவர்—விஷயமானவர்.
அவதாரணம்—'ஏ'காரம்.
உக்தம்—சொல்லப்பட்டது.
ஸ்வரூபாந்யதாபாவம்—ஸ்வரூபத்தில் மாறுபாடு.
தத்கததோஷம்—அவரிடமிருக்கும் தோஷம்.
அதீந்த்ரியம்—இந்திரியங்களுக்கு எட்டாதது.
கோசரம்—விஷயம்.
தாதர்த்யம்—அவர்க்காயிருக்கும் இருப்பு.
அப்ராப்தம்—தகாதது.
யுகபத்—ஒரே சமயத்தில்.
அக்ருத்யகரணம்—செய்யத்தகாததைச் செய்தல்.
அகடிதம்—செய்யமுடியாதது.
ப்ராபிக்க—அடைய.
க்ருதக்ருத்யன்—செய்யவேண்டியவற்றைச் செய்தவன்.
அண்டாந்தர்வர்த்தி—அண்டத்திற்கு உள்ளிருப்பவன்.
ப்ரதாநாத் அதிகம்—ப்ரக்ருதியைவிட மேலானது.
ஶரீராநுபந்தி—சரீரத்தைச் சேர்ந்தது.
ஶேஷத்வம்—அடிமையாயிருக்கும் தன்மை.
ந்யஸ்தபரன்—பாரத்தை வைத்தவன்.
உடலான—ஸாதனமான.
அந்யபரதை—மற்றவைகளில் ஈடுபட்டிருக்கும் தன்மை.
கரணங்கள்—இந்த்ரியங்கள்.
துரிதங்கள்—பாபங்கள்.
ஸமுச்சயிக்கிறது—கூட்டுகிறது.
தலைக்கட்டுதல்—முடித்தல்.
அநுஷ்டேயம்—அநுஷ்டிக்கவேண்டியது.
வைமுக்யம்—விமுகனாயிருக்கும் தன்மை.
த்யாஜ்யம்—கைவிடத்தக்கது.
உபாதேயம்—எடுத்துக்கொள்ளத்தக்கது.
விலக்ஷணமான—மேலான.
ஸந்நிஹிதம்—அருகிலிருப்பது.
அத்யவஸாயம்—நிச்சயம்.
ஸ்வவஶர்—ஸ்வதந்த்ரர்.
ஸ்வாபம்—தூக்கம்.
நசை—ஆசை.
ப்ரஸாதாயத்தம்—அருளாலே ஏற்பட்டது.
ருக்ணஶரீரன்—வியாதியுள்ள சரீரத்துடன் கூடியவன்.
ஸாரஸ்யம்—இனிமை.
அவதி—எல்லை.
நிரவதிக—எல்லையற்ற.
இறே—அல்லவா.
ஓபாதி—போல.
வ்யாஹதபாஷணம்—மாறான பேச்சு.
ஶேஷித்வம்—ஸ்வாமியாயிருக்கும் தன்மை.
ப்வ்யதை—அடங்கியிருக்கும் தன்மை.
ஸ்தவ்யன்—ஸ்தோத்ரம் செய்யப்படுபவன்.
காதாசித்கம்—சிலசமயங்களிலுள்ளது.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமத்க்ருஷ்ணஸூரயே நம:

# ஸ்தோத்ரரத்நவ்யாக்யான ப்ரமாணத் திரட்டு.

1. ஏஷ ஸம்ப்ரஸாதோऽஸ்மாச் சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே ।

[இந்த ஜீவன், இந்த ஶரீரத்திலிருந்து கிளம்பி பரஞ்சோதியான நாராயணனை அடைந்து, ஸ்வரூபப்ராப்தியடைகிறான்.]

2. ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி

[பரமபுருஷனை ஸாக்ஷாத்கரித்தவுடன், ப்ரஹ்மஜ்ஞானியானவன், புண்யபாபங்களை விட்டு, ப்ரக்ருதிஸம்பந்தமற்றவனாய், (புருஷோத்தமனுடன்) மேலான ஸாம்யத்தை அடைகிறான்.]

3. ஸ்தோத்ரம் நாம கிமாமநந்தி கவயோ யத்யந்யதீயாந் குணாந்
அந்யத்ர த்வஸதோऽதிரோப்ய பணிதிஸ் ஸா தர்ஹி வந்த்யா த்வயி ।
ஸம்யக் ஸத்யகுணாऽபிவர்ணநமதோ ப்ரூயு: கதம் தாத்ருஶீ
வாக் வாசஸ்பதிநாऽபி ஶக்யரசநா த்வத்ஸத்குணார்ணோநிதௌ ॥

[ஸ்தோத்ரமென்று கவிகள் எதைச் சொல்லுகிறார்கள்? ஒருவனுடைய குணங்களை அவைகளில்லாதவனான மற்றொருவனிடம் ஏறிட்டுச்சொல்லுவதே (ஸ்தோத்ரம்) எனில்,— அம்மாதிரியான ஸ்தோத்ரம் உன்னிடம் முடியாது; உள்ள குணங்களை நன்றாக வர்ணிப்பதே (ஸ்தோத்ரம்) என்று சொல்லுவார்களாகில்,— உன்னுடைய கல்யாணகுணக்கடல் விஷயத்தில் ப்ருஹஸ்பதியாலும் அப்படிப்பட்ட ஸ்தோத்ரம் செய்ய எப்படி முடியும்?]

4. அந்யத்ராதத்குணோக்திர் பகவதி ந ததுத்கர்ஷசௌர்யை: பரேஷாம்
ஸ்துத்யத்வாத் யாவதர்த்தாபணிதிரபி ததா தஸ்ய நிஸ்ஸீமகத்வாத் ।

[இல்லாத விஷயங்களை ஏறிட்டுச்சொல்லுவது பகவானைத் தவிர மற்றவர்கள் விஷயத்தில்; பகவத்விஷயத்திலல்ல; அவனுடைய பெருமைகளைத் திருடி மற்றவர்களைத் துதிக்கவேண்டியிருக்கிறபடியால். உள்ள விஷயங்களைச் சொல்லுவதும் (பகவான் விஷயத்தில்) முடியாது; பகவானுடைய பெருமைகள் எல்லையற்றவையாகையாலே.]

5, யதோ வாசோ நிவர்த்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ । ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் । ந பிபேதி குதஶ்சநேதி ॥

(1) சாந். (8-12-2). (2) முண்டகம் (3-1-3). (3) ஸ்ரீஸ்தவம்-3. (4) ர-ஸ்த. (1-19).
(5) தை—ஆ (9-1).

[எந்த ப்ரஹ்மத்தினிடமிருந்து, மனத்துடன் கூடிய வாக்குக்கள், (அதை) அளவிட்டறியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரமாத்மாவின் ஆநந்தத்தை அறிந்தவன் எதனிடமும் பயப்படமாட்டான்.]

6. யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ: ।
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ॥

[எவனுக்கு ப்ரஹ்மம் (அளவிட்டு) அறியப்படவில்லையோ, அவனுக்கு (அது) அறியப்பட்டதாகிறது. எவனுக்கு (ப்ரஹ்மம்) அறியப்பட்டதாகிறதோ, அவன் (அதை) அறியவில்லை. (அளவிட்டு) அறிந்தவர்களுக்கு அறியப்படாததாகவும், (அளவிட்டு) அறியாதவர்களுக்கு அறியப்பட்டதாகவுமிருக்கிறது (ப்ரஹ்மம்).]

7. பூதார்த்தே கதமா ஸ்துதி:

[உண்மையாக உள்ள விஷயத்தில் ஸ்துதி எப்படி முடியும்?]

8. ந ஸமர்த்தாஸ் ஸுரா: ஸ்தோதும் த்வாமநந்யபவம் விபும்

[ஸர்வவ்யாபியும், ஒருவரிடத்திலிருந்தும் உண்டாகாதவனுமான உன்னை ஸ்தோத்ரம் செய்ய தேவர்கள் ஸமர்த்தரல்லர்.]

9. ஸ்தவ்ய: ஸ்தவப்ரிய:

[ஸ்தோத்ரம் செய்யத்தக்கவன்; ஸ்துதியை விரும்புபவன்.]

10. தர்மார்த்தகாமமோக்ஷாக்யா: புருஷார்த்தா உதாஹ்ருதா: ।
இதம் சதுஷ்டயம் யஸ்மாத் தஸ்மாத் கிம் கிமிதம் வச: ॥

[தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷமென்று புருஷார்த்தங்கள் சொல்லப்பட்டுள்ளன. இந்த நான்கும் எவனிடத்திலிருந்து அடையப்படுகின்றனவோ, அவனைக் குறித்து 'அவனால் என்ன ப்ரயோஜனம்?' என்னும் இந்த வார்த்தை எதற்காகச் சொல்லப்படுகிறது?]

11. ததஸ்ய த்ரிவிதஸ்யாऽபி து:க்கஜாதஸ்ய வை மம ।
கர்ப்பஜந்மஜராத்யேஷு ஸ்தாநேஷு ப்ரபவிஷ்யத: ॥
நிரஸ்தாதிசயாஹ்லாத ஸுகபாவைகலக்ஷணா ।
பேஷஜம் பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா ॥

[கர்ப்பம், பிறப்பு, கிழத்தனம் முதலிய அவஸ்தைகளில் உழலும் என்னுடைய (ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்னும்) மூன்றுவிதமான துக்கஸமூஹத்திற்கு, தனக்கு மேலில்லாத ஆநந்தரூபமான ஸுகமாயிருக்கையையே லக்ஷணமாக உடையதும், துக்கமற்றதும், முடிவற்றதுமான பகவத்ப்ராப்தியே மருந்தாக எண்ணப் படுகிறது.]

12. 116-ஐப் பார்க்கவும்.

13. அநந்யசேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ: ।
தஸ்யாऽஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந: ॥

[அர்ஜுனா! வேறொன்றிலும் மனதைச் செலுத்தாதவனாக, எவனொருவன் தினந்தோறும் எப்பொழுதும் என்னை நினைக்கிறானோ, என்னுடைய நித்யயோகத்தில் விருப்பமுள்ள யோகியாகிய அவனுக்கு நான் ஸுலபனாகிறேன்.]

---

(6) கேந. (2-3) (8) வி. பு. (5-7-49). (9) விஷ். ஸஹ. (10) வி. பு. (1-18-22). ப்ரஹ்லாத வாக்யம். (11) வி. பு. (6-5-58 & 59). (13) கீதை. (8-14).

14. ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர் குணேஶ:

[ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஸ்வாமி; கல்யாண குணங்களை உடையவன்.]

15. ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீஶநீஶௌ

[(பரமாத்மாவும் ஜீவனும்) ஸர்வஜ்ஞனாகவும், அஜ்ஞனாகவுமிருக்கிறார்கள்; ஈஶ்வரனாகவும், அநீஶ்வரனாகவும் இருக்கிறார்கள்.]

16. தமீஶ்வராணாம் பரமம் மஹேஶ்வரம்

[ஈஶ்வரர்களுக்கும் மேலான மஹேஶ்வரனான அவனை....]

17. தாஸோऽஹம் வாஸுதேவஸ்ய தேவதேவஸ்ய ஶார்ங்கிண: ।
ஶங்கசக்ரகதாபாணேஸ் த்ரைலோக்யஸ்யைகசக்ஷுஷ: ॥

[தேவதேவனும், சார்ங்கமென்னும் வில்லையுடையவனும், சங்கம், சக்ரம், கதை இவைகளைக் கையிலே உடையவனும், மூவுலகிற்கும் ஓர் கண்ணாயிருப்பவனுமான வாஸுதேவனுக்கு நான் அடிமை.]

18. தாஸபூதாஸ் ஸ்வதஸ் ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: ।

[பரமாத்மாவுக்கு, எல்லா ஆத்மாக்களும் இயற்கையாகவே அடிமைப்பட்டவர்களன்றோ.]

19. தாஸோऽஹம் கோஸலேந்த்ரஸ்ய ராமஸ்யாऽக்லிஷ்டகர்மண: ।
ஹநுமாந் ஶத்ருஸைந்யாநாம் நிஹந்தா மாருதாத்மஜ: ॥

[கோஸலதேசத்துக்கு அதிபதியும், பெருங்காரியங்களையும் எளிதாகச் செய்து முடிப்பவனுமான ராமனுக்கு, சத்ருஸைன்யங்களை அழிப்பவனும், வாயுவின் புத்ரனும், ஹனுமான் என்னும் பெயரை உடையவனுமான நான் தாஸன்.]

20. யஸ்யாத்மா ஶரீரம்

[எந்தப்பரமாத்மாவுக்கு ஆத்மா சரீரமோ....]

21. யஸ்யாக்ஷரம் ஶரீரம்

[எவனுக்கு ஜீவன் சரீரமோ....]

22. அந்த: ப்ரவிஷ்டஶ் ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா

[ஸர்வாந்தர்யாமியான புருஷோத்தமன் ஜனங்களுக்குள் நுழைந்தவனாய் நியமிக்கிறான்.]

23. பூ: ப்ராணிநஸ் ஸர்வ ஏவ குஹாஶயஸ்ய அஹந்யமாநஸ்ய விகல்மஷஸ்ய

[எல்லாப் பிராணிகளும், ஹ்ருதயகுஹையில் சயனித்திருப்பவனும், அழியாதவனும், தோஷமற்றவனுமான பரமாத்மாவுக்கு இருப்பிடம்.]

24. யாநி மூர்த்தாந்யமூர்த்தாநி யாந்யத்ராந்யத்ர வா க்வசித் ।
ஸந்தி வை வஸ்துஜாதாநி தாநி ஸர்வாணி தத்வபு: ॥

[உருவமுள்ளவையாயும், உருவமற்றவையாயும், இங்கும் எங்கும் ஒரு சமயத்திலிருக்கும் வஸ்துஸமூஹங்களெல்லாம் அந்தப் பரமாத்மாவுக்கு சரீரம்.]

---

(14) ஶ்வே (6-16). (15) ஶ்வே (1-9). (16) ஶ்வே (6-7). (17) புண்டரீகஸம்வாதம்; நாரதவாக்யம். (18) ஹாரீதஸ்ம்ருதி; ஈஶ்வரஸம்ஹிதை-சிவவாக்யம். (19) ரா-ஸு (42-35). (20) ப்ருஹ (5-7-22). (21) ஸுபால (7). (22) யஜு. ஆர (3-11-21). (23) ஆபஸ்தம்ப ஸூத்ரம் (22-1). (24) வி. பு. (1-22-86).

25. யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி। தத் யதா தருணவத்ஸா வத்ஸம் வத்ஸோ வா மாதரம் சாயா வா ஸத்வமநுகச்சேத் ததாப்ரகாரம்॥

*[எப்படி, இளங்கன்றையுடைய பசு கன்றையும், கன்று பசுவையும், நிழல் பிராணியையும் பின்தொடர்கின்றனவோ அப்படியே எப்படி எப்படிப் பரமபுருஷன் செல்லுகிறானோ, அப்படி அப்படியே (முக்தனும்) கூடப்போகிறான்.]*

26. ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதா

*[முக்தன் எல்லாக் கல்யாணகுணங்களையும், ஸர்வஜ்ஞனான ப்ரஹ்மத்துடன் கூட அனுபவிக்கிறான்.]*

27. ஜிதந்தே (1-13).

28. பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே।
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதஶ்ச தே॥

*[நீர் வைதேஹியுடன் கூட மலைத்தாழ்வரைகளில் விளையாடுவீர்; அடியேன் நீர் விழித்துக்கொண்டிருக்கும்போதும், தூங்கும்போதும் உமக்கு எல்லா அடிமைகளையும் செய்வேன்.]*

29. விஜ்ஞாநஸாரதிர் யஸ்து மந: ப்ரக்ரஹவாந் நர:।
ஸோத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்॥

*[எவனொருவன் நல்ல ஞானத்தை ஸாரதியாகவும், மனதைக் கடிவாளமாகவும் கொண்டிருக்கிறானோ அவன் ஸம்ஸாரத்திற்கு அக்கரையான விஷ்ணுவினுடைய பரமபதத்தை அடைகிறான்.]*

30. ஜிதந்தே (1-4).

31. ந ஹி மே ஜீவிதேநார்த்தோ நைவார்த்தைர் ந ச பூஷணை:।
வஸந்த்யா ராக்ஷஸீமத்யே விநா ராமம் மஹாரதம்॥

*[மஹாரதனான ராமனை விட்டு ராக்ஷஸிகள் நடுவில் வசிக்கும் எனக்கு உயிரினால் ப்ரயோஜனமில்லை; பொருள்களினால் ப்ரயோஜனமில்லை; ஆபரணங்களால் ப்ரயோஜனமில்லை.]*

32. ப்ரஹ்மவிதாப்நோதி பரம்

*[ப்ரஹ்மத்தை அறிபவன் (தியானிப்பவன்) மேலான பலனை அடைகிறான்.]*

33. ஆத்மா வா அரே த்ரஷ்டவ்யஶ் ஶ்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:

*[கேட்கத்தக்கதும், நினைக்கத்தக்கதுமான ஆத்மா தியானிக்கத்தக்கது; பார்க்கத்தக்கது.]*

34. நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ஶ்ருதேந।
யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ் தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்॥

*[இந்தப் பரமாத்மா (பக்தியற்ற) ஶ்ரவணத்தினாலும், மனனத்தினாலும், தியானத்தினாலும் அடையத்தக்கவனல்லன். எவனை இப்பரமபுருஷன் வரிக்கிறானோ, அவனாலேயே அடையத்தக்கவன்; அவனுக்கு இந்தப் பரமாத்மா தன்னுடைய திவ்யமங்களவிக்ரஹத்தை (ஸ்வரூபத்தை) காட்டுகிறான்.]*

35. பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ் சித்யந்தே ஸர்வஸம்ஶயா:।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே॥

---

(25) *பரமஸம்ஹிதை*. (26) *தை-ஆ* (1-2). (28) *ரா-அ* (31-25) *லக்ஷ்மணவாக்யம்*. (29) *கட* (1-3-9). (31) *ரா-ஸு* (26-5) *ஸீதாவாக்யம்*. (32) *தை-ஆ*-1. (33) *ப்ருஹ* (6-5.6). (34) *கட* (1-2-23). (35) *முண்ட* (2-2-9).

[மேலானவர்களிலும் மேலானவனை அந்தப் பரமாத்மா பார்க்கப்பட்டவுடன், இவனுடைய (ராகம், த்வேஷம் முதலிய) ஹ்ருதயக்ரந்திகள் பிளக்கின்றன; எல்லா ஸம்ஶயங்களும் சிதறுகின்றன; கர்மங்களும் அழிகின்றன.]

36. பக்த்யா த்வநந்யயா ஶக்ய அஹமேவம்விதோऽர்ஜுந ।
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥

[அர்ஜுநா! எதிரிகளை அழிப்பவனே! ஒரு பலனை எதிர்பாராத பக்தியினாலேயே இம்மாதிரியான நான், உண்மையாக அறிவதற்கும், பார்ப்பதற்கும், நுழைவதற்கும் தக்கவன்.]

37. ஸமஸ் ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்

[ஸர்வப்ராணிகளிடமும் (பற்றற்றிருக்கும் விஷயத்தில்) ஸமமாயிருப்பவன் என்னிடம் மேலான பக்தியை அடைகிறான்.]

38. யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி தஸ்மை ।
தம் ஹி தேவமாத்மபுத்திப்ரஸாதம் முமுக்ஷுர் வை ஶரணமஹம் ப்ரபத்யே ॥

[எவன் பிரமனை முன் படைத்தானோ, எவன் வேதங்களையும் அவனுக்கு உபதேசித்தானோ, அப்படிப்பட்ட தேவனும், தன் விஷயமான ஞானத்தை ப்ரகாசிப்பிப்பவனுமான பரமபுருஷனை, மோக்ஷமடைய விரும்பும் நான் சரணமடைகிறேன்.]

39. ந்யாஸமாஹுர் மநீஷிணோ ப்ரஹ்மாணம்

[பெரியோர்கள் பரமாத்மாவை ந்யாஸமென்று சொல்லுகிறார்கள்.]

40. ந்யாஸ இதி ப்ரஹ்மா

[ந்யாஸமென்பது ப்ரஹ்மம்.]

41. தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:

[ஆகையால் ந்யாஸத்தை (ஶரணாகதியை) இந்தத் தபஸ்ஸுக்களுள் மேலானதாகச் சொல்லுகிறார்கள்.]

42. தேவா வை யஜ்ஞாத் ருத்ரமந்தராயந் । ஸ ஆதித்யாநந்வாக்ரமத । தே த்விதைவத்யாந் ப்ராபத்யந்த । தாந் ந ப்ரதிப்ராயச்சந் । தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்சந்தி ॥

[தேவர்கள் யஜ்ஞத்தில் ருத்ரனுக்கு ஹவிர்ப்பாகம் கொடுக்க மறுத்தார்கள்; ருத்ரன் தேவர்களைக் கொல்லத் தொடங்கினான்; அவர்கள் அச்விநீதேவதைகளைச் சரணம் புகுந்தார்கள்; அச்விநீதேவர்கள் அவர்களைக் காட்டிக்கொடுக்கவில்லை; ஆகையால் சரணமடைந்தவன் கொல்லத்தகுந்தவனாயிருந்தாலும் அவனைக் காட்டிக்கொடுப்பதில்லை.]

தேவா வை த்வஷ்டாரமஜிகாம்ஸந் । ஸ பத்நீ: ப்ராபத்யத । தம் ந ப்ரதிப்ராயச்சந் ।
தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதிப்ரயச்சந்தி ॥

[தேவர்கள் (ஹவிர்ப்பாகம் கேட்ட) த்வஷ்டாவைக் கொல்லவிரும்பினார்கள்; அவன் தேவபத்னிகளை சரணமடைந்தான்; அவர்கள் அவனைக் காட்டிக்கொடுக்கவில்லை; ஆகையால் சரணமடைந்தவன் கொல்லத்தகுந்தவனாயினும் அவனைக் காட்டிக்கொடுப்பதில்லை.]

43. ஸ ப்ராதுஶ் சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந: ।
ஸீதாமுவாசாதியஶா ராகவஞ்ச மஹாவ்ரதம் ॥

---

(36) கீதை (11-54). (37) கீதை (18-54). (38) ஶ்வே (6-18). (39) தை. நா-50. (40) தை. நா-49. (41) தை. நா-50. (42) யஜு-கா-6. (43) ரா-அ (31-2).

[ரகுகுலத்தை உகப்பிப்பவனும், மிகுந்த கீர்த்தியை உடையவனுமான அந்த லக்ஷ்மணன், தமையனின் திருவடிகளை நன்றாகப் பிடித்துக்கொண்டு ஸீதையையும், (ஆஶ்ரிதஸம்ரக்ஷணமான) பெரிய வ்ரதத்தையுடைய ராகவனையும் பார்த்துச் சொன்னான்.]

44. ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே।
அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம॥

[ஒரு தடவை சரணமடைந்தவன் பொருட்டும், 'உனக்கு அடியேனாகிறேன்' என்று ப்ரார்த்திப்பவன் பொருட்டும், எல்லா ப்ராணிகளிடத்தினின்றும் அபயமளிக்கிறேன். இது எனக்கு வ்ரதம்.]

45. ஸோऽஹம் த்வாம் ஶரணமபாரமப்ரமேயம் ஸம்ப்ராப்த: பரமபதம் யதோ ந கிஞ்சித்

[எவனைக் காட்டிலும் மேலான ப்ராப்யமில்லையோ அப்படிப்பட்டவனும், எல்லையற்றவனும், அளவிடமுடியாதவனுமான உன்னை, இப்படிப்பட்ட நான் சரணமடைந்தேன்.]

46. தேவர்ஷிபூதாப்தந்ருணாம் பித்ரூணாம் ந கிங்கரோ நாயம் ருணீ ச ராஜந்।
ஸர்வாத்மநா ய: ஶரணம் ஶரண்யம் நாராயணம் லோககுரும் ப்ரபந்ந:॥

[அரசனே! எவனொருவன், சரணமடையத் தகுந்தவனும், லோககுருவுமான நாராயணனை எல்லா விதத்திலும் சரணமடைந்தானோ, அவன் தேவர்களுக்கும், ரிஷிகளுக்கும், பூதங்களுக்கும், பந்துக்களுக்கும், பித்ருக்களுக்கும் அடிமையல்லன்; கடன்பட்டவனுமல்லன்.]

47. மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே

[எவர்கள் என்னையே சரணமடைகிறார்களோ அவர்கள் இந்த ப்ரக்ருதியைத் தாண்டுகிறார்கள்.]

48. தமேவ ஶரணம் கச்ச ஸர்வபாவேந பாரத

[பரதகுலத்துதித்தவனே! எல்லா விதத்திலும் அந்த பகவானையே சரணமடை.]

49. ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ।
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:॥

[(பலஸாதனமான) எல்லா தர்மங்களையும், வாஸனையுடன் விட்டு, என்னை ஒருவனையே உபாயமாக அடை; நான் உன்னை எல்லாப் பாபங்களினின்றும் விடுவிக்கிறேன்; துக்கிக்காதே.]

50. தாவதார்த்திஸ் ததா வாஞ்சா தாவந்மோஹஸ் ததாऽஸுகம்।
யாவந்ந யாதி ஶரணம் த்வாமஶேஷாகநாஶநம்॥

[எல்லாப் பாபங்களையும் போக்கடிக்கும் உன்னை எதுவரையில் சரணமடையவில்லையோ, அதுவரையிலேயே (செல்வத்தை இழந்ததினாலேற்படும்) வருத்தம்; அதுவரையிலேயே (செல்வம் வேண்டுமென்னும்) ஆசை; அதுவரையிலேயே (ஆத்மஜ்ஞானமின்மையினாலேற்படும்) மோஹம்; அதுவரையிலேயே (பகவானை அடையாததினாலேற்படும்) துக்கம். (ஆர்த்தன், அர்த்தார்த்தி, கைவல்யநிஷ்டன், பகவத்ப்ராப்திகாமன் என்னும் நான்கு விதமான அதிகாரிகளுக்கும் ப்ரபத்தியே பலஸாதனம் என்று தாத்பர்யம்.)]

51. கர்ணே ஸ்ப்ருஷ்டே கடிம் சாலயதி

[காதைத் தொட்டால் இடுப்பை அசைக்கிறான்.]

---

(44) ரா-யு (18-33). (45) வி. பு. (5-23-47). (46) பாக. (11-5-41). (47) கீதை (7-14). (48) கீதை (18-62). (49) கீதை (18-66). (50) வி. பு. (1-9-73). (51) பழமொழி.

52. ஆசார்ய தேவோ பவ

[ஆசார்யனை தெய்வமாக உடையவனாக ஆவாயாக.]

53. நம ருஷிப்யோ மந்த்ரக்ருத்ப்ய:

[மந்த்ரத்தை ஸாக்ஷாத்கரித்த ரிஷிகளுக்கு நமஸ்காரம்.]

54. ஸ ஹி வித்யாதஸ் தம் ஜநயதி । தச்ச்ரேஷ்டம் ஜந்ம ॥

[ஆசாரியனன்றோ வித்யையினால் சிஷ்யனைப் பிறப்பிக்கிறான்; அது மேலான ஜன்மம்.]

55. மந்த்ரே தத்தேவதாயாஞ்ச ததா மந்த்ரப்ரதே குரௌ ।
த்ரிஷு பக்திஸ் ஸதா கார்யா ஸா ஹி ப்ரதமஸாதநம் ॥

[மந்திரம், அதில் சொல்லப்படும் தேவதை, மந்த்ரோபதேசம் செய்த ஆசாரியன், இம்மூவரிடத்திலும் எப்போதும் பக்தி செய்யவேண்டும்; அதுவன்றோ (பலஸித்திக்கு) முதல் உபாயம்.]

56. அபிவந்த்ய குரூநாதௌ ஶிஷ்யதீபத்மிநீரவீந்

[சிஷ்யர்களுடைய புத்தியாகிய தாமரைக்கு ஸூர்யன் போன்றவர்களான ஆசாரியர்களை முதலில் நமஸ்கரித்து.]

57. யதா கநந் கநித்ரேண நரோ வார்யதிகச்சதி ।
ததா குருகதாம் வித்யாம் ஶுஶ்ரூஷுரதிகச்சதி ॥

[மனிதன் எப்படி மண்வெட்டியால் (பூமியை) வெட்டித் தண்ணீரை அடைகிறானோ, அப்படியே குருவிடமிருக்கும் வித்யையை குருஸேவை செய்பவன் அடைகிறான்.]

58. நமோ பகவதே தஸ்மை வ்யாஸாயாமிததேஜஸே ।
யஸ்ய ப்ரஸாதாத் வக்ஷ்யாமி நாராயணகதாமிமாம் ॥

[எவருடைய அருளினால் இந்த நாராயணகதையைச் சொல்லுகிறேனோ, அளவற்ற தேஜஸ்ஸையுடைய அந்த பகவான் வியாஸருக்கு நமஸ்காரம்.]

59. லௌகிகம் வைதிகம் வாऽபி ததாத்யாத்மிகமேவ ச ।
ஆததீத யதோ ஜ்ஞாநம் தம் பூர்வமபிவாதயேத் ॥

[உலகவிஷயங்களைப்பற்றியாவது, வேதத்தைப்பற்றியாவது, ப்ரஹ்மவிஷயமாகவாவது எவரிடமிருந்து ஞானத்தை அடைந்தானோ, அவரை முதலில் நமஸ்கரிக்கவேண்டும்.]

60. ப்ரதமமபி குரும் நாதமீடே

[முதல் குருவான நாதமுனியையும் துதிக்கிறேன்.]

61. அஹமபி ந மம । பகவத ஏவாஹமஸ்மீத்யேவமமமதாம் யோஜயத்யதோ நம இதி ॥

["நானும் எனக்குரியேனல்லேன்; பகவானுக்கே அடியேனாகிறேன்" என்று இம்மாதிரியாக மமகாரமில்லாமையைத் தருவதால் 'நம:' எனப்படுகிறது.]

62. ஓம் நமோ விஷ்ணவே

[அர்த்தம் ஆசாரியர்களிடம் கேட்டுக்கொள்வது.]

63. முக்தாநாம் லக்ஷணம் ஹ்யேதத் யச்ச்வேதத்வீபவாஸிநாம் ।
நித்யாஞ்ஜலிபுடா ஹ்ருஷ்டா நம இத்யேவ வாதிந: ॥

---

(52) தை-ஶீக்ஷா-11. (53) யஜு-ஆர. ப்ர-4. (54) ஆப-ஸூ (1-1-6). (55) விஷ்ணுதத்வம். (56) மீமாம்ஸாகாரிகை. (57) மனு (2-218). (58) பார-ஆதி (1-27). (59) மனு (2-117). (60) ஸஹஸ்ரநாமபாஷ்யம். (61) யஜு (62) விஷ்ணுஷடக்ஷரீ. (63) பார. சாந்தி (344-45.)

[ஶ்வேதத்வீபவாஸிகளுக்கு எது லக்ஷணமோ, அதுவே முக்தர்களுக்கும் லக்ஷணமாகும்; அதாவது:— எப்போதும் அஞ்ஜலி செய்துகொண்டிருப்பார்கள்; (அதனால்) ஆநந்திப்பார்கள்; வாயால் ‘ நம: ’ என்றே சொல்லும் தன்மையுடையவர்களாயிருப்பார்கள்.]

64. தஸ்ய யஜ்ஞவராஹஸ்ய விஷ்ணோரமிததேஜஸ: ।
ப்ரணாமம் யேऽபி குர்வந்தி தேஷாமபி நமோ நம: ॥

[யஜ்ஞவராஹராகியவரும், அளவற்ற தேஜஸ்ஸை உடையவருமான அந்த விஷ்ணுவுக்கு எவர்கள் ஒரு நமஸ்காரம் செய்கிறார்களோ, அவர்களுக்குப் பலகால் நமஸ்காரம்.]

65. தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் ।
ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே ॥

[என்னிடத்தில் எப்போதும் சேர்ந்திருப்பதை விரும்புபவர்களும், என்னை பஜிப்பவர்களுமான அவர்களுக்கு, என்னை அடைவதற்கு ஸாதனமான அந்த புத்தியோகத்தை அன்புடன் அளிக்கிறேன்.]

66. ஸம்ஜ்ஞாயதே யேந ததஸ்ததோஷம் ஶுத்தம் பரம் நிர்மலமேகரூபம் ।
ஸந்த்ருஶ்யதே வாப்யதிகம்யதே வா தத் ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம் ॥

[எந்த அறிவினால், தோஷமற்றதும், சுத்தமானதும், மிகவும் மலமற்றதும், ஒப்புயர்வற்றதுமான அந்தப் பரவஸ்து அறியப்படுகிறதோ, பார்க்கப்படுகிறதோ, அடையப்படுகிறதோ, அதுவே ஜ்ஞானம்; அதைக்காட்டிலும் வேறானது அஜ்ஞானம்.]

67. தத் கர்ம யந்ந பந்தாய ஸா வித்யா யா விமுக்தயே ।
ஆயாஸாயாபரம் கர்ம வித்யாந்யா ஶில்பநைபுணம் ॥

[எந்தக் கர்மம் பந்தத்திற்குக் காரணமல்லவோ அதுவே கர்மம்; எது முக்திக்குக் காரணமோ அதுவே வித்யை. மற்ற கர்மம் ஶ்ரமத்திற்கே. மற்ற வித்யை செருப்புக்குத்தக் கற்றதுபோன்றது.]

68. பிதரம் மாதரம் தாராந் புத்ராந் பந்தூந் ஸகீந் குரூந் ।
ரத்நாநி தநதாந்யாநி க்ஷேத்ராணி ச க்ருஹாணி ச ॥
ஸர்வதர்மாம்ஶ்ச ஸந்த்யஜ்ய ஸர்வகாமாம்ஶ்ச ஸாக்ஷராந் ।
லோகவிக்ராந்தசரணௌ ஶரணம் தேऽவ்ரஜம் விபோ ॥

[பகவானே ! தந்தையையும், தாயையும், மனைவியையும், பிள்ளைகளையும், உறவினரையும், நண்பர்களையும், ஆசாரியர்களையும், ரத்னங்களையும், தனதான்யங்களையும், வயல்களையும், வீடுகளையும், எல்லா உபாயங்களையும், கைவல்யமுள்ளிட்ட எல்லா ஆசைகளையும், வாஸனையுடன் விட்டு, திருவுலகளந்தருளின உன் திருவடிகளை ஶரணமடைகிறேன்.]

69. ஏநம் ஸர்வம் ததபிஸமேதி யத்கிஞ்சித் ப்ரஜாஸ் ஸாது குர்வந்தி
யஸ்தத் வேத யத்ஸ வேத ஸ மயைததுக்த இதி

[மனிதர்கள் எங்கெந்த நல்ல காரியங்கள் செய்கிறார்களோ, அவையெல்லாம் ரைக்வரிடம் பொருந்தியிருக்கின்றன. எதை அவர் (ரைக்வர்) அறிந்திருக்கிறாரோ அதையே எவனும் அறிகிறான். அப்படிப்பட்ட ரைக்வர் என்னால் இப்போது சொல்லப்பட்டார்.]

---

(64) விஷ்ணுதர்மம்-90; யமவசனம். பார. சாந்தி. (46-126) பீஷ்மர் ஸ்தோத்ரத்திலும் காண்கிறது. (65) கீதை (10-10). (66) வி. பு- (6-5-87). (67) வி. பு- (1-19-41). (68). விஹகேஶ்வரஸம்ஹிதை. (69) சாந்தோக்யம் (4-1-4).

70. லோகே யத்கிஞ்சித் ஸாத்வநுஷ்ட்டிதம் கர்ம, யச்ச ஸர்வசேதநகதம் விஜ்ஞாநம், ததுபயம் யதீயஜ்ஞாநகர்மாந்தர்க்கதம், ஸ ரைக்வ இதி ஆஹ

[*உலகத்தில் அனுஷ்டிக்கப்படும் எந்த நற்கருமமும், எல்லாச் சேதனர்களுடைய அறிவுமாகிய இவ்விரண்டும் எவருடைய ஜ்ஞானத்திலும், கர்மத்திலும் அடங்கியிருக்கின்றனவோ அவரே ரைக்வர் என்று (ஹம்ஸம்) சொல்லிற்று.*]

71. ஸ த்வாஸக்தமதி: க்ருஷ்ணே தஶ்யமாநோ மஹோரகை: ।
ந விவேதாத்மநோ காத்ரம் தத்ஸ்ம்ருத்யாஹ்லாதஸுஸ்தித: ॥

[*மஹாநாகங்களினால் கடிக்கப்படுபவனும், க்ருஷ்ணனிடத்தில் புத்தியைச் செலுத்தினவனுமான அந்த ப்ரஹ்லாதன், பகவானை நினைக்கையினாலுண்டான ஆனந்தத்தினால் நிலைநின்றவனாய், தன்னுடைய உடம்பை அறியவில்லை.*]

72. பஶ்யந்நபி ந த்ருஷ்டவாந்

[*பார்த்துக்கொண்டிருந்தபோதும் காணவில்லை.*]

73. ஸ்நேஹபூர்வமநுத்யாநம் பக்திரித்யபிதீயதே ।
பஜ இத்யேஷ தாதுர்வை ஸேவாயாம் பரிகீர்த்தித: ॥
தஸ்மாத்ஸேவா புதை: ப்ரோக்தா பக்திஶப்தேந பூயஸீ ॥

[*ஸ்நேஹத்தை முன்னிட்ட தியானம் பக்தியெனப்படுகிறது. 'பஜ' என்கிற தாது 'ஸேவை' என்னும் அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் மேலான ஸேவையே பெரியோர்களால் பக்திஶப்தத்தினால் சொல்லப்படுகிறது.*]

74. ஸ்வாமிநி தாஸஸ்ய ஸ்நேஹமயீ ஸ்திதி:

[*ஸ்வாமியிடத்தில் தாஸனுடைய ஸ்நேஹம் நிறைந்திருக்கும் நிலைமை.*]

75. வாஸுதேவோऽஸி பூர்ண:

[*ஆறு குணங்களிலும் பூர்ணனான வாஸுதேவனாயிருக்கிறாய்.*]

76. நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை நமஸ்தஸ்மை மஹாத்மநே ।

[*மஹாத்மாவான அவனுக்கு நமஸ்காரம்; அவனுக்கு நமஸ்காரம்; அவனுக்கு நமஸ்காரம்.*]

77. நமோ நமஸ்தேऽஸ்து ஸஹஸ்ரக்ருத்வ: புநஶ்ச பூயோபி நமோ நமஸ்தே ।
நம: புரஸ்தாதத ப்ருஷ்ட்டதஸ்தே நமோஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ ॥

[*உனக்கு ஆயிரந்தடவை நமஸ்காரம்; மறுபடியும் மறுபடியும் உனக்கு நமஸ்காரம்; எல்லாமாயிருப்பவனே! உனக்கு முன்னும் பின்னும் நமஸ்காரம்; உனக்கு எல்லாவிடத்திலும் நமஸ்காரம்.*]

78. அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர் தாஸ்யமுபாகத:

[*நான் இவருடைய நினைவினால் (இவருக்குத்) தம்பி; (உண்மையில்) இவருடைய குணங்களால் அடிமைப்பட்டவன்.*]

79. ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: ।
த்யக்த்வா தேஹம் புநர்ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந! ॥

---

(70) ஸ்ரீபாஷ்யம் (1-3-33). (71) வி. பு. (1-17-39). (73) *லைங்கபுராணம் உத்தரபாகம்.* (76) வி. பு. (1-19-79) *ப்ரஹ்லாதவாக்யம்.* (77) *கீதை.* (11-39). (78) *ரா-கி.* (4-12) *லக்ஷ்மணவாக்யம்.* (79) *கீதை* (4-9).

[அர்ஜுநா! என்னுடைய அப்ராக்ருதமான பிறப்பையும், சேஷ்டிதங்களையும் எவன் இப்படி உண்மையாக அறிகிறானோ, அவன் தேஹத்தை விட்டு மறுஜன்மம் அடையான்; என்னை அடைகிறான்.]

80. அஜாயமானோ பஹுதா விஜாயதே। தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்

[பிறப்பற்றவனாயிருந்தும் பலபடியாகப் பிறக்கிறான் (பரமபுருஷன்). அவனுடைய அவதாரத்தை தீரர்களே நன்கு அறிகிறார்கள்.]

81. அஹத்வா ராவணம் ஸங்க்யே ஸபுத்ரபலபாந்தவம்।
அயோத்யாம் ந ப்ரவேக்ஷ்யாமி த்ரிபிஸ்தைர் ப்ராத்ருபிஸ் ஶபே॥

[பிள்ளைகளுடனும், ஸேனையுடனும், பந்துக்களுடனும் கூடிய ராவணனைச் சண்டையில் கொல்லாமல் அயோத்தியை ப்ரவேசிக்கமாட்டேன். மூன்று தம்பிகளின் மீதும் ஆணையிடுகிறேன்.]

82. யத்விநா பரதம் த்வாம் ச ஶத்ருக்நஞ்சாபி மாநத।
பவேந்மம ஸுகம் கிஞ்சித் பஸ்மஸாத் குருதாம் ஶிகீ॥

[பெருமையைத் தருபவனே! பரதனையும், உன்னையும், ஶத்ருக்னனையுமில்லாமல் ஏதாவது எனக்கு ஸுகமுண்டாகுமானால், அதை அக்னி சாம்பலாக்கட்டும்.]

83. அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம்।
ந து ப்ரதிஜ்ஞாம் ஸம்ஶ்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விஶேஷத:॥

[நான் உயிரையும், லக்ஷ்மணனோடுகூட உன்னையும் விடுவேனே ஒழிய செய்த ப்ரதிஜ்ஞையை விடமாட்டேன்; அதிலும் விஶேஷமாக ப்ராஹ்மணர்களுக்குக் கொடுத்த ப்ரதிஜ்ஞையை விடேன்.]

84. பரதஸ்ய வச: குர்வந் யாசமாநஸ்ய ராகவ।
ஆத்மாநம் நாதிவர்த்தேதா: ஸத்யதர்மபராக்ரம॥

[ராகவனே! ஸத்யமான தர்மத்தையும், பராக்ரமத்தையும் உடையவனே! யாசிக்கும் பரதனுடைய வார்த்தையைச் செய்தவன் மூலம், உன்னுடைய ஸ்வரூபத்தை (ஆஶ்ரித பாரதந்த்ர்யத்தை) மீறாமலிருப்பாயாக.]

85. 209-ஐ பார்க்கவும்.

86. அவிஸ்தரமஸந்திக்தமவிலம்பிதமத்ருதம்।
உரஸ்ஸ்தம் கண்டகம் வாக்யம் வர்த்ததே மத்யமே ஸ்வரே॥

[(இந்த ஹநுமானுடைய) மார்பிலிருந்தும், தொண்டையிலிருந்தும் வரும் வாக்யம் மத்யமஸ்வரத்திலும், விஸ்தாரமின்றியும், ஸந்தேஹமின்றியும், காலதாமதமில்லாமலும், வேகமில்லாமலுமிருக்கிறது.]

87. ஸைஷா பார்க்கவீ வாருணீ வித்யா। பரமே வ்யோமந் ப்ரதிஷ்டிதா॥

[இது ப்ருகுவிற்கு வருணனால் சொல்லப்பட்ட வித்யை. பரமபதத்தில் நிலை நிற்பது (இது).]

88. ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:

---

(80) புருஷஸூக்தம் உத்தரானுவாகம். (81) ரா-யு (19-21). (82) ரா-அ (97-8). (83) ரா-ஆ (10-19). (84) ரா-அ (111-7) வஸிஷ்டவாக்யம். (85) தை-ஆ. (86) ரா-கி (3-31) (87) தை-ப்ருகுவல்லீ-9. (88) தைத்திரீய ஆரண்யகம் ப்ரஶ்நம் 1, அனு-9.

[பராஶரரின் புத்திரரான அப்படிப்பட்ட வியாஸரன்றே சொன்னர்.]

89. ஆத்மா ஶுத்தோऽக்ஷரஶ்ஶாந்தோ நிர்க்குண: ப்ரக்ருதே: பர: ।
ப்ரவ்ருத்த்யபசயௌ நாஸ்ய ஏகஸ்யாகிலஜந்துஷு ॥

[ஆத்மாவானவன் கர்மம் முதலிய அசுத்தமற்றவன்; விநாஶமற்றவன்; பசி, தாகம் முதலியவையற்றவன்; ஸத்வரஜஸ்தமோகுணங்களற்றவன்; ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானவன்; எல்லாப் பிராணிகளிலும், ஒரே மாதிரி (ஜ்ஞாநைகாகாரனுக) இருக்கும் இவனுக்கு அதிகமாவதும், குறைவதும் கிடையாது.]

91 & 90. வித்யாவிநயஸம்பந்நே ப்ராஹ்மணே கவி ஹஸ்திநி ।
ஶுநி சைவ ஶ்வபாகே ச பண்டிதாஸ் ஸமதர்ஶிந: ॥
இஹைவ தைர்ஜிதஸ்ஸர்க்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மந: ।
நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥

[வித்யை, அடக்கம் முதலியவைகளுடன் கூடிய ப்ராஹ்மணனிடமும், கேவல ப்ராஹ்மணனிடமும், பசுவிடமும், யானையிடமும், நாயிடமும், சண்டாளனிடமும், ஆத்மாவை உண்மையாய் அறிந்தவர்கள் ஸமதர்ஶிகளாக இருப்பார்கள். எவர்களுடைய மனதானது (இம்மாதிரியான) ஸமநிலைமையிலிருக்கிறதோ, அவர்களால் இங்கேயே ஸம்ஸாரம் ஜயிக்கப்பட்டது. ப்ரக்ருதிஸம்ஸர்க்கமற்றதும், ஸமமானதுமான ஆத்மவஸ்துவன்றே ப்ரஹ்மம் (ப்ராஹ்மத்திற்கு ஸமானமானது). ஆகையால் அவர்கள் ப்ரஹ்மத்திலேயே நிலை நிற்கிறுர்கள்.]

92. விகாரஜநநீமஜ்ஞாம் அஷ்டரூபாமஜாம் த்ருவாம்

[(பதினறு) விகாரங்களை உண்டாக்குவதாகவும், (ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம் ஐந்து தன்மாத்ரைகள் என்னும்) எட்டு ரூபத்தை உடையதாகவும், ஞானமற்றதும், பிறப்பற்றதும், நிலையானதுமான ப்ரக்ருதியை.]

93. அக்ஷய்யம் நாந்யதாதாரமமேயமஜரம் த்ருவம் ।
ஶப்தஸ்பர்ஶவிஹீநம் தத் ரூபாதிபிரஸம்ஹிதம் ॥
த்ரிகுணம் தஜ்ஜகத்யோநிரநாதிப்ரபவாப்யயம் ॥

[(ப்ரக்ருதியானது) க்ஷயமற்றது; மற்றென்றை ஆதாரமாகக்கொண்டிராதது; (தேஶகாலாதிகளால்) அளவற்றது; குறைவற்றது; நிலையானது; ஶப்தஸ்பர்ஶங்களற்றது; ரூபம் முதலியவையற்றது; ஸத்வரஜஸ்தமோகுணங்களை உடையது; தனக்குக் காரணத்தையும், பிறப்பையும், முடிவையுமற்ற அதுவே உலகிற்குக் காரணம்.]

94. பரமாத்மா ச ஸர்வேஷாமாதார: பரமேஶ்வர: ।
விஷ்ணுநாமா ஸ வேதேஷு வேதாந்தேஷு ச கீயதே ॥

[பரமாத்மாவே எல்லோருக்கும் ஆதாரமாகவும், மேலான ஈஶ்வரனுகவுமிருப்பவன். அவன் வேதங்களிலும், வேதாந்தங்களிலும் விஷ்ணுவென்ற பெயரையுடையவனுகக் கீர்த்திக்கப்படுகிறுன்.]

(89) வி. பு. (2-13-71). (91 & 90) கீதை (5-18&19). (92) மந்த்ரிகோபனிஷத். (93) வி. பு. (1-2-20 & 21). (94) வி. பு. (6-4-40).

95. பர: பராணாம் பரம: பரமாத்மாத்மஸம்ஸ்தித: ।
ரூபவர்ணாதிநிர்தேஶவிஶேஷணவிவர்ஜித: ॥
ஸர்வத்ராஸௌ ஸமஸ்தஞ்ச வஸத்யத்ரேதி வை யத: ।
ததஸ்ஸ வாஸுதேவேதி வித்வத்பி: பரிபட்யதே ॥

[மேலானவர்களைக்காட்டிலும் மேலானவனும், தன்னைக்காட்டிலும் உயர்ந்தவனற்றவனும், தனக்குத்தானே ஆதாரமாக இருப்பவனுமான பரமாத்மா ரூபம், நிறம் முதலியவை, நாமம் எனப்படும் (ப்ராக்ருதமான) விஶேஷணங்களற்றவன். இவன் எல்லாவற்றிலும் வசிப்பதாலும், எல்லாம் இவனிடம் வசிப்பதாலும், பெரியோர்களால் இவன் வாஸுதேவனென்று படிக்கப்படுகிறான்.]

96. ப்ரதாநஞ்ச புமாம்ஶ்சைவ ஸர்வபூதாத்மபூதயா ।
விஷ்ணுஶக்த்யா மஹாபுத்தே வ்ருதௌ ஸம்ஶ்ரயதர்மிணௌ ॥

[மஹாபுத்தியையுடையவரே! ஒன்றுடனொன்று சேர்ந்திருக்கும் ஸ்வபாவத்தையுடைய ப்ரக்ருதியும், புருஷனும், எல்லா பூதங்களுக்கும் ஆத்மாவான விஷ்ணுஶக்தியினால் வியாபிக்கப்பட்டிருக்கின்றன.]

97. யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணாம்

[ஆத்மமாத்ராநுபவநிஷ்டரான யோகிகளுக்கு அழிவற்ற ஸ்தானம்.]

98. ஸர்க்கஶ்ச ப்ரதிஸர்க்கஶ்ச வம்ஶ மந்வந்தராணி ச ।
வம்ஶாநுசரிதம் சைவ புராணம் பஞ்சலக்ஷணம் ॥

[ஸ்ருஷ்டி, ப்ரளயம், வம்ஶம், மன்வந்தரம், வம்ஶசரித்ரம் ஆகிய இவ்வைந்து லக்ஷணங்களையுமுடையது புராணமாகும்.]

99. தபநபவநயோர் ய: ப்ராப்தவாந் புத்ரபாவம் ஶதமகக்ருதபாலிர் வித்யயா ஜந்மநா வா ।

[இந்திரனால் அடையாளம் செய்யப்பட்டவனும், ஸூர்யனுக்கும், வாயுவுக்கும், வித்யையினாலும், ஜன்மத்தினாலும் புத்ரனாயிருக்கும் தன்மையை அடைந்தவனுமான ஹநுமான்.....]

100. அப்ரவீச்ச ததா வாக்யம் ஜாதக்ரோதோ விபீஷண: ।
அந்தரிக்ஷகதஶ் ஶ்ரீமாந் ப்ராதரம் ராக்ஷஸாதிபம் ॥

[ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடைய விபீஷணன் அப்போது மிகவும் கோபங்கொண்டவனாய், ஆகாயத்தில் கிளம்பி, ராக்ஷஸர்களுக்கு அதிபதியான தன் தமயனைக் குறித்து சில வார்த்தைகள் சொன்னான்.]

101. பரமாபதமாபந்நோ மநஸாऽசிந்தயத் ஹரிம் ।
ஸ து நாகவரஶ் ஶ்ரீமாந் நாராயணபராயண: ॥

[ஶ்லாக்யமான ஆபத்தை அடைந்தவனும், கைங்கர்யஸ்ரீயை உடையவனும், நாராயணனையே மேலான கதியாகக்கொண்டவனுமான அந்த கஜேந்திராழ்வான் மனதினாலே ஹரியை நினைத்தான்.]

102. ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத: ।
லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நோ பஹி: ப்ராண இவாபர: ॥

---

(95) வி. பு. (1-2-10 & 12). (96) வி. பு. (2-7-29). (97) வி. பு. (1-6-38). (98) நாரஸிம்ஹ புராணம் (3-33). (99) போஜசம்பு-கிஷ்-10. (100) ரா. யு. (16-17). (101) விஷ்ணுதர்மம் (69-47). (102) ரா. பா. (18-28).

[கைங்கர்யலக்ஷ்மியை உடைய லக்ஷ்மணன், ராமனுக்கு சரீரத்தைக்காட்டிலும் எல்லாப் பிரியத்தையும் செய்பவனாகவும், வெளியிலிருக்கும் மற்றொரு ப்ராணன்போலவும் விளங்கினர்.]

103. ஸ்தோத்ரரத்னம்—ஶ்லோகம் 60.

104. ஜிதந்தே ஸ்தோத்ரம்—1.

105. ஏவமுக்த்வாऽர்ஜுநஸ் ஸங்க்யே ரதோபஸ்த உபாவிஶத் ।
விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம் ஶோகஸம்விக்நமாநஸ: ॥

[அர்ஜுனன், இம்மாதிரி சொல்லிவிட்டு, சோகத்தினல் பீடிக்கப்பட்ட மனதை உடையவனாய், அன்புடன் கூடிய வில்லை விட்டு, யுத்தகளத்திலேயே ரதத்தின்மேல் உட்கார்ந்தான்.]

106. யதா ரத்நாநி ஜலதேரஸங்க்யேயாநி புத்ரக ।
ததா குணா ஹ்யநந்தஸ்ய அஸங்க்யேயா மஹாத்மந: ॥

[குழந்தாய்! எப்படி ஸமுத்திரத்திலுள்ள ரத்னங்கள் கணக்கற்றவையோ, அம்மாதிரியே மஹாத்மாவான அநந்தனுடைய குணங்களும் அளவற்றவை.]

107. ஆரோக்யம் பாஸ்கராதிச்சேத் தநமிச்சேத் ஹுதாஶநாத் ।
ஈஶ்வராத் ஜ்ஞாநமந்விச்சேந் மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்தநாத் ॥

[ஸூர்யனிடமிருந்து ஆரோக்யத்தை விரும்பக்கடவன்; அக்னியிடமிருந்து பொருளை விரும்பவேண்டும்; சிவனிடமிருந்து அறிவை விரும்பக்கடவன். நாராயணனிடமிருந்து மோக்ஷத்தை விரும்பக்கடவன்.]

108. இஷுக்ஷயாந்நிவர்த்தந்தே நாந்தரிக்ஷக்ஷிதிக்ஷயாத் ।
மதிக்ஷயாந்நிவர்த்தந்தே ந கோவிந்தகுணக்ஷயாத் ॥

[பாணங்களில்லாமல் திரும்புகிறார்களேயொழிய, பூமியும் ஆகாயமும் அழிந்துவிட்டதாலல்ல. (அம்மாதிரியே) புத்திக்குறைவினல் திரும்புகிறார்களேயொழிய கோவிந்தனுடைய குணங்கள் முடிந்துவிட்டதாலல்ல.]

109. ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி தச்சித்தம் யத்ததர்ப்பிதம் ।
தாவேவ ச கரௌ ஶ்லாக்யௌ யௌ தத்பூஜாகரௌ கரௌ ॥

[எது ஹரியைத்துதிக்கிறதோ, அதுவே நாக்கு- எது அவனிடம் ஸமர்ப்பிக்கப்பட்டதோ அதுவே நெஞ்சு. எவை அவனுக்குப் பூஜை செய்கின்றனவோ அக்கைகளே ஶ்லாக்யமானவை.]

110. நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர் லப்தா த்வத்ப்ரஸாதாந் மயாऽச்யுத ।
ஸ்திதோऽஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ ॥

[அச்சுதனே! (விபரீதஜ்ஞானமாகிய) மோஹம் நசித்தது. உன்னருளால் உண்மை அறிவு என்னால் அடையப்பட்டது. ஸந்தேஹம் நசிக்கப்பெற்றவனாயிருக்கிறேன். உன் வசனத்தின்படியே (யுத்தம்) செய்கிறேன்.]

111. யந்நாயம் பகவாந் ப்ரஹ்மா ஜாநாதி பரமம் பதம் ।
தந்நதா: ஸ்ம ஜகத்தாம தவ ஸர்வகதாச்யுத ॥

---

(105) கீதை (1-47). (106) மாத்ஸ்யபுராணம். வராஹபுராணம் (74-40). (107) மாத்ஸ்யபுராணம் (67-41). (109) விஷ்ணுதர்மம்-1. (110) கீதை (18-73). (111) வி. பு. (1-9-59).

[அச்யுதனே! ஸர்வவ்யாபியே! மேலான ப்ராப்யமான எதை பகவானான பிரமனும் அறியானோ, உலகிற்கெல்லாம் இருப்பிடமான அந்த உன்னுடைய ஸ்வரூபத்தை வணங்குகிறோம்.]

112. தவாந்தராத்மா மம ச யே சாந்யே தேஹஸம்ஜ்ஞிதா: |
ஸர்வேஷாம் ஸாக்ஷிபூதோऽஸௌ ந க்ராஹ்ய: கேநசித் க்வசித் ||

[(பிரமனாகிய) எனக்கும், (ருத்ரனாகிய) உனக்கும், (தேஹத்தை உடைத்தாயிருப்பதால்) 'தேஹீ' என்ற பெயரையுடைய மற்றவர்களுக்கும் அந்தராத்மா நாராயணனே. எல்லாருக்கும் ஸாக்ஷியாயிருக்கிறார் அவர். எவராலும் எக்காலத்திலும் அறியத்தக்கவரல்லர் அவர்.]

113. தத் விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய: | திவீவ சக்ஷுராததம் |
தத் விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ் ஸமிந்ததே | விஷ்ணோர்யத் பரமம் பதம் ||

[விஷ்ணுவினுடைய அந்தப் பரமபதத்தை நித்யஸூரிகள் எப்போதும் பார்க்கிறார்கள். அப்பரமபதம், எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பவனும், ஆகாயத்திலிருப்பவனும் உலகிற்கெல்லாம் கண்ணாயிருப்பவனுமான ஸூர்யன்போல் ப்ரகாஶமுள்ளது. விஷ்ணுவினுடைய யாதொரு பரமபதமிருக்கிறதோ, அதில் மேதாவிகளும், துதிப்பதையே ஸ்வபாவமாக உடையவர்களும், ஜாகரூகர்களாயிருப்பவர்களுமான நித்யஸூரிகள் பிரகாசிக்கின்றனர்.]

114. தேவ! ப்ரபந்நார்த்திஹர! ப்ரஸாதம் குரு கேஶவ! |
அவலோகநதாநேந பூயோ மாம் பாலயாச்யுத! ||

[தேவனே! ஶரணமடைந்தவர்களின் துக்கத்தைப் போக்கடிப்பவனே!, கேசவனே! அருள்புரிவாயாக. அச்சுதனே! மறுபடியும் கடாக்ஷிப்பதன்மூலம் என்னைக் காப்பாற்றுவாயாக.]

115. ததைக்ஷத பஹு ஸ்யாம் ப்ரஜாயேயேதி தத்தேஜோऽஸ்ருஜத |

[அந்தப் பரப்ரஹ்மம் '(நானே) பலவாக ஆகக்கடவேன்' என்று ஸங்கல்பித்தது; அது தேஜஸ்ஸை ஸ்ருஷ்டிசெய்தது.]

116. ரஸோ வை ஸ: | ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி | கோ ஹ்யேவாந்யாத்
க: ப்ராண்யாத் | யதேஷ ஆகாஶ ஆநந்தோ ந ஸ்யாத் | ஏஷ ஹ்யேவாநந்தயாதி |

[ரஸ (ஆநந்த) ஸ்வரூபனன்றோ அந்தப் பரமபுருஷன். ரஸஸ்வரூபனான அவனை அடைந்து (இந்த ஜீவன்) ஆநந்தத்தை உடையவனாகிறான். பிரகாசிப்பவனும், ஆநந்தஸ்வரூபனுமான இப்பரமபுருஷன் இல்லாவிடில் எவன் இவ்வுலகிலுள்ள ஸுகத்தையோ, மோக்ஷ ஸுகத்தையோ அடையமுடியும்? (ஆகையால்) இவனே (ஜீவனை) ஆநந்திப்பிக்கிறான்.]

117. ந ததஸ்தி விநா யத் ஸ்யாந்மயா பூதம் சராசரம்

[அசையக்கூடியவையும், அசையக்கூடாதவையுமான வஸ்துக்களில், நானில்லாமல் இருக்கக்கூடிய வஸ்து கிடையாது.]

118. ஸ ஏகாகீ ந ரமேத

[(ப்ரளயகாலத்தில்) ஒருவராயிருந்த அந்த நாராயணன் ஆனந்தத்தை அடையவில்லை.]

(112) பாரதம்-மோக்ஷதர்மம் (179-4). (113) ருக்வேதம். ஸாமவேதம் (3-18-2-4). (114) வி. பு. (1-20-16) ப்ரஹ்லாதவாக்யம். (115) சாந்-உப-(6-2-3). (116) தைத்திரீயம் ஆநந்தவல்லி-7. (117) கீதை (10-39). (118) மஹோபனிஷத்.

119. உபாதத்தே ஸத்தாஸ்திதிநியமநாத்யைஶ்சிதசிதௌ
ஸ்வமுத்திஶ்ய ஸ்ரீமாநிதி வததி வாகௌபநிஷதீ।
உபாயோபேயத்வே ததிஹ தவ தத்த்வம் ந து குணௌ
அதஸ்த்வாம் ஸ்ரீரங்கேஶய ஶரணமவ்யாஜமபஜம்॥

[ஹே ஸ்ரீரங்கநாதனே! 'ஸ்ரீமந்நாராயணன் ஸ்ருஷ்டி, ஸ்திதி, நியமனம் முதலிய காரியங்களால் சேதனசேதனங்களைத் தனக்காக ஸ்வீகரிக்கிறான்' என்று உபனிஷத்வாக்ய மானது சொல்லுகிறது. ஆகையால், இவ்விஷயத்தில் உபாயத்வமும் உபேயத்வமும் உனக்கு ஸ்வரூபம்; குணங்களல்ல. ஆகையால் உம்மை நிர்வ்யாஜமான உபாயமாக அடைந்தேன்.]

120. கிமத்ர சித்ரம் தர்மஜ்ஞ! லோகநாத! ஸுகாவஹ!।
யத் த்வமார்யம் ப்ரபாஷேதா: ஸத்த்வவாந் ஸத்பதே ஸ்தித:॥

[தர்மங்களை அறிந்தவரே! லோகநாதரே! ஸுகத்தைத் தருபவரே! ஸத்வகுணத்தை யுடையவரும், நல்ல மார்க்கத்தில் நிற்பவருமான நீர் அழகிய சொல்லைச் சொன்னீர் என்பதில் என்ன ஆச்சரியம்?]

121 காரணந்து த்யேய:

[காரணவஸ்துவே தியானிக்கத்தக்கது.]

122 ஸ ஸ்வராட் பவதி

[அந்த முக்தாத்மா கர்மத்திற்கு வசப்படாதவனாக ஆகிறான்.]

123. ய ஆத்மா அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யுர் விஶோகோ
விஜிகத்ஸோऽபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்பஸ் ஸோऽந்வேஷ்டவ்ய:

[எந்த ஆத்மாவானவன், பாபமற்றவனாகவும், கிழத்தனமற்றவனாகவும், ம்ருத்யுவற்றவனாகவும், ஶோகமற்றவனாகவும், பசியற்றவனாகவும், தாகமற்றவனாகவும், வீண்போகாத இஷ்டத்தையும், ஸங்கல்பத்தையும் உடையவனாகவுமிருக்கிறானோ அவன் தேடத்தக்கவன்.]

124. ய: புத்ர: பிதரம் த்வேஷ்டி தம் வித்யாதந்யரேதஸம்।
யோ விஷ்ணும் ஸததம் த்வேஷ்டி தம் வித்யாதந்த்யரேதஸம்॥

[எந்தப் புத்திரன் பிதாவை த்வேஷிக்கிறானோ அவனை மற்றொருவனுடைய ரேதஸ்ஸுக்குப் பிறந்தவனாக அறியலாம்; எவனொருவன் விஷ்ணுவை எப்போதும் த்வேஷிக்கிறானோ அவனைச் சண்டாளனுக்குப் பிறந்தவனாக அறியலாம்.]

125. விஷ்ணுபக்திவிஹீநோ யஸ்ஸர்வஶாஸ்த்ரார்த்தவேத்யபி।
ப்ராஹ்மண்யம் தஸ்ய ந பவேத் தஸ்யோத்பத்திர்நிரூப்யதாம்॥

[எல்லா ஶாஸ்த்ரங்களின் அர்த்தத்தை அறிந்தவனானபோதிலும் எவன் விஷ்ணு பக்தியில்லாதவனோ அவனுக்கு ப்ராஹ்மண்யம் கிடையாது. அவனுடைய உத்பத்தியை நிரூபிக்கலாம்.]

126. ஹிரண்யகர்ப்பஸ் ஸமவர்த்ததாக்ரே பூதஸ்ய ஜாத: பதிரேக ஆஸீத்

[முதலில் பூதங்களுக்கெல்லாம் ஒரே பதியான ஹிரண்யகர்ப்பன் (ஜீவாத்மஸமூஹத்தைத் தன்னுட்கொண்ட பகவான்) இருந்தான்.]

(119) ஸ்ரீரங்கராஜஸ்தவம் (2-88). (120) ரா-யு (18-36). (121) அதர்வஶிகை. (122) சாந்தோக்யம் (7-25-2). (123) சாந்தோக்யம் (8-7-1). (124) ப்ரஹ்மாண்டபுராணம். (125) பாத்மபுராணம். (126) தைத்திரீயஸம்ஹிதை (4-2-8).

127. ஏகோ ஹி ருத்ரோ ந த்விதீயாய தஸ்து:

[ருத்ரன் ஒருவனே; இரண்டாவதாக (ஸஹாயமாக) ஒருவருமில்லை.]

128. ந கிரிந்த்ர த்வதுத்தரோ ந ஜ்யாயோ அஸ்தி வ்ருத்ரஹந்

[இந்திரனே! உன்னைக்காட்டிலும் மேலானவனில்லை; வ்ருத்ரனைக் கொன்றவனே (உன்னைக்காட்டிலும்) பெரியவனில்லை.]

129. தஸ்யமத்யே வஹ்நிஶிகா அணீயோர்த்வா வ்யவஸ்தித: ।
நீலதோயதமத்யஸ்தா வித்யுல்லேகேவ பாஸ்வரா ।
நீவாரஶூகவத் தந்வீ பீதாபா ஸ்யாத் தநூபமா ।
தஸ்யாஃ ஶிகாயா மத்யே பரமாத்மா வ்யவஸ்தித: ।
ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஸ்ஸேந்த்ரஸ் ஸோக்ஷர: பரமஸ் ஸ்வராட் ॥

[அந்த இருதயகமலத்தின் நடுவில், சிறியதும் மேல் நோக்கினதுமான அக்னிஶிகை (பரமாத்மாவின் திவ்யமங்களவிக்ரஹம்) இருக்கிறது. (அது) நீலமேகத்தை உட்கொண்ட மின்னல்போல் பிரகாசமுள்ளதாகவும், நெல் நுனிபோல் சிறிதாகவும், மஞ்சள் நிறமுள்ளதாகவும், ஒப்பற்றதாகவும் இருக்கிறது. அந்த ஶிகையின் நடுவில் பரமாத்மா விளங்குகிறான். அவனே பிரமனுக்கும் அந்தர்யாமி; அவனே சிவனுக்கும் அந்தர்யாமி; அவனே இந்திரனுக்கும் அந்தர்யாமி; (பிரமன் முதலியவர்களைக்காட்டிலும்) மேலானவனும், கர்மத்திற்கு வசப்படாதவனும், அழிவற்றவனுமான முக்தாத்மாவுக்கும் அவனே அந்தர்யாமி.]

130. நாராயணபரா வேதா தேவா நாராயணாங்கஜா: ।
நாராயணபரா லோகா நாராயணபரா மகா: ॥

[வேதங்கள் நாராயணனைச் சொல்லுபவை; தேவர்கள் நாராயணனுடைய அங்கத்திலிருந்து உண்டானவர்கள்; நாராயணனைப் பற்றியிருப்பவை உலகங்கள்; யாகங்கள் நாராயணனை ஆராதிப்பவை.]

131. கந்தத்வாராம் துராதர்ஷாம் நித்யபுஷ்டாம் கரீஷிணீம் ।
ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம் தாமிஹோபஹ்வயே ஶ்ரியம் ॥

[கீர்த்தியைத் தருபவளும், (துஷ்டர்களால்) அடையமுடியாதவளும், எப்போதும் ஸம்ருத்தியை உடையவளும், எல்லா ஸம்பத்துகளையும் உடையவளும், எல்லா பூதங்களுக்கும் ஈஶ்வரியுமான ஸ்ரீதேவியை இங்கு அழைக்கிறேன்.]

132. அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ

[இந்த உலகிற்கெல்லாம் ஸ்வாமினியாகவும், விஷ்ணுவுக்குப் பத்னியாகவும் இருப்பவள்.]

133. மஹாந் ப்ரபுர்வை புருஷஸ் ஸத்த்வஸ்யைஷ ப்ரவர்த்தக:

[மஹாபுருஷனே (மோக்ஷ) பலத்தைக் கொடுக்கக்கூடியவன். இவனே சுத்தஸத்வத்திற்கு ப்ரவர்த்தகன்.]

134. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தமாதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத் ।
தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி நாந்ய: பந்தா வித்யதேऽயநாய ॥

(127) ஶ்வேதாஶ்வதரம் (3-2). (128) ருக்ஸம்ஹிதை அஷ்டகம் 3. (129) நாராயணவல்லி-11. (130) பாகவதம் (2-5-15). (131) ஸ்ரீஸூக்தம்-9. (132) நீளாஸூக்தம் தைத்திரீய ஸம்ஹிதை (4-4-12). (133) ஶ்வே. உ. (3-12). (134) புருஷஸூக்தம் உத்தரானுவாகம்-2.

[(வேதபுருஷனாகிய) நான் (ஸ்வரூபரூபகுணவிபூதிகளில்) பெரியவனும், ஸூர்யன் போல் ப்ரகாசிப்பவனும், ப்ரக்ருதிக்கு அப்பாற்பட்டவனுமான இந்தப் புருஷனை அறிகிறேன். அவனை இம்மாதிரி அறிபவன் இங்கேயே முக்தனாக ஆகிறான். மோக்ஷத்திற்கு வேறு வழி கிடையாது.]

135. ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே ஹிரண்யஶ்மஶ்ருர்
ஹிரண்யகேஶ ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண: ।
தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ ॥

[ஸூர்யனுக்கு நடுவில் தங்கம்போல் அழகிய உருவையுடைய எந்த இந்தப் பரம புருஷன் காணப்படுகிறானோ, அவன் ஸுவர்ணம்போன்ற அழகான மீசையையும், கேஶங்களையும், எல்லா அவயவங்களையும் உடையவன். அவனுக்கு ஸூர்யனால் மலரும் தாமரைபோன்ற இரு கண்கள் உள.]

136. ததஸ்ஸமுத்க்ஷிப்ய தராம் ஸ்வதம்ஷ்ட்ரயா மஹாவராஹ: ஸ்புடபத்மலோசந: ।
ரஸாதலாதுத்பலபத்ரஸந்நிப: ஸமுத்திதோ நீல இவாசலோ மஹாந் ॥

[மலர்ந்த தாமரைபோன்ற திருக்கண்களை உடையவரும், நீலோத்பலமலரின் இதழ் போன்ற நிறத்தையுடையவருமான மஹாவராஹஸ்வரூபியான பகவான் தன்னுடைய தந்தத்தால் பூதேவியை ரஸாதலத்திலிருந்து எடுத்துக்கொண்டு பெரிய நீலமலைபோல் கிளம்பினார்.]

137. யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம: ।
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥

[நான் ஞானத்தில் ஏற்றக்குறைவுகளுள்ள ஸம்ஸாரிபுருஷனை அதிக்ரமித்திருப்பதாலும், ஞானத்தில் ஏற்றக்குறைவுகளற்ற முக்தபுருஷனைக்காட்டிலும் மேலானவனாயிருப்பதாலும், ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்திபெற்றிருக்கிறேன்.]

138. ஏதாவாநஸ்ய மஹிமா அதோ ஜ்யாயாம்ஶ்ச பூருஷ: ।
பாதோஸ்ய விஶ்வா பூதாநி த்ரிபாதஸ்யாம்ருதம் திவி ॥

[இவனுடைய மஹிமை இப்படிப்பட்டது. பரமபுருஷன் இதைக்காட்டிலும் மேலானவன். எல்லா உலகங்களும் இவனுடைய (விபூதியில்) கால் பாகம்; பரமபதத்தில் இவனுடைய (விபூதியில்) அழிவற்றதான முக்கால் பாகமிருக்கிறது.]

139. யஸ்யாயுதாயுதாம்ஶாம்ஶே விஶ்வஶக்திரியம் ஸ்திதா ।
பரப்ரஹ்மஸ்வரூபஸ்ய ப்ரணமாமஸ்தமவ்யயம் ॥

[பரப்ரஹ்மஸ்வரூபியான எவனுடைய பல்லாயிரத்தில் ஒரு பாகத்தில் உலகமாகிற சக்தி நிலைநிற்கிறதோ, குறைவற்றவனான அவனை வணங்குகிறோம்.]

140. மேரோரிவாணுர் யஸ்யைதத் ப்ரஹ்மாண்டமகிலம் முநே

[முனிவரே! இந்த ப்ரஹ்மாண்டம் முழுவதும் எவனுக்கு, மேருவுக்கு அணுவைப் போலாகிறதோ.....]

141. விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத்

[நான் இவ்வுலகையெல்லாம் ஒரு அம்ஶத்தினால் தரித்துக்கொண்டிருக்கிறேன்.]

(135) சாந்தோக்யம் (1-6 & 7). (136) வி. பு. (1-4-26). (137) கீதை (15-18). (138) புருஷஸூக்தம்-3. (139) வி. பு. (1-9-53). (140) (141) கீதை (10-42).

142. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[பிறகு, வேதங்கள் அபகரிக்கப்பட்டவுடன், பிரமனை அஜ்ஞானம் பீடித்தது. அதன் பின் வேதங்களை இழந்த அவன் ஈசனைக் குறித்துப் (பின்வருமாறு) பேசினான். பிரமன்:— 'வேதங்களே எனக்கு உயர்ந்த கண்; வேதங்களே எனக்கு மேலான தனம்; மறைகளே எனக்கு மேலான தேஜஸ்; வேதங்களே எனக்கு உயர்ந்த ப்ரஹ்மம். அஸுரர்களுடைய பலத்தினால் இங்கிருந்து என்னுடைய எல்லா வேதங்களும் அபஹரிக்கப்பட்டன. வேதங்களற்ற இவ்வுலகங்களெல்லாம் இருளடைந்தன. லோகங்களை ஸ்ருஷ்டிக்க ஆரம்பித்த நான் வேதமில்லாமல் என் செய்வேன்? ஐயோ! வேதங்கள் நசித்ததினால் எனக்குப் பெரிய துக்கம் வந்து சேர்ந்தது; என்னை அடைந்த இந்த சோகமாகிய வியாதி (என்) மனதைத் துன்புறுத்துகிறது'............ ஹரியானவர் ரஸாதலத்திலிருந்த எல்லா வேதங்களையும் எடுத்துப் பிரமனிடம் கொடுத்தார். அரசனே! பிறகு (அப்பிரமன்) தன் இயற்கைநிலையை அடைந்தனன். இப்படி (மதுகைடபர்களென்னும்) அவ்விருவரையும் கொன்றதாலும், வேதத்தை மீட்டுக்கொணர்ந்ததாலும், புருஷோத்தமன் பிரமனுடைய சோகத்தைப் போக்கடித்தான்.]

143. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[தேவியைக் குறித்து ருத்ரன்:— 'பிறகு கோபத்தையுடையவனும், சிவந்த கண்களை உடையவனுமான என்னால், அப்பிரமனுடைய தலை இடதுகைக் கட்டைவிரல் நகத்தின் நுனியால் வெட்டப்பட்டது'. பிரமன்:— அபராதமற்ற என்னுடைய தலை, உன்னால் அறுக்கப்பட்டபடியால் நீ சாபத்தை அடைந்து கபாலியாக (கபாலத்துடன் கூடியவனாக) ஆவாய்.' ருத்ரன்:— தேவி! ப்ரஹ்மஹத்தி செய்தவனாயும் கலங்கினவனாகவும் பூமியில் தீர்த்தங்களைச் சுற்றிக்கொண்டிருந்த நான் அதற்குப்பின் ஹிமாசலமலைக்குச் சென்றேன். அங்கு ஸ்ரீமந்நாராயணன் என்னால் பிச்சைக்காக யாசிக்கப்பட்டான். அதன்பின் அவனால் தன் (தேஹத்தில்) ஒரு பாகம் நகத்தின் நுனியால் கீறப்பட்டது. அதிலிருந்து பெரிதாக வெள்ளமிடும் ரத்ததாரை பெருகிற்று. ........அழகிற் சிறந்தவளே! விஷ்ணுவினுடைய அருளினால் அக்கபாலம் ஆயிரக்கணக்கான பல துண்டுகளாக வெடித்து, கனவில் கிடைத்த பணம்போல் சென்றது.]

144. யுககோடிஸஹஸ்ராணி விஷ்ணுமாராத்ய பத்மபூ: ।
புநஸ்த்ரைலோக்யதாத்ருத்வம் ப்ராப்தவாநிதி ஶுஶ்ரும ॥

[தாமரையில் பிறந்த நான்முகன் ஆயிரங்கோடியுகங்கள் விஷ்ணுவை ஆராதித்து மறுபடியும் மூவுலகிற்கும் பதியாயிருக்கும் தன்மையை அடைந்தானென்று கேள்விப்படுகிறோம்.]

145. ப்ரஹ்மாதயஸ் ஸுராஸ் ஸர்வே விஷ்ணுமாராத்ய தே புரா ।
ஸ்வம் ஸ்வம் பதமநுப்ராப்தா: கேஶவஸ்ய ப்ரஸாதத: ॥

[பிரமன் முதலிய எல்லா தேவர்களும், முன் விஷ்ணுவை ஆராதித்து, தங்கள் தங்கள் பதவிகளை கேஶவனுடைய அருளாலே பெற்றார்கள்.]

(142) பார. சாந்தி (357-31). (143) மாத்ஸ்யபுராணம்-182. (144) மஹாபாரதம் ஸபாபர்வம் (14-8). (145) நாரஸிம்ஹபுராணம்.

146. ஏவமேஷோऽஸுராணாம் ச ஸுராணாஞ்சாபி ஸர்வஶ: ।
பயாபயங்கர: க்ருஷ்ணஸ் ஸர்வலோகேஶ்வர: ப்ரபு: ॥

[இம்மாதிரியாக (நமக்கு) ஸ்வாமியும், எல்லா உலகங்களுக்கும் ஈஶ்வரனுமான இந்த க்ருஷ்ணன் அஸுரர்களுக்கும் தேவர்களுக்கும் எக்காலத்திலும் (முறையே) பயத்தையும், அபயத்தையும் அளிப்பவன்.]

147. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[ரிஷிஶ்ரேஷ்டரே! (பகவான் திருவுலகளந்தருளின) அச்சமயம், ஹரியினிடம் பக்தியினால் தர்மம் ஜலமாயிற்று. தர்மமாகிய அந்த ஜலத்தை எடுத்து, ஜகந்நாதனுடைய ஸந்தோஷத்திற்காக (அவனுடைய) திருவடியானது (என்னால்) மேலான பக்தியுடன் விளக்கப்பட்டது; பாத்யம், அர்க்யம் முதலியவைகளாலும் பூஜிக்கப்பட்டது. விழுந்த அந்த ஜலத்தைப் பார்த்து, 'நான் (பரிசுத்தப்படுத்தத்) தகுந்தவனாயிருக்கிறேன்' என்று நிஶ்சயித்து, சிவன் தன்னைப் பரிசுத்தப்படுத்திக்கொள்வதற்காக ஜடையின் நடுவில் தலையால் தாங்கினான். பிறகு, பல பதினாயிரக்கணக்கான வருஷங்கள், ருத்திரன் அப்படியே (அதை) விடவில்லை.]

148. ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீதேகமேவாத்விதீயம்

[குழந்தாய்! (நாமரூபங்களுடன் காணப்படும்) இந்த உலகம் ப்ரளயகாலத்தில் (நாமரூபங்களில்லாமையால்) ஒன்றாகவும், (தன்னைப்போல் வேறொன்றில்லாததால்) இரண்டற்றதாகவுமிருந்த 'ஸத்' எனப்படும் ப்ரஹ்மமாகவே இருந்தது.]

149. தம: பரே தேவ ஏகீபவதி

['தமஸ்' எனப்படும் மூலப்ரக்ருதி பரமாத்மாவுடன் ஒடுங்குகிறது.]

150. ப்ரஹ்மாதிஷு ப்ரலீநேஷு நஷ்டே லோகே சராசரே ।
ஆபூதஸம்ப்லவே ப்ராப்தே ப்ரலீநே ப்ரக்ருதௌ மஹாந் ॥
ஏகஸ் திஷ்ட்டதி விஶ்வாத்மா ஸ து நாராயண: ப்ரபு: ॥

[பிரமன் முதலியவர்களெல்லாம் லயமடைந்து, சராசரமான உலகெல்லாம் நசித்து, பஞ்சபூதங்களும் லயமடைந்து, மஹத்தத்வமானது மூலப்ரக்ருதியில் லயமடையும்போது ஸர்வாந்தர்யாமியான ஒருவனே இருக்கிறான். அவனே ஸர்வஸ்வாமியான நாராயணன்.]

151. ந ஹி பாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் ।
ஸ்திதௌ ஸ்திதம் மஹாப்ராஜ்ஞ பவத்யந்யஸ்ய கஸ்யசித் ॥

[மஹாபுத்திமானே! ரக்ஷணத்தில் நிலைநிற்கும் ஸர்வேஶ்வரனான ஹரியைத் தவிர வேறு எவனுக்கும் ரக்ஷிக்க ஸாமர்த்யம் கிடையாதன்றோ.]

152. ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே ।
ஸமர்த்தோ த்ருஶ்யதே கஶ்சித் தம் விநா புருஷோத்தமம் ॥

[செல்வங்களைச் சேர்த்துக்கொடுப்பதிலும், ஆபத்துக்களை அடியோடு போக்குவதிலும் ஸமர்த்தனாயிருப்பவன் அந்தப் புருஷோத்தமனைத் தவிர வேறொருவனும் காணப்படுகிறதில்லை.]

153. ஸ்ருஜதஸ் தஸ்ய தேவஸ்ய பத்மம் ஸூர்யஸமப்ரபம் ।
நாபேர் விநிஸ்ஸ்ருதம் தஸ்ய தத்ரோத்பந்ந: பிதாமஹ: ॥

---

(146) பாரதம், ஸபாபர்வம். (147) ஈஶ்வரஸம்ஹிதை; பிரமன் வாக்யம். (148) சாந்-உப. (6-2-1). (149) ஸுபாலோபனிஷத்-2. (150) மஹாபாரதம், சாந்திபர்வம் (210-24) நாரதஸ்தோத்ரம். (151) வி. பு. (1-22-21). (152) பரமஸம்ஹிதை.

[அந்த தேவன் ஸ்ருஷ்டிக்கும்போது, ஸூர்யனை ஒத்த ஒளியை உடைய ஒரு தாமரை அவனுடைய உந்தியிலிருந்து வெளிப்பட்டது; அதில் நான்முகன் உண்டானான்.]

154. யத்தத்பத்மமபூத் பூர்வம் தத்ர ப்ரஹ்மா வ்யஜாயத।
ப்ரஹ்மணஶ்சாபி ஸம்பூதஶ் ஶிவ இத்யவதார்யதாம்॥
ஶிவாத் ஸ்கந்தஸ் ஸம்பபூவ ஏதத் ஸ்ருஷ்டிசதுஷ்டயம்॥

[(பகவானுடைய உந்தியிலிருந்து) யாதொரு தாமரை முன் உண்டாயிற்றோ அதில் பிரமன் பிறந்தான். பிரமனிடமிருந்தே ஶிவன் பிறந்தானென்று அறியத்தக்கது. சிவனிடமிருந்து ஸ்கந்தன் உண்டானான். இது (முதலில் ஏற்பட்ட) நாலு ஸ்ருஷ்டி.]

155. ஸங்கைஸ் ஸுராணாம் திவி பூதலஸ்தைஸ் ததா மநுஷ்யைர் ககநே சகேசரை:।
ஸ்துத: க்ரமாந் ய: ப்ரசகார ஸர்வதா மமாஸ்து மாங்கல்யவிவ்ருத்தயே ஹரி:॥

[ஸ்வர்க்கத்தில் தேவஸமூஹங்களாலும், அப்படியே பூமிப்ரதேசத்திலிருக்கும் மனுஷ்யர்களாலும், ஆகாயத்தில் ஆகாசஸஞ்சாரிகளாலும் துதிக்கப்பட்ட எந்த பகவான் திருவடிகளை வைத்தருளினானோ, (திரிவிக்ரமாவதாரம் செய்த) அந்த ஹரி எனக்கு எப்போதும் மங்களங்களின் விருத்தியின்பொருட்டு ஆகட்டும்.]

156. ஸந்திக்தே கலு ந்யாய: ப்ரவர்த்ததே

[ஸந்தேஹத்திற்கு இடமுள்ள விஷயத்திலன்றோ ந்யாயம் ப்ரவர்த்திக்கும்.]

157. ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி।
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம்॥

[அர்ஜுனா! ஆஸுரஸ்வபாவமுள்ள ஜன்மத்தை அடைந்து, ஜன்மந்தோறும் மூடர்களாய், என்னை அடையாமலே, அதிலும் கீழான கதிக்குப் போகிறார்கள்.]

158. ஶீலம் ஹி நாம மஹதோ மந்தைஸ் ஸஹ நீரந்த்ரேண ஸம்ஶ்லேஷ:

[ஶீலமென்பது, பெரியவன் மந்தர்களோடு நெருங்கிச் சேருதல்.]

159. ந பூதஸங்கஸம்ஸ்த்தாநோ தேஹோऽஸ்ய பரமாத்மந:।

[இந்தப் பரமாத்மாவினுடைய திருமேனி பஞ்சபூதங்களுடைய சேர்க்கையால் உண்டானதன்று.]

159*. ந தஸ்ய ப்ராக்ருதா மூர்த்திர் மாம்ஸமஜ்ஜாஸ்த்திஸம்பவா।

[அவனுக்கு, மாம்ஸம், மஜ்ஜை, எலும்பு இவைகளாலுண்டான ப்ரக்ருதிஸம்பந்தமுள்ள உடம்பு கிடையாது.]

160. தம் த்வா க்ருணமி தவஸமதவீயாந் க்ஷயந்தமஸ்ய ரஜஸ: பராகே

[இந்த ரஜோகுணத்தையுடைய மூலப்ரக்ருதிக்கு மேலான பரமபதத்தில் எழுந்தருளியிருக்கும் தனிவீரரான அப்படிப்பட்ட உம்மை சக்தியற்ற அடியேன் துதிக்கிறேன்.]

161. ஸ்வஸத்தாதாரகம் ஸத்த்வம் மிஶ்ரஸத்த்வாத் விலக்ஷணம்

[தன்னுடைய ஸத்தையினாலேயே (பிறருக்கு) தாரகமாகவும், ரஜஸ்தமோகுணங்களோடு சேர்ந்திருக்கும் ஸத்வத்தைக்காட்டிலும் வேறுபட்டதுமான ஸத்வம்.]

---

(154) மஹாபாரதம். (155) விஷ்ணுதர்மம் மாங்கள்யஸ்தவம். (157) கீதை (16-20). (159) பாரதம், சாந்திபர்வம் (206-60). (159 *) வராஹபுராணம்; (14-41) வாயுபுராணம் (34-40). (160) யஜுர்வேதம் (2-2-12). (161) பாஞ்சராத்ரம்.

162. அக்நே: ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே ।
ராஜஸேஷு ச மாஹாத்ம்யமதிகம் ப்ரஹ்மணோ விது: ॥
ஸாத்த்விகேஷ்வத கல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே: ।
தேஷ்வேவ யோகஸம்ஸித்தா கமிஷ்யந்தி பராங்கதிம் ॥

[அக்னியினுடையவும், சிவனுடையவும் பெருமை தாமஸகல்பங்களில் சொல்லப்படுகிறது. ராஜஸகல்பங்களில் பிரமனுடைய பெருமை அதிகமாகச் (சொல்லப்படுவதாக) அறிகிறார்கள். ஸாத்விககல்பங்களில் ஹரியின் பெருமை அதிகமாகச் சொல்லப்படுகிறது. அவைகளிலேயே யோகஸித்தி அடைந்தவர்கள் மேலான கதியை அடைகிறார்கள். (கல்பம்—பிரமனுடைய தினம்.)]

163. மஹாத்மாநஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிமாஶ்ரிதா: ।
பஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம் ॥

[அர்ஜுனா! தேவஸ்வபாவத்துடன் கூடிய மஹாத்மாக்களோவெனில், ஸகல பூதங்களுக்கும் காரணனாகவும், குறைவற்றவனாகவுமிருக்கும் என்னை அறிந்து வேறெதிலும் மனம் செலுத்தாதவர்களாய், (என்னை) உபாஸிக்கிறார்கள்.]

164. அப்ரவீத் த்ரிதஶஶ்ரேஷ்ட்டாந் ராமோ தர்மப்ருதாம் வர: ।
ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தஶரதாத்மஜம் ॥

["நான் என்னை மனுஷ்யனாகவும் தஶரதன் பிள்ளை ராமனாக நினைக்கிறேன்" என்று தர்மவான்களில் மேலான ராமன் தேவஶ்ரேஷ்ட்டர்களைக் குறித்துச் சொன்னான்.]

165. நாஹம் தேவோ ந கந்தர்வோ ந யக்ஷோ ந ச தாநவ: ।
அஹம் வோ பாந்தவோ ஜாதோ நைதச்சிந்த்யமிதோऽந்யதா ॥

[நான் தேவனல்லன்; கந்தருவனல்லன்; யக்ஷனல்லன்; அஸுரனுமல்லன்; நான் உங்களுக்கு உறவினனாகப் பிறந்திருக்கிறேன். என் பிறப்பு இதைத்தவிர வேறு விதமாக (உங்களால்) நினைக்கத்தக்கதல்ல.]

166. அண்டாநாந்து ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநி ச ।
ஈத்ருஶாநாம் ததா தத்ர கோடிகோடிஶதாநி ச ॥

['அந்த ப்ரக்ருதியில் இம்மாதிரியான பல கோடி நூறாயிரம் அண்டங்கள் இருக்கின்றன' என்பது ஸாரார்த்தம்.]

167. ஹிரண்மயே பரே லோகே விரஜம் ப்ரஹ்ம நிஷ்களம் ।
தச்சுப்ரம் ஜ்யோதிஷாம் ஜ்யோதிஸ்தத்யதாத்மவிதோ விது: ॥

[பொன்மயமான மேலான உலகத்தில், ரஜோகுணமற்றதும், அவயவங்களில்லாததுமான ப்ரஹ்மமிருக்கிறது. அது பரிசுத்தமானது. சோதிகளுக்கெல்லாம் சோதியாயிருக்கும் அதை பரமாத்மஜ்ஞானிகள் அறிகிறார்கள்.]

168. யோ அஸ்யாத்யக்ஷ: பரமே வ்யோமந் । ஸோ அங்க வேத யதி வா ந வேத

[எவனொருவன் இவ்வுலகத்திற்கு அதிபதியாய், பரமபதத்தில் (எழுந்தருளியிருக்கிறானோ), அவனே (தன் பெருமையை) அறிவானோ, அறியானோ!]

(162) மாத்ஸ்யபுராணம் (53-63). (163) கீதை (9-13). (164) ரா-யு. (120-11). (165) வி. பு. (5-13-12). க்ருஷ்ணவாக்யம். (166) வி. பு. (2-7-27). (167) முண்டகோபனிஷத் (2-2-10). (168) தைத்திரீயப்ராஹ்மணம் (2-8-9-6).

169. தே ஹ நாகம் மஹிமாநஸ் ஸசந்தே யத்ர பூர்வே ஸாத்யாஸ் ஸந்தி தேவா:

[யாதொரு பரமபதத்தில் ஸாத்யர்கள் எனப்படும் தேவர்கள் இருக்கிறார்களோ, அந்தப் பரமபதத்தை அவர்கள் மஹிமையுடையவர்களாய் அடைகிறார்கள்.]

170. அத்யர்க்காநலதீப்தம் தத் ஸ்தாநம் விஷ்ணோர் மஹாத்மந: ।
ஸ்வயைவ ப்ரபயா ராஜந் ! துஷ்ப்ரேக்ஷம் தேவதாநவை: ॥....
தத்ர கத்வா புநர்நேமம் லோகமாயாந்தி பாரத ॥

[மஹாத்மாவான விஷ்ணுவினுடைய அந்த ஸ்தானம் ஸூர்யனுடையவும், அக்னியுடையவும் ஒளியை விஞ்சியது. அரசனே ! அது தன்னுடைய ஒளியினாலேயே தேவர்களாலும், அஸுரர்களாலும் காண அரியது. பரதவம்சத்தில் உதித்தவனே ! அங்குப் போய் மறுபடியும் இவ்வுலகுக்குத் திரும்பிவருவதில்லை.]

171. ஸ பரஸ் ஸர்வஶக்தீநாம் ப்ரஹ்மணஸ் ஸமநந்தரம் ।
மூர்த்தம் ப்ரஹ்ம மஹாபாக ஸர்வப்ரஹ்மமயோ ஹரி: ॥

[பகவான் (இவனுடைய உருவமான ஸம்ஸாரிஜீவன், முக்தன் திவ்யமங்களவிக்ரஹம் எனப்படும்) எல்லா ஶக்திகளைக்காட்டிலும் மேலானவன். 'ப்ரஹ்மம்' என்று சொல்லப்படும் பகவானுடைய திருமேனி விஷ்ணுவுக்கு அந்தரங்கமானது. மஹாபாக்யவானே ! ப்ரஹ்மமென்று சொல்லப்படும் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாயிருப்பவன் ஹரி.]

172. ஶாந்தாநந்தமஹாவிபூதி பரமம் யத் ப்ரஹ்ம ரூபம் ஹரே:
மூர்த்தம் ப்ரஹ்ம ததோऽபி தத்ப்ரியதரம் ரூபம் யதத்யத்புதம் ।
யாந்யந்யாநி யதாஸுகம் விஹரதோ ரூபாணி ஸர்வாணி தாந்யாஹு:
ஸ்வைரநுரூபரூபவிபவைர் காடோபகூடாநி தே ॥

[தோஷங்களற்றதும், அளவற்றதும், பெரிதான உபயவிபூதிகளை உடையதும், மேலானதும், ப்ரஹ்மசப்தத்தினால் சொல்லப்படுவதுமான ஹரியினுடைய ஸ்வரூபம் யாதொன்று உண்டோ, அந்த ஸ்வரூபத்தையும்விட அவனுக்கு மிகவும் பிரியமானதும், 'உருவமுள்ள ப்ரஹ்மம்' என்று சொல்லப்படுவதுமான, எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹம் யாதொன்று உண்டோ, திருவுள்ளமுகந்தபடி விளையாடுகிற அந்த ஸர்வேச்வரனுடைய மற்ற திருவுருவங்கள் யாவையோ, அவை எல்லாவற்றையும் உமக்கே அஸாதாரணமானவையும், தகுந்தவையுமான ஸ்வரூப ரூப விபூஷங்களாலே நன்றாக அணைக்கப்பட்டிருப்பவையாகச் சொல்லுகிறார்கள்.]

173. ப்ரஹ்மா தக்ஷாதய: காலஸ் ததைவாகிலஜந்தவ: ।
விபூதயோ ஹரேரேதா ஜகதஸ் ஸ்ருஷ்டிஹேதவ: ॥

[பிரமனும், தக்ஷன் முதலிய ப்ரஜாபதிகளும், காலமும், அம்மாதிரியே எல்லா ஜந்துக்களும் உலகை ஸ்ருஷ்டிப்பதற்குக் காரணமாயிருக்கும் ஹரியின் சரீரங்கள்.]

174. யத்கிஞ்சித் ஸ்ருஜ்யதே யேந ஸத்த்வஜாதேந வை த்விஜ ।
தஸ்ய ஸ்ருஜ்யஸ்ய ஸம்பூதௌ தத் ஸர்வம் வை ஹரேஸ்தநு: ॥

[ப்ராஹ்மண ! ஒரு ப்ராணியால் யாதொன்று ஸ்ருஷ்டிக்கப்படுகிறதோ, ஸ்ருஷ்டிக்கப்படும் அதை ஸ்ருஷ்டிக்கும் விஷயத்தில் (ஸ்ருஷ்டி செய்யும்) அவையெல்லாம் ஹரியினுடைய சரீரமாகின்றன.]

(169) புருஷஸூக்தம். (170) பாரதம், ஆரண்யபர்வம் (136-18 & 23). (171) வி. பு. (1-22-63). (172) சது:ஶ்லோகி-4. (173) வி. பு. (1-22-31). (174) வி. பு. (1-22-38).

175. ஸர்வஸ்ய வஶீ ஸர்வஸ்யேஶாநஸ் ஸர்வஸ்யாதிபதி:

[எல்லாரையும் தன் வசத்தில் நடத்துபவன்; எல்லாருக்கும் ஈஶ்வரன்; எல்லாருக்கும் அதிபதி.]

176. ஸஸுராஸுரகந்தர்வம் ஸயக்ஷோரகராக்ஷஸம்
ஜகத் வஶே வர்த்ததேதம் க்ருஷ்ணஸ்ய ஸசராசரம்

[தேவர், அஸுரர், கந்தர்வர்களோடு கூடியதும், யக்ஷர், நாகர், ராக்ஷஸர்களுடன் சேர்ந்ததும், அசையக்கூடியதும், அசையக்கூடாததும் சேர்ந்ததுமான இந்த உலகம் கிருஷ்ணனுடைய வசத்திலிருக்கிறது.]

177. இமௌ ஸ்ம முநிஶார்தூல ! கிங்கரௌ ஸமுபஸ்திதௌ ।
ஆஜ்ஞாபய யதேஷ்டம் வை ஶாஸநம் கரவாவ கிம் ॥

[முநிஸ்ரேஷ்டரே ! நாங்களிருவருக்கும் (தேவரீருக்குக்) கைங்கர்யம் செய்பவர்களாக அருகில் இருக்கிறோம். (தேவரீருடைய) இஷ்டப்படி கட்டளையிடவேண்டும்; (தேவரீருடைய) எந்தக் கட்டளையை நாங்கள் செய்யவேண்டும் ?]

178. ஆஜ்ஞாபய மஹாபஹோ ! ப்ரூஹி யத்தே விவக்ஷிதம் ।
கரிஷ்யாமி ஹி தத் ஸர்வம் யத்த்வம் வக்ஷ்யஸி பாரத ॥

[நீண்ட கைகளை உடையவனே ! நீ சொல்ல விரும்பியதைச் சொல்; கட்டளையிடு. தர்மபுத்திரனே ! நீ சொல்லுவது எதுவோ அது முழுவதும் நான் செய்கிறேன்.]

179. ஸ்வயமேவ ஹரிர் வவ்ரே விப்ரபாதாவநேஜநம்

[ஹரியானவர், ப்ராஹ்மணர்களுடைய திருவடியை விளக்குவதைத் தாமாகவே ஸ்வீகரித்தார்.]

180. அநந்யாதீநத்வம் தவ கில ஜகுர் வைதிககிர:
பராதீநம் த்வாம் து ப்ரணதபரதந்த்ரம் மநுமஹே ।
உபாலம்போயம் போ: ஶ்ரயதி பத ஸார்வஜ்ஞ்யமபி தே
யதோ தோஷம் பக்தேஷ்விஹ வரத நைவாகலயஸி ॥

[வரதனே ! வேதவாக்கியங்கள் உனக்குப் பிறர்க்கு வசப்பட்டிராமையாகிய ஸ்வாதந்த்ரியத்தைப் பேசியுள்ளன; நாங்களோவெனில் அடியவர்களுக்கு ஆட்பட்டவனான உன்னைப் பரதந்த்ரனாகவே நினைக்கிறோம். இம்மாதிரியான நிந்தை உன்னுடைய ஸர்வஜ்ஞத்வத்தையும் பற்றுகிறது; ஆஶ்சர்யம் ! ஏனெனில்; இவ்வுலகிலுள்ள பக்தர்களிடத்தில் நீ குற்றத்தைச் சிறிதும் பார்க்கிறாயில்லையன்றோ.]

181. ப்ரியவாக் தாநஶீலஶ்ச வதாந்ய: பரிகீர்த்தித:

[இனிமையாகப் பேசுபவனும், கொடையாளியும் ‘வதாந்யன்’ என்று சொல்லப் படுகிறான்.]

182. ய ஆத்மதா பலதா:

[எந்தப் பரமபுருஷன், தன்னையும் கொடுத்துத் தன்னை அநுபவிக்கத்தகுந்த மநோ பலத்தையும் கொடுக்கிறானோ.]

---

(175) ப்ருஹதாரண்யகம் (6-4-22). (176) ஸஹஸ்ரநாமாத்யாயம். (177) ரா. பா. (31-4). (178) பாரதம். (179) பாரதம். (180) வரதராஜஸ்தவம்-20. (182) யஜுஃகாடகம் (7-5-36).

183. அத மத்யமகக்ஷ்யாயாம் ஸமாகச்சத் ஸுஹ்ருஜ்ஜநை: ।
ஸ ஸர்வாநர்த்திநோ த்ருஷ்ட்வா ஸமேத்ய ப்ரதிநந்த்ய ச ॥

[அந்த ஸ்ரீராமன் யாசிப்பவர்களைக் கண்டு, (அவர்களை) எதிர்கொண்டு, ஆநந்தப்படுத்திப் பிறகு நடுக்கட்டில் நண்பர்களுடன் சேர்ந்தார்.]

184. உதாராஸ் ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீ த்வாத்மைவ மே மதம்

[இவர்கள் எல்லாரும் உதாரமானவர்களே; ஜ்ஞாநியோ எனக்கே ஆத்மா (தாரகன்) என்று என் ஸித்தாந்தம்.]

185. ஜிதந்தே ஸ்தோத்ரம் (1-5).

*186. வால்மீகி:— கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந் கஶ்ச வீர்யவாந் ।...
நாரத:— ...இக்ஷ்வாகுவம்ஶப்ரவோ ராமோ நாம குணகர: ॥

[வால்மீகி:— "இப்போது இவ்வுலகில் எவன் குணவானாயிருக்கிறான்? எவன் வீர்யவானாயிருக்கிறான்?........" நாரதர்:— "........இக்ஷ்வாகுவம்ஶத்தில் பிறந்தவனான, ராமனென்பவன் குணங்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பவன்.]

*187. ........பூர்வ குணவத்தர:, ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி: ।
அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந: ॥

[கொழுத்தவனான ராவணனுடைய வதத்தை விரும்பும் தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டவனும், பழமையானவனுமான விஷ்ணு மனுஷ்ய லோகத்தில் பிறந்தான்; (அப்படி அவதாரம் செய்த) அந்த ராமபிரானே (தன் பராவஸ்தையைக்காட்டிலும்) குணத்தில் சிறந்தவனானான்.]

188. யஜ்ஜாதீயோ யாத்ருஶோ யத்ஸ்வபாவ: பாதச்சாயாம் ஸம்ஶ்ரிதோ யோऽபி கோऽபி ।
தஜ்ஜாதீயஸ் தாத்ருஶஸ் தத்ஸ்வபாவ: ஶ்லிஷ்யத்யேநம் ஸுந்தரோ வத்ஸலத்வாத் ॥

[உன் திருவடி நிழலில் ஒதுங்கினவன் எவனாயிருந்தாலும், அவன் எந்த ஜாதியை உடையவனாயிருக்கிறானோ, எந்த ஆசாரத்தை உடையவனோ, எந்த குணங்களை உடையவனோ, அந்த ஜாதியையும், அந்த ஆசாரத்தையும், அந்த குணங்களையும் உடையவனாய், அவனிடம் வாத்ஸல்யத்தினால் அவனுடன் ஸுந்தரராஜனாகிய பகவான் சேருகிறார்.]

189. தத்வை ததாஸ்து கதமோऽயமஹோ ஸ்வபாவோ யாவாந் யதாவிதகுணோ பஜதே பவந்தம் ।
தாவாம்ஸ்ததாவிதகுணஸ் தததீநவ்ருத்தி: ஸம்ஶ்லிஷ்யஸி த்வமிஹ தேந ஸமாநதர்மா ॥

[முன் சொன்னது அப்படியே இருக்கட்டும். இந்த ஸ்வபாவம் எவ்வளவு ஆஶ்சர்யமானது! (அதாவது:—) தேவரீரை எவனொருவன் எம்மாதிரியான ஸ்வரூபத்தையும் குணத்தையும் உடையவனாய் உம்மிடம் பக்தி செய்கிறானோ, அவனோடு அம்மாதிரியான ஸ்வரூபத்தையும், குணங்களையும் உடையவனாயும், அவனுக்கு வசப்பட்ட எல்லா வ்யாபாரங்களையும் உடையவராகவும், அவனோடொத்த ஆசாரத்தை உடையவனாகவும் இங்கேயே நீ கலக்கிறாய்.]

* மூலத்தில் இவ்விரண்டு ப்ரமாணங்களும் தவறாக அச்சிடப்பட்டிருக்கின்றன; திருத்திக் கொள்ளவும்.

(183) ரா-அ. (16-27). (184) கீதை (7-18). (186) ரா-பா (1-2 & 8). (187) ரா. அ. (1-7). (188) ஸுந்தரபாஹுஸ்தவம்-30. (189) ஸ்ரீவைகுண்டஸ்தவம்-66.

190. ஸர்வேஷாமேவ ஶௌசாநாமர்த்தஶௌசம் பரம் ஸ்ம்ருதம் ।
யோऽர்த்தே ஶுசிஸ் ஸ ஹி ஶுசிர் ந ம்ருத்வாரிஶுசி: ஶுசி: ॥

[எல்லா சுத்திகளுக்குள்ளும், பொருள் விஷயத்தில் சுத்தனாயிருக்கையே மேலானதாக எண்ணப்படுகிறது. பொருள் விஷயத்தில் எவன் சுத்தனாயிருக்கிறானோ அவனே சுத்தன். மண்ணாலும், தண்ணீராலும் மட்டும் சுத்தி செய்துகொள்ளுபவன் சுத்தனல்லன்.]

191. பாவநஸ் ஸர்வலோகாநாம் த்வமேவ ரகுநந்தந

[ரகுநந்தனா! நீயே எல்லா உலகங்களையும் பரிசுத்தப்படுத்துபவன்.]

192. பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேऽபி வர்த்ததே ।
ஸ விப்ரேந்த்ரோ முநி: ஶ்ரீமாந் ஸ யதிஸ் ஸ ச பண்டித: ॥
மயா பூஜ்யஸ் ஸதா சாஸௌ மத்பக்த: ஶ்வபசோऽபி ய: ।
தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம் ॥

[இம்மாதிரியான எட்டுவிதமான பக்தியானது எந்த மிலேச்சனிடமும் இருக்கிறதோ, அவனே (பகவானை) மனனம் செய்யும் ப்ராஹ்மணஶ்ரேஷ்டன்; அவனே கைங்கர்யலக்ஷ்மியை உடையவன்; அவனே ஸந்யாஸி; அவனே பண்டிதன்; சண்டாளனாயிருந்தபோதிலும் எவனொருவன் என் பக்தனோ அவன் என்னுடன் எப்போதும் பூஜிக்கத்தக்கவன். அவனுக்கு (ஜ்ஞானத்தைக்) கொடுக்கலாம்; அவனிடமிருந்து (ஜ்ஞானத்தைக்) கொள்ளலாம்; என்னைப் போல் அவனும் பூஜிக்கத்தக்கவன்.]

193. நைவ தம்ஶாந் ந மஶகாந் ந கீடாந் ந ஸரீஸ்ருபாந் ।
ராகவோऽபநயேத் காத்ராத் த்வத்கதேநாந்தராத்மநா ॥

[உன்னிடம் மனம் லயித்திருப்பதால், ராகவன் ஈக்களையும், கொசுக்களையும், புழுக்களையும், பாம்புகளையும் கூட உடம்பிலிருந்து தள்ளுவதில்லை.]

194. சிரம் ஜீவதி வைதேஹீ யதி மாஸம் தரிஷ்யதி ।
ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம் ॥

[ஸீதை ஒரு மாதம் தரித்திருப்பாளாகில், வெகுகாலம் பிழைத்திருந்தவளாகிறாள். கருத்த கண்ணை உடைய அவளை விட்டு ஒரு க்ஷணநேரமும் நான் பிழைத்திருக்கமாட்டேன்.]

195. அவகாஹ்யார்ணவம் ஸ்வப்ஸ்யே ஸௌமித்ரே! பவதா விநா ।
கதஞ்சித் ப்ரஜ்வலந் காம: ஸ மாம் ஸுப்தம் ஜலே தஹேத் ॥

[லக்ஷ்மணா! (உன்னைப் பார்ப்பதால் ஸீதையின் நினைவு வருகிறபடியால்) உன்னை விட்டுவிட்டு ஸமுத்ரத்தில் இரங்கித் தூங்கப்போகிறேன். மிகவும் ஜ்வலிக்கும் அந்தக் காமாக்னியானது ஜலத்தில் தூங்கும் என்னைக் கஷ்டப்பட்டே தஹிக்கும்.]

196. வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருஶம் பவதி து:க்கித: ।
உத்ஸவேஷு ச ஸர்வேஷு பிதேவ பரிதுஷ்யதி ॥

[(ராமன்) மனுஷ்யர்களுடைய துக்கங்களில், (அவர்களைக்காட்டிலும்) அதிகமாக துக்கிக்கிறான். (அவர்களுடைய) எல்லா உத்ஸவங்களிலும் தந்தையைப்போல் ஆனந்தப் படுகிறான்.]

(190) மநுஸ்ம்ருதி (5-106). (191) ரா-உத். (82-9) அகஸ்த்யவாக்யம். (192) காருட புராணம் (219-6-9). (193) ரா-ஸு (36-42) பிராட்டியிடம் ஹனுமான் வாக்யம். (194) ரா-ஸு (66-10). (195) ரா-யு. (5-9). (196) ரா-அ. (2-40).

197. தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த: ஏகபக்திர் விஶிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: ॥

[(என்னுடன்) எப்போதும் சேர்ந்திருப்பவனும், என்னிடம் மட்டும் அன்பு செய்பவனுமான ஜ்ஞானி அந்த நால்வருள் மேலானவன். நான் ஜ்ஞானிக்கு மிகவும் பிரியனன்றோ. (அப்படியே) அவனும் எனக்குப் பிரியமானவன்.]

198. இயம் ஸா யத்க்ருதே ராமஶ் சதுர்ப்பி: பரிதப்யதே ।
காருண்யேநாந்ருஶம்ஸ்யேந ஶோகேந மதநேந ச ॥
ஸ்த்ரீ ப்ரணஷ்டேதி காருண்யாதாஶ்ரிதேத்யாந்ருஶம்ஸ்யத: ।
பத்நீ நஷ்டேதி ஶோகேந ப்ரியேதி மதநேந ச ॥

[எவளுக்காக ஸ்ரீராமபிரான் கருணை, இரக்கம், சோகம், காமம் என்னும் நான்கினாலும் வருந்துகிறாரோ அந்த ஸீதை இவளே. (ஸ்ரீராமபிரான்) 'ஒரு பெண்பிள்ளை அபஹரிக்கப் பட்டாளே' என்னும் கருணையினாலும், 'நம்மைச் சேர்ந்தவள் (அபஹரிக்கப்பட்டாளே)' என்னும் இரக்கத்தினாலும், 'நம்முடைய மனைவி நஷ்டமாயினளே' என்னும் சோகத்தினாலும், 'நமக்கு இனியவள் (அபஹரிக்கப்பட்டனளே)' என்னும் காமத்தினாலும் (வருந்துகிறார்).]

199. ஸ பித்ரா ச பரித்யக்தஸ் ஸுரைஶ்ச ஸமஹர்ஷிபி: ।
த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ ஶரணம் கத: ॥
ஸ தம் நிபதிதம் பூமௌ ஶரண்ய: ஶரணாகதம் ।
வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத் ॥

[அந்தக் காகாஸுரன், தந்தையினாலும், (தாயினாலும்), மஹர்ஷிகளுடன் கூடிய தேவர்களாலும் கைவிடப்பட்டவனாய், மூன்று உலகங்களையும் சுற்றித்திரிந்து அந்த ராமனையே சரணமடைந்தான். சரணமடைந்தவனும், பூமியில் விழுந்தவனுமான அவனை, கொல்லத் தகுந்தவனாயிருந்தபோதிலும், சரணமடையத்தகுந்தவனான ஸ்ரீராமபிரான் (தன்) அருளாலே காப்பாற்றினான்.]

200. மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் ந த்யஜேயம் கதஞ்சந ।
தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத‌கர்ஹிதம் ॥

[நண்பனுடைய பாவத்தோடு நெருங்கின இவ்விபீஷணனை ஒருபொழுதும் கைவிட மாட்டேன். அவனிடம் தோஷமிருந்தாலும் இருக்கட்டுமே. நல்லோர்களுக்கு இவனை ஸ்வீகரிப்பது நிந்திக்கத்தக்கதல்ல.]

201. 44-வது எண்ணைப் பார்க்கவும்.

202. ஸமோऽஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோऽஸ்தி கஶ்சந

[(என்னை ஆஶ்ரயிக்கும் விஷயத்தில்) நான் எல்லா பூதங்களுக்கும் ஸமமாயிருப்பவன்; எனக்கு ஒருவனும் வெறுக்கத்தக்கவனல்லன்.]

203. அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் ।
க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ ॥

[லங்கையில் ராக்ஷஸஶ்ரேஷ்டனான விபீஷணனை அபிஷேகம் செய்து தன் காரியத்தைச் செய்துமுடித்தவனான ராமன், கவலை நீங்கப்பெற்று ஸந்தோஷித்தான்.]

(197) கீதை (7-17). (198) ரா-ஸு (15-49 & 50). ஹனுமான் வாக்யம். (199) ரா-ஸு (38-34 & 35). (200) ரா-யு. (18-3). (202) கீதை (9-29). (203) ரா-பா. (1-85).

204. குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ வித்யதே ।
க்ருதார்த்தோऽஹம் பவிஷ்யாமி தவ சார்த்த: ப்ரகல்பதே ॥

[என்னைக் கைங்கர்யபரனாக வைத்துக்கொள்ளும். இதில் தவறொன்றுமில்லை. (இதனால்) நானும் தன்யனாவேன். உம்முடைய காரியமும் நடைபெறும்.]

205. அவிஜ்ஞாதா ஸஹஸ்ராம்ஶு:

[(அடியார்களின் தோஷங்களைக் காண்பதில்) ஞானமற்றவனாயிருப்பவன்; (அடியார்களின் நன்மைகளைக் காண்பதில்) அளவற்ற ஞானமுடையவனாயிருப்பவன்.]

206. கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் ।
ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்ப்பதி ॥

[த்ரௌபதியானவள் வெகுதூரத்திலிருந்த என்னைக் குறித்து 'கோவிந்தா!' என்று கூக்குரலிட்டது (வட்டியினால்) வ்ருத்தியடைந்த கடனைப்போல் என்னுடைய ஹ்ருதயத்திலிருந்து அகலுகிறதில்லை.]

207. தம் து மே ப்ராதரம் த்ரஷ்டும் பரதம் த்வரதே மந: ।
மாம் நிவர்த்தயிதும் யோऽஸௌ சித்ரகூடமுபாகத: ॥
ஶிரஸா யாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா ॥

[என்னைத் திருப்பியழைத்துச்செல்ல எவனொருவன் சித்ரகூடத்திற்கு வந்தானோ அந்த என்னுடைய தம்பியாகிய பரதனைப் பார்க்க என் மனம் விரைகிறது. தலையாலே யாசித்த அவனுடைய வார்த்தை என்னால் செய்யப்படவில்லை.]

208. நாம ரூபஞ்ச பூதாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம் ।
வேதஶப்தேப்ய ஏவாதௌ தேவாதீநாம் சகார ஸ: ॥

[தேவர்கள் முதலிய ஜீவராசிகளுடைய பெயரையும், உருவத்தையும், வைதிகக்ரியைகளுடைய விவரணத்தையும் ஆதியில் பிரமன் வேதசப்தங்களிலிருந்து (அறிந்தே) செய்தான்.]

209. ஸைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி— அந்த இந்த ப்ரஹ்மானந்தத்தினுடைய விசாரம் செய்யப்படுகிறது; யுவா ஸ்யாத் ஸாது யுவாத்யாயக: । ஆஶிஷ்டோ த்ரடிஷ்டோ பலிஷ்ட:— யௌவனமுள்ளவனாகவும், (தன்போல்) நல்ல யௌவனமுடையவர்களுக்கு அத்யயனம் செய்விப்பவனாகவும், சக்தியுள்ளவனாகவும், வீர்யமுள்ளவனாகவும், பலமுள்ளவனாகவும் (ஒரு மனிதன்) இருக்கட்டும். தஸ்யேயம் ப்ருதிவீ ஸர்வா வித்தஸ்ய பூர்ணா ஸ்யாத்— ஸர்வைஶ்வர்யமும் நிரம்பிய பூமி முழுவதும் அவனுக்கு வசப்பட்டதாக இருக்கட்டும். ஸ ஏகோ மாநுஷ ஆநந்த:— இது ஒரு மனுஷ்யனுடைய ஆனந்தம். ஶ்ரோத்ரியஸ்ய சாகாமஹதஸ்ய— ப்ரஹ்மநிஷ்டனும், ஸம்ஸாரத்தில் ஆசையற்றவனுமான முக்தனுக்கும் (இந்த ஆனந்தம் உண்டு). தே யே ஶதம் மாநுஷா ஆநந்தா: । ஸ ஏகோ மநுஷ்யகந்தர்வாணாமாநந்த:— அப்படிப்பட்ட நூறு மனுஷ்ய ஆனந்தங்கள் ஒரு மனுஷ்யகந்தர்வனுடைய ஆனந்தமாகிறது ………… தே யே ஶதம் ப்ரஜாபதேராநந்தா: । ஸ ஏகோ ப்ரஹ்மண ஆநந்த:— அப்படிப்பட்ட நூறு ப்ரஜாபதியின் ஆனந்தங்கள் ஒரு ப்ரஹ்மானந்தமாகும். (இதற்கு மேல் 5-வது லக்கமிட்ட ப்ரமாணத்தைப் பார்க்கவும்.

---

(204) ரா-அ. (31-24). லக்ஷ்மணவாக்யம். (205) ஸஹஸ்ரநாமம். (206) பாரதம் உத்யோக பர்வம் (47-22). (207) ரா-யு. (124-19). (208) வி. பு. (1-5-63). (209) தைத்திரீயம் ஆனந்தவல்லி 8.

210. த்ரய்யுத்யதா தவ யுவத்வமுகைர் குணௌகைராநந்தமேதிதமியாநிதி ஸங்கியந்தும் ।
தே யே ஶதந்த்விதி பரம்பரயா ப்ரவ்ருத்தா நைவைஷ வாங்மநஸகோசர இத்யுதாஹ ॥

[யௌவனம் முதலிய குணகணங்களால் வ்ருத்தியடைந்த உன்னுடைய ஆநந்தத்தை 'இவ்வளவு' என்று அளவிடுவதற்கு ஆரம்பித்து 'தே யே ஶதம்' என்று படிப்படியாகப் படித்த வேதம், (அதற்குப் பின்) 'இவன் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதவன்' என்று உரக்கக் கூவிற்று.]

211. அஸ்மிந்நஸ்ய ச தத்யோகம் ஶாஸ்தி

[(ஆநந்தமயனான) இந்த ப்ரஹ்மத்தினிடத்தில், இந்த ஜீவாத்மாவுக்கு ஆநந்தச் சேர்க்கையை ('ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி' என்று ஶாஸ்த்ரம்) சொல்லுகிறது.]

212. ஸங்கல்பாதேவ தச்ச்ருதே:

[ஸங்கல்பத்தாலேயே (முக்தன் ஸ்ருஷ்டிக்கிறான்). அப்படி ஶ்ருதியிருப்பதனால்.]

213. ஸ யதி பித்ருலோககாமோ பவதி । ஸங்கல்பாதேவாஸ்ய பிதரஸ்ஸமுத்திஷ்டந்தி ।

[அந்த முக்தன் (தன் பழைய பிறப்புகளிலிருந்து) பித்ருவர்க்கங்களைக் காண விரும்பினானாகில் அந்தப் பித்ருவர்க்கங்கள் இவனுடைய ஸங்கல்பத்தாலேயே கிளம்பி வருகின்றன.]

214. ஜகத்வ்யாபாரவர்ஜம் ப்ரகரணாதஸந்நிஹிதத்வாச்ச

[(முக்தனுடைய ஐஶ்வர்யம்) ஜகத்வ்யாபாரமில்லாத (ப்ரஹ்மானுபவமாத்ரமே); ப்ரஹ்மத்தைக் குறித்தே ஜகத்வ்யாபாரம் சொல்லப்படுவதால்; (ஜகத்வ்யாபாரத்தில் முக்தனுக்கு) ஸந்நிதானம் இல்லாததாலும்.]

215. போகமாத்ரஸாம்யலிங்காச்ச

[(ப்ரஹ்மானுபவமாகிற) போகத்தில் மட்டும் ஸாம்யத்தைச் சொல்லும் லிங்கத்தினாலும் (முக்தனுக்கு ஜகத்வ்யாபாரமில்லை).]

216. இதம் குரு । இதம் மா கார்ஷீ: ॥

[இதைச் செய்; இதைச் செய்யாதே.]

217. ப்ரஹ்மவாதினோ வதந்தி

[ப்ரஹ்மவாதிகள் சொல்லுகிறார்கள்.]

218. அத யதி தே கர்மவிசிகித்ஸா வா வ்ருத்தவிசிகித்ஸா வா ஸ்யாத் ।
யே தத்ர ப்ராஹ்மணாஸ் ஸம்மர்ஶிந: । யுக்தா ஆயுக்தா: ।
அலூக்ஷா தர்மகாமா: ஸ்யு: । யதா தே தத்ர வர்த்தேரந் । ததா தத்ர வர்த்தேதா: ।

[உனக்குக் கர்மத்திலேயோ, ஆசாரத்திலேயோ ஸந்தேஹம் ஏற்பட்டதாகில், விசாரம் செய்வதில் நிபுணர்களாகவும், வேதஶாஸ்த்ரங்களில் ஈடுபட்டவர்களாகவும், எல்லா விஷயங்களிலும் ஸமர்த்தர்களாலும், காமக்ரோதாதிகள் அற்றவர்களாகவும், தர்மத்தில் விருப்பமுள்ளவர்களாவுமிருக்கும் ப்ராஹ்மணர்கள் அவ்விஷயத்தில் எப்படி நடக்கிறார்களோ, அப்படியே நீயும் அவ்விஷயத்தில் நடப்பாயாக.]

---

(210) ஸ்ரீவைகுண்டஸ்தவம்-51. (211) ப்ரஹ்ம ஸூத்ரம் (1-1-20). (212) ப்ர-ஸூ (4-4-8). (213) சாந்-உ. (8-2-1). (214) ப்ர-ஸூ (4-4-17). (215) ப்ர-ஸூ (4-4-21). (217) ஶ்வேதாஶ்வதரோபனிஷத் (1-1). (218) தைத். (1-11).

219. 33-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.

220. தமேவ தீரோ விஜ்ஞாய ப்ரஜ்ஞாம் குர்வீத ப்ராஹ்மண:

[ஞானமுடையவனான ப்ராஹ்மணன் அந்தப் பரமாத்மாவை (ஶ்ரவண மனனங்களால்) அறிந்து த்யானம் செய்யக்கடவன்.]

221. ஓமித்யேவ த்யாயதாத்மாநம்

[பரமாத்மாவை 'ஓம்' என்றே த்யானம் செய்யுங்கள்.]

222. ஶ்ருதி: ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்ய வர்த்ததே ।
ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோऽபி ந வைஷ்ணவ: ॥

[வேதமும், ஸ்ம்ருதியும் என்னுடைய ஆஜ்ஞையே. எவனொருவன் அதை மீறி நடக்கிறானோ அவன் என் ஆஜ்ஞையை மீறினவன்; எனக்கு த்ரோஹம் செய்தவன்; என்னுடைய பக்தனாயிருந்தபோதிலும் (அவன்) வைஷ்ணவனல்லன்.]

223. அநாத்மந்யாத்மபுத்திர்யா சாஸ்வே ஸ்வமிதி யா மதி: ।
ஸம்ஸாரதருஸம்பூதிபீஜமேதத் த்விதா ஸ்திதம் ॥

[ஆத்மாவல்லாத தேஹத்தில் ஆத்மா என்னும் புத்தியும், தனதல்லாத வஸ்துவில் தன்னுடையது என்னும் புத்தியும், ஸம்ஸாரமாகிய வ்ருக்ஷத்தின் வ்ருத்திக்கு இருவகையாயிருக்கும் விதையாகும்.]

224. த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண: பதம் ।
மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர் ந மமேதி ச ஶாஶ்வதம் ॥

[இரண்டு அக்ஷரத்தையுடையது ஸம்ஸாரத்திற்குக் காரணமாகிறது. மூன்றக்ஷரங்களையுடையது ப்ரஹ்மத்தையடையக் காரணமாகிறது. இரண்டெழுத்துச் சொல்லான 'மம' என்பது ஸம்ஸாரத்திற்குக் காரணம். மூன்றெழுத்துச் சொல்லான 'ந மம' என்பது நிலையான மோக்ஷத்திற்குக் காரணம்.]

225. ஸக்ருத்தே அக்நே நம: । த்விஸ்தே நம: । த்ரிஸ்தே நம: । சதுஸ்தே நம: ।
பஞ்சக்ருத்வஸ்தே நம: । தஶக்ருத்வஸ்தே நம: । ஶதக்ருத்வஸ்தே நம: ।
ஆஸஹஸ்ரக்ருத்வஸ்தே நம: । அபரிமிதக்ருத்வஸ்தே நம: ।

[அக்னியே! உனக்கு ஒருதடவை நமஸ்காரம்; இருமுறை நமஸ்காரம்; மும்முறை நமஸ்காரம்; நாலு தடவை நமஸ்காரம்; ஐந்து முறை நமஸ்காரம்; பத்து தடவை நமஸ்காரம்; நூறு முறை நமஸ்காரம்; ஆயிரம் தடவை வரை நமஸ்காரம்; கணக்கற்றதடவை நமஸ்காரம்.]

226. பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா

[ஜீவராசிகளுடைய (ஞானம் முதலிய) பலவகையான மநோபாவங்கள் என்னுடைய ஸங்கல்பத்தாலேயே ஏற்படுகின்றன.]

227. தாம்நா சைவோதரே பத்த்வா ப்ரத்யபத்நாதுலூகலே ।
க்ருஷ்ணமக்லிஷ்டகர்மாணமாஹ சேதமமர்ஷிதா ॥
யதி ஶக்நோஷி கச்ச த்வமதிசஞ்சலசேஷ்டித ॥

---

(220) ப்ருஹதாரண்யகம் (6-4-21). (221) முண்டகோபனிஷத் (2-2-6). (222) விஷ்ணு தர்மம் (6-31). (223) வி. பு. (6-7-11). (224) பாரதம், சாந்தி (13-4). (225) தை-ஆர-ப்ர-4 அனு-28. (226) கீதை (10-5). (227) வி. பு. (5-6-14).

[(யசோதையானவள்) குறும்புச் செயல்களை வெகு ஸுலபமாகச் செய்யும் அந்த க்ருஷ்ணனை தாம்புக்கயிற்றினால் வயிற்றில் பிணைத்து ஒரு உரலில் கட்டினாள். கோபங் கொண்டவளாய் இப்படிச் சொன்னாள்:— "மிகவும் சஞ்சலமான செயல்களை உடையவனே! முடியுமாகில் இப்போது போ."]

228. பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே।
வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ் மஹாத்மா ஸுதுர்லப:॥

[பல ஜன்மங்களுக்குப் பின் ஜ்ஞானியானவன் "வாஸுதேவனே (எனக்கு) எல்லாம்" என்று என்னை உபாஸிக்கிறான். அப்படிப்பட்ட மஹாத்மா மிகவும் கிடைத்தற்கரியவன்.]

229. உபாயே க்ருஹரக்ஷித்ரோஶ் ஶப்தஶ் ஶரணமித்யயம்।
வர்த்ததே ஸாம்ப்ரதம் சைஷ உபாயார்த்தைகவாசக:॥

['ஶரணம்' என்னும் இந்த வார்த்தை, உபாயம், வீடு, காப்பாற்றுபவன் என்னும் அர்த்தங்களில் உபயோகிக்கப்படுகிறது. இப்போது இது 'உபாயம்' என்னும் அர்த்தத்தையே சொல்லுவதாயிருக்கிறது.]

230. அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி:।
த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:॥
ஶரணாகதிரித்யுக்தா ஸா தேவேऽஸ்மிந் ப்ரயுஜ்யதாம்॥

["நான் குற்றங்களுக்கு ஓர் இருப்பிடமாயிருக்கிறேன். (என்னை ரக்ஷித்துக்கொள்ள) ஒரு உபாயமுமற்றவனாயிருக்கிறேன்; (உன்னையொழிய) வேறு கதியில்லாதவனாக இருக்கிறேன். நீயே எனக்கு உபாயமாக ஆவாயாக" என்று ப்ரார்த்திக்கும் புத்தியே ஶரணாகதியெனப் படுகிறது. அது இந்த பகவான் விஷயத்தில் செய்யப்படட்டும்.]

231. துராசாரோऽபி ஸர்வாஶீ க்ருதக்நோ நாஸ்திக: புரா।
ஸமாஶ்ரயேதாதிதேவம் ஶ்ரத்தயா ஶரணம் யதி॥
நிர்தோஷம் வித்தி தம் ஜந்தும் ப்ரபாவாத் பரமாத்மந:॥

[அநாதிகாலமாக ஒருவன் கெட்ட ஒழுக்கமுள்ளவனாகவும், எதையும சாப்பிடுபவனாகவும், செய்நன்றி மறந்தவனாகவும், நாஸ்திகனாகவும் இருந்தபோதிலும், ஆதிதேவனாகிற பகவானை ஶ்ரத்தையுடன் ஶரணமடைவானாகில், அந்த மனிதனை பரமாத்மாவினுடைய மஹிமையினாலே தோஷமற்றவனாக அறிவாயாக.]

232. 200-வது ப்ரமாணத்தைப் பார்க்கவும்.
233. 199-வது ,, ,,
234. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[இந்த மந்த்ரத்தால் பழைமையான அந்த பகவானை சரணமடைந்தவனுக்கு, அவனை ஒட்டியிருக்கும் எல்லாப் பாபங்களும் அந்த க்ஷணத்திலேயே நசிக்கின்றன. முனிஶ்ரேஷ்டரே! இவனால் எல்லாத் தவங்களும் செய்யப்பட்டன. எல்லா தீர்த்தங்களும், எல்லா யஜ்ஞங்களும், எல்லா தானங்களும் அந்த க்ஷணத்திலேயே இவனால் செய்யப்பட்டன. மோக்ஷமும் இவனுடைய கையிலிருக்கிறது. (இதைப்பற்றி) ஸந்தேஹமில்லை.]

(228) கீதை (7-19). (229) & (230) அஹிர்புத்ந்யஸம்ஹிதை (37-29) & (37-30 & 31).
(231) ஸாத்வதஸம்ஹிதை (16-23). (234) அஹிர்புத்ந்யஸம்ஹிதை (37-33 & 34).

235. ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹி மமாதுலா।
யதீத்ருஶைரஹம் விப்ரைருபஸ்தேயை ருபஸ்தித:॥

[(முனிவர்களே!) நீங்கள் உகந்தருளுவீர்களாக. வந்து அடையத்தகுந்த பெரியோர்களான உங்களால் (நான்) அடையப்பட்டபடியால் எனக்கு இப்போதிருக்கும் லஜ்ஜை மிக அதிகமாயிருக்கிறது.]

236. ஶரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்தந:।
மாம் நயேத் யதி காகுத்ஸ்தஸ் தத் தஸ்ய ஸத்ருஶம் பவேத்॥

[ஶத்ருக்களின் பலத்தை ஒழிப்பவரான ஸ்ரீராமபிரான் லங்கையை பாணங்களாலே கலங்கச்செய்து என்னை அழைத்துப் போவாராகில் அப்படிச் செய்வது அவருக்கே தகுந்ததாகும்.]

237. ஈஶ்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுந! திஷ்டதி।
ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா॥

[ஸர்வேஶ்வரனாகிய வாஸுதேவன் (ப்ரக்ருதியாகிய) யந்திரத்தில் ஏறிநிற்கும் எல்லா ஜீவராசிகளையும் (ஸத்வரஜஸ்தமோகுணமயமான) மாயையினால் சுழற்றிக்கொண்டிருக்கிறான்.]

238. போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேஶ்வரம்।
ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம் ருச்சதி॥

[யஜ்ஞங்களையும், தவங்களையும் புஜிப்பவனும், எல்லா உலகங்களுக்கும் மஹேஶ்வரனும், எல்லா ஜீவராசிகளுக்கும் நண்பனுமான என்னை அறிந்து சாந்தியை அடைகிறான்.]

239. ஸர்வேஷாமேவ லோகாநாம் பிதா மாதா ச மாதவ:।
கச்சத்வமேநம் ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபா:॥

[புருஷஶ்ரேஷ்டர்களே! எல்லா உலகங்களுக்கும் தந்தையும், தாயும் லக்ஷ்மீநாதனே. ஶரணமடையத்தகுந்த இவனை ஶரணமடையுங்கள்.]

240. ததஸ்ய ப்ரியமபி பாதோ அஶ்யாம்। நரோ யத்ர தேவயவோ மதந்தி।
உருக்ரமஸ்ய ஸ ஹி பந்துரித்தா। விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:॥

[எந்த கங்காதீர்த்தவிஷயத்தில், தேவத்வத்தை விரும்பும் மனிதர்கள் ஸந்தோஷிக்கிறார்களோ, இனியதாகவிருக்கும் இந்த பகவானுடைய அந்த ஸ்ரீபாததீர்த்தத்தை ஆதரவுடன் பானம் செய்வேனாக. அப்படிக் குடிப்பவன் திரிவிக்ரமனுக்கு பந்துவாவான். இம்மாதிரியாக விஷ்ணுவினுடைய மேலான திருவடியில் அம்ருதத்தினுடைய ப்ரவாஹம் உண்டாகிறது.]

241. மய்யாஸக்தமநா: பார்த்த! யோகம் யுஞ்ஜந் மதாஶ்ரய:।
அஸம்ஶயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்ச்ருணு॥

[அர்ஜுனா! என்னிடம் ஈடுபட்ட மனதையுடையவனாய், என்னையே ஆதாரமாகக் கொண்டவனாய், என்விஷயத்தில் யோகத்தை ஆரம்பித்தவன், ஸந்தேஹமில்லாமல், என்னை எந்த ஞானத்தினால் பூர்ணமாக அறிவானோ அந்த ஞானத்தைக் கேட்பாயாக.]

242. பத்தாஞ்ஜலிபுடம் தீநம் யாசந்தம் ஶரணாகதம்।
ந ஹந்யாதாந்ருஶம்ஸ்யார்த்தமபி ஶத்ரும் பரந்தப॥

(235) ரா-ஆர. (10-9) ராமவாக்யம். (236) ரா- ஸு (39-30) பிராட்டி வாக்யம். (237) கீதை (18-61). (238) கீதை (5-29). (239) பாரதம், ஆரண்யபர்வம் (192-56). (240) யஜுர்வேதம், (2-4-6). (241) கீதை (7-1). (242) ரா-யு. (18-27).

[ஶத்ருக்களைத் துன்புறுத்துபவனே! இருப்பிடத்துக்கு வருதல், கைகுவித்தல் என்னும் காயிகப்ரபத்தியையாவது, மனதிலே தைந்யமாகிற மானஸப்ரபத்தியையாவது, வாயாலே ப்ரார்த்திப்பதாகிற வாசிகப்ரபத்தியையாவது செய்தவனை, ஶத்ருவாயிருந்த போதிலும், 'இவன் இரக்கமற்றவன்' என்னும் அபவாதம் வாராமைக்காக ஹிம்ஸிக்கக் கூடாது.]

243. அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ

[வெகு சீக்கிரமாக பகவானை உகப்பிக்கும் அஞ்ஜலி மேலான அடையாளமாயிருக்கிறது.]

244. ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம் ।
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யயம் ॥

[வித்யைகளுக்குள்ளும், ரஹஸ்யங்களுக்குள்ளும் மேலானது இது. இது பாபங்களைப் போக்கடிப்பவற்றில் உயர்ந்தது. என்னை நேரில் காட்டுவது. என்னை அடைவதற்கு ஸாதனமாயிருப்பது. செய்வதற்கு வெகு ஸுகமானது. (பலத்தைக் கொடுத்தபின்பும்) அழியாதது.]

245. அஸந்நேவ ஸ பவதி । அஸத் ப்ரஹ்மேதி வேத சேத் ।
அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத । ஸந்தமேநம் ததோ விது: ॥

[ப்ரஹ்மம் இல்லையென்று அறிந்தானாகில் அவன் இல்லாதவனாகவே ஆகிறான். ப்ரஹ்மம் இருக்கிறதென்று அறிந்தானாகில் அக்காரணத்தினாலேயே இவனை இருக்கிறவனாக அறிகிறார்கள்.]

246. யதா ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்ருஶ்யேऽநாத்ம்யேऽநிருக்தேऽநிலயநேऽபயம்
ப்திஷ்டாம் விந்ததே । அத ஸோऽபயங்கதோ பவதி ।

[பார்க்கத்தகாதவனும், (ப்ராக்ருத) ஶரீரமற்றவனும், (தேவன், மனுஷ்யன் முதலிய) வார்த்தைகளால் சொல்லத்தகாதவனும், (தனக்கு ஒரு) ஆதாரமற்றவனுமான இந்த பரமாத்மாவிடம் ஸம்ஸாரபயமில்லாமைக்காக பக்தியோகத்தை எப்போது அடைகிறானோ, அப்போது அவன் (ஸம்ஸார) பயமற்றவனாக ஆகிறான்.]

247. தத் யதேஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத । ஏவம் ஹாஸ்ய ஸர்வே
பாப்மாந: ப்ரதூயந்தே ॥

[நெருப்பிலிடப்பட்ட இஷீகப்புல்லின் பஞ்சு எப்படிக் கொளுத்தப்படுகிறதோ, அப்படியே இவனுடைய எல்லாப் புண்ய பாபங்களும் கொளுத்தப்படுகின்றன.]

148. இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: ।
ஸர்க்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ॥

[இந்த ஞானத்தை அடைந்து, என்னைப்போல் ஆனவர்கள், ஸ்ருஷ்டிகாலத்திலும் பிறப்பதில்லை; ப்ரளயகாலத்திலும் அழிவதில்லை.]

249. வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: ।
ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ ॥

(243) பாரத்வாஜஸம்ஹிதை. (244) கீதை (9-2). (245) தைத்திரீயம்-ஆனந்தவல்லி-6. (246) தைத்-ஆந-7. (247) சாந்தோக்யம் (5-24-3). (248) கீதை (14-2). (249) சைவம்.

[மேலான உலகமான வைகுண்டத்தில், ஜகத்பதியும், நினைக்கவொண்ணுத ஸ்வரூபத்தை உடையவருமான விஷ்ணு, பக்தர்களுடனும், பாகவதர்களுடனும் கூடியவராய், ஸ்ரீதேவியுடன் கூட எழுந்தருளியிருக்கிருர்.]

250. மாஹாரஜநம் வாஸ:

[(பரமாத்மாவுக்கு) ஆடை பீதாம்பரம்.]

251. அதஸீபுஷ்பஸங்காஶம் பீதவாஸஸமச்யுதம் ।
யே நமஸ்யந்தி கோவிந்தம் ந தேஷாம் வித்யதே பயம் ॥

[அடியவர்களை நழுவவிடாதவனும், காயாம்பூவைப்போன்றவனும், பீதாம்பரத்தையுடையவனுமான கோவிந்தனை எவர்கள் நமஸ்கரிக்கிருர்களோ அவர்களுக்கு பயமில்லை.]

252. ஆவர்த்த இவ கங்காயா:

[கங்கையின் சுழல் போன்றிருக்கும் (திருநாபி).]

253. ப்ருந்தாவநம் பகவதா க்ருஷ்ணேநாக்லிஷ்டகர்மணா ।
ஶுபேந மநஸா த்யாதம் கவாம் வ்ருத்திமபீப்ஸதா ॥

[கல்யாணகுணங்கள் நிறைந்தவனும், பெருங்காரியங்களையும் எளிதாகச் செய்பவனும், பசுக்களின் வ்ருத்தியை விரும்புபவனுமான க்ருஷ்ணனுல் ப்ருந்தாவனமானது, சுபமான மனதினுல் நினைக்கப்பட்டது.]

254. ஶயநே சோத்தமாங்கேந ஸீதாயா: ஶோபிதம் புரா ।

[படுக்கையில் ஸீதா பிராட்டியின் தலையாலே முன்னெல்லாம் பிரகாசியாநின்றதான திருக்கையை.]

255. ரேகாத்ரயாங்கிதா க்ரீவா கம்புக்ரீவேதி கத்யதே ।

[மூன்று ரேகைகளால் அடையாளம் செய்யப்பட்ட கழுத்து 'கம்புக்ரீவா' என்று சொல்லப்படுகிறது.]

256. ஸக்ய: பஶ்யத க்ருஷ்ணஸ்ய முகமத்யருணேக்ஷணம் ।....
விகாஸிஶாரதாம்போஜமவஶ்யாய ஜலோக்ஷிதம் ।
பரிபூய ஸ்திதம் ஜந்ம ஸபலம் க்ரியதாம் த்ருஶ: ॥

[ஸகிகளே! மிகவும் சிவந்த திருக்கண்களை உடையதும், பனி ஜலத்தினுல் தெளிக்கப்பட்டிருக்கும் மலர்ந்த சரத்காலத் தாமரையை வெற்றிகொண்டிருப்பதுமான க்ருஷ்ணனுடைய முகத்தைப் பாருங்கள். கண்களைப் பெற்றிருப்பதை ப்ரயோஜனமுள்ளதாகச் செய்யுங்கள்.]

257. பாபம் ஹரதி யத் பும்ஸாம் ஸ்ம்ருதம் ஸங்கல்பநாமயம் ।
தத் புண்டரீகநயநம் விஷ்ணோர் த்ரக்ஷ்யாம்யஹம் முகம் ॥

[எந்தத் திருமுகமண்டலமானது நினைக்கப்பட்டவுடன், மனிதர்களின் பாபத்தைப் போக்கடிக்கிறதோ, ஆஶ்ரிதர்களுடைய ஸங்கல்பத்தின்படியே அமைந்திருப்பதும், தாமரை போன்ற திருக்கண்களை உடையதுமான விஷ்ணுவினுடைய அத்திருமுகமண்டலத்தை நான் பார்க்கப்போகிறேன்.]

258. அபரிமிததிவ்யபூஷண!

---

(250) ப்ருஹ (4-3-6). (251) பார-சாந்தி (46-118) பீஷ்மவாக்யம். (253) வி. பு. (5-6-28). (254) ரா-யு (21-5). (256) வி. பு. (5-20-55). (257) வி. பு. (5-17-4) அக்ரூரவாக்யம். (258) கத்யத்ரயம்.

[கணக்கற்ற திவ்யாபரணங்களை உடையவனே !]

259. ஸ்ரக்வஸ்த்ராபரணைர் யுக்தம் ஸ்வாநுரூபைரநூபமை: ।
சிந்மயை: ஸ்வப்ரகாஶைஶ்ச அந்யோந்யருசிரஞ்ஜகை: ॥

[தனக்குத் தகுந்தவையும், ஒப்பற்றவையும், ஞானமயமாயிருப்பவையும், ஸ்வயம் ப்ரகாசமானவையும், ஒன்றுக்கொன்று (சேர்த்தியினுலுண்டான) காந்தியினுல் அழகாயிருப்பவையுமான மாலைகளினுலும், வஸ்த்ரங்களினுலும், ஆபரணங்களினுலும் கூடியிருப்பது பரப்ரஹ்மம்.]

260. கா த்வந்யா த்வாம்ருதே தேவி ஸர்வயஜ்ஞமயம் வபு: ॥
அத்யாஸ்தே தேவதேவஸ்ய யோகிசிந்த்யம் கதாப்ருத: ।

[ஹே தேவி ! கதையை தரித்தவனும், தேவதேவனுமான எம்பெருமானுடைய, யோகிகளால் நினைக்கத்தக்கதும், ஸர்வயஜ்ஞமயமுமான சரீரத்தில் உன்னைத் தவிர வேறு எவள் இருக்கிறுள் ?]

261. திவ்யமால்யாம்பரதரா ஸ்நாதா பூஷணபூஷிதா ।
பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷ:ஸ்தலம் ஹரே: ॥

[அப்ராக்ருதமான மாலையையும், வஸ்த்ரத்தையும் தரித்திருப்பவளும், ஸ்நானம் செய்தவளும், பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவளுமான ஸ்ரீதேவி எல்லா தேவர்களும் பார்த்துக்கொண்டிருக்கும்போதே ஹரியினுடைய திருமார்பை அடைந்தாள்.]

262. ப்ருகோ: க்யாத்யாம் ஸமுத்பந்நா ஸ்ரீ: பூர்வமுததே: புந: ।
தேவதாநவயத்நேந ப்ரஸூதாऽம்ருதமந்தநே ॥

[முதலில், ப்ருகுமஹர்ஷிக்கு (அவர் பத்னியான) க்யாதியிடம் ஸ்ரீதேவி உண்டானுள்; மறுபடியும் அம்ருதமதனகாலத்தில் தேவாஸுரர்களுடைய யத்னத்தினுல் கடலிலிருந்து உண்டானுள்.]

263. நேதாநீம் த்வத்ருதே ஸீதே ஸ்வர்க்கோऽபி மம ரோசதே ।

[ஸீதே ! இப்பொழுது நீயில்லாமல் ஸ்வர்க்கமும் எனக்கு ருசிக்காது.]

264. த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா ।
த்வயைதத் விஷ்ணுநா சாம்ப ஜகத் வ்யாப்தம் சராசரம் ॥

[எல்லா உலகங்களுக்கும் நீ தாய்; தேவதேவனுன ஹரி தந்தை. தாயே ! அசைபவையும், அசையாதவையுமடங்கிய இந்த உலகம் உன்னுலும், விஷ்ணுவாலும் வியாபிக்கப்பட்டிருக்கிறது.]

265. ஏஷ ஸேதுர் மயா பத்தஸ் ஸாகரே ஸலிலார்ணவே ।
தவ ஹேதோர் விஶாலாக்ஷி ! நளஸேதுஸ் ஸுதுஷ்கர: ॥

[அகன்ற கண்களை உடையவளே ! நீர் நிறைந்த கடலில், நளஸேது என்ற பெயர் பெற்றதும், மிகவும் கட்டுவதற்கு அரிதுமான இந்த அணை உனக்காக என்னுல் கட்டப்பட்டது.]

266. பரிஶ்ரமாத் ப்ரஸுப்தா ச ராகவாங்கேऽப்யஹம் சிரம் ।
பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச மமாங்கே பரதாக்ரஜ: ॥

(259) பௌஷ்கரஸம்ஹிதை. (260) வி. பு. (1-9-122). (261) வி. பு. (1-9-105). (262) வி. பு. (1-9-141). (263) ரா-அ (30-42). (264) வி. பு. (1-9-126). (265) ரா. யு. (126-12). (266) ரா. ஸு (38-21).

[ராகவனுடைய திருத்தொடையில், நான் களைப்பினால் வெகுநேரம் தூங்கினேன். பரதனுடைய தமையனாரான அவரும் என் தொடையில் தூங்கினார்.]

267. ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி பஞ்சதா।
ஸப்ததா நவதா சைவ புநஸ் சைகாதஸ: ஸ்ம்ருத:।
ஸதஞ்ச தஸ சைகஸ்ச ஸஹஸ்ராணி ச விம்சதி:॥

['முக்தாத்மா பல சரீரங்களை உடையவனாகிறான்' என்று தாத்பர்யம்.]

268. துல்யஸீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம்।
ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா॥

[ஒரே விதமான குணங்கள், வயது, நடத்தை இவைகளை உடையவளும், ஸமானமான குலத்தையும், லக்ஷணங்களையும் உடையவளுமான வைதேஹிக்கு ராகவனே தகுந்தவர்; கறுத்த கண்களை உடைய இவளும் அவருக்கே தகுந்தவள்.]

269. நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீரநபாயிநீ।
யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம॥

[உலகிற்கெல்லாம் தாயும், அழிவற்றவளும் விஷ்ணுவினுடையவளுமான இந்த ஸ்ரீதேவி நித்யமானவளே. ப்ராஹ்மண ஸ்ரேஷ்டரே! ஸர்வவ்யாபியான விஷ்ணு எப்படிப் பட்டவரோ அப்படிப்பட்டவளே இவளும்.]

270. கந்தர்வாப்ஸரஸஸ் ஸித்தாஸ் ஸகிந்நரமஹோரகா:।
நாந்தம் குணாநாம் கச்சந்தி தேநாநந்தோऽயமுச்யதே॥

[கந்தர்வர்களும், அப்ஸரஸ்ஸுகளும், கின்னரர்களுடனும், மஹாநாகங்களுடனும் கூடிய ஸித்தர்களும், (இவனுடைய) குணங்களின் எல்லையை அடைவதில்லை; ஆகையால் இவன் அநந்தனென்று சொல்லப்படுகிறான்.]

271. உபமாநமஸேஷாணாம் ஸாதூநாம் யஸ்ஸதாऽபவத்।

[எந்த ப்ரஹ்லாதாழ்வான், எப்போதும் எல்லா ஸாதுக்களுக்கும் உபமானமாக ஆயினனோ.....]

272. கிம் சைநாம் ப்ரதிவக்ஷ்யாமி க்ருத்வா விப்ரியமீத்ருஸம்।
யதா யதா ஹி கௌஸல்யா தாஸீவச்ச ஸகீவ ச॥
பார்யாவத் பகிநீவச்ச மாத்ருவச்சோபதிஷ்டதி॥

[கௌஸல்யை தாஸியைப்போலும், ஸகியைப்போலும், மனைவியைப்போலும், ஸஹோதரியைப்போலும், தாயைப்போலும் ஸுஸ்ரூஷைசெய்யும்போதெல்லாம், இப்படிப் பட்ட அநிஷ்டமான காரியத்தைச் செய்துவிட்டு அவளுக்கு என்ன பதில் சொல்லுவேன்?]

273. பரகதாதிஸயாதாநேச்சயோபாதேயத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ ஸேஷ:।
பரஸ்ஸேஷீ॥

[மற்றொருவனிடத்திலிருக்கும் ஒரு மேன்மையை உண்டுபண்ணவேண்டுமென்னும் எண்ணத்துடன் அங்கீகரிக்கப்படுகையே எவனுக்கு ஸ்வரூபமோ அவன் ஸேஷன்; மற்றவன் ஸேஷி.]

---

(267) சாந் (7-26-2). (268) ரா-ஸு (16-5). (269) வி. பு. (1-8-17). (271) வி. பு. (1-15-157). (272) ரா-அ (12-68) தசரதவாக்யம். (273) வேதார்த்தஸங்க்ரஹம்.

274. பாரதந்த்ர்யம் பரே பும்ஸி ப்ராப்ய நிர்க்கதபந்தந: ।
ஸ்வாதந்த்ர்யமதுலம் ப்ராப்ய தேநைவ ஸஹ மோததே ॥

[கர்மபந்தத்திலிருந்து விடுபட்டவனை முக்தன், பரமபுருஷனிடத்தில் பாரதந்த்ரியத்தை அடைந்து, ஒப்பற்ற ஸ்வாதந்த்ரியத்தையும் அடைந்து, அவனுடன் கூடவே ஆநந்தப்படுகிறான்.]

275. கருடஞ்ச ததர்ஸாச்சைரந்தர்த்தாநகதம் த்விஜ ।
க்ருதச்சாயம் ஹரேர் மூர்த்நி பக்ஷாப்யாம் பக்ஷிபுங்கவம் ॥

[முனிவரே! சிறகுகளால் ஹரியின் தலையில் நிழலை உண்டுபண்ணிக்கொண்டிருப்பவனும், பறவைகளுக்குத் தலைவனும், மறைந்திருப்பவனுமான கருடனையும் அந்த இந்திரன் ஆகாயத்தில் பார்த்தான்.]

276. ஸுபர்ணோऽஸி கருத்மாந் । த்ரிவ்ருத்தே ஶிர: । காயத்ரம் சக்ஷு: ।....

[நல்ல சிறகுகளையுடையவனாயும், கருத்மான் என்னும் திருநாமத்தை உடையவனாயுமிருக்கிறாய்; த்ரிவ்ருத் உன்னுடைய தலை; காயத்ரம் கண்.....]

277. யதுச்சிஷ்டமபோஜ்யம், யத் வா துஶ்சரிதம் மம, ஸர்வம் புநந்து மாமாப:

[உண்ணத்தகாத உச்சிஷ்டம் யாதொன்று என்னால் உண்ணப்பட்டதோ, என்னுடைய கெட்ட காரியம் யாதொன்று உண்டோ, 'ஆப:' எனப்படும் எம்பெருமான் என்னை அவைகளெல்லாவற்றிலிருந்தும் பரிசுத்தப்படுத்தட்டும்.]

278. ரஸாந் பக்தஸ்ய ஜிஹ்வாயாம் க்ருஹ்ணாமி கமலோத்பவ!

[தாமரையில் பிறந்த பிரமனே! இனிய சுவைகளை பக்தனுடைய நாக்கிலிருந்து அறிகிறேன்.]

279. அவித்யாஸ்மிதாபிநிவேஶராகத்வேஷா: பஞ்ச க்லேஶா: ।

[அவித்யை, அஹங்காரம், பேராசை, விருப்பம், கோபம் இவ்வைந்தும் க்லேசங்கள்.]

280. யேந மாத்யதி

[எதனாலே மதமடைகிறானோ.....]

281. யஸ் த்வயா ஸஹ ஸ ஸ்வர்க்கோ நரகோ யஸ் த்வயா விநா ।
இதி ஜாநந் பராம் ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ ॥

[ராகவரே! 'உம்முடன் கூடியிருக்கும் இருப்பே (எனக்கு) ஸ்வர்க்கம்; உம்மைப் பிரிந்திருக்குமிருப்பு நரகம்' என்பதை அறிந்து, என்னுடன் கூடவே மேலான ஆநந்தத்தை அடைவீராக.]

282. த்வயா ச ஸஹ கந்தவ்யம் மயா குருஜநாஜ்ஞயா ।
த்வத்வியோகேந மே ராம! த்யக்தவ்யமிஹ ஜீவிதம் ॥

[ராகவரே! பெரியோர்களின் கட்டளைப்படி நான் உம்முடன் கூடவே போக வேண்டும்; உம்மைப் பிரிந்தால் இங்கேயே உயிரை விடவேண்டும்.]

283. ஸர்வதா தேந ஹீநாயா ராமேண விதிதாத்மநா ।
தீக்ஷ்ணம் விஷமிவாஸ்வாத்ய துர்லபம் மம ஜீவிதம் ॥

---

(274) விஷ்ணுதத்வம். (275) வி. பு. (5-12-4). (276) தைத்திரீயயஜுஸ்ஸம்ஹிதை, காண்-4, ப்ர-1-42. (277) தை. நா-38. (278) பாஞ்சராத்ரம். (279) பாதஞ்ஜலஸூத்ரம். (281) ரா-அ (30-18). (282) ரா-அ (29-5). (283) ரா-ஸு (25-17).

[நெஞ்சிலுள்ளதை அறிபவனுன ராமபிரானை விட்டுப்பிரிந்த எனக்கு, கொடுமையான விஷத்தைக் குடித்ததைப்போல், உயிர்தரிப்பது எல்லாவிதத்திலும் துர்லபம்.]

284. யுவா குமார:

[யௌவனத்தை உடையவனுகவும், பாலனுகவுமிருப்பவன்.]

285. தருணௌ ரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ ।
புண்டரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ ॥

[(ராமலக்ஷ்மணர்கள்) வாலிபமானவர்கள்; அழகு நிறைந்தவர்கள்; ஸௌகுமார்யத்தை உடையவர்கள்; அதிகமான பலமுள்ளவர்கள். தாமரைபோன்ற அகன்ற கண்களை உடையவர்கள்; மரவுரியையும், மான் தோலையும் உடுத்தவர்கள்.]

286. ஸமுத்ரம் ராகவோ ராஜா ஶரணம் கந்துமர்ஹதி ।
காநிதஸ் ஸகரேணாயமப்ரமேயோ மஹோததி: ॥

[அரசரான ராகவர் ஸமுத்ரத்தை சரணமடையத் தகுந்தவர். அளவற்றதான இப்பெருங்கடல் ஸகரரால் வெட்டுவிக்கப்பட்டதன்றோ.]

287. த்விஷதந்நம் ந போக்தவ்யம் த்விஷந்தம் நைவ போஜயேத் ।
பாண்டவாந் த்விஷஸே ராஜந்! மம ப்ராணா ஹி பாண்டவா: ॥

[த்வேஷிப்பவனின் அன்னம் புஜிக்கத்தக்கதன்று; த்வேஷிப்பவனை புஜிப்பிக்கவும் கூடாது. அரசனே! நீ பாண்டவர்களை த்வேஷிக்கிறாய். பாண்டவர்கள் எனக்கு ப்ராணனன்றோ.]

288 & 289. ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ரம்ய । இமாந் லோகாந் காமாந்நீ
காமரூப்யநுஸஞ்சரந் । ஏதத் ஸாம காயந்நாஸ்தே । ஹா வுஹா வுஹா வு ॥

[ஆனந்தமயனை இந்தப் பரமாத்மாவை அணுகி, இஷ்டப்பட்ட உருவங்களை உடையவனாய், இந்தக் காமங்களிலும், லோகங்களிலும் (பரமாத்மாவைப்) பின்தொடர்ந்து கொண்டு இந்த ஸாமத்தைப் பாடிக்கொண்டிருக்கிறான்: ஹா வுஹா வுஹா வு.]

290. ஜிதந்தே (1-8).

291. ஸோऽஹம் தே தேவதேவேஶ! நார்ச்சநாதௌ ஸ்துதௌ ந ச ।
ஸாமார்த்யவாந் க்ருபாமாத்ரமநோவ்ருத்தி: ப்ரஸீத மே ॥

[தேவர்களுக்கும் தேவர்களான நித்யஸூரிகளுக்கும் தலைவனே! இப்படிப்பட்ட நான் உன்னுடைய ஸ்துதியிலும், அர்ச்சனை முதலியவற்றிலும் ஸாமர்த்தியம் உடையவனல்லேன். அருள் கூர்ந்த திருவுள்ளத்துடன் கூடியவனாய் எனக்கு தயை புரியவேண்டும்.]

292. ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந: ।
ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்தசிந்தக: ॥

[பிறந்துகொண்டிருக்கும்போது எந்தப் புருஷனை மதுஸூதனன் பார்க்கிறானோ அவனே ஸத்வகுணமுடையவனென்று அறியத்தக்கவன். அவனே மோக்ஷபலத்தை நினைப்பவன்.]

(284) ருக்வே-ஆ (2-8-25). (285) ரா-ஆ (19-14) ஶூர்ப்பணகாவாக்யம். (286) ரா-யு (19-31) விபீஷணவாக்யம். (287) பார-உத் (74-27). (288 & 289) தை-ப்ரு (10-5). (291) வி. பு. (5-7-70) காளியஸ்தோத்ரம். (292) பார-சாந் (358-73).

293. இச்சாத ஏவ தவ விஶ்வபதார்த்தஸத்தா
நித்யம் ப்ரியாஸ் தவ து கேசந தேऽபி நித்யா: ।
நித்யம் த்வதேகபரதந்த்ரநிஜஸ்வரூபா
பாவத்கமங்களகுணா ஹி நிதர்ஶநம் ந: ॥

[எல்லாப் பொருள்களின் இருப்பும் உன்னுடைய விருப்பத்தாலேயே ஏற்படுகிறது. உனக்குச் சில வஸ்துக்கள் எப்போதும் பிரியமானவை; அவை நித்யமாக விளங்குகின்றன. எப்பொழுதும் உனக்கே பரதந்திரமான ஸ்வரூபத்தையுடைய உன்னுடைய கல்யாணகுணங்கள் (இவ்விஷயத்தில்) எங்களுக்கு த்ருஷ்டாந்தம்.]

294. யோऽஹமஸ்மி ஸ ஸந் யஜே

[நான் எப்படிப்பட்டவனாயிருக்கிறேனோ, அப்படிப்பட்டவனாகவே இருந்துகொண்டு, (ஆத்மஸமர்ப்பணமாகிற) யாகத்தைச் செய்கிறேன்.]

295. யஸ்யாஸ்மி ந தமந்தரேமி

[எவனுக்கு நான் தாஸனாயிருக்கிறேனோ, அவனை விட்டு வேறொருவனிடம் செல்ல மாட்டேன்.]

296. ஆத்மா ராஜ்யம் தநம் மித்ரம் களத்ரம் வாஹநாநி ச ।
ஏதத் பகவதே ஸர்வமிதி தத் ப்ரேக்ஷிதம் ஸதா ॥

['ஆத்மா, ராஜ்யம், பொருள், நண்பர்கள், மனைவி, வாஹனங்கள் இவையெல்லாம் பகவானுக்கு' என்று உபரிசரவஸுவினால் எப்போதும் நினைக்கப்பட்டது.]

297. கதம் தஶரதாஜ்ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக: ।
ராஜ்யம் சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி ॥

[தசரதனிடமிருந்து பிறந்தவன் எப்படி ராஜ்யத்தை அபஹரிப்பவனாவான்? ராஜ்யமும், நானும் ராமனுடையவை. நீர் தர்மத்தைச் சொல்லவேண்டும்.]

298. ஸ்வத்வமாத்மநி ஸஞ்ஜாதம் ஸ்வாமித்வம் ப்ரஹ்மணி ஸ்திதம் ।
உபயோரேஷ ஸம்பந்தோ ந பரோऽபிமதோ மம ॥

[உடைமையாயிருக்கும் தன்மை ஆத்மாவினிடத்தில் உள்ளது; உடையவனாயிருக்கும் தன்மை ப்ரஹ்மத்தினிடமுள்ளது; இருவருக்கும் இதுவே ஸம்பந்தம்; வேறு ஸம்பந்தம் எனக்கு இஷ்டமன்று.]

300 & 299. விஷ்ணுஸம்ஸ்மரணாத் க்ஷீணஸமஸ்தக்லேஶஸஞ்சய: ।
முக்திம் ப்ரயாதி ஸ்வர்க்காப்திஸ் தஸ்ய விக்நோऽநுமீயதே ॥
வாஸுதேவே மநோ யஸ்ய ஜபஹோமார்ச்சநாதிஷு ।
தஸ்யாந்தராயோ மைத்ரேய தேவேந்த்ரத்வாதிகம் பலம் ॥

[விஷ்ணுவை நினைப்பதினால் துக்கஸமூஹங்களெல்லாம் நீங்கப்பெற்றவனாய், அவன் மோக்ஷத்தை அடைகிறான். ஸ்வர்க்கத்தை அடைதல் அவனுக்கு விக்னமாக நினைக்கப்படுகிறது. மைத்ரேயனே! ஜபம், ஹோமம், அர்ச்சனம் முதலியவைகளில் எவனுடைய மனம் வாஸுதேவனிடம் லயித்திருக்கிறதோ, அவனுக்கு தேவந்திரனாயிருக்கை முதலிய பலங்கள் இடையூறாகவே ஆகின்றன.]

(293) வைகுண்டஸ்தவம்-36. (294 & 295) யஜுர்ப்ராஹ்மணம் (3-7). (296) பார-சாந் (343-24). (297) ரா-அ (82-12) பரதவாக்யம். (298) விஷ்ணுதத்வம். (300 & 299) வி. பு. (2-6-40 & 41).

301. வாஸுதேவஸ்ய யே பக்தா: ஶாந்தாஸ் தத்கதமாநஸா: ।
தேஷாம் தாஸஸ்ய தாஸோऽஹம் பவேஜ்ஜந்மநி ஜந்மநி ॥
(தேஷாஞ்ச தாஸதாஸ்யம் மே.... என்றும் பாடம் காண்கிறது.)

[சாந்தர்களாயும், பகவானிடத்திலேயே மனதைச் செலுத்தியவர்களாயுமிருக்கும், வாஸுதேவபக்தர்கள் எவர்களுளரோ, இந்த ஆத்மவஸ்துவானது, அவர்களுடைய தாஸனுக்கும், தாஸனாக, ஜன்மந்தோறும் ஆகக்கடவது.]

302. பஶ்யேம ஶரதஶ் ஶதம் ।

[நூறு வருஷங்கள் (உன்னைப்) பார்க்கக்கடவோம்.]

303. ஸோऽப்யேநம் த்வஜவஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா ।
ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே ॥

[அந்த க்ருஷ்ணபகவானும், இந்த அக்ரூரனை, கொடி, வஜ்ரம், தாமரை இவைகளால் அடையாளம் செய்யப்பட்ட திருக்கையால் தொட்டு, இழுத்து, அன்புடன் நன்றாகத் தழுவிக் கொண்டான்.]

304, அலமத்ய ஹி புக்தைர் ந: பரமார்த்தைரலஞ்ச ந: ! ।
யதா பஶ்யேம நிர்யாந்தம் ராமம் ராஜ்யே ப்ரதிஷ்டிதம் ।
ததோ ஹி ந: ப்ரியதரம் நாந்யத் கிஞ்சித் பவிஷ்யதி ॥

[உண்பது முதலிய இவ்வுலக போகங்களும் வேண்டியதில்லை; மோக்ஷம் முதலிய மேலான போகங்களும் வேண்டியதில்லை. ராஜ்யத்தில் அபிஷேகம் செய்யப்பட்டவரும், ஊர்வலம் வருகின்றவருமான ராமனைக் காண்பதைக்காட்டிலும் மேலான ப்ரியம் நமக்கு வேறொன்றும் இல்லை.]

305. த்வமிந்த்ரஸ் ஸத்யமேவைதத் தேவஸ் த்ரிபுவநேஶ்வர: ।
த்வயாऽபி ப்ராப்தமைஶ்வர்யம் யதஸ்தம் தோஷயாம்யஹம் ॥

[நீ இந்திரனே; இது உண்மையே; நீ தேவன்தான்; மூவுலகங்களுக்கும் ஈஶ்வரன்தான். (ஆனால்) நான் உன்னாலும் எவனிடமிருந்து செல்வம் அடையப்பட்டதோ அவனை ஸந்தோஷப்படுத்துகிறேன்.]

306. ஏதே வை நிரயாஸ்தாத ! ஸ்தாநஸ்ய பரமாத்மந:

[குழந்தாய்! பரமாத்மாவினுடைய இருப்பிடத்திற்கு ஒப்பிடும்போது இந்த ஸ்வர்க்கம் முதலியவையெல்லாம் நரகங்களாகின்றன.]

307. ஸம்ஸ்மராம்யஸ்ய வாக்யாநி ப்ரியாணி மதுராணி ச ।
ஹ்ருத்யாந்யம்ருதகல்பாநி மந: ப்ரஹ்லாதநாநி ச ॥

[பிரியமாயும், இனியவைவயாயும், ஹ்ருதயத்திலிருந்து வெளிவருபவையாயும், அம்ருதம் போன்றவையாயும், மனத்தை உகப்பிப்பவையாயுமுள்ள அந்த பரதனுடைய வாக்கியங்களை நினைக்கிறேன்.]

308. த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம ।
பரதேந மஹாபாஹோ ! லக்ஷ்மணேந யவீயஸா ।
ஶத்ருக்நேந ச ஶத்ருக்ந ! ஸ்வஶரீரேண வா புந: ॥

(302) மாத்யாஹ்னிகமந்த்ரம். (303) வி. பு. (5-18-2). (304) ரா-அ (17-10). (305) விஷ்ணு தர்மம் (2-14). (306) பார-சாந் (196-6). (307) ரா-ஆ (16-39). (308) ரா-யு (41-4).

[நீண்ட கைகளையுடைய ஸுக்ரீவனே! உனக்கு ஏதாவது அவமானம் நேர்ந்ததாகில் ஸீதையால் எனக்கு என்ன ப்ரயோஜனம்? பரதனாலும், இளையவனான லக்ஷ்மணனாலும், சத்ருக்னனாலும் என்ன ப்ரயோஜனம்? சத்துருக்களை அழிப்பவனே! என்னுடைய சரீரத்தினால்தான் என்ன ப்ரயோஜனம்?]

309. ந தேவலோகாக்ரமணம் நாமரத்வமஹம் வ்ருணே।
ஐஶ்வர்யம் வாऽபி லோகாநாம் காமயே ந த்வயா விநா ॥

[நித்யஸூரிகள் வாழும் உலகான ஸ்ரீவைகுண்டத்தில் வாழ்ச்சியையும், கைவல்யத்தையும், உலகங்களிலுள்ள ஐஶ்வர்யத்தையும் உன்னைப் பிரிந்த நான் விரும்பமாட்டேன்.]

310. யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேऽப்யநாஶ்யம்
தத் கில்பிஷம் ஸ்ருஜதி ஜந்துரிஹ க்ஷணார்த்தே।

[யாதொரு பாபம், பல்லாயிரம் ப்ரஹ்மகல்பங்கள் அனுபவித்தாலும் நசிக்காதோ, அந்தப் பாபத்தை இந்த ஜந்து இங்கு அரை க்ஷணநேரத்தில் செய்கிறான்.]

311. ஆஹாரநித்ரா பயமைதுநாநி துல்யாநி கல்வத்ர ஸமஸ்தஜந்தோ:।
ஜ்ஞாநாத் விஶிஷ்டோ ஹி நர: பரேப்யோ ஜ்ஞாநேந ஹீந: பஶுபிஸ் ஸமாந: ॥

[ஆஹாரம், நித்திரை, பயம், ஸ்த்ரீபுருஷஸங்கமம் என்பவை இங்கு எல்லா ஜந்துக்களுக்கும் ஸமானம். மற்றவைகளைக்காட்டிலும் மனிதன் அறிவினால் மேலானவனாயிருக்கிறான். ஞானமற்றவன் பசுக்களுக்கு ஸமானமானவன்.]

312. ஆநயைநம் ஹரிஶ்ரேஷ்ட தத்தமஸ்யாபயம் மயா।
விபீஷணோ வா ஸுக்ரீவ! யதி வா ராவண: ஸ்வயம் ॥

[வானரர்களுள் சிறந்தவனான ஸுக்ரீவனே! இவனை அழைத்துவா; விபீஷணனாயிருந்தாலும், ராவணன் தானேயாயிருந்தாலும், இவனுக்கு என்னால் அபயமளிக்கப்பட்டது.]

313. கச்சாநுஜாநாமி ரணார்த்திதஸ் த்வம் ப்ரவிஶ்ய ராத்ரிஞ்சரராஜ லங்காம்।
ஆஶ்வாஸ்ய நிர்யாஹி ரதீ ச தந்வீ ததா பலம் த்ரக்ஷ்யஸி மே ரதஸ்த: ॥

[ராக்ஷஸராஜனே! நீ யுத்தத்தில் களைப்படைந்துவிட்டாய்; திரும்பிப்போ; நானே அனுமதிக்கிறேன். லங்கையில் நுழைந்து, களைப்பாற்றிக்கொண்டு, ரதத்தையுடையவனாகவும், வில்லையுடையவனாகவும் திரும்பி வா. ரதத்திலிருந்துகொண்டு அப்போது என்னுடைய பலத்தைப் பார்ப்பாய்.]

314. விஸ்ருஷ்டம் பகதத்தேந ததஸ்த்ரம் ஸர்வகாதுகம்।
உரஸா தாரயாமாஸ பார்த்தம் ஸஞ்சாத்ய மாதவ: ॥

[பகதத்தனாலே விடப்பட்டதும், எல்லாவற்றையும் ஸம்ஹரிப்பதுமான அந்த பாணத்தை, அர்ஜுனனை மறைத்து, மாதவன் மார்பினாலே தரித்தான்.]

315. விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞஶ் ஶரணாகதவத்ஸல:।
தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி ॥

[(ராவணா!) ஸ்ரீராமபிரான் தர்மத்தை அறிந்தவராகவும், சரணமடைந்தவரிடம் வாத்ஸல்யமுடையவராகவும் பிரஸித்தமானவர். நீ உயிர் வாழ விரும்பினாயாகில் அவருடன் உனக்கு நட்பு உண்டாகட்டும்.]

(309) ரா-அ (31-5) லக்ஷ்மணவாக்யம். (310) வைகுண்டஸ்தவம்-60. (311) நரஸிம்ஹபுராணம் (16-13). (312) ரா-யு (18-34). (313) ரா-யு (59-144). (314) பார-தி (33-18). (315) ரா-ஸு (21-20) ஸீதாவாக்யம்.

316. ஸகே ! ராகவ ! தர்மஜ்ஞ ! ரிபூணாமபி வத்ஸல ! ।
அப்யநுஜ்ஞாதுமிச்சாமி கமிஷ்யாமி யதாகதம் ॥

[நண்பரே ! ரகுகுலத்தில் உதித்தவரே ! தர்மத்தை அறிந்தவரே ! சத்துருக்களுக்கும் வாத்ஸல்யத்தை உடையவரே ! விடைபெற்றுக்கொள்ள விரும்புகிறேன். வந்தவாறே போய்விடுகிறேன்.]

317. தாதூநாமிவ ஶைலேந்த்ரோ குணாநாமாகரோ மஹாந் ।

[ஒரு சிறந்த மலை தாதுக்களுக்கெல்லாம் இருப்பிடமாயிருப்பதுபோல், ஸ்ரீராம பிரானும் குணங்களுக்கெல்லாம் பெரியதோர் இருப்பிடமாவர்.]

318. சதுர்முகாயுர் யதி கோடிவக்த்ரோ பவேந்நர: க்வாபி விஶுத்தசேதா: ।
ஸ தே குணாநாமயுதைகதேஶம் வதேந்ந வா தேவவர ப்ரஸீத ॥

[பல ப்ரஹ்மாக்களின் ஆயுளை உடையவனாய், கோடிக்கணக்கான முகங்களை உடையவனாய், மிகவும் சுத்தமான மனதையுடையவனான ஒரு மனிதன் இருப்பானேயாகில், அவன் உன்னுடைய குணங்களில் பதினாயிரத்தில் ஒரு பங்கைச் சொல்லுவானோ மாட்டானோ அறியோம். தேவர்களில் சிறந்தவனே ! அருள் புரியவேண்டும்.]

319. யாதாதத்யேந வர்ணிதம்

[உண்மையாக வர்ணிக்கப்பட்டது.]

320. பிதாऽஹமஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।

[நான் இவ்வுலகிற்குத் தந்தையாகவும், தாயாகவும், தாரகனாகவும், பிதாமஹனாகவும் இருக்கிறேன்.]

321. பவித்ராணாம் பவித்ரம் யோ மங்களாநாஞ்ச மங்களம் ।
தைவதம் தேவதாநாஞ்ச பூதாநாம் யோऽவ்யய: பிதா ॥

[எந்த பகவான் பவித்திரங்களுள் பவித்திரனாயிருக்கிறானோ, மங்களங்களுள் மங்களமாயிருக்கிறானோ, தேவதைகளுக்கும் தேவதையாயிருக்கிறானோ, எவனொருவன் ஜீவராசிகளுக்கெல்லாம் அழிவற்ற தந்தையாயிருக்கிறானோ.....]

322. மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாமேவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜாநே ப்ரியோऽஸி மே ॥

[என்னிடத்தில் மனத்தை வைத்தவனாகவும், என்னுடைய பக்தனாகவும், என்னை ஆராதிப்பவனாகவும் ஆவாயாக. என்னை நமஸ்கரிப்பாயாக. என்னையே அடைவாய்; இது ஸத்யம். உனக்கு ப்ரதிஜ்ஞை செய்கிறேன். எனக்குப் பிரியனன்றோ நீ.]

323. ஸ்வோஜ்ஜீவநேச்சா யதி தே ஸ்வஸத்தாயாம் ஸ்ப்ருஹா யதி ।
ஆத்மதாஸ்யம் ஹரே: ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர ॥

[உன்னுடைய உஜ்ஜீவனத்தில் உனக்கு விருப்பமிருக்குமாகில், உன் இருப்பில் ஆசையிருக்குமாகில், ஆத்மாவினுடைய தாஸனாயிருக்கும் தன்மையையும், ஹரியினுடைய ஸ்வாமியாயிருக்கும் தன்மையையும் (இவைகளின்) ஸ்வபாவத்தையும் எப்போதும் நினைப்பாயாக.]

---

(316) ரா-யு (50-56) கருடவாக்யம். (317) ரா-கி (15-21) தாரவாக்யம். (318) வராஹ புராணம் (73-94). (321) ஸஹஸ்ரநாமாத்யாயம். (322) கீதை (18-65). (323) விஷ்ணு தத்வம்.

324. அதவா யோகிநாமேவ குலே பவதி தீமதாம் ।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருஶம் ॥

[அல்லது, புத்திமான்களான யோகிகளின் குலத்திலேயே (யோகத்திலிருந்து நழுவினவன்) பிறக்கிறான். இம்மாதிரியான பிறப்பு உலகத்தில் மிகவும் துர்லபமன்றோ.]

325. ப்ராயஶ: பாபகாரித்வாந் ம்ருத்யோருத்விஜதே ஜந: ।
க்ருதக்ருத்யா: ப்ரதீக்ஷந்தே ம்ருத்யும் ப்ரியமிவாதிதிம் ॥

[பெரும்பாலும், பாபம் செய்பவனாயிருப்பதாலேயே மனிதன் மரணத்தைக் கண்டு பயப்படுகிறான். செய்யவேண்டியதைச் செய்தவர்கள் மரணத்தைப் பிரியனான விருந்தாளியைப் போலே எதிர்பார்க்கிறார்கள்.]

326. கோக்நே சைவ ஸுராபே ச சோரே பக்நவ்ரதே ததா ।
நிஷ்க்ருதிர் விஹிதா ஸத்பி: க்ருதக்நே நாஸ்தி நிஷ்க்ருதி: ॥

[பசுவைக் கொன்றவன், ஸுராபானம் செய்தவன், வ்ரதபங்கம் செய்தவன், இவர்கள் விஷயத்தில் பெரியோர்களால் ப்ராயஶ்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது. செய்நன்றி மறந்தவன் விஷயத்தில் ப்ராயஶ்சித்தமில்லை.]

327. ஈஶ்வரோऽஹமஹம் போகீ ஸித்தோऽஹம் பலவாந் ஸுகீ ।

[நானே ஈஶ்வரன். நானே போகத்தை அடைபவன். நான் இயற்கையாகவே ஸித்தனாயிருப்பவன்; பலவானாகவும், ஸுகமுடையவனாகவுமிருப்பவன் நானே.]

328. ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வர: ।
தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதி ஶ்ருத: ॥

[கெட்ட நடத்தையுள்ளவனாகவும், ராக்ஷஸர்களுக்கு அதிபதியாகவுமிருப்பவன் ராவணன் என்னும் ரக்ஷஸன். அவனுக்கு நான் இளைய ஸஹோதரன்; விபீஷணன் என்று பிரஸித்திபெற்றவன்.]

329. பிதா யஸ்ய புரா ஹ்யாஸீச் சரண்யோ தர்மவத்ஸல: ।
தஸ்ய புத்ர: ஶரண்யஶ்ச ஸுக்ரீவம் ஶரணம் கத: ॥

[தர்மத்தில் பிரியமுள்ளவரான எவருடைய தந்தை முன்னொரு காலத்தில் ஶரணமடையத்தகுந்தவராயிருந்தாரோ, அவருடைய புத்திரரும் ஶரண்யருமான ராகவர் ஸுக்ரீவனை சரணமடைந்தார்.]

330. தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் ।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு ॥

[(என்னை) த்வேஷிப்பவர்களும், கொடூரமானவர்களும், மனிதர்களுள் கீழ்மையானவர்களும், சுபமற்றவர்களுமான அவர்களை ஸம்ஸாரத்தில், அதிலும் அஸுரயோனிகளில் எப்போதும் தள்ளுகிறேன்.]

331, மத்பக்தம் ஶ்வபசம் வாऽபி நிந்தாம் குர்வந்தி யே நரா: ।
பத்மகோடிஶதேநாபி ந க்ஷமாமி வஸுந்தரே ॥

(324) கீதை (6-42). (325) இதிஹாஸஸமுச்சயம் (7-38). (326) ரா-கி (34-12). (327) கீதை (16-14). (328) ரா-யு (17-12). (329) ரா-கி (4-19). (330) கீதை (16-19). (331) வராஹபுராணம்.

[பூதேவி! சண்டாளனாயிருந்தபோதிலும், என்னுடைய பக்தனை எந்த ஜனங்கள் நிந்தை செய்கிறார்களோ, அவர்களை கோடிக்கணக்கான பத்மகாலங்களானாலும் பொறுக்க மாட்டேன்.]

332: ப்ரயத்நாத் யதமாநஸ்து யோகீ ஸம்ஶுத்தகில்பிஷ: ।
அநேகஜந்மஸம்ஸித்தஸ் ததோ யாதி பராம் கதிம் ॥

[ஆகையால், அநேகஜன்மங்களில் ஸித்தியடைந்தவனும், பாபங்கள் நீங்கப்பெற்றவனுமான யோகி, முயற்சியுடன் யத்னம் செய்வானாகில் மேலான கதியை அடைவான்.]

333. ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே தீவ்ரபக்தாஸ் தபஸ்விந: ।
கிங்கரா மம தே நித்யம் பவந்தி நிருபத்ரவா: ॥

[எவர்கள் மேலான பக்தியை உடையவர்களோ, எவர்கள் ப்ரபத்தியாகிற தபஸ்ஸைச் செய்தவரோ, அவர்களே என்னுடன் ஸாயுஜ்யத்தை அடைந்து, ஸம்ஸாரமாகிற உபத்ரவம் நீங்கப்பெற்றவர்களாய், எப்போதும் எனக்குக் கைங்கர்யம் செய்பவர்களாகிறார்கள்.]

334. தத் ப்ரூஹி வசநம் தேவி! ராஜ்ஞோ யதபிகாங்க்ஷிதம் ।
கரிஷ்யே ப்ரதிஜாநே ச ராமோ த்விர் நாபிபாஷதே ॥

[அம்மா! அரசர் விரும்பியதான அந்த வசனத்தைச் சொல்லுவாயாக. அப்படியே செய்கிறேன்; ப்ரதிஜ்ஞையும் செய்கிறேன். ராமன் இரண்டுவிதமாகப் பேசமாட்டான்.]

ஸ்தோத்ரரத்ந வ்யாக்யான ப்ரமாணத் திரட்டு முற்றிற்று.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.



(332) கீதை (6-45). (333) பரமஸம்ஹிதை. (334) ரா-அயோ (18-30).



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் க்ருஷ்ணஸூரயே நம:

# ஜிதந்தே ஸ்தோத்ரவ்யாக்யான ப்ரமாணத் திரட்டு.

1. ஜிதந்த இதி மந்த்ரேண
[‘ஜிதந்தே’ என்னும் மந்திரத்தினால்.]

2. அவித்யாதோ தேவே பரிப்ருடதயா வா விதிதயா
ஸ்வபக்தேர் பூம்னா வா ஜகதி கதிமந்யாமவிதுஷாம் ।
கதிர் கம்யஶ்சாஸௌ ஹரிரிதி ஜிதந்தாஹ்வயமநோ:
ரஹஸ்யம் வ்யாஜஹ்ரே ஸ கலு பகவாந் ஶௌநகமுநி: ॥

[பகவத்விஷயத்தில் அறியாமையினாலாவது, நன்றாக அறிந்திருப்பதினாலேயாவது, தன் பக்தியின் ஆதிக்யத்தினாலேயாவது இவ்வுலகில் வேறு உபாயத்தை அறியாதவர்களுக்கு, ‘உபாயமும, உபேயமும் இந்த ஹரியே’ என்று ‘ஜிதந்தே’ என்று பெயரையுடைய மந்த்ரத்தின் ரஹஸ்யத்தை பகவான் சௌநகமுனி வெளிப்படுத்தினான்றோ.]

3. ஸ்தோ-ப்ர (298).
4. ,, (323).
5. ,, (224).

6. யோऽந்யதா ஸந்தமாத்மாநமந்யாதா ப்ரதிபத்யதே ।
கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ॥

[பகவானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை, எவனொருவன் தனக்குச் சொந்தமாக நினைக்கிறானோ, ஆத்மாவை அபஹரிப்பவனான அந்தத் திருடனால் செய்யப்படாத பாபம் எது?]

7. யமோ வைவஸ்வதோ ராஜா யஸ் தவைஷ ஹ்ருதி ஸ்தித: ।
தேந சேதவிவாதஸ்தே மா கங்காம் மா குரூந் கம: ॥

[எல்லாரையும் நியமிப்பவனும், ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவனும், எல்லாருக்கும் இனியவனாயிருப்பவனும் எவனோ, அவன் உன்னுடைய ஹ்ருதயத்திலிருக்கிறான். அவனுடன் உனக்கு விவாதமின்றியிலே இருந்ததாகில், கங்கைக்கும், குருக்ஷேத்ரத்திற்கும் போகவேண்டியதில்லை.]

8. க்ஷேத்ரஜ்ஞஸ்யேஶ்வரஜ்ஞாநாத் விஶுத்தி: பரமா மதா
[ஜீவனுக்கு ஈஶ்வரனை அறிவதாலேயே மேலான சுத்தி உண்டாவதாக எண்ணப்படுகிறது.]

---

(2) பட்டர் முக்தகம். (6) பாரதம் உத்யோகபர்வம் (42-35). (7) மநுஸ்ம்ருதி (8-92). (8) யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி (3-1).

9. பரமேஶ்வரஸம்ஜ்ஞோऽஜ்ஞ! கிமந்யோ மய்யவஸ்திதே।
ததாऽபி மர்த்துகாமஸ்த்வம் ப்ரப்ரவீஷி புந: புந:॥

[மூடா! பரமேச்வரன் என்ற பெயரையுடையவன், நான் இருக்கும்போது வேறு எவன் உளன்? அப்படியிருந்தபோதிலும், சாவதற்கு விருப்பமுள்ளவனை நீ மறுபடியும் மறுபடியும் (அப்படியே) சொல்லுகிறாய்.]

10. த்விதா பஜ்யேயமப்யேவம் ந நமேயம் து கஸ்யசித்।
ஏஷ மே ஸஹஜோ தோஷ: ஸ்வபாவோ துரதிக்ரம:॥

[இரண்டாகப் பிளக்கப்பட்டாலும், இம்மாதிரி ஒருவனுக்கும் வணங்கமாட்டேன். இது என்னுடன் பிறந்ததான தோஷம். (அவரவர்களுடைய) ஸ்வபாவம் மீறமுடியாததன்றோ.]

11. ஸ்தோ. ப்ர (61).

12. விலாஸலலிதம் ப்ராஹ ப்ரேமகர்ப்பபராலஸம்।
வஸ்த்ரே ப்ரக்ருஹ்ய கோவிந்த! மம கேஹம் வ்ரஜேதி வை॥

[அந்தக் கூனியானவள், கண்ணனுடைய வஸ்த்ரங்களைப் பிடித்துக்கொண்டு, "கோவிந்தா! என்னுடைய வீட்டிற்குப் போகவேணும்" என்று விளையாட்டாயிருப்பதும், அழகானதும், நிறைந்த அன்பை அடக்கிக்கொண்டிருப்பதால் மெதுவாயிருப்பதுமான வார்த்தையைச் சொன்னாள்.]

13. புந: புந: ப்ரணம்யாஹ மாலாகாரோऽதிவிஸ்மித:।

[மிகவும் ஆச்சரியத்தை அடைந்தவரான மாலாகாரர் மறுபடியும், மறுபடியும் வணங்கிச் சொன்னார்.]

14. ஹ்ருஷீகாணீந்த்ரியாண்யாஹுஸ் தேஷாமீஶோ யதோ பவாந்।
ஹ்ருஷீகேஶ இதி க்யாத:........

[இந்திரியங்களை 'ஹ்ருஷீகங்கள்' என்று சொல்லுகிறார்கள். நீர் அவைகளுக்கு ஈஶனாயிருப்பதால் ஹ்ருஷீகேசன் என்று பிரஸித்திபெற்றிருக்கிறீர்.]

15. யஶ் சக்ஷுஷி திஷ்டந் — வாசி திஷ்டந்

[எவனொருவன் கண்ணிலிருக்கிறானோ, எவன் வாக்கிலிருக்கிறானோ.....]

16. ஸ்தோ. ப்ர (183).

17. ,, (115).

18. ,, (118).

19. அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந்।
ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா॥

[பிறப்பற்றவனாகவும், அழிவற்றவனாகவும், பூதங்களுக்கு ஈச்வரனாகவுமிருந்தபோதிலும், என்னுடைய ஸ்வபாவத்தைக்கொண்டு, என் ஸங்கல்பத்தாலே நான் பிறக்கிறேன்.]

20. ஸ்தோ-ப்ர (187).

21. பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்।
தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே॥

---

(9) வி. பு. (1-17-23) ஹிரண்யவாக்யம். (10) ரா-யு (36-11) ராவணவாக்யம். (12) வி. பு. (5-20-11). (13) வி. பு. (5-19). (15) ப்ருஹ (5-7-22). (19) கீதை (4-6). (21) கீதை (4-8).

[ஸாதுக்களை ரக்ஷிப்பதற்கும், தீயவர்களை அழிப்பதற்கும், வைதிகதர்மத்தை நிலை நிறுத்துவதற்கும், யுகந்தோறும் பிறக்கிறேன்.]

22. ஸ்தோ-ப்ர (119).

23. ,, (249).

24. மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கச்சித் யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கச்சிந்மாம் வேத்தி தத்த்வத: ॥

[மனுஷ்யர்களில் ஆயிரக்கணக்கானவர்களில் ஒருவனே ஸித்தியடையும் வரையில் முயற்சி செய்கிறான். ஸித்தியடையும் வரையில் முயற்சி செய்பவர்களிலும் (பல்லாயிரத்தில்) ஒருவன்தான் என்னை உண்மையாக அறிகிறான்.]

25. ஸ்தோ. ப்ர (228).

26. கிம் ஜபந் முச்யதே ஜந்துர் ஜந்மஸம்ஸாரபந்தநாத் ।

[ஜந்துவானவன் எதை ஜபிப்பதினால் ஜன்மஸம்ஸாரங்களாகிற கட்டுகளிலிருந்து விடுபடுகிறான்?]

27. பவித்ரம் பரமம் புண்யம் தேசோऽயம் ஸர்வ காமதுக் ।
யஸ்மிந் வாஸரமாத்ரேண வாஸம் விதததாம் ந்ருணாம் ॥
பயாந்யயா விநச்யேயுர் லோபமோஹாதயோ த்விஜ ॥

[ப்ராஹ்மணரே! யாதொரு தேசத்தில் ஒரு நாள் மாத்திரம் வாஸம் செய்யும் மனிதர்களுக்கு, பயகாரணங்களும், லோபம், மோஹம் முதலியவைகளும் நசிக்கின்றனவோ, அப்படிப்பட்ட இந்த தேசம் மிகவும் புனிதமாகவும், மனிதர்களுக்கு மோக்ஷோபாயமாகவும், எல்லா இஷ்டங்களையும் கொடுப்பதாகவுமிருக்கிறது.]

28. விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ் ததாऽஸுர: ।

[விஷ்ணுபக்தியில் ஈடுபட்டவன் தேவன்; அப்படியே பக்தியற்றவன் அஸுரன்.]

29. த்வௌ பூதஸர்க்கௌ லோகேऽஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச ।

[இவ்வுலகில் பூதங்களின் உத்பத்தி, தைவமென்றும், ஆஸுரமென்றும் இருவிதம்.]

30. ஸர்வலோகசரண்யாய ராகவாய மஹாத்மநே ।
நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம் ॥

[மஹாத்மாவும், எல்லா உலகுக்கும் சரணமடையத்தகுந்தவனுமான ராகவனுக்கு, இங்கு வந்திருப்பவனும், விபீஷணனென்ற பெயரையுடையவனுமான என்னை சீக்கிரமாக அறிவியுங்கள்.]

31. ஸ்தோ-ப்ர (202).

32. ,, (196).

33. ,, (312).

34. பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம ।
கார்யம் கருணமார்யேண ந கச்சிந்நாபராத்யதி ॥

(24) கீதை (7-3). (26) ஸஹஸ்ரநாமாத்யாயம். (27) காருடபுராணம்-11. (28) விஷ்ணு தர்மம் (109-74). (29) கீதை (16-6). (30) ரா-யு (17-17). (34) ரா-யு (116-44).

[வானர! பாபிகளாயினும், புண்யமுள்ளவராயினும், கொல்லத்தகுந்தவர்களா யிருந்தாலும் குணவானுயிருப்பவனால் (அவன் விஷயத்தில்) கருணை காட்டப்படவேண்டும். அபராதம் செய்யாதவன் ஒருவனுமில்லையே.]

35. அநாலோசிதவிஶேஷா஽ஶேஷலோகஶரண்ய

[(ஆஶ்ரயிப்பவர்களின்) குணாகுணங்களை நிரூபணம் செய்யாமலிருப்பவனே! எல்லா உலகுக்கும் ஶரண்யனே!]

36. ஸ்தோ-ப்ர (44).

37. ,, (83).

38. ஸ ஹி தம் ப்ரதிஜக்ராஹ பார்யாஹர்த்தாரமாகதம் ।
கபோதோ வாநரஶ்ரேஷ்ட! கிம் புநர் மத்விதோ ஜந: ॥

[வானரத்தலைவனே! மனைவியைக் கொன்றவனும், தன்னை அடைந்தவனுமான அவ்வேடனை அந்தப் புறா வரவேற்றதன்றோ. என்னைப்போன்ற மனிதனைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?]

39. ஸ்தோ-ப்ர (322).

40. ,, (239).

41. ஏவமுக்தாஸ் த்ரய: பார்த்தா யமௌ ச பரதர்ஷபா: ।
த்ரௌபத்யா ஸஹிதாஸ் ஸர்வே நமஶ்சக்ருர் ஜநார்த்தநம் ॥

[இம்மாதிரியாகச் சொல்லப்பட்டவர்களும், பரதகுலத்தில் உதித்தவர்களுள் சிறந்தவர்களுமான குந்தீபுத்ரர்கள் மூவரும், (மாத்ரியின்) இரட்டைப் பிள்ளைகளுமாகிய எல்லாரும், த்ரௌபதியுடன் கூடியவர்களாய் ஜனார்தனனை நமஸ்கரித்தார்கள் (சரணமடைந்தார்கள்).]

42. ஸ்தோ-ப்ர (121).

43. ,, (38).

44. ஆகாஶாத் வாயு: । வாயோரக்நி: । அக்நேராப: । அத்ப்ய: ப்ருதிவீ ॥

[ஆகாசத்திலிருந்து வாயு உண்டாயிற்று; வாயுவிலிருந்து அக்னி உண்டாயிற்று; அக்னியிலிருந்து ஜலம் உண்டாயிற்று; ஜலத்திலிருந்து பூமி உண்டாயிற்று.]

45. ப்ரஹ்மா ஸ்ருஜத்யாதிகாலே மரீசிப்ரமுகாஸ் தத: ।
உத்பாதயந்த்யபத்யாநி ஜந்தவஶ்ச ப்ரதிக்ஷணம் ॥

[பிரமன் ஆதிகாலத்தில் ஸ்ருஷ்டி செய்கிறான்; பிறகு மரீசி முதலியவர்களும், எல்லா ஜந்துக்களும் மக்களை க்ஷணந்தோறும் உண்டுபண்ணுகின்றனர்.]

46. ஸோ஽பித்யாய ஶரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா: ।
அப ஏவ ஸஸர்ஜாதௌ தாஸு பீஜமவாஸ்ருஜத் ॥

[அந்தப் பரமாத்மா தன்னுடைய சரீரத்தினின்றும் பலவிதமான ப்ரஜைகளை ஸ்ருஷ்டி செய்ய விருப்பமுள்ளவனாய் ஸங்கல்பித்து, முதலில் நீரையே ஸ்ருஷ்டித்தார்; அந்த ஜலத்தில் (தன் சக்தியாகிய) விதையை விதைத்தார்.]

47. ஸ ஏவ ஸ்ருஜ்யஸ் ஸ ச ஸர்க்ககர்த்தா ஸ ஏவ பாத்யத்தி ச பால்யதே ச ।
ப்ரஹ்மாத்யவஸ்தாபிரஶேஷ மூர்த்திர் விஷ்ணுர் வரிஷ்டோ வரதோ வரேண்ய: ॥

---

(35) சரணாகதிகத்யம்-5. (38) ரா-யு (18-25). (41) பார-ஆர (192-56). (44) ஸுபாலோப னிஷத்-1. (45) வி. பு. (1-22-35). (46) மனு (1-8). (47) வி. பு. (1-2-70).

[ஸ்ருஷ்டி செய்யப்படுபவனும் அவனே; பிரமன் முதலிய அவஸ்தைகளால் ஸ்ருஷ்டி செய்பவனும் அவனே; அவனே (உலகை) ரக்ஷிக்கிறான்; (உலகை) விழுங்குகிறான்; அவனே காப்பாற்றப்படுகிறான். எல்லாவற்றையும் சரீரமாகக்கொண்ட விஷ்ணுவே மேலானவன்; வரங்களைத் தருபவன்; வரிக்கத்தகுந்தவன்.]

48. ததபித்யாநாதேவ து தல்லிங்காத் ஸ: ।

[(மஹதாதிவஸ்துக்களுக்கும்) புருஷோத்தமனே (காரணம்); அவனுடைய ஸங்கல்ப ரூபமான அந்த அடையாளத்தாலே.]

49. ஸ்தோ-ப்ர (148).

50. பகவத்ஸ்வரூபதிரோதாநகரீம்

[பகவத்ஸ்வரூபத்தை மறைப்பதான (ப்ரக்ருதியை).]

51. ஸத்த்வாதயோ ந ஸந்தீஶே யத்ர ச ப்ராக்ருதா குணா: ।
ஸ ஶுத்த: ஸர்வஶுத்தேப்ய: புமாநாத்ய: ப்ரஸீதது ॥

[எந்த ஈசனிடத்தில் ப்ராக்ருதகுணங்களான ஸத்வரஜஸ்தமோகுணங்கள் இல்லையோ, சுத்தர்களான எல்லோரையும்விட சுத்தனான அந்த ஆதிபுருஷன் உகந்தருளுவானாக.]

52. ஸ்தோ-ப்ர (230).

53. ,, (47).

54. ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம் ।
விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம் ॥

[ஸம்ஸாரமாகிற கடலில் முழுகினவர்களும், விஷயங்களினால் சூழப்பட்ட மனத்தை உடையவர்களுமான மனிதர்களுக்கு, விஷ்ணுவாகிற ஓடத்தைத் தவிர, (அக்கடலைக் கடக்க) மேலான ஸாதனம் வேறு ஒன்றுமில்லை.]

56. ஸ்தோ-ப்ர (177).

57. பரிஜநபரிபர்ஹா பூஷணாந்யாயுதாநி ப்ரவரகுணகணாஶ்ச ஜ்ஞாநஶக்த்யாதயஸ்தே ।
பரமபதமதாண்டாந்யாத்மதேஹஸ் ததாத்மா
வரத ! ஸகலமேதத் ஸம்ஶ்ரிதார்த்தம் சகர்த்த ॥

[வரதனே! (விஷ்வக்ஸேனர், ஆதிசேஷன் முதலிய) பரிஜனங்களும், (சத்ரம், சாமரம் முதலிய) பரிச்சதங்களும், ஆபரணங்களும், ஆயுதங்களும், ஜ்ஞானம், சக்தி முதலிய அந்தச் சிறந்த குணஸமூஹங்களும், ஸ்ரீவைகுண்டமும், அண்டங்களும், உன்னுடைய திவ்யமங்களவிக்ரஹமும், திவ்யாத்மஸ்வரூபமுமாகிய இவையெல்லாவற்றையும் அடியவர்களுக்கு ஆக்கிவைத்தாய்.]

58. யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித் யஸ்ய ஜ்ஞாநமயம் தப:

[எந்தப் பரமாத்மாவானவன், எல்லா வஸ்துக்களுடைய ஸ்வரூபத்தையும், ஸ்வபாவங்களையும் அறிகிறானோ, எவனுடைய ஸங்கல்பமானது ஞானமயமாயிருக்கிறதோ.....]

59. ஸ்தோ-ப்ர (205).

60. ,, (180).

(48) ப்ரஹ்மஸூத்ரம் (2-3-14). (50) ஶரணாகதிகத்யம்-12. (51) வி. பு. (1-9-44). (54) விஷ்ணுதர்மம் (1-59). (57) வரதராஜஸ்தவம்-63. (58) முண்டகோபனிஷத் (1-1-10).

61. ந மே ஸ்நாநம் பஹுமதம் வஸ்த்ராண்யாபரணாநி ச ।
தம் விநா கைகயீபுத்ரம் பரதம் தர்மசாரிணம் ॥

[தர்மவழிப்படி நடப்பவனும், கைகேயியின் புத்திரனுமான அந்த பரதனில்லாமல் எனக்கு ஸ்நானமும், வஸ்த்ரங்களும், ஆபரணங்களும் இஷ்டமில்லை.]

62. ஸ்தோ-ப்ர (169).

63. புருஷ ஏவேதம் ஸர்வம் । யத் பூதம் யச்ச பவ்யம் ।
உதாம்ருதத்வஸ்யேசாந: । யதந்நேநாதிரோஹதி ॥

[எந்த ஜகத்தானது முன் கல்பத்திலிருந்ததோ, எது பின் வரும் கல்பத்தில் உண்டாகப்போகிறதோ, எது இந்தக் கல்பத்திலிருக்கிறதோ, எந்த உலகம் அன்னத்தினுல் மறையாமலிருக்கிறதோ, இந்த எல்லா உலகும் புருஷனுகிற நாராயணனே. மோக்ஷத்திற்கும் இவனே ப்ரபு.]

64. ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: । ஸஹஸ்ராக்ஷஸ் ஸஹஸ்ரபாத் ।
ஸ பூமிம் விச்வதோ வ்ருத்வா । அத்யதிஷ்டத் தசாங்குலம் ॥

[புருஷன் ஆயிரம் தலைகளையுடையவன்; ஆயிரம் கண்களை உடையவன்; ஆயிரம் கால்களை உடையவன். அவன் பூமியை முழுவதும் வியாபித்து, அனந்தயோஜனப்ரமாணமான ப்ரஹ்மாண்டத்தை ஆக்ரமித்தான்.]

65. ஸ்தோ-ப்ர (82).

66. த்வம் ஹி ஸத்யவ்ரதச் சூரோ தார்மிகோ த்ருடவிக்ரம: ।
பரீக்ஷ்யகாரீ ஸ்ம்ருதிமாந் நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸு ச ॥

[நீர் பழுதாகாத வ்ரதத்தையுடையவர்; சூரர்; தர்மிஷ்டர்; திடமான பராக்ரமமுள்ளவர்; (எல்லாமறிந்தவராயிருந்தும்) ஆலோசித்துக் காரியங்களைச் செய்பவர்; (உன்னிடம் ஆசாலேசம் உடையவரையும்) எப்போதும் ஞாபகத்திற்கொண்டிருப்பவர்; நண்பர்களுக்கு தம்மையே கொடுப்பவர்.]

67. பரா஽ஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச ।

[இந்தப் பரமாத்மாவுக்கு பலபடிப்பட்டதும், மேலானதுமான சக்தியும், இயற்கையான ஞானமும், பலமும், (ஸ்ருஷ்டித்தல் முதலிய) காரியங்களும் உண்டென்று அறியப்படுகிறது.]

68. யோ வேத்தி யுகபத் ஸர்வம் ப்ரத்யக்ஷேண ஸதா ஸ்வத: ।
தம் ப்ரணம்ய ஹரிம் சாஸ்த்ரம் ந்யாயதத்த்வம் ப்ரசக்ஷ்மஹே ॥

[எவனொருவன், எப்போதும் எல்லா வஸ்துக்களையும் ஒரே சமயத்தில் தானுகவே அறிகிருனே, அந்த ஹரியை வணங்கி ந்யாயதத்வம் என்னும் சாஸ்திரத்தைச் சொல்லுகிறோம்.]

69. ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பச்யதி கச்ச நைநம் ।

[இவனுடைய ரூபம் கண்ணால் காணும்படி இராது; ஒருவனும் இவனைக் கண்ணால் பார்க்கிறதில்லை.]

---

(61) ரா-யு (124-6). (63) புருஷஸூக்தம் (1-2). (64) புருஷஸூக்தம் (1-1). (66) ரா-யு (17-34). (67) ச்வே-6. (68) நாதமுனிகள் அருளிய ந்யாயதத்வம். (69) தைத்-நாரா (1-10).

70. ஸ்தோத்ரரத்னம்-30.

71. ஸஞ்ஜீவயந்நபி ம்ருதம் ஸுதமுத்தராயாஸ்
ஸாந்தீபிநேஸ் சிரம்ருதம் ஸுதமாநயம்ஸ்ச ।
தாம்நோ நிஜாத் த்விஜஸுதாந் புநராநயந் வா
ஸ்வாமேவ தாம் தநுமஹோ கதமாநயஸ்த்வம் ॥

[இறந்துபோன உத்தரையின் புத்திரனைப் பிழைப்பித்தும், நெடுங்காலத்திற்கு முன் உயிர் துறந்த ஸாந்தீபிநி குமாரனை மீட்டுக்கொண்டுவந்தும், தன்னுடைய பரமபதத்திலிருந்து வைதிகன் பிள்ளைகளை மறுபடி அழைத்துவந்தும் போந்த நீ அவரவர்களுடைய அந்த சரீரத்தையே எப்படிக் கொண்டுவந்தாய்? ஆச்சரியம்.]

72. அஹம் ஸ்மராமி மத்பக்தம் நயாமி பரமாம் கதிம் ॥

[என்னுடைய பக்தனை (அவன் சாகும் சமயத்தில்) நான் நினைக்கிறேன். மேலான கதிக்கு (அவனை நான்) அழைத்துச் செல்லுகிறேன்.]

73. அஹமந்நமஹமந்நமஹமந்நம் । அஹமந்நாதோऽஹமந்நாதோऽஹமந்நாத: ।

[நான் (பரமாத்மாவுக்கு) அன்னம்போல் போக்யமாயிருப்பவன்; நான் (பரமாத்மாவுக்கு) அன்னம்; நான் (பரமாத்மாவுக்கு) அன்னம். நான் (பரமாத்மாவின் உகப்பாகிற) அன்னத்தைப் புஜிப்பவன்; நான் அன்னத்தை புஜிப்பவன்; நான் அன்னத்தை புஜிப்பவன்.]

74. பராவரேஸம் ஸரணம் வ்ரஜத்வமஸுரார்தநம் ।........
ப்ரதாநபும்ஸோரஜயோ: காரணம் கார்யபூதயோ: ॥

[மேலானவர்களுக்கும் ஈசனும், அஸுரர்களை ஹிம்ஸிப்பவனும், கார்யபூதங்களும், பிறப்பற்றவையுமான ப்ரக்ருதிக்கும், புருஷனுக்கும் காரணமானவனுமான விஷ்ணுவை சரணமடையுங்கள்.]

75. யத: ப்ரஸூதா ஜகத: ப்ரஸூதீ தோயேந ஜீவாந் வ்யஸஸர்ஜ பூம்யாம்

[உலகத்தை உண்டுபண்ணும் ப்ரக்ருதியானது எவனிடமிருந்து உண்டாயிற்றோ, எவன் ஜலம் முதலிய பூதங்களுடன் பூமியில் ஜீவர்களை ஸ்ருஷ்டித்தனனோ.....]

76. யஸ்மிந்நிதம் ஸஞ்ச விசைதி விஸ்வம் யஸ்மிந் தேவா அதி விஸ்வே நிஷேது: ।
ததேவ பூதம் தது பவ்யமா இதம் ததக்ஷரே பரமே வ்யோமந் ॥

[எதனிடத்தில் இவ்வுலகம் (ஸம்ஹாரகாலத்தில்) உள்ளடங்குகிறதோ, (ஸ்ருஷ்டி காலத்தில்) வெளிப்படுகிறதோ, எல்லா தேவர்களும் ஆச்ரயித்திருக்கிறார்களோ, அந்த ப்ரஹ்மமே முன்னிருந்த வஸ்துக்களுக்கும் அந்தர்யாமி; பின் வரப்போகும் வஸ்துக்களுக்கும் அந்தர்யாமி. அதுவே அழியாததான பரமபதத்தில் (எழுந்தருளியிருக்கிறது).]

77. ஸேயம் தேவதைக்ஷத । ஹந்தாऽஹமிமாஸ் திஸ்ரோ தேவதா அநேந
ஜீவேநாத்மநாऽநுப்ரவிஸ்ய நாமரூபே வ்யாகரவாணீதி ॥

[அப்படிப்பட்ட இந்த தேவதை "நான் (நெருப்பு, நீர், பூமி என்னும்) இந்த மூன்று தேவதைகளையும் இந்த ஜீவஸமஷ்டியுடன் கூடிய என்னுடைய ஸ்வரூபத்தால் வியாபித்து நாமரூபங்களைச் செய்யக்கடவேன்." என்று ஸங்கல்பித்தது.]

---

(71) அதிமாநுஷஸ்தவம்-58. (72) வராஹசரமஸ்லோகம். (73) தை-ப்ருகு (10-6). (74) வி. பு. (1-9-37). (75) தை-நா (1-4). (76) தை-நா (1-2). (77) சாந்-உப (6-3-2).

78. தத் ஸ்ருஷ்ட்வா। ததேவாநுப்ராவிஶத்। ததநுப்ரவிஶ்ய। ஸச்ச த்யச்சாऽபவத்।...
ஸத்யஞ்சாந்ருதஞ்ச ஸத்யமபவத்।

[அதை ஸ்ருஷ்டித்தவுடன் (அந்த ப்ரஹ்மம்) அதை வியாபித்தது; அதை வியாபித்தவுடன் விகாரமற்றதான சேதனமாகவும், விகாரமுள்ளதான அசேதனமாகவுமாயிற்று. (விகாரமின்மையினால்) ஸத்யம் எனப்படும் சேதனமாகவும், (விகாரமடைதலால்) அஸத்யமெனப்படும் அசேதனமாகவும் (ஆகிய ப்ரஹ்மம்) விகாரமற்றதாகவே ஆயிற்று.]

79. சராசரவ்யபாஶ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதேஶோऽபாக்தஸ் தத்பாவபாவித்வாத்।

[சராசரங்களைச் சொல்லும் அந்தந்த ஶப்தங்கள் (ப்ரஹ்ம விஷயத்தில்) முக்கியங்களே. ப்ரஹ்மத்தின் அநுப்ரவேசித்திருக்கும் தன்மையினாலே ஏற்படுவதாகையால்.]

80. ஸ்தோ-ப்ர (223).

81. பூமௌ நிபாத்யமாநோऽத்ரேரந்தராஸ்தே ஸ்வபந்நிவ।

[மலையிலிருந்து பூமியில் தள்ளப்பட்டு நடுவில் தூங்குபவன்போலிருக்கிறான்.]

82. ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஹா ஸௌமித்ரே! ஹா ராமமாத:! ஸஹ மே ஜநந்யா।
ஏஷா விபத்யாம்யஹமல்பபாக்யா மஹார்ணவே நௌரிவ மூடவாதா॥

[ஹா ராம! ஹா லக்ஷ்மண! ஹா ஸௌமித்ரே! என் தாயுடன் கூடிய ராமமாதாவே! அல்பபாக்யமுள்ள நான் பெருங்கடலில் காற்றினால் அடிக்கப்பட்ட கப்பல்போல் கஷ்டப்படுகிறேன்.]

83. ஏஹி பஶ்ய ஶரீராணி முநீநாம் பாவிதாத்மநாம்।
ஹதாநாம் ராக்ஷஸைர் கோரைர் பஹூநாம் பஹுதா வநே॥

[ராம! (இங்கு) வருவாயாக; பரமாத்மாவை தியானம் செய்பவர்களும், வனத்தில் கோரமான ராக்ஷஸர்களால் பலவிதமாக ஹிம்ஸிக்கப்பட்டவர்களுமான பல முனிவர்களுடைய சரீரங்களைப் பார்ப்பாயாக.]

84. ஸ்தோ-ப்ர (219).

85. ,, (322).

86. ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச।
வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம்॥

[எல்லாருடைய ஹ்ருதயத்திலும் நான் அமர்ந்திருக்கிறேன். என்னிடமிருந்தே நினைவும், ஜ்ஞானமும், மறதியும் உண்டாகின்றன. எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் நானே. வேதத்தில் சொல்லப்பட்ட பலன்களைக் கொடுப்பவனும், வேதத்தை அறிபவனும் நானே.]

87. க்ருத்நோऽபி விஶுத்த்யதி

[செய்ந்நன்றி மறந்தவன் கூட சுத்தியடைகிறான்.]

88. ஸ்தோ-ப்ர (326).

89. அஶ்வத்தம் ஸிந்துராஜஞ்ச ஸதா ஸேவேத ந ஸ்ப்ருஶேத்।
மந்தவாரே ஸ்ப்ருஶேத் பூர்வமபரம் பர்வணி ஸ்ப்ருஶேத்॥

---

(78) தை-ஆந-6. (79) ப்ர-ஸூ (2-3-17). (82) ரா-ஸு (28-8). (83) ரா-ஆ (6-16). (86) கீதை (15-15).

[அரசமரத்தையும், கடலையும் எப்போதும் பார்க்கலாம். (ஆனால்) எப்போதும் தொடலாகாது. முன் சொல்லப்பட்ட அரசமரத்தை சனிக்கிழமையில் தொடலாம்; பின் சொல்லப்பட்ட கடலை பர்வகாலங்களில் தொடலாம்.]

90. மதுரா நாம நகரீ புண்யா பாபஹரீ ஶுபா ।
யஸ்யாம் ஜாதோ ஜகந்நாதஸ் ஸாக்ஷாத் விஷ்ணுஸ் ஸநாதந: ॥

[யாதொரு நகரத்தில் உலகங்களுக்கெல்லாம் நாயகனும், அனாதியானவனுமான ஸாக்ஷாத் விஷ்ணு (க்ருஷ்ணனாய்) திருவவதரித்திருக்கிறாரோ, அப்படிப்பட்ட மதுரை என்னும் நகரம் அவனைத் தருகைக்கு உபாயமாகவும், பாபத்தைப் போக்கடிப்பதாகவும், ஸ்வயம் ப்ராப்யமாகவுமிருக்கிறது.]

91. ஶரீரமாத்யம் கலு தர்மஸாதநம்

[சரீரமன்றோ முதலான தர்மஸாதனம்.]

92. விசித்ரா தேஹஸம்பத்திரீஶ்வராய நிவேதிதும் ।
பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந் ஹஸ்தபாதாதிஸம்யுதா ॥

[ப்ராஹ்மணரே! கைகால் முதலியவைகளுடன் கூடியதும், விசித்திரமானதுமான தேகமாகிற இச்செல்வம், ஸர்வேச்வரனுக்கு ஸமர்ப்பிப்பதற்காக ஆதிகாலத்திலேயே செய்யப்பட்டிருக்கிறது.]

93. ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத் ।
ஸ்வதர்மே நிதநம் ஶ்ரேய: பரதர்மோ பயாவஹ: ॥

[நிஹீனமான ஸ்வதர்மம், குணத்துடன் கூடினதும் (சிறிதுகாலம்) அனுஷ்டிக்கப் படுவதுமான பரதர்மத்தைக்காட்டிலும் மேலானது. தன்னுடைய தர்மத்தை அனுஷ்டித்து இறப்பது மேலானது; மற்றொருவனுடைய தர்மம் பயத்தைத் தருவது.]

94. ஸ்தோ-ப்ர (48).

95. ,, (49).

96. ஶங்கசக்ரகதாபாணே! த்வாரகாநிலயாச்யுத! ।
கோவிந்த! புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் ஶரணாகதாம் ॥

[(ஆச்ரிதரை ரக்ஷிக்க) சங்கம், சக்ரம், கதை முதலிய ஆயுதங்களைக் கையிலே தரித்திருப்பவனே! த்வாரகையில் வசிப்பவனே! அடியவரை (ஒருபொழுதும்) நழுவ விடாதவனே! கோவிந்தா! செந்தாமரைக்கண்ணா! சரணமடைந்த என்னை ரக்ஷிப்பாயாக.]

97. ஸ்தோ-ப்ர (110).

98. ,, (228).

99. தஸ்மாத் வா ஏதஸ்மாத் விஜ்ஞாநமயாத் அந்யோऽந்தர ஆத்மாऽऽநந்தமய: ।

[அப்படிப்பட்ட இந்த விஜ்ஞானமயனான ஜீவனைக்காட்டிலும், வேறுபட்டவனும், (அவனுக்கு) அந்தராத்மாவாயிருப்பவனும் ஆநந்தமயனான பரமாத்மா.]

100. ஸ்தோ-ப்ர (116).

---

(91) குமாரஸம்பவம் (5-33). (92) ஸ்ரீவிஷ்ணுதத்வம். (93) கீதை (3-35). (96) பாரதம்-ஸபா-66. (99) தை-ஆன-5.

101. ஸர்வகந்தஸ் ஸர்வரஸ:

[எல்லா கந்தங்களையுமுடையவன்; எல்லா ரஸங்களையுமுடையவன் (பரமாத்மா).]

102. ஸ்தோ-ப்ர (41).

103. வ்யவஸாயாத்ருதே ப்ரஹ்மந் நாஸாதயதி தத்பரம் ।

[ப்ராஹ்மணரே! அத்யவஸாயமில்லாவிடில் அந்தப் பரவஸ்துவை அடையமாட்டான்,]

104. ஸ்தோத்ரரத்னம்-60.

105. ஆஸீநா வா ஶயாநா வா திஷ்டந்தோ யத்ர குத்ர வா ।
நமோ நாராயணாயேதி மந்த்ரைகஶரணா வயம் ॥

[உட்கார்ந்திருந்தாலும், படுத்துக்கொண்டிருந்தாலும், எங்காவது நின்றுகொண்டிருந்தாலும் 'நமோ நாராயணாய' என்னும் மந்திரத்தையே உபாயமாகப் பற்றியவர்கள் நாங்கள்.]

106. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[ஸகிகளே! அவர்களுடைய தியானம் இடைவிடாமலிருப்பதற்காக, என்னிடம் பக்தி செய்யும் ஜந்துக்களை நான் அடைவதில்லை. பெண்களே! பணமற்றவன் அடைந்த பணத்தை இழந்தவுடன் அந்த நினைவினால் பூர்ணனாய் வேறெதையும் எப்படி நினைக்கிறதில்லையோ, அப்படியே எனக்காக லோகத்தையும், வேதத்தையும், உடைமைகளையும் விட்டவர்களான உங்களுக்கு என்னிடத்தில் தியானமுண்டாவதற்காக, கண்முன்னால் காட்சியளித்த நான் மறைந்தேன். பிரியைகளே! (என்னிடத்தில்) அதற்காக அஸூயை கொள்ளலாகாது. கபடமில்லாமல் என்னுடன் கூடிய உங்களுக்கு நன்றாக ப்ரத்யுபகாரம் செய்ய தேவர்களின் ஆயுட்காலத்திலும் நான் சக்தனல்லன். விடவொண்ணாததான க்ருஹமென்னும் விலங்கை வெட்டிவிட்டு என்னை அடைந்த உங்களுக்கு, அந்த விலங்கு மறுபடியும் இப்போது கழலட்டும். (ஸம்ஸாரமாகிய விலங்கைக் கழற்றுகையே நான் உங்களுக்குச் செய்யும் கைமமாறு என்று தாத்பர்யம்.)]

107. ஸ்தோ-ப்ர (295).

108. ,, (78).

109. & 110. ,, (288).

111. ,, (25).

112. ,, (204).

113. ஸாக்ஷாத் தேவ: புராணோऽஸௌ

[பழமையானவனான இவனே நிருபாதிகதேவன்.]

ஜிதந்தே ஸ்தோத்ர வ்யாக்யான ப்ரமாணத் திரட்டு முற்றிற்று.

பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளே சரணம்.

---

(101) சாந் (3-14-2). (103) பார-சாந்தி (334-47). (105) நாரதீயம். (106) பாகவதம் (10-32-21, 22, 23) க்ருஷ்ணவாக்யம்.

## ஸ்தோத்ரரத்ந ஜிதந்தேஸ்தோத்ர வ்யாக்யானங்களிலுள்ள ப்ரமாணங்களுக்கு அகாராதி க்ரமத்தில் அநுக்ரமணிகை (அட்டவணை).



* இக்குறியிட்டவைகளை ஜிதந்தே வ்யாக்யான ப்ரமாணத் திரட்டில் பார்க்கவும்.

## பிழை திருத்தம்.

## ஸ்தோத்ரரத்நவ்யாக்யானம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 3 & 4 | *இதி | இதம் |
| 4 | 7 | *கடீம் | கடிம் |
| 4 | 13 | *நமோ | நம |
| 6 | 16 | ஸாக்ஷாத்கரித்து, | ஸாக்ஷாத்கரிக்கை. |
| 6 | 17 | அவன் " என்றே கிடக்கும் | அவனென்றே கிடக்கும் ". |
| 6 | 22 | *தாஸ்ய | தாஸஸ்ய |
| 7 | 30 | தத்வவிஷய | தத்விஷய |
| 7 | 34 | ஆதரித்தாராகில் | ஆதரித்தீராகில் |
| 9 | 14 | சொல்லிற்று, | பக்திஶப்தத்தாலே சொல்லிற்று, |
| 10 | 32 | ப்ரத்யக்ஷியா | ப்ரத்யக்ஷிப்பியா |
| 12 | 15 | ஸம்பந்தத்துக்கு | ஸம்பத்துக்கு |
| 12 | 19 | க்ரது | க்ருதி |
| 13 | 18 | ஸர்வாதிகாரத்வமும் | ஸர்வாதிகத்வமும் |
| 13 | 21 | ஜனனமரணத்திலே | அவதாரணத்திலே |
| 17 | 6 | என்றுகொண்டு | " ஸ்தோஷ்யாமி " என்றுகொண்டு |
| 18 | 15 | குறைதீர்த்தாய் | குறைதீர்ந்தாய் |

* இக்குறியிட்ட பிழைகளை தமிழ், ஸம்ஸ்க்ருதம் ஆகிய இரண்டிலும் திருத்திக்கொள்ளவும்.

| | | | |
|---|---|---|---|
| 37 | 12 | காட்டினாற்போல | கிட்டினாற்போல |
| 37 | 31 | ஆஶ்ரயியாய் | யாத்ரையாய் |
| 43 | 1 | चक्ष | वज्र |
| 46 | 14 | *ஸீதயா | ஸீதாயா: |
| 53 | 24 | " பொன்மலையின் | (ய:) " பொன்மலையின் |
| 56 | 22 | *ஜிவிதம் | ஜீவிதம் |
| 58 | 18 | கைங்கர்யரூபமாக | கைங்கர்யத்தை நிரூபகமாக |
| 70 | 12 | ஸங்க்யாவிதி | ஸங்க்யாவதி |
| 72 | 10 | தமஸ்ஸுக்களாலே | தமஸ்ஸுக்களாலே மறைக்கப் பட்டவனுய்க்கொண்டு என்றபடி. |
| 72 | 12 & 13 | *யதாதத்யேந | யாதாதத்யேந |
| 73 | 10 | ஸர்வகால | அபிமதருமாய், ஸர்வகால |
| 73 | 24 | ஸ்ப்ருஹணீயன் | பரணீயன் |
| 74 | 24 | பிறந்த ஶுபா | பிறந்து அஶுபா |
| 74 | 36 | அபகார | அவகாஶ |
| 77 | 1 | ஸாதகர் | காதகர் |
| 78 | 15 | ப்ராபகம். | பாக்ஷிகம். |

## ஜிதந்தேஸ்தோத்ரவ்யாக்யானம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 14 & 15 | மிடுக்கர் கையாலே | மிடுக்கறுகையாலே |
| 13 | 21 & 22 | ஓதிப்போருகிறவன். ....நான்.... தோற்றுகைக்காக, | ஓதிப்போருகிறவன்.... ஆனுன்.... தோற்றுகைக்காக. |
| 17 | 18 | கொடுக்கிறுன் | கொண்டாடுகிறுன் |

---

Edited, Printed & Published by K. Srinivasa Iyengar, Advocate, at Srinivasam Press, No. 8, Puthur Agraharam, Tiruchirapally.



ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சதுச்ச்லோகீ வ்யாக்யாந ப்ரமாணத்திரட்டு.

1. ஸ்தோத்ரரத்நம்-12.
2. ,, -45.
3. ஸ்தோ. ப்ர. (268).
4. பகவந்நாராயணாபிமதாநுரூப ஸ்வரூபரூப குணவிபவைஶ்வர்ய ஶீலாத்யநவதிகாதிஶயா ஸங்க்யேயகல்யாணகுணகணாம் பத்மவநாலயாம் பகவதீம் ஶ்ரியம் தேவீம் நித்யாநபாயிநீம் நிரவத்யாம் தேவதேவதிவ்யமஹிஷீம் அகிலஜகந்மாதரம் அஸ்மந்மாதரம் அஶரண்யஶரண்யாம் அநந்யஶரண: ஶரணமஹம் ப்ரபத்யே ||

[பகவானான நாராயணனுக்கு இஷ்டமாகவும், தகுந்ததாகவுமுள்ள ஸ்வரூபம், ரூபம், (ரூப) குணம், விபூதி, ஐச்வர்யம், சீலம் முதலான எல்லையற்றமேன்மையையுடையவையும், கணக்கற்றவையுமான கல்யாணகுணகணங்கள், இவற்றை உடையவளும், பத்மவனத்தை இருப்பிடமாக உடையவளும், பூஜிக்கத்தக்கவளும், எப்போதும் (எம்பெருமானை விட்டு) அகலகில்லாதவளும், தோஷமற்றவளும், தேவதேவனான எம்பெருமானுடைய திவ்யமஹிஷியும், எல்லாவுலகிற்கும் தாயாயிருப்பவளும், (விசேஷமாக) எனக்குத் தாயாயிருப்பவளும், கதியற்றவர்களுக்கு கதியாயிருப்பவளுமான ஸ்ரீதேவியை, (வேறொரு) கதியற்ற அடியேன் சரணமடைகிறேன்.]

5. ஸ்ரீவல்லப

[பெரியபிராட்டியாருக்கு வல்லபனாயிருப்பவனே!]

6. யத்ப்ரூபங்கா: ப்ரமாணம் ஸ்திரசரரசநாதாரதம்யே முராரே:
வேதாந்தாஸ் தத்வசிந்தாம் முரபிதுரஸி யத்பாதசிஹ்நைஸ் தரந்தி |
போகோபோத்காதகேளீசுளகிதபகவத்வைச்வரூப்யாநுபாவா
ஸா ந: ஸ்ரீராஸ்த்ருணீதாமம்ருதலஹரிதீலங்கநீயைரபாங்கை: ||

[முராரியின் ஸ்தாவரஜங்கமாத்மகமான ஜகத்ஸ்ருஷ்டியில் உயர்வுதாழ்வுகளுக்கு எவளுடைய புருவநெரிப்பு காரணமாயிருக்கிறதோ, முராரியின் திருமார்பில் எவளுடைய திருவடியடையாளங்களைக் கண்டு வேதாந்தங்கள் பரதத்வவிசாரணையை முடிக்கின்றனவோ, பகவானுடைய விச்வரூபாநுபவத்தையும், தன்னுடைய போகாரம்பமாகிற விளையாட்டாலே கையளவாக ஆக்குபவளான அந்த ஸ்ரீதேவி, அம்ருதக்கடலலைகளை வென்ற கடாக்ஷங்களாலே என்னைக் குளிப்பாட்டுவாளாக.]

---

(4) சரணாகதிகத்யம்-1. (5) சரணாகதிகத்யம்-5. (6) ஸ்ரீகுணரத்நகோசம்-4.

7. த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச ।
க்ஷரஸ் ஸர்வாணி பூதாநி கூடஸ்தோऽக்ஷர உச்யதே ॥
உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: ।
யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர: ॥
யஸ்மாத் க்ஷரமதீதோऽஹமக்ஷராதபி சோத்தம: ।
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥

[க்ஷரன் என்றும், அக்ஷரன் என்றும் லோகத்தில் புருஷர்கள் இருவிதமானவர்கள். எல்லாபூதங்களும் க்ஷரனாகும். கூடஸ்தனான முக்தாத்மா அக்ஷரனெனப்படுகிறான். எவனொருவன் மூவுலகங்களிலும் நுழைந்து (அவற்றை) தரிப்பவனாகவும், குறைவற்றவனாக வும், நியமிப்பவனாகவும் பரமாத்மா என்று சொல்லப்படுபவனாகவும் விளங்குகிறானோ, அந்தப் புருஷோத்தமன் (முன் சொல்லப்பட்ட புருஷர்களைக்காட்டிலும்) வேறுபட்டவன். நான் ஞானத்தில் ஏற்றக்குறைவுகளுள்ள க்ஷரபுருஷனை அதிக்ரமித்திருப்பதாலும், ஞானத்தில் ஏற்றக்குறைவுகளற்ற முக்தபுருஷனைக்காட்டிலும் மேலானவனாயிருப்பதாலும், ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் புருஷோத்தமனென்று பிரஸித்தி பெற்றிருக்கிறேன்.]

8. அகாரேணோச்யதே விஷ்ணுஸ் ஸர்வலோகேஶ்வரோ ஹரி: ।
உத்த்ருதா விஷ்ணுநா லக்ஷ்மீருகாரேணோச்யதே ஸதா ॥
மகாரஸ்து தயோர் தாஸ இதி ப்ரணவலக்ஷணம் ॥

[ஸர்வலோகங்களுக்கும் ஈச்வரனும் ஹரியென்றும், விஷ்ணுவென்றும் சொல்லப் படுபவனுமான எம்பெருமான் அகாரத்தினால் சொல்லப்படுகிறான். விஷ்ணுவினால் (மார்பில்) எப்போதும் தரிக்கப்பட்டிருப்பவளான லக்ஷ்மி உகாரத்தினால் சொல்லப்படுகிறாள். அவர் களுக்கு தாஸனான ஜீவன் மகாரவாச்யன் என்பதே ப்ரணவத்தின் லக்ஷணம்.]

9. ஸ்தோ. ப்ர. (28).

10. த்ரிவ்ருத் தே ஶிரோ காயத்ரம் சக்ஷுர்: ஸ்தோம ஆத்மா ஸாம
தே தநூர் வாமதேவ்யம் ப்ருஹத் ரதந்தரே பக்ஷௌ யஜ்ஞா யஜ்ஞியம்
புச்சம் சந்தாம்ஸ்யங்காநி திஷ்ணியா: ஶபா யஜூம்ஷி நாம ।

[வேதத்தின் பல பாகங்களை கருடனுடைய பல அவயவங்களாகக் கூறுவது இந்த மந்த்ரம்.]

11. ஸ்தோ. ப்ர. (249).

12. மாயாந்து ப்ரக்ருதிம் வித்யாந் மாயிநந்து மஹேஶ்வரம்

[ப்ரக்ருதியை ஆச்சரியமான ஸ்ருஷ்டிக்கு ஹேதுவாயிருப்பதால் மாயை என்றும், அந்த மாயையைத் தூண்டுபவனை மஹேச்வரனென்றும் அறியக்கடவன்.]

13. இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே

[பரமைச்வர்யத்தை உடைத்தாயிருப்பதால் இந்த்ரன் எனப்படும் பரமாத்மா ப்ரக்ருதி யாகிற மாயையினால் பல உருவங்களுடன் ஸஞ்சரிக்கிறான்.]

14. தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா ।
மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥

---

(7) கீதை (15-16, 17, 18). (8) ஶ்ருதி. (10) தைத்-யஜுஸ்ஸம்ஹிதை (4-1-42). (12) ஶ்வேதாஶ்வதரம் (4-10). (13) (14) கீதை (7-14).

[தேவனுகிற என்னால் நிர்மிக்கப்பட்டதும், முக்குணங்களை உடையதுமான இந்த என்னுடைய மாயை தாண்ட அரிதானது. என்னையே எவர்கள் சரணமடைகிறார்களோ அவர்கள் இந்த மாயையைத் தாண்டுகிறார்கள்.]

15. ஸ்தோ. ப்ர. (131).

16. ,, (132).

17. ,, (268).

18. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[மைத்ரேயரே! 'பகவான்' என்னும் சப்தம் ஸர்வகாரணங்களுக்கும் காரணபூதனை ஸர்வேச்வரன் விஷயத்தில் சொல்லப்படுகிறது. '(ப்ரக்ருதியை) கார்யதசை அடையச் செய்பவன்', 'ஸ்வாமி' என்னும் இரண்டு அர்த்தங்களுடன் கூடியது பகாரம்; முனிவரே! அப்படியே 'ரக்ஷிப்பவன், ஸம்ஹரிப்பவன், ஸ்ருஷ்டிப்பவன்' என்பது ககாரத்தின் அர்த்தம். ஸம்பூர்ணமான ஐச்வர்யம், வீர்யம், யசஸ் செல்வம், ஜ்ஞானம், வைராக்யம் என்னும் இந்த ஆறு குணங்களுக்கும் 'பக' என்னும் பதம் வாசகமாயிருக்கிறது. பூதங்களை சரீரமாகக் கொண்டவனும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பவனுமான அவனிடத்தில் பூதங்கள் வஸிக்கின்றன. அவனும் எல்லா பூதங்களிலும் வஸிக்கிறான். ஆகையால் அழிவற்றவனை பகவான் வகாரத்துக்கு அர்த்தமாகிறான். கீழானவையான முக்குணங்கள் முதலியவற்றுடன் சேராத 'ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ்' என்னும் எல்லா குணங்களும், 'பகவாந்' என்னும் சப்தத்தினால் சொல்லப்படுகின்றன. மைத்ரேயரே! இம்மாதிரியாக பகவான் என்னும் இந்த மஹாசப்தம் பரப்ரஹ்மமான வாஸுதேவனுக்கே உரித்தானது. வேறொருவரையும் குறிக்காது. 'பூஜிக்கத்தக்க பொருளைக் குறிப்பது' என்னும் பரிபாஷை யுடன் கூடிய இந்த சப்தம் அவன் விஷயத்தில் ஔபசாரிகமாகச் சொல்லப்படுவதில்லை. மற்ற விஷயங்களில் ஔபசாரிகமாக (அமுக்யமாக) சொல்லப்படுகிறது.]

19. இதி விவிதமஜஸ்ய யஸ்ய ரூபம் ப்ரக்ருதிபராத்மமயம் ஸநாதநஸ்ய।
ப்ரதிஶது பகவாநஶேஷபும்ஸாம் ஹரிரபஜந்மஜராதிகாம் ஸ ஸித்திம்॥

[பிறப்பற்றவனும், பழைமையானவனுமான எந்த விஷ்ணுவுக்குப் பலவிதமான ப்ரக்ருதியென்ன, (அதைக்காட்டிலும் மேலான) திவ்யமங்களவிக்ரஹமென்ன, ஆத்மஸ்வரூப மென்ன, இவை இம்மாதிரியாக சரீரங்களாயிருக்கின்றனவோ, அந்த பகவான் ஹரி எல்லா மனிதர்களுக்கும், பிறப்பு, மூப்பு முதலியவைகளைப் போக்கடிக்கும் மோக்ஷஸித்தியை, அருளுவானாக.]

20. மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்த்தவ்யோ பகவாந் ஹரி:

[பேராபத்து வந்த காலத்தில் பகவானான ஹரி நினைக்கத்தகுந்தவன்.]

21. அநியோஜ்யோऽப்ரமேயஶ்ச யஸ்து காமஶரீரத்ருத்।
மோததே பகவாந் பூதைர் பால: க்ரீடநகைரிவ॥

[எதிர்த்துப்பேசப்படாதவனும், அறியமுடியாதவனும், இஷ்டப்பட்ட உருவங்களை தரிப்பவனுமான பகவான், சிறுவன் விளையாட்டுக்கருவிகளுடன் விளையாடுவதுபோல் பூதங்களுடன் விளையாடி ஸந்தோஷிக்கிறான்.]

(18) வி. பு. (6-5-72....78). (19) வி. பு. (6-8-64). (21) பாரதம். ஸபாபர்வம் (40-78).

22. அநந்தா வை வேதா:

[வேதங்கள் அளவற்றவை.]

23. ஸ்தோ. ப்ர. (5).

24. ,, (139).

25. ஸமஸ்தகல்யாணகுணாத்மகோऽஸெள ஸ்வஶக்திலேஶோத்த்ருதபூதஸர்க்க: ।
இச்சாக்ருஹீதாபிமதோருதேஹஸ் ஸம்ஸாதிதாऽஶேஷஜகத்திதோऽஸெள ॥

[இந்த பகவான் ஸகலகல்யாணகுணங்களையும் இயற்கையாகவே உடையவன்; தன்னுடைய சக்தியில் ஒரு சிறிய பகுதியினாலேயே தரிக்கப்பட்ட பூதங்களை உடையவன்; இச்சையினாலேயே எடுக்கப்பட்டவையும், இஷ்டமானவையுமான பல தேஹங்களை உடையவன்; இவன் எல்லா ஜகத்துக்கும் நன்மையைச் செய்பவன்.]

26. மநஸைவ ஜகத்ஸ்ருஷ்டிம் ஸம்ஹாரஞ்ச கரோதி ய: ।
தஸ்யாரிபக்ஷக்ஷபணே கியாநுத்யமவிஸ்தர: ॥

[எவனொருவன் மனத்தினாலேயே உலகத்தின் ஸ்ருஷ்டியையும், ஸம்ஹாரத்தையும் செய்கிறானோ, அவனுக்கு எதிரிகளை நிரஸிப்பதில் என்ன பெருமுயற்சி வேண்டும்?]

27. ஜி. ப்ர. (67).

28. ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் । ந ப்ரஹ்மா நேஶாந: ।
நேமே த்யாவா ப்ருதிவீ ।.... ஸ ஏகாகீ ந ரமேத ॥

[நாராயணன் ஒருவனே இருந்தான்; பிரமனுமில்லை சிவனுமில்லை; இந்த ஆகாசமும், பூமியுமில்லை.... அவன் ஒருவனாயிருந்து ஆநந்தத்தை அடையவில்லை.]

29. ஏஷ ஸர்வபூதாந்தராத்மாऽபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண:

[இவன் ஸர்வபூதங்களுக்கும் அந்தர்யாமியாயிருப்பவனும், தோஷமற்றவனும், ஸ்ரீவைகுண்டத்தில் வஸிப்பவனும், தேவனுமான நாராயணன் ஒருவனே.]

30. ஸ்தோத்ரரத்நம்-44.

31. இதி ப்ரஸாதயாமாஸுஸ் தே ஸுராஸ் தமதோக்ஷஜம் ।
பூதார்த்தவ்யாஹ்ருதிஸ் ஸா ஹி ந ஸ்துதி: பரமேஷ்டிந: ॥

[அந்த தேவர்கள் இந்திரியங்களால் அறியமுடியாதவனை அந்த எம்பெருமானை இம்மாதிரி உகப்பித்தார்கள். பரமபதத்தில் வாழ்பவனை அவன் விஷயத்தில் அது உண்மையான விஷயத்தைச் சொல்லுவதேயன்றோ; (இல்லாத விஷயத்தை ஏறிட்டுச் சொல்லும்) ஸ்தோத்ரமல்லவே.]

32. ஜி. ப்ர. (34).

33. ப்ருதிவ்யப்ஸு ப்ரலீயதே । ஆபஸ்தேஜஸி லீயந்தே । தேஜோ வாயௌ லீயதே । வாயுராகாஶே லீயதே । ஆகாஶமவ்யக்தே லீயதே । அவ்யக்தமக்ஷரே லீயதே । அக்ஷரம் தமஸி லீயதே । தம: பரே தேவ ஏகீ பவதி ॥

[பூமி ஜலத்தில் ஒடுங்குகிறது; ஜலம் அக்னியில் லயிக்கிறது; அக்னி வாயுவில் லயிக்கிறது; வாயு ஆகாசத்தில் ஒடுங்குகிறது; ஆகாசம் அவ்யக்தத்தில் ஒடுங்குகிறது;

(22) தைத். ப்ராஹ். காட. (1-16). (25) வி. பு. (6-5-84). (26) வி. பு. (5-22-15). (28) மஹோபனிஷத். (29) ஸுபாலோபனிஷத்-7. (31) ரகுவம்சம் (10-33). (33) ஸுபாலோபனிஷத்-2

அவ்யக்தம் அக்ஷரத்தில் லயிக்கிறது; அக்ஷரம் தமஸ்ஸில் லயிக்கிறது; தமஸ் பரதெய்வத்திடம் ஒன்றுகிறது.]

34. ஆநீதவாதம் ஸ்வதயா ததேகம் । தஸ்மாத்தாந்யம் ந பர: கிஞ்சநாஸ ।

[பஞ்சபூதங்களற்றதான அந்தப் பரவஸ்து ஒன்றே ஸ்வதாசப்தத்தினல் சொல்லப்படும் பிராட்டியுடன் இருந்தது. அதைக்காட்டிலும் வேறுபட்டது மற்ற எதுவுமில்லை.]

35. தத்தேதம் தர்ஹ்யவ்யாக்ருதமாஸீத் । தந்நாமரூபாப்யாம் வ்யாக்ரியத ।

[இவ்வுலகம் ஸ்ருஷ்டிக்குமுன் நாமரூபங்களற்றதான ப்ரக்ருதியை சரீரமாக உடைய ப்ரஹ்மமாயிருந்தது. அது நாமரூபங்களை உடையதாயிற்று.]

36. ஆஸீதிதம் தமோபூதமப்ரஜ்ஞாதமலக்ஷணம் ।
அப்ரதர்க்யமவிஜ்ஞேயம் ப்ரஸுப்தமிவ ஸர்வத: ॥

[இவ்வுலகம் தமஸ்ஸில் ஒடுங்கினதாகவும், ப்ரத்யக்ஷமல்லாததாகவும், அனுமானத்தாலும் அறியமுடியாததாகவும், சப்தரூபமான தர்க்கத்தாலும் அறியமுடியாததாகவும், வேறெதினுலும் அறியமுடியாததாகவும், எப்புறத்திலும் தூங்குவதைப்போல் சேஷ்டையற்றதாயும் இருந்தது.]

37. நாராயணாத் ப்ரஹ்மா ஜாயதே । நாராயணாத் ருத்ரோ ஜாயதே ।

[நாராயணனிடமிருந்து பிரமன் உண்டாகிறுன். நாராயணனிடமிருந்து ருத்ரன் உண்டாகிறுன்.]

38. ஸ்தோ. ப்ர. (115).

39. ஜி. ப்ர. (78).

40. வேதாஹமேதம் புருஷம் மஹாந்தம் ஆதித்யவர்ணம் தமஸஸ்து பாரே ।
ஸர்வாணி ரூபாணி விசித்ய தீர: நாமாநி க்ருத்வாऽபிவதந் யதாஸ்தே ॥

[ஸர்வஜ்ஞரான எந்தப் பரமபுருஷன் எல்லா சரீரங்களையும் உண்டுபண்ணி, பெயர்களைக் கொடுத்து, அவைகளை உச்சரித்துக்கொண்டிருக்கிறுரோ, ஸூர்யன் போன்ற வர்ணத்தை உடையவரும், ப்ரக்ருதிமண்டலத்திற்கு அப்பாலிருப்பவரும், (எல்லாவிதத்திலும்) பெரியவருமான இந்தப் புருஷனை, (வேதபுருஷனுகிய) நான் அறிகிறேன்.]

41. ஸர்வே நிமேஷா ஜஜ்ஞிரே வித்யுத: புருஷாததி ।

[மின்னலைப்போன்ற உருவையுடைய புருஷனிடமிருந்து எல்லா நிமிஷங்களும் உண்டாயின.]

42. ப்ரமாணத்திற்கு மூலத்தைப் பார்க்கவும்.

[பிறகு, தன்னிச்சையாலே சரீரபரிக்ரஹம் செய்த பகவான், அவ்யக்தமான ப்ரக்ருதியில் (ஸ்தூலரூபமான) மஹாபூதங்கள் முதலியவற்றை வெளிப்படுத்திக்கொண்டு, தடையற்ற பலத்தையுடையவனுகவும், ப்ரக்ருதியைத் தூண்டுபவனுகவும் தோன்றினுன். (அந்த பகவான்) ஆதியில் தண்ணீரை ஸ்ருஷ்டித்தான்; அதில் தன் சக்திரூபமான வீர்யத்தை விதைத்தான்; அந்த வீர்யத்திலிருந்து ஸ்வர்ணமயமானதும் ஸூர்யனைப்போன்ற ஒளியையுடையதுமான அண்டம் உண்டாயிற்று; ஸர்வலோகத்திற்கும் பிதாமஹனுன பிரமன் அதில் தானுக உண்டானுன்.]

---

(34) ச்ருதி (35) ப்ருஹதாரண்யகம் (3-4-7). (36) மநு (1-5). (37) நாராயணேபநிஷத். (40) புருஷஸூக்தம்-16. (41) தை-நாரா-8. (42) மநுஸ்ம்ருதி-(1-6, 8, 9).

43. உல்லாஸபல்லவிதபாலிதஸப்தலோகீநிர்வாஹகோரகிதநேமகடாக்ஷலீலாம் ।
ஸ்ரீரங்கஹர்ம்யதலமங்களதீபரேகாம் ஸ்ரீரங்கராஜமஹிஷீம் ஸ்ரியமாஸ்ரயாம: ॥

[உல்லாஸமாகத் தளிர்விடுவதும், ரக்ஷிக்கப்படும் ஏழுலகங்களுடைய நிர்வாஹத்தினாலே மொட்டுவிடுவதுமான அர்த்தகடாக்ஷலீலையை உடையவளும், திருவரங்கம் பெரிய கோயிலுக்கு (ஒரு) மங்களதீபக்கொழுந்துபோல் இருப்பவளும், ஸ்ரீரங்கநாதனுடைய திவ்யமஹிஷியானவளுமான ஸ்ரீதேவியை ஆச்ரயிக்கிறோம்.]

44. ஆவாப்யாம் கர்மாணி கர்த்தவ்யாநி । ப்ரஜாஸ்சோத்பாதயிதவ்யா: ।

[நம்மிருவராலும் காரியங்கள் செய்யப்படவேண்டும்; பிரஜைகளும், ஸ்ருஷ்டிக்கப்படவேண்டும்.]

45. ஸ்தோ. ப்ர. (245).
46. ,, (135).
47. மத்ஸ்ய: கமலலோசந:

[தாமரைபோன்ற கண்ணையுடைய மத்ஸ்யமூர்த்தி.]

48. ஸ்தோ. ப்ர. (136).

49. ஊநஷோடஸவர்ஷோ மே ராமோ ராஜீவலோசந: ।
ந யுத்தயோக்யதாமஸ்ய பஸ்யாமி ஸஹ ராக்ஷஸை: ॥

[தாமரை போன்ற கண்ணையுடையவனான என்னுடைய ராமன் பதினாறுக்கும் குறைந்த வயதையுடையவன். இவனிடம் ராக்ஷஸர்களுடன் யுத்தம் செய்ய யோக்யதையைக் காணவில்லை.]

50. க்ருஷ்ண: கமலலோசந:

[தாமரைபோன்ற கண்ணையுடைய க்ருஷ்ணன்.]

51. அஸ்யா தேவ்யா மநஸ்தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம் ।
தேநேயம் ஸ ச தர்மாத்மா முஹூர்த்தமபி ஜீவதி ॥

[இந்த ஸீதாதேவியினுடைய மனம் அந்த ராமபிரானிடமும், அவருடைய மனம் இந்த தேவியிடமும் லயித்திருக்கிறது. அதனாலேயே இவளும், தர்மாத்மாவான அவரும் சிறிது காலமாவது ஜீவித்திருக்கிறார்கள்.]

52. ந ச புநராவர்த்ததே । ந ச புநராவர்த்ததே ।

[(இந்த முக்தாத்மா) மறுபடியும் திரும்பி வருவதில்லை; மறுபடியும் திரும்பி வருவதில்லை.]

53. ஸ்தோ. ப்ர. (113).

54. அஸநாயாபிபாஸே ச ஸோகமோஹௌ ஜராம்ருதீ । ஷடூர்மிபிர் விஸுத்தா

[பசி, தாகம், சோகம், மோஹம், கிழத்தனம், மரணம் என்னும் ஆறு ஊர்மிகளற்றது.]

55. அபக்ஷயவிநாஸாப்யாம் பரிணாமர்த்திஜந்மபி: ।
வர்ஜித: ஸக்யதே வக்தும் யஸ் ஸதாஸ்தீதி கேவலம் ॥

[குறைவு படுதல், நாசமடைதல், மாறுபாடடைதல், வளருதல், பிறத்தல், இவைகளற்றவனாகவும், எப்போதும் 'இருக்கிறான்' என்றே சொல்லப்படுபவனுமாயிருப்பவன் பகவான்.]

---

(43) ஸ்ரீகுண. 2. (49) ரா-பா. (20-2). (51) ரா-ஸு (15-52). (52) சாந். (8-15-1). (54) ஸ்ருதி. (55) வி. பு. (1-2-11).

56. ஜ்ஞாநாநந்தமயம் யஸ்ய ஸ்வரூபம் பரமாத்மந:
[எந்தப் பரமாத்மாவினுடைய ஸ்வரூபம் ஜ்ஞாநாநந்தமயமாயிருக்கிறதோ....]

57. அங்குலஸ்யாஷ்டபாகோऽபி ந ஸோऽஸ்தி முநிஸத்தம ।
ந ஸந்தி ப்ராணிநோ யத்ர கர்மபந்தநிபந்தநா: ॥

[முனிச்ரேஷ்டரே! கர்மபந்தத்தைக் காரணமாகக்கொண்ட பிராணிகள் இல்லாததான அங்குலத்தில் எட்டில் ஒரு பாகமும் கிடையாது.]

58. யஸ்யாத்மா ஶரீரம் । யஸ்ய ப்ருதிவீ ஶரீரம்
[எவனுக்கு ஆத்மா சரீரமோ, எவனுக்கு பூமி சரீரமோ....]

59. ந தத்ஸமஶ்சாப்யதிகஶ்ச த்ருஶ்யதே
[அந்தப் புருஷனுக்கு ஸமமாகவும், மேலானவனாகவும் ஒருவரும் காணப்படவில்லை.]

60. ஜி. ப்ர. (69).

61. ப்ரத்யஸ்தமிதபேதம் யத் ஸத்தாமாத்ரமகோசரம் ।
வசஸாமாத்மஸம்வேத்யம் தத் ஜ்ஞாநம் ப்ரஹ்மஸம்ஜ்ஞிதம் ॥

[(ஜாதி முதலிய) பேதமற்றதும், விகாரமற்றதும், வாக்குகளுக்கு எட்டாததும், ஸ்வயம்ப்ரகாசமும், ஜ்ஞானஸ்வரூபமான அது ப்ரஹ்மமென்று சொல்லப்படுகிறது.]

62. ப்ருஹத்வாத் ப்ரும்ஹணத்வாச்ச ப்ரஹ்ம இத்யபிதீயதே
[பெரிதாயிருப்பதாலும், (பிறரைப்) பெரிதாகச்செய்வதாலும் ப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிறது.]

63. அரூபீ ஹி ஜநார்தந:
[ஜநார்தனன் ரூபமற்றவனன்றோ.]

64. ஜிதந்தேஸ்தோத்ரம்-5.

65. ஸ்தோ. ப்ர. (134).

66. த்யேயஸ் ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ நாராயணஸ் ஸரஸிஜாஸநஸந்நிவிஷ்ட: ।
கேயூரவாந் மகரகுண்டலவாந் கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபுர்த்ருதஶங்கசக்ர: ॥

[ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவனும், கமலாஸனத்தில் வீற்றிருப்பவனும், தோள்வளை, மகரகுண்டலம், கிரீடம், ஹாரம், இவைகளை உடையவனும், ஸுவர்ணமயமான சரீரத்தை உடையவனும், சங்கசக்ரங்களை தரித்தவனுமான நாராயணன் எப்போதும் தியானிக்கத்தக்கவன்.]

67. கிரீடகௌஸ்துபதரம் மித்ராணாமபயப்ரதம் ।
[கிரீடத்தையும், கௌஸ்துபத்தையும் தரிப்பவனும், (தன்னை) அண்டினவர்களுக்கு அபயமளிப்பவனுமான (எம்பெருமானை).]

68. ஸ்தோ. ப்ர. (80)-

69. ஏஷ நாராயண: ஶ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந: ।
நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம் ॥

[பாற்கடலில் பள்ளிகொண்டவனான இந்த ஸ்ரீமந்நாராயணனே பைந்நாகப்பாயை விட்டு மதுராபுரிக்கு வந்திருக்கிறான்.]

---

(57) வி. பு. (3-7-4). (58) ப்ருஹ (5-7). (59) ஶ்வே-6. (61) வி. பு. (6-7-53). (66) நார்ஸிம்ஹபுராணம். (69) ஹரிவம்ஶம் (113-62).

70. ஸ்தோ. ப்ர. (187).
71. ஜி. ப்ர. (21).
72. விஷ்ணுத்வமுபஜக்மிவாந்

[விஷ்ணுவாயிருக்கும் தன்மையை அடைந்தான்.]

73. ராகவத்வேऽபவத் ஸீதா ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி ।
அந்யேஷு சாऽவதாரேஷு விஷ்ணோரேஷாऽநபாயிநீ ॥

[இந்தப் பிராட்டி, (பகவான்) ராமனாய் அவதரித்தபோது ஸீதையானாள்; க்ருஷ்ணவதாரத்தில் ருக்மிணியானாள். விஷ்ணுவுடைய மற்ற அவதாரங்களிலும் இவள் (அவனை விட்டு) அகலகில்லாதவளாயிருக்கிறாள்.]

74. ஸ்திதயா பார்ஶ்வதஶ்சாபி வாலவ்யஜநஹஸ்தயா ।
உபேதம் ஸீதயா பூயஶ் சித்ரயா ஶஶிநம் யதா ॥

[சித்ராநக்ஷத்ரத்துடன் கூடிய சந்திரனைப்போல், சாமரத்தைக் கையில்கொண்டு அருகிலிருப்பவளான ஸீதையுடன் கூடியவனான ராமனை.]

75. தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் ।
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே ॥

[சத்ருக்களை அழித்தவனும், மஹர்ஷிகளுக்கு ஸுகத்தை அளித்தவனுமான கணவனைப் பார்த்து வைதேஹி ஸந்தோஷமடைந்தாள். பர்த்தாவான ஸ்ரீராமனை ஆலிங்கனம் செய்துகொண்டாள்.]

சதுஃஶ்லோகீவ்யாக்யாந ப்ரமாணத்திரட்டு முற்றிற்று.

(73) வி. பு. (1-9-144). (74) ரா-அ. (16-10). (75) ரா-ஆ. (30-40).

## சதுச்ச்லோகீவ்யாக்யாந ப்ரமாண அநுக்ரமணிகை.